# உடையார்

(ஐந்தாம் பாகம்)

பாலகுமாரன்

மின்னூலாக்கம் : செல்லா

விசா பப்ளிகேஷன்ஸ்
புதிய எண்: 16, பழைய எண் 55,
வெங்கட் நாராயணா சாலை,
தி.நகர், சென்னை–600 017.
☎: 24342899, 24327696
Fax: 91 - 44 - 24341559

முதற் பதிப்பு: டிசம்பர், 2005
இரண்டாம் பதிப்பு ஜூலை 2007
**முன்றாம் பதிப்பு ஜனவரி 2010**


**மாமன்னன் இராஜராஜ சோழனின் வரலாறு**

விசா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு

**UDAIYAAR - PART V** (History of Rajaraja Chola)

By: Balakumaran

**Third Edition January 2010**

No. of Pages: 368

Size: Demy

Paper used: N.S. 70 G.S.M. Maplitho

**THIRUMAGAL NILAYAM**
New No: 16, Old No: 55,
Venkatnarayana Road,
T.Nagar, Chennai-600 017
Phone: 24342899, 24327696
Thirumagalnilayam@yahoo.com

Laser Typeset By: Sivaa Graphics, Chennai-94. Ph: 55413222

Printed at: **UDAYAM OFFSETS** ✆ : 28454808, 28451906

# சமர்ப்பணம்



என் அன்பு மனைவியர்
கமலாவுக்கும், சாந்தாவுக்கும்
இந்த ஐந்தாம் பாகத்தை
சமர்ப்பணம் செய்கிறேன்.
நான் வளமாக வாழ்வதற்கு
இவர்களே காரணம்.

என் வீட்டின் அருகில் உள்ள ஓர் நூலகத்தில் 'உடையார்' புத்தகத்தின் முதல் பாகத்தைப் பார்க்க நேர்ந்தது. முன்னுரையைப் படித்தேன்.

தஞ்சை பெரிய கோயிலை இராஜராஜ சோழர் எப்படி கட்டினார் என்பதை ஒரு பொறியாளரின் கண்ணோட்டத்தோடு அறியவே இப்புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினேன். மேலும் எனக்கு சரித்திரத்தின் மேலும் தீராத காதல் உண்டு.

உண்மையைச் சொல்ல வேண்டும் என்றால் உங்களுடைய படைப்புக்களிலும், சரித்திர நாவல்களிலும் நான் முதன்முதலில் படித்தது 'உடையார்'தான்.

உடையாரை நான் பார்த்து, படித்து, ரசித்து, சுவைத்து, லயித்து, வியந்து என்னையும் மறந்தேன்.

உடையாரின் மூன்று பாகங்களையும் நான் ஒரே மூச்சில் படித்து முடித்துவிட்டேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ஏதோ சோழ நாட்டிற்கும், அதில் வரும் ஒவ்வொரு பாத்திரங்களுக்கும் எனக்கும் ஒருவித முன் ஜென்மத் தொடர்பு இருப்பதைப் போல உணர்ந்தேன்.

தங்களின் இந்த அரிய சாதனையை எங்களைப் போன்ற இளைஞர்கள், பொறியாளர்கள் படிக்கும் போது, தமிழ்க் கலாச்சாரத்தின் மீதும், தமிழின் மீதும், நம் மண்ணின் மாபெரும் அரசர்கள் மீதும், நம் கலைக் கோயில்கள் மீதும், தமிழினத்தின் மீதும் ஒருவித எல்லையில்லா அன்பு ஏற்படுகிறது. தமிழராய் பிறந்ததில் ஒரு கர்வம் ஏற்படுகிறது.

உடையாருடைய ஐந்தாம் மற்றும் ஆறாம் பாகங்களைப் படிக்க மிகவும் ஆவலாய் உள்ளேன்.

மேலும் இப்புத்தகத்தைப் படித்தபின் என் வாழ்வில் ஓர் அதிசயமும் நடந்தது. கடந்த ஒரு வருடமாக எனக்கு வீட்டில் வரன் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இப்புத்தகங்களை நான் படிக்க ஆரம்பிக்கும்பொழுது எனக்கு ஒரு வரன் வந்தது. இப்பொழுது

அவ்வரனே முடிந்துள்ளது. ஆவணி மாதம் இருபத்தியிரண்டாம் தேதி அன்று எனக்கு நிச்சயதாம்பூலமும் சிறப்பாக நடந்தேறியது.

இதில் என்ன அதிசயம் என்று நினைக்கிறீர்களா? இருக்கிறது. என்னவருடைய ஜாதகத்தை சில நாட்களுக்கு முன்தான் பார்க்க நேர்ந்தது. பார்த்தவுடனே நட்சத்திரம் சதயம் இரண்டாம் பாதம்.

பார் வியக்கும் பெரிய கோயிலைக் கட்டிய அரசர் உடையார் இராஜராஜ சோழரின் நட்சத்திரமும் பாதமும் அதுதானே.

இந்த சந்தோஷத்தையும் அதிசயத்தையும் என்னவென்று சொல்வது. எல்லா செயலுக்கும் ஒரு காரண காரியம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டேன். எல்லாம் அந்த உமாமகேஸ்வரியின் கருணையே.

*–கே.ஆர்.பத்மாவதி, வேலூர்.*

ஒரு உண்மை மனிதருக்கு, உண்மையை உணர்ந்த மனிதருக்கு எப்படி கடிதம் எழுதப்பட வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை.

ஐயா, நான் படித்த முதல் புத்தகம் குரு. உம்முடைய உண்மை, இறைவனின் உண்மை. அற்புதமான நிகழ்வு.

மற்றும்... தங்கக்கை, பேய்க்கரும்பு, காதற்பெருமான், அரசமரம், எனக்குள் பேசுகிறேன் படித்துள்ளேன். அற்புதம்! ஆன்மீகம் சம்பந்தமாக நீங்கள் எழுதும் புத்தகத்தை விரும்பித் தேடுகிறேன்.

இந்தக் கடிதத்திற்கான காரணம், இதுவாக இருக்கலாம். குரு என்ற நிகழ்வில் உங்களுடைய நிலையை குண்டலினி எழும்போது நீடித்து நிலைத்து நிற்கும் நான் என்று உயர்ந்து உண்மையை கூர்மையாய் செதுக்கி இருந்தீர் என்று எழுதியிருப்பது உண்மை. சத்தியம் என்று தெரிகிறது. ஆனால் உணர முடியவில்லை. சத்தியமாக, உன்னத உண்மைகளை உரைத்த, என் வாழ்வில் கிடைத்த பொக்கிஷ நாமங்களான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரும், பகவான் ரமணரும் உரைத்த 'நான் யார்' என்பதற்கான விடையே நீடித்து நிலைத்து நிற்கும் தானில் அடங்கி விட்டது.

ஐயா, இந்தக் கடிதம் எழுதறதுக்குள் நிறைய கண்ணீர் வருகிறது. எல்லா நன்மைகளையும் எனக்குத் தந்திருக்கிற இறைவனுக்கு, நான் ரொம்ப உன்னதமான சத்திய குணத்தோடு இருக்கணும் அல்லவா, நான் மட்டும் 'நான் யார்' என்று உணர்ந்திட ஏன் செயல் எல்லாமே கர்ம யோகம்தான். இந்த கர்ம யோகங்கற வார்த்தையை உரைத்தாலும், உரைக்காவிட்டாலும் நான் கர்ம யோகிதான்.

ஆம். உங்களுக்கு நீங்கள் யார் என்று தெரியும். எனக்கும் தெரியப்படுத்துங்கள். நிலைத்து நிற்கும் 'நான் என்ற எண்ணத்திலிருந்து எப்படி வெளியே வர முடியும்? என்னையே நான் ஏமாற்றாமல், நடிக்காமல் வாழ வழி சொல்லுங்கள். ஐயா, நீங்கள் ரொம்ப பெரியவங்க, உங்களிடமிருந்து நான் நிறைய

படிக்க வேண்டியதிருக்கிறது. உங்கள் வார்த்தைகளில் உண்மை யிருக்கிறது. இப்போது என் வயது இருபத்திநாலு. இனியும் இந்தப் பிறவியில் பலப் பல உண்மைகளைத் தெரிஞ்ச இந்தப் பயணத் திற்கான படிப்பைப் படிக்கணும் இல்லையா? தயவு செய்து என் இதயத்தின் ஆழத்தில் உம்முடைய வார்த்தைகளின் உண்மைகள் வேர் போல் நிற்க, எனக்குப் பல உண்மைகளைக் கற்றுத்தாருங்கள், ஐயா.

*—ஆ. சங்கரமீனாட்சி, கோவை*

யோகி ராம்சுரத்குமார்

சாஸ்திரி நகர்,
அடையாறு, சென்னை-20.

அன்புள்ள பாலகுமாரா!

என்றேனும் இன்னும் ஒரு முறை தஞ்சைப் பெரிய கோயிலைத் தரிசிக்க நேர்ந்தால் என் மனமும் மூளையும் பிரகதீஸ்வரரைப் பார்க்குமா? சந்தேகமே. உடையாரைப் படித்தபின் பார்வை கட்டாயம் வேறாகிவிடும். இந்த இடத்தில்தான் பெருந்தச்சர் காப்புக் கட்டிக்கொண்டு பிரக்ஞை செய்திருப்பாரோ? இங்குதான் முதன்முறை மண் தோண்டப்பட்டு இருக்குமோ? இதற்கடியில் இராஜராஜன் பட்ட மகிஷியும் மற்ற மனைவியரும், தங்க வளையல்களையும், சங்கிலிகளையும் இதர நகைகளையும் அஸ்திவாரக் குழியில் போட்டிருப்பார்களோ? இந்தப் பிள்ளையார் அருகில் தான் யானை முதல்பலியாக இறந்து விழுந்திருக்குமோ? இங்கேதான் தோண்டிய மண்ணைக் கொட்டி இருப்பார்களோ? இங்கேதான் பாண்டிய வீரன் மதுகொடுக்கப்பட்டு பிதற்றியிருப் பானோ? என்றுதான் யோசிக்கத் தோன்றும்.

இரண்டாம் தளத்தில் இருக்கும் ஓவியங்களைப் பார்க்கும் சந்தர்ப்பம் மீண்டும் கிடைத்தால், சீராளனும் உமையாளும் அருகே வந்து நிற்பார்கள். திரிபுராந்தகரையும், அவருக்கு உதவி செய்யும் பார்வதி சுப்ரமண்யர் பிள்ளையாரையும் வேறு கோணத்தில், நீ பார்த்த கோணத்தில் பார்க்கத் தோன்றும். கோபுரத்தை அண்ணாந்து பார்க்கையில், நீலநிற வானத்தின் கீழ் பொன் தகடுகள் போர்த்திய பெரிய கோபுரம் ஒருநாளில் ஜொலித்திருக்கும் எனக் கற்பனை செய்யத் தோன்றும்.

பெரிய கோயில் ஒரு பிரம்மாண்டம் என்றால், அந்தக் கட்டிடப்பணி அதைவிடப் பிரம்மாண்டம். அந்தக் கட்டிடப் பணியினைக் கற்பனை செய்து, (ஓரளவே ஆதாரங்கள் கிடைப்பினும்) புஸ்தகமாக்கியிருப்பது இன்னொரு பிரம்மாண்டம். படிப்பவர்க்கு மலைப்பை உண்டு பண்ணுவது. உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் மட்டுமல்ல; பாலகுமாரனும்தான்.

அனேகமாய் எல்லாப் பிரபலங்களின் தனிப்பட்ட வாழ்க்கையும் ரணகளம்தான். தேசத் தந்தை மகாத்மாகாந்தி, தந்தை என்ற பொறுப்பைச் சரிவர நிறைவேற்றினாரா, இல்லையா? என்று பட்டிமன்றம் போட்டுக் காந்தியைப் பரிகசிக்கிறார்கள். பெண் விடுதலை பாடிய பாரதி பெண்டாட்டியை வைத்துக் காப்பாற்ற வில்லை என அங்கலாய்க்கிறார்கள். பெண்டாட்டியை வைத்துக் காப்பாற்றி இருந்தால் அவர் வெறும் சுப்பையா. தேசியகவி சுப்ரமண்ய பாரதி ஆகி இருக்கமுடியாது.

நாலு பிள்ளைகளுக்கும் வசதியான வாழ்க்கை ஏற்படுத்திக் கொடுத்திருந்தால், அவர் வெறும் மோகன்தாஸ் காந்தி, மகாத்மா காந்தி இல்லை. அம்மங்கையைப் பற்றி நினைத்து அவளுக்காக வாழ்க்கையைச் செலவிட்டிருந்தால், குந்தவையைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தால் என்றோ ராஜராஜன் மக்கள் மனத்திலிருந்து இறங்கியிருப்பான். இன்றளவும் சிரஞ்சீவியாய் வாழ்ந்து கொண்டிருக்க முடியாது.

இது அருள்மொழி என்ற தனிமனிதனின் கதை அல்ல; ஒரு சமுதாய அலசல். அந்தணர்கள், கல்தச்சர்கள், மறவர்கள், தேவரடியார்கள் என்று பிரிந்திருந்த தமிழ்ச் சமுதாயத்தின் வக்கரிப்புகளுக்கிடையே, கொக்கரிப்புகளுக்கிடையே இழிபடாமல் அத்தனை பேரையும், அணைக்க வேண்டிய இடத்தில் அணைத்து, கண்டிக்க வேண்டிய இடத்தில் கண்டித்து அனைவர்க்கும் மேலாய் உயர்ந்து நின்று உயர்ந்த கோயிலைக் கட்டமுடிந்தது என்றால் அது அந்த மஹாமனிதனின் மஹாகெட்டிக்காரத்தனம்.

சோழர் காலத்தில் ஒற்றர் படை மிக அதிகம் எனப் படித்திருக் கிறேன். அந்த வலை படர்ந்து விரிந்து கிடந்ததை ஒற்றனுக்கு ஒற்றன் அவனுக்கு இன்னொரு ஒற்றன் என்று எக்கச்சக்கமாய் ஒற்றர்கள் இருந்ததைக் காட்டியிருக்கிறார்கள். கற்பனைப் பாத்திரமென்றாலும் வைஷ்ணவதாஸன் கண்கலங்கச் செய்து விட்டார். அவர் மனைவியை என்ன செய்யப் போகிறாய்? அவளுக்கு நற்கதிகாட்டுவாய் என் நினைக்கிறேன்.

சோழர்களின் மிகக் கொடுமையான போர் முறை பற்றி பல சரித்திர நூல்கள் கூறுகின்றன. அதற்கு இக்கதையில் சரியான காரணம் காண்பித்திருக்கிறாய்.

கோயில் கட்டுதல் ஒரு மகா பெரிய விஷயம் என்றால் மேலைச் சாளுக்கிய போர் இன்னொரு மகா பெரிய விஷயம். அதற்கு எத்தனை எத்தனை ஏற்பாடுகள். Picturesque description என்று

சொல்வார்கள் போர்ப்படை கம்பீரமாய் கண்முன்னே அணி வகுத்துச் செல்வதைக் காணமுடிகிறது.

உனக்கு நினைவிருக்கும் என நினைக்கிறேன். தீர்த்த யாத்திரை என்ற தலைப்பில் தென்மேற்கு, வடகிழக்குப் பருவக்காற்று பற்றிய இசை நாடகத்தை எங்கள் பள்ளியில் அரங்கேற்றியபோது நீ தலைமைதாங்க வந்திருந்தாய். இந்தச் சிறிய அரை மணி நேர விஷயத்திற்கு நான் ஒரு மாதம் உழைக்க வேண்டியிருந்தது. இந்த அல்ப விஷயத்திற்கே இப்படி என்றால் நெடுந்தூரப் பயணத்திற்கு எத்தனை எத்தனை ஆயத்தங்கள் எத்தனை பாடுகள் உணவு, உடை, உளவுப் பிரிவு, வைத்தியம் இத்யாதி இத்யாதி. சிவகைங்கர்யம் என்ற உயரிய லட்சியமும் சில நல்லவர்களின் வல்லவர்களின் ஒத்துழைப்பும் அவனை வெற்றி பெற வைத்தன.

நெடுநாட்களாய் நெஞ்சில் நெருடிக் கொண்டிருக்கும் விஷயம். சுவைமிகுந்த நமது சரித்திரம் facts of figure ஆகப் பாடப் புத்தகங்களில் வறண்டு கிடப்பதேன்? பாவம் நம் குழந்தைகள் விஷயங்களை மனப்பாடம் செய்து கக்குகின்றன.

ராஜராஜன் கோயில் கட்டியதைவிட என்னை பிரமிக்கச் செய்த விஷயம் அவன் அதைக் கட்டிக் காக்கச் செய்த ஏற்பாடுகள்தான். அது குறித்த கல்வெட்டைப் படிக்க மீண்டும் ஒருமுறை உன்னுடன் தஞ்சை பெரிய கோயில் போக வேண்டும்.

தஞ்சை பெரிய கோயிலை தரிசிக்க- அதை தரிசிப்பதன் மூலம் ராஜராஜனைத் தரிசிக்க நம் குடும்பம் முழுவதும் கௌரி, கணேஷ், ஆகாஷ், கமலா, கிருஷ்ணா, சாந்தா, சூர்யா, நீ, நான், லலிதா அனைவரும் தஞ்சை போனால் என்ன? நம் குடும்பம் மட்டுமல்ல; தமிழ்க்குடும்பம் ஒவ்வொன்றும் உடையார் நாவல் படித்ததும் தஞ்சை போகும் ராஜராஜனைத் தரிசிக்கும். சோழம்! சோழம்! சோழம்!

இப்படிக்கு
என்றும் அன்புடன்,
*ரவி*
*(சிந்தா ரவி)*



COLA KINGDOM
UNDER PARĀNTAKA I
At its greatest extent
Towards the end
ANANTAPUR
NELLORE
HINDUPUR
PUNGANUR
KALAHASTI
TAKKOLAM
KĀNCĪ
UTTARAMĒRŪR
TANJAVŪR
NAGAPATTINAM
URAIYUR
KODUMBALUR
MADURAI
VELLUR
TIRUVAÑJAIKKALAM
MAHĀTITTHA
ANURĀDHAPURA
ROHANA
MAHĀGĀMA
E. CALUKYA
RASTRAKŪTAS
GANGAS
KERALA
VENĀDU
SENDALAI
NĀVALŪR
GRĀMAM
MELPĀDI
HĒMĀVATI
PARIGI
VALLŪRU
NIDUGAL
MALĒPĀDU

# உடையார் பாகம்-5

## 150

அந்த தேவரடியார் பெண்கள் உரத்த குரலில் சிரித்தது தஞ்சை கடைவீதிகளை உலுக்கிப் போட்டது.

எதற்குச் சிரிக்கிறார்கள். ஏன் சிரிக்கிறார்கள் என்று மக்கள் பரபரத்து எட்டிப் பார்த்தார்கள்.

மக்களுக்கும் தான் உண்டு, தன் வேலையுண்டு என்று பெரும் போக்காய் போகத் தெரியாமல் இருந்தது. எந்தக் கூடுதலான சப்தத் திற்கும் மக்கள் கூட்டமாய் கூடினார்கள். விவரம் கேட்டார்கள். விவாதித்தார்கள்.

மக்களின் இந்தப் பழக்கத்தைப் புரிந்துகொண்ட அந்த இளம் பெண்கள் மக்களைத் தங்கள்பால் கவர உரக்கச் சிரித்தார்கள். அந்த இளம் பெண்கள் உரக்கச் சிரிக்க எந்தக் காரணமும் தேவையில்லா மல் இருந்தது. ஒருத்தி இன்னொருத்தியைப் பார்த்துச் சிரிக்க, இன்னொருத்தி இன்னொருத்தியைப் பார்த்துச் சிரிக்க, அவள் இன்னொருத்தியைப் பார்த்துச் சிரிக்க எல்லோரும் ஒட்டுமொத்த மாய் திடீரென்று குபீர் சிரிப்பை வெளியிட்டார்கள்.

கூட்டமாய் எழுந்து விவரம் கேட்கப் போனவர்களைப் பார்த்து, வேகமாய் எழுந்திருக்க முடியாத வயசாளிகள், ''அட விடுங்களய்யா பெண்கள் எதற்காகவாவது சிரிக்கத்தான் செய்வார்கள். இதையெல் லாம் விசாரித்துக் கொண்டிருக்க முடியுமா. நாட்டில் ஏகப்பட்ட வினோதங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது, பெண்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறீர்களே'' என்று அலுத்துக் கொண்டார்கள். அந்த அலுப்பான பேச்சிற்கு மத்திம வயதிலுள்ள வர்கள் மெல்லியதாய் கோபப்பட்டார்கள்.

''பெண்களைச் சிரிக்கக்கூடாது என்று சொன்னவன் ரசனை யற்றவன். அவன் குழந்தைகள் பேசக்கூடாது என்றும், மாடுகள், கன்றுகள் கத்தக்கூடாது என்றும், பூக்கள் மலரக்கூடாது என்றும் சொல்கிறவன். உலகம் சந்தோஷமாக இருக்கிறது என்பதை முதலில் காட்டும் ஒரே விஷயம் பெண்களின் சிரிப்பு.'' என்று ஒருவன் உரத்த குரலில் பேச, மற்றவர்கள் அதை ஆரவாரம் செய்து ஆதரித்தார்கள்.

''ஆஹா... உலகம் வெகு சந்தோஷமாக இருக்கிறதென்று உனக்குத்தான் எழுதிக் கொடுத்திருக்கிறார்கள். நீயும் படித்துவிட்டு பிதற்றுகிறாய்.

வயசாளி அடிக்குரலில் முணுமுணுத்தார்.

''ஏன், என்ன குறைச்சல் உலகத்திற்கு. அதுவும் இந்த சோழ வளநாட்டில் என்ன குறை நேர்ந்து விட்டது. நாம் எல்லோரும் இராஜராஜர் ஆட்சியில் சந்தோஷமாகத்தானே இருக்கிறோம். இல்லையென்று சொல்கிறாயா.''

இன்னொரு மத்திம வயதுக்காரர், மிக நுணுக்கமாக ஒரு வயசாளியின் பேச்சை மடக்கினார்.

''சோழதேசம் சந்தோஷமாக இல்லையென்று சொன்னால் அரச குற்றம். சந்தோஷமாகத்தான் இருக்கிறது என்று சொன்னால் பேச்சில் தோல்வி.'' ஆனால் கிழவர் அசரவில்லை.

''யுத்தம் வரப்போகிறது என்று தெரிந்தும் ஒரு தேசம் சந் தோஷமாக இருக்குமென்றால், அந்தத் தேசத்தில் பைத்தியக்காரர்கள் மிகுந்துவிட்டார்கள் என்று அர்த்தம்.'' என்று ஓங்கி ஒரு போடு போட்டார்.

அருகிலிருந்த வயசாளிகள் திகைத்தார்கள்.

என்ன பேச்சு விபரீதமாகப் போகிறது என்று பயந்தார்கள். கேள்வி கேட்ட மத்திம வயதுக்காரன் அதிகம் மிரண்டான்.

''என்ன, யுத்தம் வரப்போகிறதா. பெண்கள் ஏன் சிரிக்கிறார்கள் என்ற கேள்விக்கு வேறு எங்கோ தாவி விட்டீர்களே.''

''ஆமாம். நான் வயசாளி. அரசியல் தெரிந்தவன் அனுபவம் மிக்கவன். வாழ்ந்து காட்டியவன். எனக்கு என்ன இங்கு நடக்கிறது என்று தெரியும். நீ இரண்டாங்கெட்டான். மத்திம வயது வந்த பிறகும் பெண்கள் சிரிக்க, நீயும் பல் இளித்துக்கொண்டு போகிறாய். அவர்கள் நடனமாடும் பெண்கள். இளம் பெண்கள் எதிர்காலத்தி னுடைய வேதனைகளை அறியமாட்டாதவர்கள். எது இருப்பினும்

ஆண்கள் பார்த்துக் கொள்வார்கள் என்ற ஒரே காரணத்தினால் சிரித்துக்கொண்டு திரிகிறார்கள். பார்த்து நீங்களும் சிரித்தீர்கள் என்றால், இது என்ன நியாயம்.

அங்காடித் தெருவிலுள்ள எல்லோரும் திகைத்து நின்றார்கள். அங்காடிகளில், பட்சணக் கடைகளில் பெரிய மரப்பலகைகளில் கால்கள் கொடுத்து நீண்ட ஆசனங்களாகப் போட்டிருப்பார்கள். தெற்கேயிருந்து வரும் காற்று, அந்த அங்காடியின் வழியாக ஊடுருவி ஒரு சுழன்று சுழன்று மேலெழும்பும். பட்சண வாசனையும், மஞ்சள் வாசனையும், கீரை வாசனையும் அகிற்புகை சந்தன வாசனையும், மிருதுவான மண்ணின் வாசனையும், பச்சைப் புல்லின் வாசனையும் அந்தக் காற்று கொண்டுவரும்.

வெய்யில் மேற்கே சரிகின்ற நேரம் வேலைகளை முடித்து வீட்டிற்குப் போவதற்கு முன் அங்காடித் தெருவில் நுழைந்து நண்பர்களைப் பார்த்து அன்றைய உலகியல், அரசியல் விஷயங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டு, பயிர் பச்சைகளை வளர்ப்பதிலுள்ள சந்தேகங்களை நிவர்த்தித்துக்கொண்டு, குடும்ப விஷயங்களைப் பரிமாறிக்கொண்டு, பிறகு அண்டை அயலிலுள்ள கிராமத்திற்கு அவர்கள் மெல்ல நடப்பார்கள்.

இருட்டத் துவங்கியதும் கூத்தும், பாட்டும் நடக்கும். ஒவ்வொரு மூலையிலும் ஏதேனும் விழா என்று காரணம் சொல்லி இசைக் கருவிகளோடும், தாளங்களோடும் பெண்களும், ஆண்களும் ஆடுவார்கள். நல்ல கதைகள் சொல்லுவார்கள்.

அமாவாசை போன்ற இருட்டு அதிகம் இருக்கும் காலங்களில் சீக்கிரம் கலைந்து விடுவார்கள். பௌர்ணமியாக இருந்தால் சற்று நேரம் கடந்து கலைவார்கள். மெல்ல நடந்து வீட்டிற்குப் போய் உணவு உண்டுவிட்டு, அப்படியே வாசற்கட்டிலில் சாய்ந்து கண்கள் சொருகத் தூங்குவார்கள். இதில் வயசாளிகள் உடனே தூங்கிப் போவார்கள். மத்திம வயதுக்காரர்கள் இன்னும் சற்றுத் தாமதித்து கிராம எல்லைகளில் நின்று கூடிப்பேசி உள்ளூர் விவகாரங்களையும் வெளியூர் விவகாரங்களையும் விவாதித்துவிட்டு வீட்டிற்குப் போவார்கள்.

அந்தி சரிந்து ஐந்து நாழிகையில் மெல்ல மெல்ல சோழதேசம் உறக்கத்திற்குப் போய்விடும். அப்படி உறங்கப் போவதற்கு முன் அந்த நாளைக் கொண்டாட்டமாக முடிப்பதற்குத்தான் இந்த

அங்காடிக் கூட்டம். அப்படிக் கலந்து கொள்ளாமல் கோயிலில் போய் அமர்ந்து கொள்பவர்களும் உண்டு.

திருமணமான இளசுகள் சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பே வீட்டிற்குப் போய் அடைய ஆரம்பித்து விடுவார்கள்.

மூன்று, நான்கு குழந்தைகள் பெற்ற மத்திம வயதுக்காரர்களும், ஆறேழு பெற்ற வயசாளிகளும் ஒன்றுகூடிப் பேசுகின்ற நேரம் இது. பேச ஒன்றுமில்லை என்கிறபோது யாராவது, யாரையாவது சீண்டிவிட, அவர்கள் பேச்சு வேகமாக மேலெழும், இன்றும் அப்படித்தான் ஒரு சீண்டலில் பேச்சு கனன்று எழுந்திருக்கிறது. வீண்வம்பு வராமலிருக்க வேண்டுமே என்ற கவலையும் கூடவே எழுந்தது. ஏனெனில் ஒற்றர்கள் எங்கும் இருக்கிறார்கள். இது கிராமமில்லை. சோழதேசத்தின் தலைநகரம். ஏதோ நமக்குள் பேசினோம். பிரிந்தோம் என்று போகாது, யார் அப்படிப் பேசினார்கள்? இழுத்து வா என்று சொல்வதற்கு அதிகாரிகள் காத்திருக்கிறார்கள். போட்டுக் கொடுப்பதற்கு ஒற்றர்கள் சுற்றிச்சுற்றி வருகிறார்கள்.

இந்த நேரத்தில் இந்தக் கிழம் இப்படிப் பேசுகிறதே, இது சரிதானா? வெறும் பேச்சுக்குக் கோபப்பட்டு வீண் வம்பு இழுத்துக் கொண்டு வந்துவிட்டதே. அந்த வயசாளிக்குத்தான் சோழதேசம் பற்றிக் கவலை இருப்பது போலவும், மற்றவருக்கு இல்லாதது போலவும் ஆகிவிட்டதே என்று எல்லோரும் கவலைப்பட்டார்கள்.

ஆனால், இப்போது நகர்ந்தாலும் ஆபத்து, நகர முற்பட்டால் ஏன் நகருகிறாய் என்று உட்கார வைத்து விடுவார்கள். குதிரை திமிர ஆரம்பித்து விட்டது. இனி இறுக்க உட்கார்ந்து கடிவாளத்தை வாகாய்ப் பிடித்து குதிரையை அடித்து நிறுத்த வேண்டும்.

''என்ன யுத்தம். எப்போது பறையறிவித்தார்கள். ஆயத்தம் என்ன செய்தார்கள். நீயாய் வாய்க்கு வந்தபடி ஏதாவது உளறுகிறாயே. என்ன ஆயிற்று உனக்கு.''

மத்திம வயதுக்காரன் அந்தக் கிழவனை உரத்துக் கண்டித்தான்.

''காதுகளையும் திறந்து வைத்து, கண்களையும் திறந்து வைப்பவன்தான் அறிவாளி. எப்பொழுதும் நடந்துகொண்டே தூங்குகிறவனும், உட்கார்ந்துகொண்டே உறங்குகிறவனும் தோல்வியைத்தான் சந்திப்பான். கிழவன் மீண்டும் ஒரு அடி வைத்தான்.

கூட்டம் மேலும் மிரண்டது.

''கேட்ட கேள்விக்குப் பதில் சொல். என்ன யுத்தம்.

''என்ன யுத்தம் மறுபடியும் வருமென்று நீ நினைக்கிறாய்.

வயசாளி இப்போது கேள்வி கேட்டான்.

''யுத்தத்திற்கு வாய்ப்பே இல்லை ஐயா.''

''இங்குதான் உன் முட்டாள்தனம் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. சிறிதளவு கூட அரசியல் அறிவு இல்லாதவன் என்று தெள்ளத் தெளிவாய் உன் பேச்சு காட்டிக் கொடுக்கிறது. சோழதேசத்திற்குப் பகையே இல்லை என்று நினைக்கின்ற ஒரு தடியனை இப்போது தான் நான் சந்திக்கிறேன்.''

''சோழ தேசத்திற்குப் பகையே இல்லையென்று யார் சொன்னது. பகைவர்கள் அடக்கப்பட்டு விட்டார்கள் என்றல்லவா சொல் கிறோம்.

இன்னொரு மத்திம வயதுக்காரன் உரக்கப் பேசினான்.

''அடங்கியது எழும். மடங்கியது தாவும். புறக்கணித்தது மீண்டும் திரும்பும். இதுவிதி. அடிப்படை விதி. யாரை அடக்கினோம் என்று யோசித்துப் பாருங்கள்.''

''பாண்டியரை...

''அறிவாளி. எடுத்தவுடன் வேகமாகப் பதில் சொல்லிவிட்டாய். பாண்டியர்களை அடக்கினோம். ஆனால் பாண்டிய தேசத்தை பாண்டியர்களையே ஆளவிட்டுவிட்டு நம்முடைய அரசை, அதிகாரிகளை அங்கு நிலைநிறுத்தியிருக்கிறோம். பாண்டிய ஆட்சி தான் நடக்கிறது என்பதை, பல்வேறு விதமாய் நாம் மக்களுக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறோம். சோழர்கள் பாண்டியர்களை அடிமைப்படுத்துகிறார்கள் என்ற எண்ணத்தை விலக்கியிருக் கிறோம். எனவே, பாண்டியர்கள் நம்மோடு போருக்கு வரமாட் டார்கள். மாறாய் இங்கு கட்டுகின்ற கோயிலில் பல பாண்டிய வீரக்கள்தான் தலைகொடுத்து வேலை செய்து கொண்டிருக் கிறார்கள்.''

''பாண்டிய வீரர்கள்தான் கோயில் கட்டுகிறார்களா? என்ன சொல்கிறீர்கள். நம் அரசர் அல்லவா கோயில் கட்டுகிறார்.''

மத்திம வயதுக்காரன் வயசாளியிடம் கேள்வி கேட்டான்.

''கறிக்குழம்பும், அரிசிமாக்களியும் ஆஹா.. நல்ல சேர்மானம். சாப்பிட்டுவிட்டு போய்த்தூங்கு. உனக்கெதற்கு அரசியல்.'' வயசாளி

சொல்ல, மற்ற வயசாளிகள் கெக்கலித்தார்கள். மத்திம வயதுக் காரருக்குக் கோபம் வந்தது.

''பாண்டியர்கள்தான் கோயில் கட்டுகிறார்கள் என்று சொல்வது மமதை. அதிகப்பிரசங்கித்தனம்.''

ஒரு மத்திமன் உரக்கக் கத்தினான்.

''பாண்டியர்கள் கோயில் கட்டவில்லையடா முட்டாள். அரசர்தான் கட்டுகிறார். ஆனால், பாண்டிய வீரர்கள் அதற்குத் தலைகொடுத்து நிற்கிறார்கள். வெகுமுக்கியமாய் இந்தக்கோயில் கட்டுவதினுடைய முக்கியமான விஷயங்களை அவர்கள் தீர்மானிக் கிறார்கள். பெரும் உதவி செய்கிறார்கள். எனவே, பாண்டியர்கள் நமக்கு எதிரிகள் அல்ல என்று சொல்ல வருகிறேன்.''

''இந்த இடம் புரியவில்லை. எந்த பாண்டிய வீரர்கள் என்ன உதவி செய்கிறார்கள்.''

''குணசீலன் என்பவரைப் பற்றி நீ கேள்விப்படவில்லையா.''

''ஆமாம். அரசரிடம் ஏதோ விவாதம் செய்தவர். அரசர் அவரைத் தட்டிக் கொடுத்தார் என்று பலர் சொல்வதைக் கேள்விப்பட்ட துண்டு.

''வெறுமே தட்டிக் கொடுக்கவில்லை. அது சாதாரண விவாத மில்லை. அந்தக் குணசீலன் மிகுந்த கெட்டிக்காரன். பாண்டிய தேசத்து ஒற்றன். பொறியியல் வல்லுனன். கோயில் கட்டுவதில் நம்முடைய சிற்பிகளுக்கு உதவியாக, மிகப்பெரும் ஆக்க வேலை களை அவன் செய்து கொண்டிருக்கிறான். அவனை உதாரணமாக வைத்து பாண்டிய நாடு சுமுகமாக இருக்கிறது என்று சொல்ல வருகிறேன். வேறு யாரை அடக்கி வைத்திருக்கிறோம் தெரியுமா.''

''கீழைச் சாளுக்கியர்களை.''

''கீழைச்சாளுக்கியர்களோடு சண்டையே இல்லையடா. அவர்கள் உறவு முறைக்காரர்கள். பெண் கொடுத்தவர்கள். பெண் எடுத்தவர்கள். அவர்களை அடக்கியதும், சண்டையிட்டதும் வெகு காலத்திற்கு முன்பு நடந்தது. அதேபோல சேரர்களிடமும் எதிர்ப்பு இல்லை. ஒரே வீச்சில் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு இராஜராஜர் பெரும்படையோடு இறங்கி, அந்த சேரதேசத்தில் எந்த இடம் துளிர்த்துக் கொண்டிருந்ததோ, எந்த இடம் வாலாட்டிக் கொண்டிருந்ததோ அதை வெட்டி வீழ்த்திவிட்டார்.''

''புரிகிறது. நீங்கள் காந்தளூர்ச்சாலை கடிகையைச் சொல் கிறீர்கள்.''

''ஆமாம். அந்தக் காந்தளூர்ச்சாலை கடிகை நம்முடைய மன்னரால் தரைமட்டமாக்கப்பட்டதிலிருந்து அந்தக் கடிகையின் இயக்கங்கள் மொத்தமும் நம்முடைய வீரர்களின் மேற்பார்வைக்குக் கொண்டு வரப்பட்டதிலிருந்து, சோழதேசத்துக்குத் தொந்தரவுகள் எதுவும் இல்லை.

காந்தளூர் நிர்மூலமாக்கப்பட்டது. காந்தளூர் காடுகளூடே நல்ல சாலைகள் போடப்பட்டு, அதன் வடபகுதி முழுவதும் நம்முடைய கைக்கு வந்துவிட்டது. சோழதேசம் கவலைப்பட வேண்டிய விஷயம் மேலைச்சாளுக்கியம் மேலைச்சாளுக்கியம். எங்கே இருக்கிறது தெரியுமா? நான் சொல்கிறேன் கேட்டுக் கொள்ளுங்கள். தஞ்சையிலிருந்து திரிசீரபுரம் போக வேண்டும். (திருச்சிராப்பள்ளி) திரிசீரபுரத்திலிருந்து கொல்லி மலை அடிவாரம் போக வேண்டும் (சேலம்) கொல்லிமலை அடிவாரத்திலிருந்து தகடூர் நோக்கி நகரவேண்டும் (தர்மபுரி) மேலே உள்ள கங்கபாடி நம் வசம் இருப்பினும், அங்கே முழுமையாக நம் ஆளுமை இருப்பதாகச் சொல்ல முடியாது. கங்கர்கள் அடிபணிந்து கப்பம் கட்டிக் கொண் டிருக்கிறார்கள். ஆனால், முழுமனதாகச் செயல்படவில்லை.

கங்கபாடியின் வடகிழக்கே நுளம்பபாடி, நுளம்ப பாடியிலிருந்து வடமேற்கே குடமலை நாடு, நுளம்ப பாடியிலிருந்து நேர் மேலாகப் போனால் தடிகைபாடி, தடிகைபாடியிலிருந்து சித்ரதுர்கா வழியாக மேற்கே போனால் துங்கா என்கிற நதி. துங்கா என்கிற நதியின் கரையோரமாகப் போனால், ஒரு இடத்தில் துங்காவும், பத்ராவும் சேர்ந்து துங்கபத்ரா என்ற பெரும் ஆறு ஓடும். மிகுந்த நீர்வளமுள்ள தேசம். அந்தத் துங்கபத்ராவின் வடகரையில் மேலைச்சாளுக்கியம் இருக்கிறது.

நம்மைப் போலவே மேலைச்சாளுக்கியர்கள் நாகரிகம் மிக்க வர்கள். பலவிதமான ஆயுதங்களும், குதிரைப்படையும், தேர்ப் படையும் உடையவர்கள். அந்த மேலைச்சாளுக்கியத்தைத் தைலபன் என்ற மன்னன் மிக அற்புதமாய் கட்டிப் பாதுகாத்து வந்தான். அவன் மகன் சத்யாசிரியன்.

நம் சோழதேசம் தைலபனோடு பல போர்கள் நடத்தி அவர்களை ஒடுக்கியது. இப்பொழுது சத்யாசிரியன் கிளம்பியிருக்கிறான். சோழதேசத்தை வெற்றி பெற்றே தீருவோம். பழிக்குப் பழி வாங்கு

வோம் என்ற ஆவேசத்தில் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பாண்டியர்கள் போல தமிழ் பேசுபவரல்ல. சேரர்போல தமிழைப் புரிந்து கொள்ளக் கூடியவர் அல்லர். கீழைச் சாளுக்கியம்போல சோழர்களும் மிகப்பெரிய நாகரிகத்திற்குச் சொந்தக்காரர்கள் என்ற தெளிவுடையவர்கள் அல்லர்.

அவர்கள் தனி மொழியும், தனி கலாச்சாரமும் கொண்டவர்கள். மிகக் கோபமானவர்கள். வளமையான தேசத்திலிருந்து வரு கிறார்கள் என்பதால், ஜீவநதியின் கரையிலிருந்து கிளம்பியிருக் கிறார்கள் என்பதால், எல்லாவிதத்திலும் சோழ தேசத்திற்கு இணையான இறுமாப்பைக் கொண்டிருக்கிறார்கள்.

பழிவாங்கப்பட்ட சேரதேசத்து காந்தளூர்ச்சாலை மாணவர்கள் பலரும் குடமலை நாட்டைக்கடந்து, மேலைச்சாளுக்கியம் இறங்கி, அங்குள்ள போர் வீரர்களுக்கு விதம்விதமான பயிற்சிகள் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். சேரதேசத்து நம்பூதிரிகளுக்குப் படைபலம் இல்லை. ஆனால், புத்தி பலம் இருக்கிறது. சத்யாசி ரியனுக்குப் படைபலமும், புத்திபலமும் இருக்கிறது. கூடுதலான புத்தி பலத்தை, சேரதேசத்திலிருந்து அவன் வாங்கிக் கொள்கிறான்.

ஒவ்வொரு கடிகை மாணாக்கனும் ஆயிரம் வீரர்களைத் தயார் செய்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. சோழ தேசத்தை நோக்கி படையெடுத்து வருவதற்கே மேலைச்சாளுக்கியம் முழு மூச்சாக இயங்கிக் கொண்டிருக்கிறது. மக்கள் மனதில் வெறுப்பு தூவப்பட்டிருக்கிறது.

இராஜராஜர், இராஜேந்திரர் போன்ற உருவ பொம்மைகளை மூங்கிலில் செய்து வைத்து அம்பு எய்து தினம் பழி தீர்த்துக் கொள்கிறார்களாம். கொல்லிமலை வரை அவர்கள் ஒற்றர்கள் பரவியிருக்கிறார்கள்.

பாண்டிய தேசத்துப் பெண்களை அழைத்து, உங்கள் புருஷர்க ளெல்லாம் சோழ தேசத்தில் அடிமைகளாக வேலை செய்கிறார்கள். அவர்களைச் சவுக்கால் அடிக்கிறார்கள். எட்டி உதைக்கிறார்கள். சோறு போடாமல் கொல்கிறார்கள் என்றெல்லாம் சொல்லி, அந்தப் பெண்களுக்கு வெறியேற்றுகிறார்கள்.

சேரதேசத்து நம்பூதிரிகள் தந்திர சாஸ்திரத்திலும் தேர்ந்தவர்கள். அந்தப் பெண்கள் மனம் நொந்து தற்கொலை செய்து கொண்டால், அந்த ஆவியை வைத்து இங்கே விஷமத்தனம் செய்யலாம் என்றும் அவர்களில் ஒரு சாரார் திட்டமிடுகிறார்கள்.

சோழதேசம் சிரிப்பாக இல்லை தம்பி. எந்த நேரமும் விதம் விதமானத் தாக்குதலைச் சமாளிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறது என்று புரிந்து கொள். மந்திர, தந்திர சாஸ்திரங்களோடு லட்சக்கணக்காய் உள்ளே நுழையக்கூடிய பெரும்படையோடு அவர்கள் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள்.''

''அவர்கள் ஏன் இன்னும் வரவில்லை.''

''பருவகாலம் பார்த்திருக்கிறார்கள்.''

''மழைநாளில் வருவார்களோ.''

''முட்டாள். யுத்தத்திற்கு மழையாவது, வெய்யிலாவது...

''எதைப் பருவ காலமென்று சொல்கிறீர்கள்.''

''சோழதேசத்தில் ஏதேனும் சலசலப்பு ஏற்படாதா, ஏதேனும் பிளவு ஏற்படாதா என்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''சோழதேசத்தில் பிளவு வந்துவிடுமா.''

''வரலாம். வர முயற்சிக்கலாம்.

''யார் முயற்சிப்பது.''

''இங்குள்ள ஒற்றர்கள்.''

''யார் ஒற்றன் இங்கே சொல். வெட்டி எறித்து விடுகிறேன்.''

ஒரு மத்திம வயதுக்காரன் வாள் உருவினான்.

''நீயாகக்கூட இருக்கலாம்.

கிழவன் அவனைப் பார்த்ததும், பலபேர் சட்டென்று வாளை உருவினார்கள்.

வாளை சரக்கென்று உறையில் போட்டுக் கொண்டு கை கூப்பினான்.

''ஐயா, நீங்கள் என்ன, என்னை நோக்கி வாள் உருவுகிறீர்கள். இந்தக்கிழவன் பைத்தியக்காரன். நாங்கள் பரம்பரை, பரம்பரையாய் சோழதேசத்திற்கு உரிமையானவர்கள்.''

''ஆனால், நீ சோழதேசத்தவனில்லை.''

''ஆமாம். அதனால் என்ன. நான் நடுநாட்டைச் சேர்ந்தவன். திருக்கோவிலூருக்கு அருகேயுள்ள வாழையூர் நகரம் எனது ஊர், என் பெயர் கண்டன்காரி. சோழ விச்சாதர முத்தரையரான ஸ்ரீ இராஜராஜத் தேவரின் சிங்களாந்த தெரிஞ்ச குதிரைப்படை உபதலைவரான அரங்கன்காரிக்கு நான் மருமகன்.''

''அதாவது.

''அதாவது அவர் எனக்குத் தாய்மாமன். அவரும் நடுநாடு சேர்ந்தவர்தான். ஆனால், பரம்பரை பரம்பரையாக சோழதேசத்திற்கு நாங்கள் உழைத்து வருகிறோம். தொண்டைநாடும், நடுநாடும் இப்போது சோழதேசங்கள்தான். இன்று நேற்றல்ல வெகுகாலம் முன்பு, சேரல் இரும் பொறையோடு சேர்ந்துகொண்டு அதியமான் நெடுமான் அஞ்சியென்று ஒருவன் தகடூரிலிருந்து வந்து எங்களைத் தாக்கினான். திருக்கோவிலூரை நிர்மூலப்படுத்தினான். அப்போது எங்களுக்கு உதவியாக இருந்தது இந்தச் சோழதேசத்து மன்னர்கள் தான். நாங்கள் நடுநாடு என்றோ, தொண்டை நாடு என்றோ நினைக்கவேயில்லை. சோழ தேசத்தின் அங்கமாகவே நினைத்துக் கொண்டிருக்கிறோம். எனவே பிரித்துப் பேசாதீர்கள். பேச்சு எங்கெங்கோ போகிறது. பேச வந்த விஷயம் அதுவல்ல. யுத்தம் வருமென்று சொன்னீர்களே... எப்பொழுது. அப்படி யுத்தம் வந்தால் என்ன ஆகும். இதனால் கெடுதல் நமக்கா. மேலைச் சாளுக்கி யருக்கா.''

''போரென்றால் இரு பக்கமும் சேதம் இருக்கத்தான் செய்யும். ஆனால், நாம் கொஞ்சம் தளர்ந்துவிட்டோம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆட்டமும், பாட்டமும், கூத்தும், குலாவலும் அதிகமாகி விட்டன. எல்லையில் மேலைச்சாளுக்கிய வீரர்கள் குவிந்து விட்டார்கள் என்றால், இப்போது இந்த கணம் வாள் எடுத்துப் போர் புரிய எத்தனை பேர் இருக்கிறீர்கள்.''

''ஏன் நாங்கள் இல்லையா.''

''குடித்துவிட்டு உளறாதே. குடிக்கத் துவங்கி விட்டாய். உடல் குறுகி, வயிறு பெருத்து நடக்கும் போதே தடுமாறுகிறாய். குடிக்கா மலேயே உளறுகிறாய். உன்னால் என்ன போர் புரிய முடியும். ஐந்து வருடங்களுக்கு முன் உன் உடற்கட்டு எப்படியிருந்ததென்று உனக்கு மறந்து போயிருக்கலாம். எனக்கு மறக்கவில்லை.

''இந்தக் கிழவன் சரியாகப் பேசுகிறானப்பா. இவர் பேசுவ தெல்லாம் நெற்றியடியாக இருக்கிறது. தோல்வி நிச்சயம் என்று பேசுகிறாரே, அதுதான் கவலையாக இருக்கிறது.

வேறொருவன் குறுக்கே புகுந்து சொன்னான்.

''யுத்தத்தில் வெற்றியும், தோல்வியும், என்னால் நிர்ணயம் செய்ய முடியாது. படை நடத்திப் பழக்கப்பட்ட பெரிய சேனாதிபதிகள்

கூட, இதுபற்றி முடிவு செய்ய இயலாது. ஆனால், எனக்கு ஒன்று தோன்றுகிறது. நம்முடைய சக்ரவர்த்தி இராஜராஜர் மிகவும் விழிப்பானவர். வடக்கே மேலைச் சாளுக்கியர்கள் கிளர்ந்தெழுந் திருப்பது அவருக்கு நிச்சயம் தெரிந்திருக்கும். நான் சொல்வதை விட, கூடுதலான தகவல்கள் தெரிந்திருக்கும். எனவே, அவர் அடுத்த படையெடுப்புக்கு விரைவாகத் தயாராவார். இன்னும் சில நாட்களில் படையேடுப்பு பற்றிய விவரங்கள் வெளியாகலாம். அதற்கான சூசகங்கள் தெரிகின்றன.''

''என்ன சூசகங்கள் கண்டுவிட்டீர்.''

ஒரு மத்திம வயது ஆள் அவரை நெருங்கி, தெரிந்துகொள்ளும் ஆவலோடு கேட்டான்.

''எனக்குத் தெரிந்தது உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா.''

''சொல்லுமய்யா. பிடிவாதமாகப் பேசுகிறீரே. நீர் அரசியல் ஞானி. போர்த் தந்திரம்தான் எங்களுக்குத் தெரியும். இருந்தாலும் சொல்லும் என்ன சூசகம்.''

''கோயில் கட்டும் பணி மட்டுமே நடக்கவில்லை. அதற்கப்பால் சிறு தேர்கள் செய்வதுபற்றி இராஜேந்திரர் மிக அக்கறையாக இருக்கிறார். ஒரு தேரில் இரண்டு அல்லது மூன்று பேர் ஏறுவது என்பது போன்ற வடிவமைப்பில் சிறுதேர்கள் செய்யப்படுகின்றன. அதில் தேரோட்டி அமர தனி ஆசனம். இரண்டு வீரர்கள் வில்லோடு அல்லது ஈட்டிகள் சொருகிவைத்துக் கொள்ள தனி இடம். பெரிய சக்கரம். தேருக்கு அடியே வில்போன்ற அமைப்பு. இதனால் தேர் அதிகம் குலுங்காது. விரைவாக ஒடும். குதிரைகள் இழுப்பது எளிது. இம்மாதிரியான தேரை இராஜேந்திரர் பரிசோதித்து பலவும் செய்ய உத்தரவிட்டுவிட்டார்.

அந்தத் தேர்கள் தயாராகி விட்டன. சக்கரங்கள் மட்டும் மிக உறுதியான மரங்களில் செய்யப்படுகின்றன. மற்றவை மாமரங் களில், வாகை மரங்களில் செய்யப்படுகின்றன. கனம் குறைவாக இருக்க வேண்டுமென்பதால், அடித்தட்டு பலகையாக இல்லாமல், வெறும் குறுக்கும் நெடுக்கும் போகின்ற மரச்சட்டமாக இருக் கின்றன. குறுக்கே மர அச்சு இல்லை. இரும்பு அச்சு.

குதிரைகள் பழக்கப்படுத்தப்படுகின்றன. அதிகம் தேர்கள் வில்லாளிகளோடு தாக்கப்பட வேண்டிய இடம் நோக்கி நகரும். ஆயிரம் தேர்கள் செய்துமுடிக்கப்பட்டு விட்டன. மேற்கொண்டும்

தேர்கள் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு சிறுதேரின் அடியிலும் ஒரு சக்கரம் தனியே சொருகப்பட்டிருக்கிறது. ஏதேனும் ஒரு சக்கரம் உடைந்தால், இந்தச் சக்கரத்தை உருவி எடுத்து உடைந்ததை மாற்றி பயணத்தைத் தொடரவேண்டும். இதுதவிர, ஒரு வண்டி நிறைய சக்கரங்கள் தனியே செய்யப்பட்டிருகின்றன. அதாவது உடைந்த சக்கரங்களுக்கு மாற்றுச் சக்கரங்கள் தயார் நிலையில் இருக்கின்றன. அப்போது என்ன அர்த்தம். போர் வருமென்றுதானே.''

''ஆனால், தஞ்சையில் எதுவும் தெரியவில்லையே.

''அதுதான் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீஇராஜராஜத் தேவரின் தந்திரம். எதிரிகள்கூட யுத்தமென்றால் தஞ்சையிலிருந்துதான் என்று நினைத்துக் ·கொண்டிருக்கிறார்கள். அப்படியில்லை. வெவ்வேறு திக்கில் வெவ்வேறு விஷயங்கள் நடைபெற்று, அவைகளெல்லாம் ஒரு இடத்தில் ஒன்றாகக்கூடி முழு வேகத்தில் வடமேற்கு திசை நோக்கி நகர்வார்கள்.''

''அடேயப்பா... இவ்வளவு துல்லியமாகச் சொல்கிறீரே. சத்யாசிரியன் அங்கு சும்மாவா இருப்பான். அவனும் மிகப்பெரிய தந்திரசாலியல்லவா. இதுவரை நம்மால் மேலைச்சாளுக்கியத்தை அடக்கவே முடியவில்லை.

''அதற்குக் காரணம், மிகத்தொலைவு. பாண்டிய தேசம்போல் ஒருநாள் பயணத்தில், சேரதேசம் போல் மூன்றுநாள் பயணத்தில் இல்லாது, பதினைந்து நாள் பகற்பொழுதில் பயணம் செய்தால் மேலலைச் சாளுக்கியத்தின் எல்லையை அடையலாம். பதினைந்து நாள் பயணம் என்பது ஒரு படைக்கு மிகப்பெரிய சோதனை. பாதி படைதான் முடிவில் அங்குபோய் சேரும். அந்தச் சேதத்தைத் தவிர்த்தால் தான் படை பத்திரமாக இருக்கும்.''

'அடேயப்பா... இந்தக் கிழவன் என்ன தகவல்களையெல்லாம் சொல்கிறான்.''

''இந்த மாதிரி சேதத்தைத் தவிர்க்க என்ன செய்வது.

''ஒரு லட்சம் வீரர்கள் போகிறோம் என்று வைத்துக்கொள்வோம். அதில் பத்தாயிரம் பத்தாயிரமாகப் பிரித்து விடவேண்டும். ஒரு பத்தாயிரத்தை முதலில் வேகமாகச் செலுத்தி ஓய்வெடுக்கச் சொல்லி, அடுத்த பத்தாயிரத்தை அவர்களை நடத்தி தூங்கச் சொல்லி, பிறகு அவர்களை ஓய்வெடுக்கச் சொல்லி, முன்போனவர் பின்னாலும், பின் போனவர் முன்னாலும் போய் தாக்கக்கூடிய

விஷயமாக வேண்டும். ஒய்வு என்பது இரண்டு, மூன்று நாள் இருப்பின் முன்னேறுதல் மிக வேகமாக இருக்கும். அதுவும் தவிர வீரர்களை உற்சாகப்படுத்த சில விஷயங்கள் செய்ய வேண்டும்.''

''என்ன விஷயங்கள். மதுக்கூடங்களா.''

''ஹா... அதிலேயே இரு. உன் முகமே கள்ளுக்குடம் போல மாறிவிட்டதடா. சூறையாட வீரர்களை அனுமதிக்கவேண்டும். கிராமங்களைக் கொளுத்தவும், ஜனங்களை விரட்டவும், கண்ணில் பட்டதைச் சுருட்டி எடுத்து தங்களுடைய காலி வண்டிகளில் போட்டுக் கொள்ளவும் ஏற்பாடு செய்ய வேண்டும். அங்குள்ள கன்று காளைகளை மடக்கி ஊருக்கு அனுப்ப வேண்டும்.

''கன்று காளைகளை மடக்கி ஊருக்கு யார் கொண்டு வருவார்கள்.''

''ஐந்தாவது வருணத்தினர். அவர்களும் நம் படையின் அங்கமாக மாறுவார்கள். காளைகளைப் பேணுவார்கள். அவர்களும் விதம் விதமாக உற்சாகப் படுத்தப்படுவார்கள்.''

''இதுவரை அப்படி நடந்ததில்லையே.

''இனி நடக்கும். சேர தேசத்தில் கன்றுகளை நாம் கொள்ளை யடிக்கவில்லை. பாண்டிய தேசத்திலும், கிழக்குச் சாளுக்கியத்தி லும், இலங்கையிலும் அடித்த கொள்ளைகளும் நம்மாலேயே கொண்டு வந்து சேர்க்கப்பட்டுவிட்டன. மேலைச்சாளுக்கியம் தொலைதூரம்.

''சோழப்படை மேலைச்சாளுக்கியத்தை நோக்கி முன்னேறும் என்றல்லவா சொல்கிறீர்கள்.''

''முன்னேறினால்தான் வெற்றி.''

''ஏன் அப்படி.

''மேலைச்சாளுக்கியம் முற்றிலும் தயாராவதற்கு முன்பு அடித்துச் சாய்த்து விடுவதுதான் நல்லது. சக்ரவர்த்தி அதைத் தான் செய்வார்.''

''இவ்வளவு துல்லியமாகச் சக்ரவர்த்தியைப் பற்றிப் பேச உமக்கு எது ஆதாரம்.

''நான் அவரை நேசிக்கிறேன். ஒவ்வொரு நடவடிக்கையையும் கூர்ந்து கவனிக்கிறேன். எந்த தேசத்து அரசியலும் ரகசியமானதல்ல. ரகசியங்கள் என்று எவை சொல்லப்பட்டாலும், அவை மெல்ல

மெல்ல நெகிழ்ந்து வெளியே வரும். அவைகளைச் சேர்த்து கணக்கிட்டுப் பார்த்தால் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

''இதை எங்கிருந்து கற்றீர்கள்?''

''அனுபவம்தான் காரணம். என் அறுபத்தோரு வயதுகாரணம். பதினெட்டு வயதிலிருந்தே அரசியல் நடவடிக்கைகளைக் கூர்மை யாகக் கவனித்துக் கொண்டிருப்பது காரணம்.

''அடேயப்பா... நம்மோடு சாதாரணமாகப் புழங்கிக் கொண்டே எவ்வளவு விஷயங்கள் தெரிந்து வைத்திருக்கிறார். வயசாளி வயசாளிதான்.''

ஒரு மத்திம வயதினர் மனம் திறந்து பாராட்ட, மற்றவர்களும் ஆரவாரம் செய்தார்கள். வயசாளியைப் போற்றினார்கள். அவர் கால் தொட்டுக் கும்பிட்டார்கள்.

கேலி செய்த கூட்டம் அப்படியே மாறியது.

''இப்போது அடிப்படையாய் ஒரு கேள்வி இருக்கிறது. பெண்கள் கூட்டமாகச் சிரித்தால் அது சரியா, தவறா.'' மறுபடி மத்திம வயசுக்காரன் கேட்டான்.

''பெண்கள் சிரித்துவிட்டுப் போகட்டும். இது அவர்கள் இயல்பு. உன் இயல்பு என்ன என்று விசாரி.

அந்த வயசாளி உறுமலாகப் பதில் சொன்னார்.

அவர்கள் எல்லோரும் கூர்மையாக அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''தேவரடியார் பெண்கள் அதிசயம்தான். அற்புதம்தான். ஆனால், அவர்கள் மட்டுமே வாழ்க்கையென்று அவள் பின்னால் திரியாதே. அதிகம் மது அருந்தாதே. எப்போதும் ஒரு படைவீரனைப் போல இரு. உன் கம்பீரம்தான் அவர்கள்பால் இழுக்கும். நீ அதிகம் இளித்தாய் என்றால், உன் தோள்பட்டைக்கருகே வெற்றிலைச்சாறு உமிழ்ந்து விட்டுப் போய்க் கொண்டே இருப்பாள். நீ இளிக்க வேண்டும் என்பதுதான் அவர்கள் எண்ணம். இளிக்காமல் இருந்தால் உனக்கு வெற்றி. நீ இளித்தால் அவளுக்கு வெற்றி.''

''ஒரு தேசத்தில் ஒரு மனிதன் வாய்விட்டுச் சிரிக்கக் கூடாதாப்பா.''

ஒருவன் அலுத்துக் கொண்டான்.

''சிரி.. நன்றாகச் சிரி. பிற்பாடு எது சிரிப்பாய் சிரிக்கிறதென்று உனக்குச் சொல்லப்படும்.''

''இவர் பேசுகிற பேச்சைக் கேளுங்களப்பா. வாழ்க்கை சந்தோஷ மாக இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிற பொழுது, போர் பற்றி இத்தனை தெளிவாகச் சொல்கிறாரே.''

''இப்பொழுதும் இவர் சொல்வது குப்பை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.''

ஒரு மத்திம வயதுக்காரன் சொல்லி எழுந்திருந்தான்.

''இவராகக் கற்பனை செய்துகொண்டு உளறுகிறார். சிலருக்கு யாரும் சந்தோஷமாக இருந்துவிடக் கூடாது. சந்தோஷமாக இருக்கும்போது துக்கத்தை ஞாபகப்படுத்துவார்கள்.''

''நாம் வாழ்க்கையை அனுபவிக்கிறபோது, இந்த வயசாளிக்குப் பொறுக்கவில்லை. யுத்தம் வரும். நீ செத்துப் போவாய் என்று மரணகானம் பாடுகிறார்கள்.''

''உன் பெயர் என்னப்பா.''

''நான் யானைப்படையில் இருக்கிறேன். என் பெயர் எழிலன்.''

பெண்களின் சிரிப்பொலி மீண்டும் கேட்டது. திரும்பிப் பார்க்க, வேறொரு இளம் தேவரடியார் பெண்கள் கூட்டம் அந்த அங்காடி வழியே கடந்து போயிற்று. ஆனால், இந்த முறை அந்தக் கூட்டத்தி லுள்ள எவரும் அதிகம் அவர்களைப் பற்றி அலட்டிக் கொள்ள வில்லை. மௌனமாய் தரையைப் பார்த்தபடி இருந்தார்கள். அந்த வயசாளி மனதுக்குள் சிரித்துக் கொண்டான்.

''காரி என்றால் மன்னர் பரம்பரையா. கிழவர் சட்டென்று கண்டன்காரியைப் பற்றிக் கேட்டார்.

''ஆமாம். மன்னர்கள் பரம்பரைதான். காரி, பாரி, வல்வில் ஓரி என்று மூன்று இனத்தவர் இருக்கிறோம். தகடூரைத் தலைநகராகக் கொண்டு வல்வில் ஓரியும், தொண்டை நாட்டுப் பக்கம் பாரியும், நடுநாட்டுப் பக்கம் திருக்கோவிலூரைத் தலைநகராகக் கொண்டு காரியும் ஆட்சி செய்து வந்தார்கள்.''

''இவர்கள் குறுநில மன்னர்கள். ஆனால் மூவருமே வில்வித்தை யில் வல்லவர்கள். அந்தப் பக்கம் அடர்த்தியான மூங்கிலும், பிரம்புகளும் வளர்க்கப்படும். அந்த மூங்கிலை வளைத்து வில் செய்து பிரம்புகளில் பின்பக்கம் இறகுகள் வைத்து, முன்பக்கம் கூர்மையாக்கி அம்புகள் செய்வோம். சிறு வயதிலிருந்தே எங்கள்

விளையாட்டுப் பொருள் விற்கள்தான். இதை இடையறாது நாங்கள் பழக்கப்படுத்தியிருக்கிறோம். அதேபோல சேணம் இல்லாமல் குதிரை ஏறவும் எங்களுக்குப் பழக்கம் உண்டு. தஞ்சாவூருக்கு வந்துதான் நான் சேணத்தோடும், கடிவாளத்தோடும் குதிரையைப் பார்க்கிறேன்.

''தஞ்சாவூருக்கு வந்துதான் உடுத்தவே கற்றுக் கொண்டீர்கள்.''

''ஆனால், திருக்கோவிலூரில் மலையமான்களின் ஆட்சி தானே நடக்கிறது.

''மலையமான் காரி என்றுதான் பெயர். மலைகள் அதிகமுள்ள இடம். மலை ஏறி எங்களுக்குப் பழக்கம். நாங்கள் அதிகம் உயர மில்லாதவர்கள். தஞ்சாவூரில் தான் நெடுநெடுவென்று மனிதர் களைப் பார்க்கிறேன். தொண்டை நாட்டிலும், நடு நாட்டிலும், திடமாக ஆனால், சற்று குள்ளமாக வீரர்கள் இருப்பது வழக்கம் விரைவாக ஓடவும் எங்களுக்குத் தெரியும்.

''போர்க்களத்திலிருந்தா..'' என்று ஒருவன் சொல்ல, மற்றவர்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

ஆனால் கண்டன்காரி அமைதியாக இருந்தான்.

''அடேய்.. கேலி செய்யாதீர்களடா. நடுநாட்டு வீரர்களின் திறமை அபாரமானது. எனக்குத் தெரிந்து எல்லாப் போரிலும் முதற்படையாக நடுநாட்டு வீரர்கள்தான் அனுப்பப்படுகிறார்கள். மலை ஏறவும், மரம் ஏறவும், வேலி தாண்டவும் இவர்களைத்தான் அரசர் பயன்படுத்துவார். அதை நான் பார்த்திருக்கிறேன்.''

''நீ சொன்ன ஒரு விஷயம் சரி. நடுநாடும், தொண்டைநாடும் சோழநாடுதான்.''

''இன்னொரு கேள்வி. இந்தப் படையெடுப்பில் பாண்டிய வீரர்களையும், மேலைச்சாளுக்கியம் நோக்கி அழைத்துப் போவாரோ.''

''இருக்காது.

''பாண்டிய வீரர்களுக்கு மேலைச் சாளுக்கியத்தோடு தொடர்பு இல்லையெனினும், அவர்கள் நமக்காகப் போரிட மாட்டார்கள். எனவே, பாண்டிய வீரர்கள் இங்கேயே இருப்பார்கள்.''

''அதாவது எதிரிகள் கையில் சோழதேசத்தை, தஞ்சாவூரை ஒப்படைத்துவிட்டு நாம் போருக்குப் போகிறோம். அப்படியா...

''அதுபற்றி எந்தக் கவலையும் நீ படவேண்டாம். சோழ தேசத்தை வல்லவரையர். வந்தியத்தேவர், குந்தவைப் பிராட்டியாரோடு இருந்து காப்பார். அரசருடைய மருமகன் விமலாதித்தர் தன்னுடைய கீழைச்சாளுக்கியப் படையோடு ஒற்றியூர் வந்தடைந்து, அங்கிருந்து கடற்கரையோரம் பூம்புகார் வழியாகத் தஞ்சைக்கு வந்து சேருவார்கள்.''

அவர்கள் தஞ்சைக்கு வரும் நேரம் படையெடுப்பு நடக்கும்.

''வந்து உட்கார்ந்துகொண்டு இத்தனை தகவல்கள் பேச உமக்கு எப்படி முடிந்தது. அதுதான் என் ஆச்சரியம்.

''ஒரேயொரு தகவல் கிடைத்தது. மற்றவற்றை நான் யூகம் செய்தேன்.''

''என்ன தகவல்.

''விமலாதித்தர் பெரும் படையோடு கீழைச் சாளுக்கியத்தி லிருந்து கிளம்பிவிட்டார். கிழக்குக் கடற்கரையோரமாக நகர்ந்து வந்து கொண்டிருக்கிறார். அவருடைய ஒரு சிறுபடை காஞ்சி புரத்தை அடைந்து, அங்கே பாடிக் காவல் செய்யும். அதேபோல மேல் பாடி என்ற இடத்திலும், இன்னொரு படை அமரும். மீதமுள்ள பெரும் பகுதி தஞ்சையைப் பத்து தினங்களில் வந்து அடையலாம். நிறைய பாரவண்டிகளும் வருகின்றன. ஒருவேளை அதில் தானியங்களோ, ஆயுதங்களோ அல்லது பாத்திரம், பண்டங்களோ இருக்கலாம். திடீரென்று விமலாதித்தர் பெரும் படையோடு இந்தப் பக்கம் வருவானேன் என்று யோசித்தபோது, எனக்குத் தோன்றியவை இவையே.

''அரசருடைய மருமகன், குந்தவையின் கணவன் விமலாதித்தர் வருவது உங்களுக்கு எப்படித் தெரிந்தது.

இன்னொரு புத்திசாலி, வயசாளியை மடக்கினான்.

''தஞ்சையிலுள்ள நெல் கொட்டாரத்தையும், ஆட்டுத் தொழுவங் களையும், ஆயுதக் கிடங்குகளையும் சுத்தம் செய்யச் சொல்லி உத்தரவு வந்தது. பரவலாக எல்லா ஆயுதக் கிடங்குகளிலும் ஆயுதங்கள் எடுத்திருந்தார்கள். ஆனால், முழுவதுமாகவும் இல்லை. மறுபடியும் ஆயுதங்களை வரிசைப்படுத்தி சீர் செய்ததில் கிட்டத் தட்ட மூன்று முழுக்கிடங்குகள் முற்றிலும் வெறுமையாகி கூட்டிப் பெருக்கி, சாணமிட்டு மெழுகி, மூலிகையும், பச்சிலையும் கலந்த சாறால் ஓரங்களெல்லாம் தடவி, சுவரில் சுண்ணமடித்து, சுவரில்

சூலம் வரைந்து, தூபதீபம் காட்டி ஒரேநாளில் தயார் செய்து விட்டோம். தஞ்சையைச் சேர்ந்த வேலைக்காரர்களும், படைவீரர் களுமாய் கிட்டத்தட்ட நூறு பேர் இதில் ஈடுபட்டோம்.

அந்த வேலை முழுவதையும் வழக்கமாக மேற்பார்வையிடுபவர் சேனாபதியாகத்தான் இருக்கும். அல்லது உபசேனாபதிகள் எவரேனும் முன்னின்று செய்வார்கள்.

இந்த முறை கிடங்கு சுத்தம் செய்ய தலைமை ஏற்றவர் யார் தெரியுமா. வல்லவரையர் வந்தியத்தேவர். சோழதேசத்தின் எந்த விஷயங்களிலும் பட்டும் படாமலும் இருப்பவர். அரசருக்கு அருகாமையில் நின்று அவருக்கு ஆலோசனைகள் மட்டும் கூறுபவர். முழுவீச்சில் வேலையில் இறங்கி, விரைவாய் விரட்டி, அந்தி சாய்வதற்குள் கிடங்குகளைத் தயார் செய்தார். துல்லியமாகவும், விரைவாகவும் வேலை நடந்தது. பகல் உணவுக்கு எவரையும் அனுமதிக்கவில்லை. மாறாய் பத்துப்பத்துப் பேராய் போய் சாப்பிட்டுவிட்டு வந்தோம். குறைவாகச் சாப்பிடுங்கள். இரவு நன்கு சாப்பிடலாம் என்று எச்சரித்தார். அப்படியே இரவு நல்ல விருந்து நடந்தது. எங்களுடைய பெயரைச் சொல்லி இன்னும் நூறு பேர் சாப்பிட்டார்கள் என்றால் பார்த்துக்கொள்.''

''ஆக, இப்படிக் கிடங்குகள் ஒழிக்கப்பட்டு பத்திரமாக வைக்கப் பட்டதற்குக் காரணம், ஆயுதங்கள் உள்ளே வரப்போகின்றன என்று சொல்கிறாயா? ஆயுதங்கள் வருவதை வைத்தே யுத்தம் நடக்கும் என்கிறாயா?''

''வெறும் ஆயுதங்கள் மட்டுமல்ல. பதினாறாயிரம் படைவீரர் களும் வருகிறார்கள்.''

''கோயில் கட்டுவதற்காக இருக்குமப்பா. தஞ்சைக்குள் தான் ஆட்கள் வந்த வண்ணமாகவே இருக்கிறார்கள்.''

''இல்லை. இவர்கள் தஞ்சைக்குள் வந்து நிற்கப் போவதில்லை. விமலாதித்தரும் அவர் சிறுபடையும் தவிர, வேறு எவரும் உள்ளே நுழையப் போவதில்லை.

''பிறகு.

''அதுதான் சொன்னேனே. காஞ்சிபுரம். மேல்பாடி, மீன்சுருட்டி, கீழ்க்கரை என்று வடக்கேயே அவர்கள் தங்க வைக்கப்படுவார்கள்.

''இது உமக்கு எப்படித் தெரிந்தது.

''வந்தியத்தேவர், அதிகாரிச்சி முத்தான பொன் நங்கையோடும், உபசேனாதிபதிகளோடும் பேசிக் கொண்டிருந்தபோது கேட்டேன்.''

''வந்தியத் தேவரையே ஒற்றறிந்தாயா.''

''அதெல்லாம் இல்லை ஐயா. பேசிக் கொண்டிருக்கும்போது, அருகே வேலை செய்து கொண்டிருந்தால் நீ பேசுவது என்ன என்று என் காதில் விழாதா.''

''ஆனால், மறுபடியும் யுத்தமென்றால் வேதனை தான்.''

ஒரு மத்திம வயது ஆள் தன்னுடைய உடைவாளை நெஞ்சோடு அணைத்துக்கொண்டு கைகட்டியபடி பேசினார்.

''ஏன். என்ன வேதனை. திடீரென்று போர் பற்றி அலுத்துக் கொள்ளும் அளவுக்கு என்ன ஆகிவிட்டது.''

''குழந்தை குட்டிகளைவிட்டு பிரிய நேரும். தொலைதூரம் பயணப்பட வேண்டும். போனால் திரும்பி வருகிறோமா என்று தெரியாது. பாண்டியர்களைப் போலவோ, சேரர்களைப் போலவோ மேலைச்சாளுக்கியம் எளிதான விஷயம் அல்ல. அவர்கள் மிகவும் முரடர்கள். வெறியர்கள். தமிழர்கள் என்றால், கொதித்துப் போகிற வர்கள். தமிழ் பேசுகிறவர்களைக் கண்டால் கன்னத்தில் அடிக்கிற வர்கள். திடீர் திடீரென்று எல்லை கிராமங்களில் ஊடுருவி அட்டூழி யம் செய்பவர்கள். எந்த தர்ம நியாயத்திற்கும் கட்டுப்படாதவர்கள். காவிரி நதி தங்களுடைய சொந்தமென்றும், அதைக் கொடுக்கக் கூடாது என்றும் எண்ணம் உடையவர்கள். மறித்து மண் அணை கட்டியவர்கள். காவிரியை, சோழ தேசத்திற்குப் பாய விடாமல் சில காலம் தடுத்து நிறுத்தியவர்கள்.

நம்மைக் கவிழ்ப்பதற்காகவே கீழைச் சாளுக்கியத்தோடு எப்படியாவது நல்லுறவை ஸ்தாபித்துக்கொள்ள வேண்டும் என்று முயல்கிறவர்கள். தெலுங்கு பேசுகின்ற அந்தக் கீழைச் சாளுக்கியர் களோடு நல்லுறவு ஏற்பட்டு விட்டால், சோழர்களை நிர்மூலமாக்கி விடலாமென்று கனவு காண்கிறவர்கள். தெலுங்கு பேசுகின்ற அந்தக் கீழைச் சாளுக்கியர்களோடு நாம் திருமண சம்மந்தம் வைத்துக் கொண்டுவிட்டதால், நம்மை எதிர்க்க முடியாமல் தவிக் கிறவர்கள். இருப்பினும் எதிர்க்க வேண்டுமென்று கீழைச்சாளுக் கியத்தைச் சேர்ப்பதற்காகச் சூழ்ச்சி செய்கிறவர்கள்.''

''நீங்கள் சொல்வது போல சேர தேசத்து முன் குடுமி அந்தணர் களோடு சேர்ந்துகொண்டு அவர்களுக்கருகே மந்திர தந்திரங்கள்

செய்கிறவர்கள். இந்த யுத்தம் மிகக் கடுமையாக இருக்குமென்று தோன்றுகிறது.

''ஆமாம். மிகக் கடுமையாக இருக்கும்.

''இவர் என்ன கவலைப்படுகிறார் என்று எனக்குத் தெரிகிறது.

''கடந்த மூன்று நான்கு வருடங்களாக சோழதேசம் யுத்தம் இல்லாமல் ஆட்டபாட்டங்களில் நாட்டம் அதிகம் காட்டிவிட்டது. இப்போது யுத்தமென்றால், அந்தச் சுறுசுறுப்பு வருமோ என்று கவலைப்படுகிறார்.

''நிச்சயம் வரும். வரத்தான் வேண்டும். வராது போனால் மரணம் நிச்சயம்.

''யாருக்கு.

''சோழ அரச குடும்பத்திற்கு...

''என்ன சொல்கிறாய்.

சரக்கென்று அங்கு வாட்கள் உருவப்பட்டன.

''அவன் வாள் உருவினால் வாள் உருவலாம். வேல் உருவினால் வேல் எடுக்கலாம். வில் எடுத்தால் கேடயம் எடுத்துத் தடுத்து மறுபடியும் அடிக்கலாம். மீறி வந்தால் வெட்டிப்போடலாம். ஆனால், முன்குடுமி சோழியரோடு மந்திர தந்திரம் செய்து நமது அரச குடும்பத்தினரைச் சூழ்ச்சிகளால் வென்றால், ஆதித்த கரிகாலனைக் கொன்றார்களே, அப்படி ஆபத்துதவிப் படைகளை அனுப்பி வெட்டிக் கொன்றால், கோயிலுக்கு ஆட்கள் வேண்டும் என்று சொல்லிக்கொண்டு பல்வேறு திக்கிலிருந்தும் அடிமை வீரர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருவராக வேடம் போட்டு வந்து, அரண்மனைக்குள் எகிறிக் குதித்து, ஏதேனும் படுகாயப்படுத்திவிட்டால் அசைக்க முடியுமா. அவர்கள் தற்கொலைப்படையடா. வெட்டிக் கொன்றுவிட்டு விஷம் தின்று செத்துப் போவார்கள். சட்டென்று சாவது மட்டுமல்ல, கையிலிருக்கும் விஷப் பொடிகளை நாலா திசைகளிலும் வீசி ஏறிவார்கள். தான் மரணமடைவது நிச்சயம் என்று ஆகிவிடும். வெறுமே மரணம் அடைய வேண்டுமா, ஓரிரண்டு பேரைக் கொலை செய்வதோடு முடிந்து விடுமா, பிடிக்க வருவோர் முகத்தில் விஷப்பொடியை வீசி எறிந்தால் பத்து பேராவது சாக மாட்டானா.''

''இதென்ன தர்மமாகவே இல்லையே.

''தர்மம் என்ன தர்மம். எப்படியாவது சோழ தேசத்தைச் சிதறடிக்க வேண்டும் என்பதுதான் தர்மம். முன்குடுமிச் சோழியர்கள் வில் வளைத்து அம்பு விடுவதில் தேர்ச்சி பெற்றவர்கள். அப்படி அம்பு விடும்போது, அதன் நுனியில் நஞ்சு தோய்த்து விடுவதற்குச் சிறிய பளிங்குக் குப்பிகளை வைத்திருப்பார்கள். பளிங்குக் குப்பிகளைக் கேணியிலும், குட்டையிலும் கவிழ்த்து விடுவது என்று ஒரு திட்டம் வைத்திருக்கிறார்கள்.''

''ஐயோ, இதென்ன அநியாயம்.

''கேட்பார் யாருமில்லை என்கின்றபோது, எல்லா அநியாயங் களும் நியாயமாக்கப்படும்.

''குட்டையில் விஷம் கலப்பதை எப்படி நியாயமாக்க முடியும்.

''அவன் ஊரைச் சூறையாடியிருக்கிறோமல்லவா. பெண்டுகளை இழுத்து வந்து இங்கு அரண்மனையில் வேலை செய்யச் சொல்லி யிருக்கிறோமல்லவா. ஆநிரைகளைக் கொண்டு வந்து இங்கே மேய விட்டு பால் கறந்து அனுபவித்துக் கொண்டிருக்கிறோமல்லவா. ஒரு குதிரைகூட அங்கு இருக்கக்கூடாது என்று எல்லா குதிரை களையும் ஓட்டிவந்து விட்டோம் அல்லவா. அவர்களுடைய குதிரைகளையும், கோவேறு கழுதைகளையும், நம்முடைய வண்ணார், குயவர்கள், கருமார்கள் பலருக்கும் தானமாக வழங்கி யிருக்கிறோமல்லவா.

அந்த தேசத்து உலோகங்களை, வேல்களை, வாள்களைக் கொண்டு வந்து இங்கே உருக்கி புதிய ஆயுதங்கள் செய்திருக்கிறோ மல்லவா. அந்தப் பயிர்ப்பச்சைகளை அழித்திருக்கிறோமல்லவா. வெறும் வயலையும், வெறி நாய்களையும் வைத்துக்கொண்டு அவன் என்ன செய்வான். குமுறியிருப்பானல்லவா. கோபமாக இருப்பானல்லவா. எப்படியும் வஞ்சம் தீர்க்க வேண்டுமென்ற வெறியில் இருப்பனால்லவா. அவனை எப்படி சமாளிப்பது. அவன் வந்து கேணியில் விஷம் கொட்டும் வரை காத்திருப்பதா.''

இல்லை. இல்லை என்று எல்லோரும் கூச்சலிட்டார்கள்.

''தாக்கத்தான் வேண்டும்.

''இவர் சொன்னது போல, வெறும் வயலும், வெறிநாய்களும் இருக்கும்போது எதற்குத் தாக்க வேண்டும்.''

''வளர்ந்துவிட்டான் என்று சொல்கிறார்கள்.''

''இதுவும் உங்களுக்குக் கிடைத்த தகவலா அல்லது வந்தியத் தேவர்சொன்னாரா.''

''காந்தளூர்ச்சாலை கடிகையிலிருந்து வந்த செய்தி இது. காந்தளூர்ச்சாலையைத் தரைமட்டமாக்கி இருபத்தைந்து வருட மாயிற்று. பிறகு அதை மறுபடியும் புதுப்பித்து இராஜராஜரே பல நிவந்தங்களும் கொடுத்து வளர்த்து வருகிறார். அவர் கட்டுப் பாட்டில் இருக்கிறது. மெல்ல மெல்ல போர்ப்பயிற்சிகளைக் கற்றுத்தரும் அந்தக் கடிகைக்குள் பலநூறு மேலைச் சாளுக்கிய இளைஞர்கள் வந்து சேர்ந்துவிட்டார்கள். மேலைச் சாளுக்கியம் என்று தங்களைச் சொல்லிக் கொள்வதில்லை. குடமலைநாடு என்று கூறிக் கொள்கிறார்கள். கங்கதேசம் என்று சொல்லிக் கொள்கிறார் களாம். பயிற்சி முடிந்த பிறகு சோழனைக் கொல்லுவோம் என்று சபதமெடுக்கப் போகிறார்களாம்.

''காந்தளூர்ச்சாலையை மறுபடியும் தரைமட்டமாக்கினால்.''

''நம்மை யார் பயிற்றுவிப்பார்கள்.''

''எதிரிகள் வந்து பயில்கிறார்கள் என்பதற்காக ஒரு கடிகையை எப்படி தரைமட்டமாக்குவது. ஒருமுறை தண்டித்தது போதும்.''

''மறுபடியும் வந்து படிக்கிறார்களே.''

''போர்ப்பயிற்சி மேலைச்சாளுக்கியத்திற்குத் தரமாட்டேன் என்று சொன்னால் எப்படி.

''மேலைச்சாளுக்கியம் என்று சொன்னால் தானே இது பிரச்னை. வடமொழியும், குடகுமொழியும், தமிழும் பேசி வந்து சேர்ந்த பிறகு தானே தெரிகிறது, அவன் மேலைச்சாளுக்கியன் என்று. அதுவும் தவிர தகுதியுள்ளவனுக்குப் போர்க்கலை சொல்லித் தரவேண்டுமென்பதுதான் விதி என்பதே தவிர, இன்னார் இனியார் என்பது அந்தக் கல்லூரிக்கு வெளியேதான் தீர்மானிக்கப்படும்.

''ஆக, நம்மைச்சுற்றி ஆபத்து இருக்கிறது.''

''வெகுநிச்சயமாய் இருக்கிறது. ஏனெனில் நாம் வளர்ந்திருக் கிறோம். நம் வளர்ச்சி கண்டு பொறாமைப்பட்டவர்கள் இருப் பார்கள்.''

''சாதாரணமாகப் போக இயலாதா.''

''ஏன் போர் கண்டு பயம் வந்து விட்டதா. மூன்று வருட ஓய்வில் உடம்பு நடுங்கிவிட்டதா. நல்லபடியாக சமாதானம் பேசலாம். ஆனால் சண்டை போட்டு வெல்லும் திறனுடையவனாக இருந்தால்

தான் சமாதானம் பேச முடியும். இல்லையெனில் உன் சமாதானம் அசிங்கமாகப் போகும். ஆபாசமாகக் காட்சியளிக்கும்.

அங்குள்ள அந்த மத்திம வயது படைவீரர்களும், மற்றவர்களும் மௌனமாக இருந்தார்கள்.

''மிகவும் இருட்டிவிட்டதப்பா நான் கிளம்புகிறேன்.''

அந்த வயசாளி எழுந்தான்.

''எவ்வளவு விவரங்கள் சொல்லியிருக்கிறீர்கள். இம்மாதிரியான மூத்த குடிமக்கள் இருப்பதால்தான் சோழதேசம் வலுவாக விளங்குகிறது.''

''அப்படித் தெரியவில்லையே.''

''என்ன தெரியவில்லை.''

''மூத்த குடிமக்களையெல்லாம் நீங்கள் போற்றிப் பாதுகாப்பதாக. அடுத்த தலைமுறைகள் கொஞ்சம் ஆரவாரமாகத்தான் இருக்கிறீர்கள். கேலியும், கிண்டலும் அதிகரித்திருக்கின்றன. இளைய படை வீரர்களெல்லாம் இராஜேந்திர சோழர்தான் தங்களுடைய உண்மையான அரசர் என்று பிதற்றத் துவங்கியிருக்கிறார்கள். இது இராஜராஜர் காதுக்கும் போய் விழுந்துவிட்டது.''

''அப்படி யாரும் பேசுவதில்லையே.''

''பேசத் துவங்கிவிட்டார்கள். கருமார்கள் இராஜராஜரிடம் குறை சொல்லாது இராஜேந்திரரிடம் குறை சொல்வதினுடைய காரணமென்ன? அங்குள்ள இளைஞர்கள் இராஜேந்திரரை வெறித்தனமாக நேசிக்கிறார்கள். இராஜேந்திரரும், அவர்களுடைய உதவி தனக்கு வேண்டுமென்று ஆதரவும் கொடுக்கிறார். இதனால் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் மெல்லப் புறக்கணிக்கப்படுகிறார் என்ற உணர்வு மக்களிடையே வந்துவிட்டது. இளவரசர் இராஜேந்திரசோழர், சக்கரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் என்று நாம் பிரிந்துவிடலாகாது. சோழதேசம் முன்னைவிடக் கட்டுக் கோப்பாய், வலிமைமிக்கதாய் இருந்தால்தான், எதிரிகளுடைய ஆட்டம் குறையும். அதுதான் அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு நாம் செய்யப்போகும் மிகப்பெரிய உதவி.

சோழதேசம் என்பது வெறும் அரச பரம்பரை அல்ல. அதுவொரு கலாச்சாரம். ஒரு நாகரிகம். காலம் காலமாய் அதை உலகுக்கு வெளிப்படுத்த, இதோ ஒரு அற்புதமான கோயில் எழும்பிக் கொண்டிருக்கிறது. இதுபோல பல கோயில்கள் எழுப்பப்பட வேண்டும்.

இதுதான் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவரின் ஆசை. அவருடைய கனவை நனவாக்குவதுதான் நம்முடைய வாழ்க்கை நெறி. மறுபடி சொல்கிறேன். இது அரச குடும்பத்து உயர்வுக்காக நடத்தப் படுகின்ற கோயில் பணி அல்ல. சைவநெறி தழைப்பதற்காக மட்டுமே நம்முடைய அரசர் கோவில் கட்டவில்லை. சோழ தேசத்து நாகரிகத்தை, தமிழ்பேசும் மக்களினுடைய வாழ்வியல் வளர்ச்சி யைச் சொல்வதற்காகத்தான் இதைச் செய்திருக்கிறார். இதைக் கட்டிக் காப்பாற்றுவது தான் நம்முடைய வேலை. இந்தக் கோயில் பணி சீராக முடியவேண்டுமெனில் போர் அவசியம். நான் வருகிறேன்.''

அந்தக் கிழவன் மெல்ல தோளைச் சுற்றி மேல் துண்டு அணிந்து கொண்டு நிதானமாக நடந்து இருளில் மறைந்தார்.

''இந்தக் கிழவன் யார். இதற்கு முன்பு பார்த்திருக்கிறீர்களா.''

''பார்த்திருக்கிறேன். இதோ இந்தப் பலகாரக் கடையில் வந்து உட்கார்ந்து நெய் அப்பம் சாப்பிட்டுவிட்டுப்போவார்.''

''நிறைய விஷயங்கள் பேசுகிறாரே.''

''இம்மாதிரி பேசுவதற்குத் தஞ்சையில் ஆட்களுக்குப் பஞ்சமே யில்லை.

''என்ன சொல்கிறீர்கள்.''

''ஆயுதக் கிடங்குகள் சுத்தம் செய்தது சாதாரணமான விஷயமாகக் கூட இருக்கலாம். அதற்கு கண் வைத்து, காது வைத்து, மூக்கு வைத்து நாளை காலையிலிருந்து போர் துவங்கும் என்று இவர் சொன்னால், நீங்களும் நம்பி விடுவீர்களா.''

''ஆமாம். ஆமாம். அதுதானே.'' என்று மற்றவர்கள் ஆமோதிக்க, மெல்ல அந்தக் கூட்டம் கலைந்து போயிற்று. இதுவரை அந்தப் பலகாரக் கடையில் குப்பையை அகற்றி, சுத்தம் செய்து கொண்டு சுற்றிக் கொண்டிருந்த ஒரு இளைஞன் நகர்ந்தான். அந்தக் கிழவரோடு போய் சேர்ந்து கொண்டான். அந்த அங்காடித்தெரு வழியே எதுவும் பேசாமல் தெற்கு நோக்கி நடந்து போனார்கள். சிறிது தூரம் போன பிறகு மேற்கே திரும்பினார்கள். தொலை தூரத்தில் கோயில் கட்டுமானப் பணி நடந்து கொண்டிருந்தது.

பெரிய ஆச்சா மரங்களை பார வண்டிகள் இழுத்துக் கொண்டு போயின.

''நீங்கள் யார் என்று விசாரித்தார்கள். வழக்கமாக வந்து சாப்பிடுகிறவர்தான் என்று பலகாரக்கடைக்காரர் சொன்னார். தஞ்சாவூர்காரர்களே ஒன்றை இரண்டாக்கி, சாதாரண விஷயத்தைப் பெரிதாக்கிப் பேசுகிறர்கள் என்று தங்களுக்குள்ளேயே பேசிக் கொண்டு கலைந்து போனார்கள்.'' அந்த இளைஞன் மெல்லப் பேசினான்.

''எப்படி இருந்தது என் பேச்சு.''

''அற்புதம்.

''ஏதேனும் குறையுண்டா.''

''எதுவுமில்லை. மிகத் தெள்ளத் தெளிவாய் எப்படிக் காய்களை நகர்த்த வேண்டுமோ அப்படிக் காய்களை நகர்த்தினீர்கள்.''

''நீ போய் கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரிடம் போய் இந்த விஷயத்தைத் தெரிவித்துவிட்டு வா. அங்கங்கே இதுபோல போர் திட்டங்களை கோவிந்தன் கௌதமன் சிங்கபிரான் பேசிக் கொண் டிருக்கிறார் என்று சொல்லிவிடு. நான் அந்தணன் என்பதை மறைத்து மறவர் குடியில் பிறந்தவன்போல தோற்றமளிக்கிறேன் என்றும் சொல். நிச்சயம் சொல்.

''நிச்சயம் சொல்கிறேன். உங்களுக்கு என் வாழ்த்துக்கள். உங்கள் சேவைக்கு உங்கள் பொற் பாதம் தொட்டு என் வணக்கங்கள். உங்க ளுடைய நெடுநாளைய சம்பிராதயங்களையெல்லாம் விட்டுவிட்டு, நெற்றியில் திருநீறு பூசி, மறக்குல வன்னியர் போல உடை உடுத்தி, அவர்கள் மொழியில் பேசி, சோழ தேசத்திற்கு எவ்வளவு அற்புதமான பணியை ஆற்றிவருகிறீர்கள். நினைக்க நினைக்கப் பெருமிதமாக இருக்கிறது.

''நான் ஒற்றன். ஒற்றனுக்கு மதம், ஜாதி, மொழி எதுவும் இல்லை. அவன் தேசத்தின்பால் மிகுந்த காதலுடையவன். அவன் அரசனுக்கு அடிமை போன்றவன். கிருஷ்ணன்ராமரான பிரம்மராயர் எந்தச் சடங்குகளிலும் சிக்கிக்கொள்ளாமல் சோழதேசத்தின் வளர்ச்சி யிலேயே குறிக்கோளாக இருக்கிறார். ஏன், மிக அற்புதமான ஒரு சிவன் கோயிலை அவர் ஊரான அமண்குடியில் (இப்போது அம்மன்குடி) எழுப்பியிருக்கிறார். அஷ்டதசபுஜ காளிக்குக் கோயில் எழுப்பியிருக்கிறார். மிகப்பெரிய ஹோமங்கள் அங்கு நடைபெறு கின்றன. ஆனால், அவர் வைணவர். திருமண் தரிப்பவர்.

ஆனாலும், அந்த வைணவ சம்பிரதாயங்களையெல்லாம் மீறி இந்த சோழதேசத்தின் ஒற்றுமைக்காக எது செய்யவும் தயாராக இருப்பவர். சைவ சமயத்தையும், சாக்தத்தையும் ஆதரிப்பவர். அவர் வழி வந்த நானும் அவ்விதமே இருப்பேன். இங்கே சடங்குகள் முக்கியமில்லை. தேசம் முக்கியம். தேசம் இருந்தால் தான் நாகரிகம் இருக்க முடியும். மதம், சம்பிரதாயம் எல்லாம் நாகரிகத்தின் ஒரு பகுதி. சுவர் இருந்தால்தான் சித்திரம். இங்கு நடந்தவற்றை சேனாபதி கிருஷ்ணன் ராமனிடம் தெரிவித்துவிட்டு என் வணக்கங்களையும் சொல்.'' அந்தக் கிழவன் விடை பெற்றுக் கிளம்பினான்.

அந்த இளைஞன் தொலைவில் ஒரு வீட்டின் பின் கொட்டிலில் கட்டியிருந்த குதிரையை அவிழ்த்துக்கொண்டு ஏறி அமர்ந்தான். மெல்ல மேற்கு நோக்கி விரட்டினான்.

குதிரை கட்டுமிடத்திலிருந்து வடமேற்கே தஞ்சைமறவர்கள் குடியிருக்கும் தனிப் பகுதி இருந்தது.

அந்தப் பகுதிக்குள் நுழைந்ததும் வேறொரு வீட்டிற்குள் புகுந்து அங்குள்ள குதிரையை அவிழ்த்துக்கொண்டு அந்த இளைஞன் கிளம்பினான். குதிரையை சேனாதிபதியின் வீட்டிற்கு முன் நிறுத்தி, உள்ளே இறங்கி வெளிப்புறத் தாழ்வாரத்தில் காத்திருந்தான்.



**சேனாபதி அமண்குடி கிருஷ்ணன் ராமன் சுற்று மதில் எழுப்பித்தான் என்கிற கல்வெட்டிற்கு முன் நாவலாசிரியர்**

சேனாதிபதி உள்ளே அழைத்தார். போய் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினான்.

காதில் கை வைத்து அபிவாதயே சொன்னான் வில்லிற்கிடந்தான் மங்களாச்சன்.

''வா மங்களா எப்படி இருக்கிறாய்.'' அவன் அங்காடிக் கடையில் நடந்த விஷயத்தை விவரித்தான்.

''சிங்கபிரான் எப்படியிருக்கிறார்.''

''மிக நன்றாக இருக்கிறார். தொண்டையில்தான் ஏதோ சிக்கல் இருக்கும்போல் இருக்கிறது. அடிக்கடி செருமிக் கொள்கிறார். வெற்றிலையை வாயில் அதக்கிக் கொள்கிறார். நெஞ்சுக் கூட்டுக் குள்ளும் கர்புர் என்று சத்தம் வருகிறது.

''ஆம். ஓய்வெடுக்க வேண்டிய வேளையில் இப்படி ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கிறார். மங்களா நீயும், அவரும் பல இடங் களுக்குப் போய். சோழதேசத்தின் பல பகுதிகளுக்கும் போய் போர் வரும். போர் வரும் என்று சொல்லி மக்களைக் கவனப் படுத்துங்கள். எச்சரிக்கை செய்யுங்கள்.''

''நிச்சயம் செய்கிறோம். ஆனால், ஒரு கேள்வி.

''என்ன.''

மௌனமாகத் தரைபார்த்துக் கொண்டிருந்த சேனாபதி கிருஷ்ணன்ராமன் கண்களை மூடிக் கொண்டார். மெல்ல நிமிர்ந்தார். கண்கள் திறந்தார்.

''வரும். வரும் என்ன வந்துவிட்டது.'' என்று சொன்னார்.

மெல்ல வில்லிற் கிடந்தான் மங்களாச்சனின் உடம்பு ஆடியது. வணங்கினான். விடைபெற்றான்.

அவர் மாளிகையிலிருந்து ஒரு காத தூரத்தில் ஒரு புறம்படியில் குதிரைகளை மடக்கி லாடம் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

குதிரையைக் கொண்டு போய் நிறுத்தி லாடம் கட்ட வேண்டுமே என்று சொன்னான்.

''நேரமாகும். நாளை காலை வரை பொறுத்திருக்க முடியுமா.'' என்று லாடக்காரர் கேட்க, அவன் முடியாது என்று தலை யசைத்தான்.

அங்கே அவன் குதிரையை வாங்கிக்கொண்டு வேறு குதிரையைக் கொடுத்தார்கள். அந்தக் குதிரைக்குக் கீழேயிருந்து வேறு ஒரு நிறத்

துணியை உருவி இடுப்பில் கட்டிக் கொண்டு, இடுப்புத்துணியை தலைப்பாகையாக்கிக் கொண்டு குதிரையில் ஏறி அமர்ந்தான்.

ஒட்டிய மீசையை உரித்து எடுத்தான். போய் ஒரு குளத்துக் கரையில் இறங்கி முகம் கழுவி திருமண் இட்டுக் கொண்டான். இடுப்பிலிருந்து பூணூல் எடுத்து குறுக்கே மாட்டிக் கொண்டான். குதிரை ஏறி அதே அங்காடித் தெருவழியாகப் போய் சுற்று முற்றும் யார் இருக்கிறார்கள் என்று பார்த்தபடி, அந்தப் பலகாரக் கடையை நோட்டமிட்டபடி, கடந்து போய் கருத்தட்டாங்குடி வழியாக முன்னேறி, சற்று திரும்பி வெண்ணாற்றங்கரையை அடைந்து, ஓரமாக சோலைகளுடே குதிரையைச் செலுத்தினான்.

அங்கு ஒரு சிறிய அரச குடும்பத்து மாளிகை இருந்தது. இரண்டு, மூன்று பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தன. வாயிற்காப்போன் வேலை குறுக்கே நீட்டி மடக்க, அவன் கீழிறங்கி காதில் ரகசியமாகச் சொன்னான்.

''இன்னொரு முறை சொல்லுங்கள்.'' அந்தக் காவலாளி கேட்க, ''வில்வண்டி வந்திருக்கிறது என்று சொல்லுங்கள்.''

''யாரிடம்.

''காளைக்கன்றிடம்.

காவலாளி ஏறிட்டுப் பார்த்தான்.

''உங்களைச் சோதிக்க அனுமதி தரவேண்டும். என்று சொன்னான்.

அவன் உட்புறச்சுவரில் கைவைத்து குனிந்து நிற்க, அவன் வயிற்றில் தடவி ஏதேனும் ஆயுதம் வைத்திருக்கிறானா என்று சோதிக்கப்பட்டது.

குதிரையில் சேணங்கள் தூக்கிப் பார்க்கப்பட்டன.

''குதிரையை நடத்தி அழைத்துப் போங்கள். மேலே ஏறிப் போனால் தொலைத்து விடுவார்கள்.'' என்று உத்தரவிடப்பட்டது.

அவன் சம்மதித்து நடந்து போனான்.

மாளிகைக்குப் போவதற்கு முன்பு ஒரு புல்திடல் இருந்தது. அங்கே மூவர் நின்றபடி பேசிக் கொண்டிருந்தார்கள். அவன் வருவது தெரிந்ததும் திரும்பி அவன் வருகையைப் பார்த்தார்கள். அதில் உயரமாய் நின்றவர் அருகே ஓடிப்போய் வில்லிற் கிடந்தான் மங்களாச்சன் மண்டியிட்டு வாழ்க சோழம் என்றான்.

''யாரது.

''வில் வண்டி.'' என்று பதில் சொன்னான்.

''ஹா... சொல். என்று இராஜேந்திரர் உத்தரவிட்டதும் அங்காடியில் நடந்ததும், அங்கு நடந்தவைகளை பிரம்மராயரிடம் சொன்னதும் விவரித்தான்.

''நல்லது. பிரம்மராயருடைய ஒற்றர்படை மிகச் சிறப்பாகச் செயலாற்றுகிறது. போர் வரும் என்றா சொல்கிறார்.''

''வந்துவிட்டது என்று சொல்கிறார்.''

''நான் இங்கு தனியாக வந்திருப்பது தெரிந்திருக்கும். அதனால் சொல்கிறார் என்று நினைக்கிறேன்.''

''மிக்க கவலையாடு இருக்கிறார்.''

''போர் பற்றிய கவலை இந்த இராஜேந்திரனுடையது. அவர் ஓய்வெடுத்துக் கொள்ளட்டும். சரி, வில்லிற்கிடந்தான் மங்களாச்சன் போய்வா. சேனாபதி கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரின் ஒற்றன். அவர் பெயர் என்ன கௌதமன் கோவிந்தன் சிங்கபிரான் இல் லையா. அவரோடு கைகோர்த்து பிரம்மராயர் சொன்ன பணிகளைச் செய்து கொண்டிரு. அவ்வப்போது எனக்கும் தகவல் கொடு. இந்தா இதைக் கை செலவுக்கு வைத்துக் கொள்.''

ஒரு சிறிய துணி முடிச்சு ஒன்றை அவனிடம் நீட்டினார்.

''நீயும் வைணவ சம்பிரதாயத்தைப் பின்பற்றுபவன். திடீர் திடீரென்று உருவம் மாறி எல்லா ஜாதியாகவும் உருவெடுக்கிறாய். மிக அற்புதமான ஒரு ஒற்றர் படையைக் கிருஷ்ணன்ராமன் தயாரித்திருக்கிறார். சோழதேசம் இதற்கு நன்றிக் கடன் பட்டிருக் கிறது. போய்வா. வெற்றி நமது.'' என வாழ்த்தினார்.

மங்களாச்சன் குதிரையை நடத்திக்கொண்டு போய் சட்டென்று தாவி ஏறி இருளில் மறைந்தான். அந்தப்பக்க இருளிலிருந்து வீரர்கள் முன்னேறி வந்தார்கள்.

''மங்களாச்சனைப் பின்தொடர்ந்து, அவன் வேறு யாரிடம் பேசுகிறான் என்று விசாரித்து என்னிடம் சொல். என்று இராஜேந்திரர் கட்டளையிட்டார்.

ஒரு வீரன் வில்லிற்கிடந்தான் மங்களாச்சனைப் பின் தொடர்ந்தான்.

போர் வரும் என்பதற்கு இதுதான் மிக முக்கியமான அறிகுறி. எந்த தேசத்தில் ஒற்றர்படை வீரர்களின் வேலை அதிகரித்து அவர்கள் நடமாட்டங்கள் அதிகரிக்கிறதோ, அப்பொழுது போருக்கான ஆயத்தங்கள் ஆரம்பமாகிவிட்டன என்று அர்த்தம். போரில்லாமல் ஒரு தேசம் சிறக்காது. ஒற்றர்படை இல்லாமல் போர் சிறக்காது.

இராஜேந்திரர் வெண்ணாற்றங்கரை மாளிகைக்குப் போயிருக்கிறாரா. அப்படியானால் அவனைப் பின்தொடர்ந்து நானும் போகிறேன். அங்கு போய் பேசுகிறேன்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் அரண்மனையின் முற்றத்தில் போடப்பட்டிருந்த சிம்மாசனத்திலிருந்து எழுந்தார்.

வந்தியத்தேவர் வேகமாக எழுந்து நின்றார்.

''அவர் எதற்கோ தனியாகப் போயிருக்கிறார். அவரைச் சுற்றி சிறுபடைகளும், வேறு சில வீரர்களும் போயிருக்கிறார்கள். அந்த வீரர்களில் சிலர் ஒற்றர்கள். ஏதோ ஒரு அரசியல் விவாதம் நடப்பதற்காக அல்லது விவரங்கள் கேட்பதற்காக அல்லது விவரங்கள் சேகரித்து அனுப்புவதற்காக அவர் அங்கு போயிருக்கலாம். இப்பொழுது அங்கு போய் அவனைத் தொந்தரவு செய்வானேன். இராஜேந்திரனை இங்கு வேண்டுமானால் வரவழையுங்களேன்.''

வந்தியத்தேவர் சற்று சக்ரவர்த்தியை மறுத்த வண்ணம் பேசினார்.

''வந்தியத்தேவரே, இராஜேந்திரன் இந்த தேசத்தின் இளவரசன். சோழதேசத்தின் அடுத்த வாரிசு என்று மட்டும் பார்க்கிறீர்கள். இராஜேந்திரசோழன் என்னுடைய மகன். எனக்கு அவனோடு எந்த ரகசியமும் இல்லை. அவனுக்குத் தெரியாமல் எந்த விஷயமும் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை.

''ஆனால், அவர் அப்படி ரகசியமிருக்கிறதென்று நினைக்கக் கூடுமல்லவா.''

''நினைத்துக் கொள்ளட்டும். அதுதான் ஆரோக்கியம். அடுத்தபடி ஆளவேண்டிய பொறுப்பு அவனிடம் இருக்கிறதல்லவா. அப்போது அவனுக்கு யார் யார் வேண்டியவர்கள். வேண்டாதவர்கள் என்று அவன் தீர்மானிக்க வேண்டுமல்லவா. அவனைச்சுற்றி பாதுகாப்பாக ஒரு குழு ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமல்லவா. எனக்கொரு வந்தியத் தேவர் கிடைத்ததுபோல, விமலாதித்தர் கிடைத்தது போல, பழுவேட்டரையர்கள் கிடைத்தது போல, ஈராயிரம் பல்லவரையர் கிடைத்தது போல, அவனுக்குக் கிடைக்க வேண்டாமா. இன்னொரு

பலமான குழுவைப் பார்த்துப் பார்த்து தேர்ந்தெடுக்க வேண்டாமா. அதற்காகத் தனியே பயணப்படுகிறான். எனவே, ரகசியம் பேசப் போகிறான் என்று அல்லது சதித்திட்டம் தீட்டுகிறான் என்று நான் நினைத்துக் கொள்வானேன். இராஜேந்திரசோழனோடு மனம் விட்டுப் பேச வேண்டுமென்ற எண்ணம் எனக்கு இருக்கிறது.

''நானும் வரலாம் அல்லவா.''

''வந்தியத்தேவரே அவனோடு நான் ரகசியம் பேசவில்லை. நீங்கள் இருப்பின் அவன் பேச்சைக் குறைத்துக் கொள்வானோ என்ற பயத்தில் நான் மட்டுமே போய் பேசுகிறேன் என்று சொல்கிறேன். அவன் கோபத்தை உடனடியாக உள்ளடக்கக் கூடியவன். அதே வேகத்தில் வெளியிடக் கூடியவன். அவன் சற்றுத் தளர்வாக சுதந்திர மாக என்னோடு பேச நான் அனுமதிக்க வேண்டாமா. நீர் இருந்தால் அவன் அவ்விதம் பேசமாட்டான். நானும், அவனுமாக இருந்தால் பேச்சு இன்னும் சரியான முறையில் வெளிப்படும் அதுவும் தவிர..

''அதுவும் தவிர..

''அதுவும் தவிர உமக்கும் வயதாகி விட்டது. முன்னிலும் சற்று ஓய்வாக இருக்க வேண்டிய அவசியம் வந்துவிட்டது. நான் ஓய்வெடுத்துக்கொள்ள ஆரம்பிக்கின்ற போது, அதே நிலையிலுள்ள நீங்களும் ஓய்வெடுத்துக் கொள்வதுதான் சரி. இந்தத் தஞ்சை நகரத்தைக் காக்க வேண்டிய பொறுப்பே உங்களுக்கு அதிகமாக இருக்க, வேறு பணிகளில் உங்களை ஈடுபடுத்துவதே தேவை யில்லையென்று நினைக்கிறேன்.''

''ஆஹா... அப்பனும், பிள்ளையும் நன்றாக ஓரம் கட்டுகிறீர்கள் வயசாளி... வயசாளி என்று திரும்பத் திரும்பக் கூறி, என் மனதை பலவீனப்படுத்த முயற்சிக்கிறீர்கள். இது நடக்காது.

உங்களுக்கும் எனக்கும் மட்டும் இந்த வயதுப் பிரச்சினை வரவில்லை வந்தியத்தேவரே. சோழதேசத்தின் பல்வேறு இடங்களில் இந்த வயதுப் பிரச்சனை வந்துவிட்டது என்பதை நான் சமீபமாக உணர்ந்தேன்.

என்னுடைய படைவீரர்கள் சேனாதிபதிகள். உபசேனாதிபதிகள். குதிரைப்படைத் தலைவர்கள் எல்லோரும் வயசாளிகள். இருபத் தைந்து வருடங்களாக எனக்குத் தோளோடு தோள் நின்று இப்போது தளர்வை எட்டிக் கொண்டிருக்கிறவர்கள். ஒரு வீம்புக்காக பல் கடித்து நெஞ்சை நிமிர்த்தி என்னால் எல்லாம் முடியும் என்பதுபோல்

காட்சியளிக்கிறார்கள். அடுத்த தலைமுறை தனித்துப் போர் செய்யாமலும், சரியானபடி வழி தெரியாமலும் தவித்துக் கொண் டிருக்கிறது. வெகு குறிப்பாய் மத்திம வயதை அடைந்த இராஜேந் திரன் இன்னும் அரசனாகாமல் இளவரசனாக இருப்பது அவனுக்கும் வேதனை. அவனைச் சுற்றியுள்ள அவன் படைவீரர்களுக்கும் வேதனை. அவன் உறவினர்களுக்கும் வேதனை''

''இது என்ன பேச்சு. நீங்கள் எப்போது அரசாட்சிக்கு வந்தீர்கள். பதினாறு வருடம் உத்தமசோழன் ஆண்ட பிறகு, நிதானமாக உங்கள் மத்திம வயதில் பட்டம் பெற்றீர்கள் அல்லவா. அரியணை ஏறினீர்கள் அல்லவா. அந்தப் பதினாறு வருடங்களும் என்ன செய்வது என்று தெரியாமல், எது இலக்கு என்று புரியாமல் அடுத்தது என்ன நேரும் என்று அறியாமல், எவ்வளவு பதைபதைத்து ஊர் ஊராய்ச் சுற்றியிருக்கிறீர்கள். உத்தமசோழனின் தலைக்கு மேல் அவனுக்குத் துணையாக பாண்டிய தேசத்து ஆபத்துதவிகள், சேரதேசத்து நம்பூதிரிகள் அமர்ந்திருக்கிறார்கள் என்று தெரிந்திருந் தும், சோழதேசத்தில் எந்த அதிகாரமும் இல்லாமல் வளைய வந்தோமே, உங்களுக்கு மறந்து விட்டதா உடையாரே. எனக்கு மறக்கவில்லை.

வந்தியத்தேவர் குரல் கம்மி, குழறி வேதனையை வெளிப் படுத்திற்று.

சக்ரவர்த்தி நெகிழ்ந்தார். வந்தியத்தேவரின் தோளில் கை போட்டு அணைத்துக் கொண்டார்.

''அதனால் என்ன. அதேவிதமாக என் மகனும் அனுபவிக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுவதா. அதுவா நாகரிகம். அதுவா மரியாதை. நான் பட்ட வேதனைகள் என் குமாரன் படக்கூடாது என்றுதானே ஒரு தகப்பன் எண்ண வேண்டும். என் எண்ணம் அதுவாகத்தான் இருந்தது வந்தியத்தேவரே. ஆனால் இடையறாத படையெடுப்பு, நிர்வாகச் சீர்திருத்தம் கடற்பயணங்கள், பழந்தீவு கொள்ளையர்களைத் தடுத்து நிறுத்த வேண்டிய கட்டாயம். மேலைச் சாளுக்கியத்தோடு ஏற்பட்ட இடையறாத போர் என்று பலதும் என்னை இந்த தேசத்தின் தலைவனாகவே இருக்க வைத்துவிட்டது. நீங்கள் சொன்னது போல, நான் இந்த சோழ தேசத்தில் அனாதை யாகத் திரிந்து கொண்டிருந்தபோது, அதிகாரமின்றி அலைந்து கொண்டிருந்தபோது, இராஜேந்திரன் பிறந்தான். அவனைக் காபந்து செய்வதே என்னுடைய முக்கிய வேலையாயிற்று. கோயில் கட்டும்

பணி முடித்து விட்டால் இராஜேந்திரன்தான் சோழதேசத்தின் சக்ரவர்த்தி.

''கோயில் கட்டும் பணி எப்போது முடியும் உடையார் அவர்களே.

''இன்னும் ஐந்து அல்லது ஆறு வருடங்களாகலாம்.

''அதுவரை தாக்குப் பிடிக்காது.

''எது.

''இராஜேந்திரனுடைய படைகள்.''

''என்ன சொல்கிறீர்கள்.''

''மெல்ல அவர்களுக்கு அலுப்புத் தட்டிவிட்டது. அவர்கள் ஆக்ரோஷமாகி விட்டார்கள். இராஜேந்திரனுக்கென்று ஒரு தனிக் குழு மெல்ல மெல்ல உருவாகிக் கொண்டிருக்கிறது. ஐந்து வருடம் என்பது அவர்களுக்கு ஆத்திரத்தை ஏற்படுத்தி விடலாம்.

''அதனால், என்ன செய்ய வேண்டுமென்கின்றீர்கள்.''

சக்ரவர்த்தி உடையார் சற்றுக் கோபமான குரலில் கேட்டார்.

''சக்ரவர்த்தி என்னிடம் கோபமடைகிறீர்களா. உங்களுக்கு இதையெல்லாம் எடுத்துச்சொல்ல நான் ஒருவன்தான் இருக்கிறேன். உங்களோடு நேருக்கு நேர் கிருஷ்ணன்ராமனோ, பழுவேட்டரையரோ, உங்களுடைய மாப்பிள்ளை விமலாதித்தரோ பேசுவதேயில்லை. என் மனைவி குந்தவை பேசுவாள். ஆனால், அவளுக்கு உங்களிடம் பேசுகின்ற சூட்சுமம் வரவர குறைவாகிக் கொண்டிருக்கிறது. எனவே இந்த நேரம் பேச்சுத்துணை நான் மட்டுமே. எனவே அதிகம் உணர்ச்சி வசப்படாமல் என் பேச்சைக் கேளுங்கள். இராஜேந்திரசோழனுக்கு அரசர் பட்டம் கொடுப்பது அல்லது அதற்கு இணையாக இன்னொரு பட்டம் கொடுப்பது நல்லது.

''அதற்கு இணையாக இன்னொரு பட்டம் என்றால்.

''இராஜேந்திரசோழனை சோழதேசத்தின் வட பகுதியைக் கவனித்துக்கொள்ளச் சொல்லிப் பணித்தால் என்ன.''

''அதாவது சோழதேசத்தை இரண்டாகப் பிரித்து ஒரு பகுதிக்கு அவன் தலைவன். இன்னொரு பகுதிக்கு நான் தலைவன் என்றா. இது கேவலமாக இல்லையா.''

''ஒற்றுமையாக இருப்பதுதான் இப்போதைக்கு முக்கியம்.

''ஒற்றுமையாக இருப்பதற்கு இரண்டாகப் பிரிய வேண்டு மென்கிறீர்களா. இது என்ன வேடிக்கை. இது என்ன விதமான சாணக்கியத்தனம். தேசத்தில் எவரும் சொல்லாத புதிய தத்துவம்.''

புதிய என்பதில் அழுத்தம் கொடுத்து உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவர் பேச, வந்தியத்தேவர் ஆழ்ந்து சிந்தித்தார்.

''நான் விதம்விதமாக யோசித்து விட்டுத்தான் உங்களிடம் பேசுகிறேன். இளவரசர் இராஜேந்திரருக்கு நீங்கள் உரிய மரியாதை யைச் செய்தேயாக வேண்டும். நேரம் வந்துவிட்டது. செய்யா விட்டால் செய்ய நிர்ப்பந்திக்கப்படுவீர்கள்.''

''எவரால்.''

சக்ரவர்த்தி பல் கடித்துக் கொண்டு உதறித் திரும்பினார்.

வந்தியத்தேவர் அவரைக் கூர்மையாக எந்த சலனமுமின்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''ஒருவேளை இராஜேந்திரனால்கூட நீங்கள் நிர்ப்பந்திக்கப் படுவீர்கள்.''

''எனக்கும், என் பிள்ளைக்குமிடையே போர் ஏற்படுத்த வேண்டுமென்ற திட்டத்தோடு இருக்கிறீர்கள். ஆஹா... எங்கள் வீட்டுக்கு வந்த மாப்பிள்ளை எவ்வளவு அழகு, எத்தனை திறமை சாலி, எவ்வளவு நல்லவர். ஆஹா..

சக்ரவர்த்தி போலியாக வியந்தார்.

''என்னுடைய நல்ல குணம்பற்றியும், என்னுடைய திறமை பற்றியும் இனி நான் சொல்லி நீங்கள் புரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. வெறும் வாய் சொற்றொடர் ஆடிக் கொண்டிருக் கிறீர்கள். இதுபோல் பேசினால் நான் கோபப்படுவேன் என்று நினைக்கிறீர்கள். இல்லை, நான் கோபத்தை விட்டு பல வருடங் களாகி விட்டன. அதனாலேயே நான் போர்முனைக்குத் தகுதி யற்றவன் ஆகிவிட்டேன். நானே போர்முனைக்குத் தயாராக இல்லாதபோது, அப்பனையும், பிள்ளையையும் போர் முனைக்கு அனுப்புவதற்கு எனக்கு எந்த எண்ணமும் இல்லை.

சக்ரவர்த்தி அவர்களே உங்களை நான் எப்படி நேசிக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியும். சீறிப் பார்க்கிறீர்கள். நீங்கள் பெரிய நடிகர் என்பதும் ஊரறிந்த விஷயம். மேலைச்சாளுக்கியத்தில் வெகுவேகமாக ஆயத்தங்கள் நடைபெறுவதால் அதுபற்றிய யோசனையும், கவலையையும் நாம் கொள்ள வேண்டிய அவசியம்

உண்டாகிறது. அவர்கள் போருக்குத் தயாராகி, நம்மை நோக்கி வரட்டும் என்று நாம் காத்திருப்பது அவ்வளவு புத்திசாலித்தன மல்ல.

நம்மால் கைப்பற்றப்பட்ட கங்கபாடி, இரட்டபாடி, நுளம்பாடி போன்ற தேசங்கள் மேலைச்சாளுக்கியர் வருகையால் படாத பாடுபடும். மக்கள் நம்மைத்தான் ஏசுவார்கள். எங்களையும் பலமாக்காமல், நீங்களும் எங்களைப் பாதுகாக்காமல் மேலைச் சாளுக்கியத்தில் பலி கொடுத்துவிட்டீர்கள் என்று அந்த மக்கள் அழுவார்கள். அப்பொழுது நாம் வாய்மூடி மௌனமாக இருக்க முடியாது.

நாம் படையெடுத்து அந்த தேசத்தை நம்முடைய அரசுக்குக் கப்பம் கட்டுவதாக மாற்றியிருக்கிறோம். நமது அதிகாரிகளை நியமித்திருக்கிறோம். நம்முடைய புலிக்கொடி அங்கெல்லாம் பறக்கிறது. எனவே, அவற்றைக் காப்பாற்ற வேண்டிய முக்கியமான பணி நமக்கு உண்டு. எனவே, மேலைச்சாளுக்கியம் சோழ எல்லையைத் தொடும்வரை நாம் காத்திருக்க முடியாது. இதுமுதல் காரணம்.

இரண்டாவது காரணம். அவர்கள் வலுப்பெறும் முன்பே அவர்களை அழித்துவிடுவதுதான் நல்லது. இல்லையெனில் நம் பக்கமும் உயிர்ச்சேதம் அதிகமாகும். அதனால், நம்முடைய மக்கள் வெறுப்பையும் நாம் சம்பாதித்துக்கொள்ள நேரும்.

மூன்றாவது கோயில் பணி பற்றி அந்த இளைஞன் கூறியதைக் கவனித்தீரா. கோயில் விமானம் எழுப்ப சுற்றி மண் போட்டு ஒரு பாதை அமைக்க வேண்டுமாம். மெல்ல மெல்ல பாதையும், விமானமும் உயருமாம். பிறகு மண் மொத்தமும் எடுத்துக்கொண்டு போய் வேறு இடத்திலே நிரப்ப வேண்டுமாம்.

நானும், அருண்மொழிப்பட்டனும், பெருந்தச்சரும், இன்னும் சில சிற்ப இளைஞர்களும் சேர்ந்து ஒரு கணக்குப் போட்டுப் பார்த்தோம். இப்பொழுது கையில் இருக்கிற வீரர்கள நிச்சயம் போதாது. இப்போதிக்கிற ஆடுகளை ஒரு வருடத்தில் தின்று தீர்த்து விடுவார்கள். மேலும் ஆட்கள் வேண்டும். மேலும் ஆட்கள் வேண்டு மென்றால், மேலும் ஆநிரைகள் வேண்டும். மேலும் தானியங்கள் வேண்டும். நல்ல சத்துள்ள தானியங்கள் இருந்தால்தான், போக்கு வரத்திற்குண்டான வண்டிகள் இருந்தால்தான் கோயில் கட்டும் பணி எளிதாகும். கிட்டத்தட்ட ஆயிரம் மாடுகளாவது தேவை. ஐநூறு

குதிரைகள் தேவை. யானைகள் தேவை. இல்லையெனில் கருங்கல் பாறைகளை ஆட்களா சுமந்து வர முடியும்.

இப்போது கட்டுகின்ற கோயில் பணி மிகச் சிறப்பானது. மிக உன்னதமானது. ஆனால், இந்தக் கோயில் பணி ஒரு போர் மூலமாகவே நல்லபடி நிறைவு பெறும். போரற்று இந்தப் பணியை வெகு நிச்சயமாய் நீங்கள் நிறைவு செய்ய முடியாது. கோயில் பணி முடிய வேண்டுமென்றால், போர் உடனடியாக வேண்டும். மேலைச் சாளுக்கியம் நோக்கி நாம் நகரவேண்டும். அப்படி நகர்வது நமக்கு இன்னொரு நன்மையையும் தரும்.''

''என்ன நன்மை வந்தியத்தேவரே. நான் சொல்லட்டுமா என்ன நம்மையென்று. இது இராஜேந்திர சோழனுக்கு ஒரு திசை மாற்றத்தை ஏற்படுத்தும். இராஜேந்திர சோழனுடைய படைகள் தங்களுடைய வன்மையை நிரூபிப்பதற்கு ஏதுவாக இருக்கும். எனவே, இந்தப் போர்ப் படையெடுப்பை நான் பின் நின்றும், இராஜேந்திரசோழன் முன் நின்றும் நடத்த வேண்டும். அதாவது இளைய படை முதலில் போய்த் தாக்க வேண்டும். என்னுடைய படைகள் பின்னே தொடரும். சரியா. அதுதான் உத்தமம் விமலா தித்தர் நேரடியாக இங்கு வராமல் காஞ்சிபுரத்திலும், மேல்பாடி யிலும், திருவொற்றியூரிலும் தங்க வைப்பது இதன் பொருட்டே. விமலாதித்தர் மத்திய வயதுக்காரர். அவர் இராஜேந்திரசோழனுக்குத் துணையாகப் போகட்டும். அவரும் தன்னைப் புடம் போட்டுக் கொள்ளட்டும். அவரும் அந்த வெற்றிக்குத் தான்தான் காரணம் என்று எண்ணட்டும். நீங்கள் போரில் கலந்துகொள்ளாமல் இருப்பது கூடச் சிறப்பு. நான் கலந்து கொள்ளாமல் போனால், என் வீரர்கள் சோர்வாகிறார்கள். இராஜேந்திரனுக்குக் கட்டுப்படாமல் போனால் போரில் குழப்பம் ஏற்படும்.

''இராஜேந்திரனுக்குக் கட்டுப்பட மாட்டேன் என்று உங்களு டைய படைவீரர்கள் சொல்லிவிடுவார்களா.''

''ஆமாம். பழுவேட்டரையர் எவ்வளவு தாழ்ந்து போவார் என்று நினைக்கிறீர்கள். விக்ரமபூபதி எவ்வளவு தூரம் இராஜேந்திரனை அனுசரித்துப் போவார் என்று நினைக்கிறீர்கள். விமலாதித்தரே அனுசரித்துப் போவாரா என்பதே கேள்விக்குறி. எனவே, நான்தான் இராஜேந்திரசோழனோடு போயாக வேண்டும். நானும், அவனும் ஒரே நேரத்தில் அருகருகே இருந்து படைகளை நடத்த வேண்டும்.

''அது சரியாக வருமா. இரண்டு பேர் படைக்குத் தலைமையேற்க முடியுமா.''

''இல்லை. இந்தப் படையெடுப்புக்குத் தலைமை ஏற்பது என்றால், அது நான்தான். இராஜேந்திரசோழன் இந்தப் படையெடுப்புக்கு மாதண்ட நாயகனாக நியமிக்கப்படுவான்.''

''நன்றாக இருக்கிறது. மாதண்ட நாயகன். அவன் தான் இந்தப் படையெடுப்பை நடத்தப் போகிறான். சக்ரவர்த்தியான நீங்கள் அந்தப் படையெடுப்பை மேற்பார்வை பார்க்கப் போகிறீர்கள்.''

''ஆமாம். அருகிருந்து ஒவ்வொரு அசைவையும் கவனித்துக் கொண்டிருப்பேன்.''

''பேரரசே... வாழ்நாளில் இவ்வளவு அருமையான ஒரு மனிதனை நான் பார்த்ததில்லை. மகன் பேரில் வைத்த காதலா அல்லது சிவன் பேரில் வைத்த காதலா என்று எனக்குப் புரிய வில்லை. மிகத் தெளிவாக இருக்கிறீர்கள். நான் மிகவும் கஷ்டப் பட்டு, சிந்தித்து குந்தவைப் பிராட்டியாரோடு வாரக்கணக்கில் அலசி அலசி யோசித்து வந்த விஷயங்களை வெகு துல்லியமாய் பிடித்துக் கொண்டு, சதுரங்கத்தில் அடுத்ததாய் எங்கே எப்படி நகர வேண்டு மென்று தெளிவாய், திடமாய்ப் பேசுகிறீர்கள். இது ஆச்சரியமாக இருக்கிறது. எப்போது சிந்திக்கிறீர்கள். யாரோடு கலந்து பேசு கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

''வந்தியத்தேவரே... என் தமக்கை மீது மிகப்பெரிய அன்பும், பிரேமையும் உண்டு. மிகப்பெரிய மரியாதை உண்டு. என் தமக்கை யின் வாழ்க்கை செம்மையாக இருக்க வேண்டுமே என்று நான் மிகவும் கவலைப் பட்டிருக்கிறேன். என் கவலையெல்லாம் போக்கும்படி அவளுக்குக் காதல் நாயகனாக வந்து, அவளைக் கைபிடித்து, அவளை, அவள் அதிகாரத்தை அனுசரித்து ஆதரவாகக் கரம் கொடுத்து வாழ்க்கை நடத்துகிறீர்கள்.

வேறு எவராக இருந்தாலும் குந்தவையின் அதிகாரம் பார்த்து விட்டு முகம் சுணங்கியிருப்பார்கள் அல்லது மூர்க்கமாய் அடக்கி யிருப்பார்கள். இரண்டும் செய்யாது குந்தவையை ஆதரித்து அவளுடைய காரியங்களுக்கு உதவியாக இருக்கிறீர்கள். உங்கள் மனதைவிடவா என் மனது உத்தமமானது. உங்கள் மனதைவிடவா என் மனம் பரந்தது.''

''பேரரசே... சோழதேசத்தின் மாணிக்கம் நீர். உங்களிடமிருந்து நான் பல நல்ல குணங்களைக் கிரகித்துக் கொண்டேன். அந்த நிதானம் எனக்குள் வெகு எளிதாகப் புகுந்து கொண்டது. அதனால்தான் என்னால் திறம்பட நிர்வாகம் செய்ய முடிந்தது.''

''வந்தியத்தேவரே ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். நான் சிவனையும் காதலிக்கவில்லை; இராஜேந்திர சோழனையும் காதலிக்கவில்லை. சோழத்தை, சோழதேசத்தின் நாகரிகத்தைக் காதலிக்கிறேன். சோழதேசத்தின் நாகரிகம் எனக்குப் பலபேர் சொல்லிக் கொடுத்தார்கள். நீங்களும் சொல்லிக் கொடுத்திருக் கிறீர்கள். ஆனால், சோழதேசத்தின் நாகரிகம் எது என்பதை எனக்குத் திருத்தொண்டர் புராணம்தான் சொல்லிக் கொடுத்தது. நாயன்மார் கதைகளைக் கேட்கும்போது என் மனம் மிகப்பெரிதாக விரிந்தது. திரும்பத் திரும்ப யோசிக்க வைத்தது.

வந்தியத்தேவரே நானே உம்மோடு பல்வேறு விஷயங்கள் பற்றிப் பேச வேண்டுமென்றிருந்தேன். ஆனால், இப்போது நேர மில்லை. நீங்கள் சொல்வது போல இந்தப் படையெடுப்பை நடத்தி வந்துவிட்டு, இராஜேந்திரசோழனை மாதண்ட நாயகனாக குறிப்பிட்ட எல்லைகள் வகுத்துக் கொடுத்துவிட்டு, இந்தக் கோயில் கட்டும்வரை சக்ரவர்த்தியாக இருந்து விட்டு, பிறகு பொறுப்பை இராஜேந்திரனிடம் கொடுத்து விடலாம் என்றிருக்கிறேன். அப்போது எனக்குப் பேச ஒரு ஆள் வேண்டும். நீர்தான் அதற்குச் சரியானவர். வாழ்க்கை தத்துவத்தைப் பற்றியும், மனித வாழ்வியல் பற்றியும், உயிரோடு இருப்பது பற்றியும், இறப்பது பற்றியும், இறந்த பிறகு மனிதருடைய நிலை என்ன என்பது பற்றியும் நாம் ஆராயவேண்டும். அறிந்துகொள்ள வேண்டும்.

வெண்ணாற்றங்கரைக்கு இராஜேந்திரனைப் பார்க்கப் போகிறேன். நானும் அவனும் தனியே பேசுகிறோம். இப்போது பேசியதைத் தவிரவும் அவனுக்குச் சில குறைகள் இருக்கின்றன.''

''கருமார்களுக்கான சலுகைகள் பற்றிப் பேசுகிறார்களா.''

''ஆமாம். அது என்னை உறுத்திக் கொண்டே இருக்கிறது. எல்லா திக்கிலிருந்தும் அதற்கு எதிர்ப்பு வந்து கொண்டிருக்கிறது. அந்தணர்கள் ஏன் இவ்வளவு முரட்டுத்தனமாய் எதிர்க்கிறார்கள் என்று புரியவில்லை. அவர்கள் எதிர்ப்பதாலேயே இராஜேந்திரன் பிடிவாதமாகிறான். சனாதனதர்மம் ஏன் வர்ண பேதம் காட்டியிருக்கிறது. அதில் என்ன நியாயம் என்பதும் புரியவில்லை.

ஆனால், இது வேகமாகச் செய்ய வேண்டிய விஷயமல்ல. நிதானமாகச் செய்யட்டும் என்று அவனிடம் சொல்ல வேண்டும். இன்னொன்றும் சொல்லப் போகிறேன்.''

''என்ன அது.

''மாதண்ட நாயகனாக நியமித்தாலும் நான் இறக்கும் வரை தஞ்சையைவிட்டுப் போக வேண்டாம் என்று இராஜேந்திரனிடம் சொல்லப் போகிறேன்.''

வந்தியத்தேவர் கண்கள் மூடிக் கொண்டார்.

இராஜேந்திரன் இதற்கு உடன்படமாட்டான் என்று அவருக்கு நன்கு தெரிந்திருந்தது.

''அவ்வளவுதானே நான் கிளம்பலாம் அல்லவா. என்னிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டியவற்றைத் தெரிந்து கொண்டு விட்டீர்கள் அல்லவா.''

கேலியாக வந்தியத்தேவர் கேட்க, சக்ரவர்த்தி முகம் வாடியது.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கட்டளையிட, அவரின் வருகை சிங்களாந்த தெரிஞ்ச குதிரைப்படை வீரரின் மூலம் இளவரசர் இராஜேந்திரருக்கு அறிவிக்கப்பட்டது.

இளவரசரை நோக்கி சக்ரவர்த்தி போயிருக்கிறார் என்பதால் அருண்மொழிப்பட்டன் அவன் தந்தையான கிருஷ்ணன்ராமன் என்கிற பிரம்மராயரின் வீட்டிலிருந்து குதிரை ஏறிக் கிளம்பி வெண்ணாற்றங்கரைக்குப் போகும் பாதையில் விரைந்தான். அரசரின் அசைவு நகரத்தில் பல பேரைப் பரபரப்படையச் செய்தது. பொது மக்களிடையேயும் பரவியது.

எத்தனை முறை பார்த்தாலும் அலுக்காத சக்ரவர்த்தியை மறுபடியும் பார்ப்பதற்காக மக்கள் அரண்மனை வாசலிலும், புறவழிகளிலும் கூடினர்.

பஞ்சவன்மாதேவி அவள் பகுதியை விட்டு ஓடிவந்தாள். நானும் உடன் வரவா. எங்கே கிளம்புகிறீர்கள் என்று கேட்காமல் கேட்டாள்.

''இராஜேந்திரன் வெண்ணாற்றங்கரைப் பக்கம் போயிருக்கிறான். நானும் அவனைத் தேடிப் போகிறேன். சந்தித்துப் பேச சில விஷயங்கள் இருக்கின்றன. விரைவில் அரண்மனைக்குத் திரும்பி வந்துவிடுவேன். வந்து உன்னோடு நிறைய பேசுகிறேன்.'' என்று சொல்லிவிட்டுக் கீழிறங்கினார்.

கறுப்பு உடை அணிந்த குதிரைப்படை குழு சுற்றிக் கொண்டது. மெல்லத் தயங்கினார்.

''இத்தனை பேர் தேவையா. பாதிபேர் இடைவெளி விட்டு வாருங்கள். ஆறு பேர் போதும்'' என்று கட்டளையிட்டார்.

சட்டென்று அவர்கள் முன்னும், பின்னுமாகப் பிரிந்து கொண் டார்கள்.

வெண்ணாற்றங்கரை மாளிகை என்று அரசர் மெல்லிய குரலில் சொன்னதும், நான்கு குதிரை வீரர்கள் அந்தப் பக்கமாகக் குதிரையைச் செலுத்தினார்கள். முன்னேறி, முன் பகுதியிலிருந்து ஹோய் என்று குரல் கொடுத்தார்கள். அரசர் அவர்களைத் தாண்டியதும் பின் தங்கினார்கள். பின்னால் வந்த குதிரை வீரர்கள் அரசரைக் கடந்து முன்னே போனார்கள். விரைவாக முன்னேறி வழியில் நின்றுகொண்டு, அரசர் தாண்டும்போது வாட்களை உயரத் தூக்கினார்கள். பின்னே தங்கியவர்கள் முன்னே வந்தார்கள். வழியே ஒரு கிராமத்தினர் மாலையும், நெய்விளக்கும், வாழைத்தார்களும் வைத்துக் காத்துக் கொண்டிருக்க, வீரர்கள் அவர்களுக்கருகே போய் இறங்கினார்கள். யார் என்ன என்று விசாரித்தார்கள். அந்த கிராமத் தலைவன் படைவீரர்களுக்குப் பரிச்சயமானவன்.

''உன் மனைவி, உன் மகள் இவர்கள் போதும். மற்றவரைப் பின்ன டையச் செய்.'' என்று அதட்டினார்கள். அவ்வாறே பிரிந்து கொண் டார்கள்.

''என் தாய் சக்ரவர்த்தியைப் பார்க்க வேண்டுமென்கிறாளய்யா. அதுதான் முக்கியம்.'' என்று சொல்ல, ''அப்போது உன் மனைவி யைப் பின்னே போகச் சொல்.'' என்று இன்னொருவன் குரல் கொடுக்க, ''மனைவியில்லாமல் எப்படி கணவன் மட்டும் வரவேற்பது. என்று கிராமத்தலைவன் சொல்ல, அவன் தாயை அனுமதித்தார்கள்.

இராஜேந்திரரோடு என்ன பேச வேண்டுமென்ற தீவிர சிந்தனை யில் இருந்தவருக்கு இந்த வரவேற்பு சற்றுத் தடுமாற்றத்தைக் கொடுத்தது.

''என்ன வேண்டும்.. என்ன வேண்டும்.'' என்று சக்ரவர்த்தி சற்றுத் தயங்கினார்.

குடந்தையைத் தாண்டியிருக்கின்ற சிறு கிராமம். ''இங்குள்ள கிராமத் தலைவர் வரவேற்க வேண்டுமென்று விரும்புகிறார்.''

அவர் முகத்தில் மெல்லிய அலுப்பு படர்ந்து அகன்றது.

''சரி, செய்யட்டும்.

சட்டென்று முகம் சிரிப்பாயிற்று. இதமாயிற்று. ஆனால், அடிமனதில் ஒரு அலுப்பு இருந்தது.

இந்த மக்களுக்கு நேரம் காலமே தெரிவதில்லை என்ற எண்ணம் வந்தது.

குதிரையிலிருந்து கால் தூக்கிப்போட்டு பூ மாதிரி இறங்கினார். இறங்கிய வேகத்தில் மெய்க்காவல் படை வீரர்கள் தோள் கொடுக்க சட்டென்று பிடித்துக் கொண்டு நின்றார். நடந்து அந்தக் கிராமத் தலைவனுக்கு அருகே போனார்.

திபுதிபுவென்று சுற்றிக்கொண்டது கூட்டம். அருகே வர கைப் பிரம்புகளால் தரையில் அடித்து மெய்க்காவல் வீரர்கள் கூட்டத்தை விலக்கினார்கள்.

இன்னும் பத்து குதிரை வீரர்கள் வந்திருக்கலாம் என்று எல்லோருமே ஆதங்கப்பட்டார்கள். தவறு நடந்து விட்டது என்று மெய்க்காவல் வீரர்கள் கோபப்பட்டார்கள்.

அந்த கிராமத்தலைவனைச் சீக்கிரம் நகர்த்த வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.

அந்தக் கிராமமும் தரையில் விழுந்து அரசனை வணங்கியது. சக்ரவர்த்தி பாதங்களுக்கு கிராமத்தலைவன் மலர் தூவினான். முகத் துக்கு நெய்விளக்கு காட்டினான். ஒரு பக்தன் போல பரவசமாகி, கண்களில் நீர் வழிய அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். பொது மக்கள் எல்லோருமே ஒரு ஆனந்தப் பெருக்கால் விசும்பத் துவங் கினார்கள்.

''என்ன.. என்ன ஆயிற்று.

சக்ரவர்த்தி மனம் கசிந்தார்.

''ஏன் இந்த அழுகை.

''சந்தோஷம்தான்.''

கிராமத்தலைவன் பதில் சொன்னான். மெல்ல முன்னேறி அவன் தோளில் கை வைத்து முகத்தை வருடிக் கொடுத்தார். இன்னும் முன்னேறி அவனுடைய தோளில் முகம் சாய்த்துக் கொண்டார். அவன் குடும்பத்தினர் நெருங்கிக் கொண்டார்கள். தாயார் வயதான கிழவி. சுமங்கலி. அரசரின் காலில் விழுந்து வணங்கி அவர் புறங்

கால்களை முத்தமிட்டாள். அரசர் நகர்ந்து கொள்ள முயற்சித்தும் விடாது கால்களைப் பிடித்துக்கொண்டாள். எழுந்து நிற்கவும் அவளை அரசர் பிடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

அரசர் முகம் சங்கடத்தில் தவித்தது.

மெய்க்காவல் படை மெல்ல உறும, விரல்களால் அவர்களை அடக்கினார்.

''நான் அடிக்கடி உங்கள் கிராமம் தாண்டிப் போகிறவன்தானே. இன்றென்ன விசேஷம்.'' என்று இனிமையாக வினவினார்.

''எங்கள் கிராமத்திற்குப் பெயர்கூட வைக்கவில்லை. கரந்தையினுடைய வடகுடி என்றுதான் இருக்கிறது. அதாவது கருந்தட்டான் குடியின் வெளிப்புற வட்டத்தில் புறம்போக்கு நிலத்தில் குடிசைகள் போட்டு, இப்பொழுது நூற்றியிருபது வீடுகள் இருக்கின்றன. விதம்விதமாகத் தொழில் செய்கிறவர்கள் இங்கு இருக்கிறோம். வெளியூரிலிருந்து இங்கு தொழில் செய்ய வந்தவர்களும் வீடுகள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இவ்விடம் விளை நிலமல்ல. வெறும் பொட்டல்காடு. மேலும் வெண்ணாறு சிறிது தூரத்தில் இருப்பதால் எங்களுக்கு நீர் வசதிகளுக்குக் குறைவில்லை. கிணறு தோண்டி அதிலிருந்து நீர் எடுத்துக் கொள்கிறோம். நல்ல சுவையான நீர் இருக்கிறது. அதனாலேயே குடியிருப்புகள் பெருகிவிட்டன.''

''சரி, வேறு என்ன குறை.

''குறையென்று ஏதுமில்லை ஐயா.''

அங்கு சட்டென்று ஒரு மௌனம் நிலவியது.

ஒரு மெய்க்காவல் படை வீரன் சுதாரித்துக் கொண்டான்.

''வேறு எதற்காக மடக்கி நிறுத்துகிறீர்கள் என்று அரசர் கேள்வி கேட்கிறார்.'' என்று கூவினார்.

கிராம வாசிகள் கூட்டம் திகைத்தது.

''ஒரு விண்ணப்பம்.

''என்ன விண்ணப்பம்.''

அரசர் மிருதுவாகக் கேட்டார்.

''நாங்கள் வசிக்கின்ற இடத்திலிருந்து சற்றுத் தொலைவில் புற்றுக் கோயில் இருக்கிறது. அதை இடிக்க வேண்டுமென்று சிற்பிகள் விரும்புகிறார்களாம். அங்கிருந்து மண் எடுத்துவர வேண்டுமென்றும் விரும்புகிறார்களாம். நீங்களும் உத்தரவு

கொடுத்து விட்டீர்களாம். தயவு செய்து அந்தப் புற்றுக் கோயிலை நீக்க வேண்டாம்.

''கோயிலா.. வெறும் புற்று என்றல்லவா சொன்னார்கள்.''

''இவர்கள் அதைக் கோயில் ஆக்கிவிட்டார்கள் ஐயா.''

மெய்க்காவல் படைவீரன் ஒருவன் அதை உரத்த குரலில் சொன்னான்.

அவனைத் திரும்பி உற்றுப் பார்த்துவிட்டு மறுபடியும் கிராமத் தலைவரைப் பார்த்தார்.

''கோயில்தானய்யா. நாங்கள் வழிபட்டு வந்த இடம்தான். அங்கிருந்து மூன்று கை நீளத்திற்கு பெரும் நாகங்கள் எங்கள் வீட்டுப்பக்கம் உலவும். இதுவரை யாருக்கும் எந்தத் தீங்கும் செய்ததில்லை. செய்யக் கூடாது என்பதற்காகவே அவற்றை நாங்கள் வழிபட்டு வருகிறோம். அவையும் சத்தியத்திற்குக் கட்டுப் பட்டு இந்தப் பக்கம் அமைதியாய் இயங்குகின்றன. இப்பொழுது இடிக்கிறேன் என்று ஆரம்பித்தால் எங்கள் குடியிருப்பின் கதி என்ன ஆகும் என்று தெரியவில்லை. நாங்கள் ஒட்டமொத்தமாகக் குடிபெயர்ந்து வேறு இடத்திற்குப் போக வேண்டியதுதான். கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளாக இந்தக் குடியிருப்புப் பகுதி இருக்கிறது. இப்பொழுது மற்ற ஊரிலிருந்து வருகின்ற மரத்தச்சர், வண்ணார், போன்றவர்களின் வருகையால் ஊரும் பெருத்து விட்டது. அதை இடிப்பது கோயில் கட்டுவதற்காக என்று சிற்பிகள் சொன்னார்கள். அதனால் உடனடியாக எந்த எதிர்ப்பும் தெரிவிக் காமல் நாங்கள் மௌனமாக இருந்தோம். யோசித்து விவாதித்துப் பார்த்ததில் புற்றை இடித்தல் தவறு என்றே எங்களுக்குத் தோன்று கிறது. எங்களுக்கு வெகுநிச்சயமாக அது மிகப்பெரிய அழிவைக் கொடுக்கும் என்று நம்புகின்றோம். இனி சக்ரவர்த்தியார் இஷ்டம்.''

''என்ன இவர்கள் வழிபட்டு வந்தார்களா.''

''இல்லை. வெறும் புற்றாகத்தான் இருந்தது. சிற்பிகள் வந்து போனபிறகு. இடிக்கப் போகிறோம் என்று சொன்ன பிறகு, இவர்கள் புற்றுக்கு மேல் ஒரு கூரைபோட்டு, புற்றில் ஒரு மாலையும் சாற்றி, மஞ்சளும் ஊற்றியிருக்கிறார்கள். அதைத்தான் இவர்கள் கோயில் என்று சொல்கிறார்கள்.''

''குடியிருப்புகள் எதனால் ஆனவை.''

''மண்ணாலான குடிசைதான்.''

''மொத்தம் எத்தனை வீடுகள்.''

''நூற்றுக்கும் மேற்பட்ட வீடுகள். சரியாக எண்ணவில்லை.

''புற்றுமண் தேவை என்று சிற்பிகள் சொல்லி விட்டால், பெருந்தச்சர் விரும்பி விட்டால், அதைக் கொடுக்க வேண்டியது என்னுடைய கடமை. உங்களுடைய கடமை. அதனால் ஏற்படுகின்ற எல்லாத் தொல்லைகளையும் நாம் சந்தித்துத்தான் ஆகவேண்டும். பாம்புப் பிடாரர்களை வைத்து பாம்புகளை அப்புறப்படுத்தி, தொலைதூரத்திலுள்ள வனங்களில் கொண்டு போய் விட்டுவிட்டு புற்றுமண் நிச்சயம் எடுப்போம். பாம்புப்புற்றை இடிப்பது உங்கள் குடியிருப்புகளைப் பாதிக்குமெனில், நீங்கள் குடியிருப்புகளை வேறு பக்கம் மாற்றித்தான் ஆக வேண்டும். அதற்கான உதவிகளை நான் அதிகாரிகளை விட்டுச் செய்யச் சொல்கிறேன்.

உங்களுக்கு மாற்றுவதற்குண்டான பாரவண்டிகளையோ, மூங்கில்களையோ, ஓலைக் கூரைகளையோ, சுட்ட செங்கற் களையோ தருவதற்கு ஏற்பாடு செய்கிறேன். ஆனால் ஒரு பொழுதும் ஏதாவது காரணம் காட்டி கோயில் வேலைக்கு குந்தகம் செய்துவிடாதீர்கள். புற்று மண் மட்டுமல்ல. கோயில் வேலைக்காக சிற்பிகள் எது கேட்டாலும் அதைக் கொண்டு வர நான் தயாராக இருக்கிறேன். எங்கிருந்தாலும் நான் நிச்சயம் கொண்டு வருவேன். எனவே, எந்தவித மறுப்பும் சொல்லாமல் தயவு செய்து நீங்கள் எங்களோடு இதன் பொருட்டு ஒத்துழைக்க வேண்டும்.

அரசர் கைகூப்ப மொத்தக் கூட்டமும் மறுபடியும் காலில் விழுந்தது. சரி என்று சொன்னது.

''நாங்கள் நகர்ந்து விடுகிறோமய்யா. ஆனால், காலம் காலமாக இங்கு வாழ்ந்த் பாம்புகள் நகருமா என்று தெரியவில்லை. ஒன்றரைக்கோல் நீளமுள்ள பாம்புகள் இருக்கின்றன. அவைகளை எந்தப் பிடாரர்கள் நகர்த்துவார்கள் என்று புரியவில்லை.''

''புற்று எங்கேயிருக்கிறது.''

மன்னர் வெடுக்கென்று கேட்டார்.

அவர்கள் கை காட்டினார்கள்.

வீரர்கள் கூட்டத்தை விலக்கினார்கள். மன்னர் நடந்து புற்றுக்கு அருகே போனார். பத்துத்தப்படி தொலைவிலிருந்து புற்றை உற்றுப் பார்த்தார்.

''சூட்சுமமான தேவதைகளும், பாம்புப் புற்றுக்குள் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த தேசத்தில் புற்றுக்குள் குடியிருக்கும் தேவதைகளே தயவு செய்து இடம்பெயருங்கள். இந்த மண் சிவனுக்காக தேவைப்படுகிறது. இந்த மண்ணில் சிவன் கோயில் எழுப்ப வேண்டியிருக்கிறது. எனவே, இன்று இரவுக்குள் தயவு செய்து இந்த இடம் விட்டு நகர்ந்துவிடுங்கள்.''

அவர் மெல்லக் கைகூப்பினார். புற்றுக்கருகே போனார். தொட்டு வணங்கினார். கை கூப்பியபடியே வலம் வந்தார். வலமாய்ச் சுற்ற, நேர்பின்னால் சட்டென்று உடம்புக்குள் ஒரு மாறுதல் ஏற்பட்டது. ஒரு அதிர்வு கூடியது. யாரோ நெருங்கி நிற்பது போல் தோன்றியது. மறுபடியும் உள்ளுக்குள்ளே கனிவாக வேண்டிக் கொண்டார்.

உஸ் என்ற சீறலோடு ஒரு பெரிய நாகம் புற்றுக்குள்ளிருந்து யாரோ அழைத்ததுபோல எட்டிப் பார்த்தது.

வீரர்கள் சட்டென்று வேலின் பிடியை இறுக்கி தயாரானார்கள்.

அரசர் அவர்களை கையமர்த்தினார். சால்வையை உதறி புற்றின் மீது போட்டார்.

பாம்பு இன்னும் வெளியே வந்தது. கிட்டத்தட்ட இரண்டு முழங்கை உயரத்திற்கு மஞ்சள் மார்பைக் காட்டியபடி, கருநீல முதுகைத் திருப்பியபடி, நாக்கு நீட்டியபடி, கூர்மையாகப் பார்த்தபடி வெளியே வந்தது. மெல்ல அவருடைய துண்டில் தரையிறங்கியது. இறங்கி பூமியின் சமதளத்தில் நின்றது. பிறகு, வெகுவிரைவாக குடியிருப்புக்கு அப்பாலுள்ள பெரும் திடலை நோக்கி பளபளத்து ஊர்ந்தது. பந்தங்களூடே அந்தப் பாம்பு பளபளத்து ஓடுவதை சகலரும் பார்த்தார்கள். வியந்தார்கள்.

இன்னொரு பாம்பு எட்டிப் பார்த்தது. அரசர் மெல்லப் பின்னடைந்தார்.

''மௌனமாகக் கலைந்து விடுங்கள். இந்த இடத்தில் இருக்க வேண்டாம். அத்தனை பாம்புகளும் வெளியேறி விடும். பாம்புகள் வெளியேறிய பிறகு நீங்களும் வெளியேறி விடுங்கள். இன்னும் மூன்று, நான்கு நாட்களில் இந்த இடத்தை விட்டு நகர்ந்து விடுங்கள். இந்த இடம் முழுவதுமே சிற்பிகளுக்குத் தேவைப்படும் என்று நினைக்கிறேன். வண்டிகள் வந்தும் போயும் இருப்பதால் குடியிருப்புகள் பாதிக்கப்படும். பாரவண்டிக்காரர்களுக்கென்று இரண்டு, மூன்று வீடுகளை விட்டுவிட்டு மற்ற வீடுகளை இடித்து

விட்டு நீங்கள் நகர்ந்துவிடுங்கள். இன்று மாலைக்குள் ஓலை நாயகம் மற்றுமுள்ள மந்திரிகள் உங்களைச் சந்திப்பார்கள். உங்கள் தேவை களை விசாரித்து அறிந்து உடனடியாக பாரவண்டிகள் தருவார்கள். நல்லநாள் பார்த்து புற்று இடிப்பதற்குச் சிற்பிகளும் வருவார்கள். நான் விடைபெறுகிறேன்.''

கைகூப்பினார். சட்டென்று நின்றார். இடுப்பு தடவினார்.

ஒரு மெய்க்காவல் வீரன் அவரிடம் ஐம்பது பொற்காசுகள் கொண்ட ஒரு பொற்கிழியை நீட்டினான். அவர் அந்தக் கிழியை வாங்கி கிராமத்தலைவனின் நீட்டிய கைகளில் போட்டார்.

''இந்தப் பொற்காசுகள் நீங்கள் குடிபெயர்வதற்கு உதவி செய்யும். விரைவில் குடிபெயர்தல் நல்லது.''

அந்தக் கிராமத்திலுள்ள ஆண்களும், பெண்களும் மெல்லிய குரலில் பேசத் துவங்கினார்கள். அதில் அமைதியான ஒரு எதிர்ப்பு இருந்தது.

''எனக்குப் புரிகிறது. பலகாலம் வாழ்ந்த வீட்டை விட்டு, பகுதியை விட்டு புதிதாக வேறொரு பகுதிக்குச் குடியேற முயற் சிப்பது என்பது பிரமிப்பான வேலை பிடிக்காத வேலை. ஆனாலும், இந்த சிவன் பணிக்காக இந்தச் சிரமத்தை நீங்கள் மேற்கொள்ளத் தான் வேண்டும். மறுப்பவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவார்கள்.''

மெல்ல நடந்து அவர் குதிரை மீது தாவி ஏறினார். அவர் சால்வை புற்றின் மீது இருந்தது. அதை எடுக்க யாரோ முயற்சித்தபோது ஒரு மெய்க்காவல் வீரன் அதட்டினான்.

''அது புற்றுக்கு, உனக்கல்ல. அதை அப்படியே விடு. என்று சொன்னான்.

அந்தச் சால்வை அந்தப்புற்றின் மீதே இருந்தது.

ஒருவன் நகர்ந்து போய் தன் வீட்டு நிலைப்படியை மெல்லத் தடவினான். சட்டென்று கோபமானான். இரு கைகளாலும் நிலைப் படியை இறுக்கப் பிடித்துக் கொண்டு முழு பலத்தோடு இழுத்தான். மண்ணால் கட்டப்பட்டிருந்த அந்த வீடு மெல்ல விரிசல் விட்டு பளிச்சென்று அந்த நிலைப்படியை விட்டுக் கொடுத்தது.

''இந்த வீரத்தைச் சற்று முன்பு காட்டியிருக்க வேண்டியதுதானே. இது பேடித்தனம்.''

அந்த கிராமத்தலைவன் உரத்துக் கத்தினான். அவர்களுக்குள் வாக்குவாதங்கள் துவங்கின.

இளவரசர் இராஜேந்திரருக்கு சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜ ராஜத்தேவர் வருகிறார் என்று உரத்த குரலில் சொல்லப்பட்டது.

அவர் உத்தரவிட அதிகம் தீப்பந்தங்களை ஏற்றினார்கள். மாளிகைப் பக்கம் குதிரையோடு விரைந்தார்கள். முன்னே பாதையில் தீப்பந்தம் வைத்து குதிரையைச் செலுத்திக் கொண்டு வரவேற்பதற்கு இரண்டு குதிரை வீரர்கள் போனார்கள். நில வொளியில் எதிரே குதிரை வீரர்கள் வருவது தெரிந்ததும் தீப்பந் தத்தை மேலும், கீழும் அசைத்தார்கள். அதற்கு மெல்ல வாருங்கள் என்று அர்த்தம். வரவேற்பதாகக்கூட அந்த அசைவுக்கு ஒரு செய்தி உண்டு.

முன் பக்கம் ஓ... என்று குதிரை வீரர்கள் சத்தமிட, இவர்களும் பதிலுக்குக் குரல் கொடுத்தார்கள். மெல்லிய நிலவொளியில் குதிரையின் சேணங்கள் பளபளத்து வருகையை அடையாளம் காட்டின.

வீரர்கள் தங்கள் குதிரையைத் திருப்பி இராஜேந்திரர் இருக்கும் இடம் நோக்கி நகர. அந்த வீரர்களைச் சக்ரவர்த்தியின் மெய்க்காவல் படை வீரர்கள் பின் தொடர்ந்தார்கள். அடுத்து சில மெய்க்காவல் வீரர்கள் நகர, மாளிகையின் தோட்டத்திற் குள்ளே சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் நுழைந்தார். ஓடி வந்து சில வீரர்கள் சக்ரவர்த்தியாரின் குதிரையைப் பிடித்தார்கள். முதுகு தடவி அமைதிப் படுத்தினார்கள். தொட்டவர்களுக்கு குதிரைபற்றி தெரிந்திருந்ததால் குதிரைக்கும் அவர்கள் தடவல் பிடித்திருந்தது.

யார், யார் இருக்கிறார்கள் என்று ஒரு கணக்கை வேகமாக எடுத்துக் கொண்டு சக்ரவர்த்தி உடையார் மாளிகையின் வாசற்புரம் நிற்க, உள்ளிருந்து வேகமாக இளவரசர் இராஜேந்திரர் வந்து அவர் காலைத் தொட்டு வணங்கினார். எழுந்து நின்று அவர் கரத்தைப் பிடித்துக் கொண்டார்.

வாருங்கள் என்று உள்ளே அழைத்தார். உள்ளே பத்துப் பதினைந்து தீபங்கள் ஏற்றப்பட்டிருந்தன. மேலே ஒரு தூங்கா விளக்கும் இருந்தது. வாசல் பார்த்து ஒரு மரமேடை அமைத்து அதன் மீது கம்பளம் விரித்து கம்பளத்தின் மீது தலையணைகள் போடப் பட்டிருந்தன. அந்தக்கூடத்தின் ஒரு ஓரத்தில் வாசனைப்புகை போடப்பட்டிருந்தது. அந்த மேடைக்கு நேர்மேலே கூரை சட்டென்று தூக்கிக் கட்டப்பட்டிருந்தது.

அருகனுடைய பக்கங்களில் இரும்புக் கம்பிகள் வைத்து திறந்த வெளி செய்யப்பட்டிருந்தது. பிரம்மஸ்தானம் போல் உயர்த்தி கட்டப்பட்டிருந்த அந்த இடைவெளியின் வழியே குபுகுபு வென்று காற்று பொங்கியது. அது அந்தக் கூடத்தை குளுமையாக்கியது. நேரடியாக வாசல் பக்கமும், பின்பக்கமும் திறந்தவெளி இருந்ததால் காற்று குறுக்கே வேகமாகப் பாய்ந்து அமர்ந்திருப்பவர்களின் உடம்பைத் தழுவிக் கொண்டு போயிற்று. எதிரே வெண்ணாறு மெல்லியதாய் போய்க் கொண்டிருந்ததால் அந்த நீரிலும் காற்றுப் பட்டு மேலும் குளுமையாயிற்று.

சக்ரவர்த்தி அமர்ந்ததும் இராஜேந்திரருடைய மெய்க்காவல் படைவீரன் ஈரத்துணி கொண்டு வந்து சக்ரவர்த்தியின் முதுகு முழுவதும் தடவினான். நெஞ்சில் தடவட்டுமா என்று கேட்க, சக்ரவர்த்தி இரண்டு கைகளையும் தூக்க, நெஞ்சையும் புஜங்களையும் தடவினான். பிடரியை ஈரத்துணியால் துடைத்தான்.

செண்பக மொட்டுகள் ஊற வைத்த குளிர்ந்த நீர் என்பதால் அந்த நீரே வாசனை மிகுந்து காணப்பட்டது.

வெற்றிலைப்பாக்கு தட்டு சக்ரவர்த்திக்கு அருகே வைக்கப் பட்டது.

''ஏதேனும் உண்ண விரும்புகிறீர்களா.'' என்று கேட்க, ''பால்'' என்று அவர் சொன்னார்.

வீரர்கள் பரபரத்தார்கள்.

''இந்த இடத்திற்கு வந்து வெகுநாளாகிவிட்டது. நன்றாகப் பராமரிக்கிறார்கள். யார் இதற்கு அதிகாரி.'' என்று கேட்க, அந்த அதிகாரி முன் வந்து வணங்கினான்.

''அட... நீயா... நலமா. எப்படியிருக்கிறாய்.'' என்று அவனை விசாரித்தார். ஆனால் பெயர் மறந்து போயிருந்தது. அப்படி விசாரித்தது அவனை சந்தோஷமடையச் செய்தது என்பதை, அவன் முகக்குறிப்பு உணர்த்தியது. சூடாகப் பசும்பால் வர, அதைத் தொட்டுப் பார்த்துவிட்டு நன்றாக ஆற்று என்று அவர் உத்தர விட்டார்.

''எப்படியிருக்கிறாய் இராஜேந்திரா. உட்கார்.'' என்று எதிர்ப்பக்க இடத்தைக் காட்ட இராஜேந்திரர் சம்மணம்மிட்டு உட்கார்ந்து நிமிர்ந்து தந்தையைப் பார்த்தபடியே இருந்தார்.

''சொல்லி அனுப்பினால் நான் வந்திருப்பேனே.''

''எங்கே.

''அரண்மனைக்கு.

''அங்கு வந்தால் நீயும், நானும் பேச முடியுமா. இதுதான் பேசுவதற்கு வசதி.

''ஏதும் முக்கியமான செய்தியா தந்தையே.''

''ஆமாம்.

''போருக்கு ஆயத்தமாகச் சொல்கிறீர்களா.''

''அட.. உன் வரை விஷயம் வந்துவிட்டதா.''

''உறுதியாக வரவில்லை. அதற்கான சூசகங்கள் தெரிந்தன. விமலாதித்தர் பெரும்படையோடு இந்தப் பக்கம் வருகிறார் என்பதுதான் ஆச்சரியமாக இருந்தது.

''என்ன ஆச்சரியம் இராஜேந்திரா.''

''மேலைச்சாளுக்கியம் நோக்கிப் படையெடுக்க நம்மிடமுள்ள படைகள் போதும். எதற்காக விமலாதித்தனை வரவழைத்தீர்கள். அவரால் என்ன உதவி என்று கொஞ்சம் யோசித்தேன்.''

''ஏதேனும் பிடிபட்டதா.''

''அவருக்கு நம் போர் முனைப்புத் தகவல் போய், தானும் போரில் கலந்து கொள்கிறேன் என்ற வேகம் வந்திருக்கக்கூடும். தன் திறமையையும் இந்தப் போரில் வெளிப்படுத்த வேண்டும் என்ற ஆவல் வந்திருக்கக் கூடும்.

''ஓரளவு நீ சொல்வது சரி. ஆனால் அதுமட்டும் காரணமல்ல.

''அவசியமா தந்தையே. நம்மைச்சுற்றி எதற்கு இத்தனை ஆட்கள்.''

''இவர்கள் எல்லோரும் நம்முடைய உபசேனாதிபதிகள்தான். எல்லோரும் போர் முனைக்கு வருகிறவர்கள்தான். சோழ தேசத் திற்கும் கட்டுப்பட்டவர்கள்தான்.''

''இருக்கலாம். ஆனால், விமலாதித்தன் பற்றி, நமது குடும்ப அந்தரங்க விஷயத்தைப் பற்றி இவர்கள் என் தெரிந்துகொள்ள வேண்டும்.

''சாளுக்கியத்தின் மீது ஏற்படும் போர் குடும்பத்தின் விஷயமா. சாளுக்கியத்தின் மீது ஏற்படுத்துகின்ற போருக்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. அதில் ஒன்றை இப்போது இங்கே பேசுவதற்காகத்தான் வந்திருக்கிறேன்.''

''அருண்மொழி வருகிறேன் என்று சொல்லியிருக்கிறான்.''

''ஆஹா... அருண்மொழி வரட்டும். அருண்மொழியைத் தவிர்க்க முடியாது.''

''குடும்ப விஷயமெனில் நான் அருண்மொழியையும் தவிர்ப்பேன்.''

''தேவையில்லை. நமது குடும்ப விஷயம் நம்முடைய சேனா பதிக்குத் தெரிந்துதான் இருக்க வேண்டும்.''

''ஆனால் அருண்மொழி உபசேனாதிபதிதானே.''

''அவன் உனக்கு சேனாதிபதியாகப் போகிறவன். எனவே, நமது குடும்ப விஷயத்தை அவன் தெரிந்துகொள்வது நல்லது.''

''ஏன் தந்தையே மறுபடியும் குடும்ப விஷயமென்றே திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள்.''

''மேலைச்சாளுக்கியம் நோக்கி நாம் போர் செய்வதற்கு என்ன காரணம் இருக்குமென்று நினைக்கிறாய்.''

''கங்கதேசத்தின் பல பகுதிகளில் மேலைச் சாளுக்கிய வீரர்கள் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். நம்முடைய அதிகாரிகளால் கங்கதேச வீரர்களை வைத்து அவர்களை விரட்ட வேண்டி யிருக்கிறது. சேர தேசத்து முன் குடுமி அந்தணர்கள் பெரும் கும்ப லாகப் போய்க் கீழைச்சாளுக்கியத்திற்கும், மேலைச்சாளுக்கியத் திற்கும் இடைப்பட்ட வனப் பகுதியில் மிகப் பெரியதாகப் போர்ப் பயிற்சிக் களம் நிறுவி, மேலைச்சாளுக்கிய வீரர் பலருக்குக் கடும் பயிற்சி அளித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கின்ற பயிற்சியெல்லாம் இரவோடு இரவாகக் கொள்ளைக்காரர்களுடன் உள்ளே புகுந்து விதம்விதமாக ஜனங்களைக் கொன்று போடுவது தான். அதாவது நேரடியான போருக்கு வீரர்களைத் தயாரித்து வைக்காமல் தந்திரமான போருக்கே பயிற்சி கொடுக்கிறார்கள். ஆமெனில், எல்லையோர கிராமங்களில் இன்னும் கடும் தாக்குதல் ஏற்படுத்துவதற்கே கீழைச்சாளுக்கியர்கள் முயற்சி செய்கிறார்கள். இதை ஆரம்பித்திலேயே முறியடிக்க வேண்டும்.''

''இல்லையெனில் என்ன ஆகும் இராஜேந்திரா.''

''அந்தத் திமிர். அந்தக் கொக்கரிப்பு பெரும்படையோடு உள்ளுக் குள்ளே வரச்செய்யும். அதற்கு முன்னர் கங்க தேசத்திலுள்ள நம் முடைய வீரர்களும், நடுநாடு, தொண்டைநாடு, பக்கம் இருக்கின்ற

வீரர்களும் சோர்வடைவார்கள். இது சோழதேசத்தின் எல்லைக்கு மிகப்பெரிய பலவீனம்.''

''மேலைச்சாளுக்கியத்தில் எவ்வளவு நாள் தாக்குதல் இருக்கு மென்று நினைக்கிறாய் இராஜேந்திரா.''

''ஒரேயொரு நாள் போர்தான் இருக்கும்.''

''மேலைச்சாளுக்கியம் போவதற்கு எத்தனை நாளாகும்.

''பதினைந்து நாட்களாவது ஆகும்.''

''பதினைந்து நாள் பயணம். ஒருநாள் போர். இது சரியா இராஜேந்திரா. நமது வீரர்கள் சோர்ந்து விடமாட்டார்களா.''

''அதற்கு வேறு ஒரு வழி வைத்திருக்கிறேன் தந்தையே.

''என்ன அது.''

''பதினைந்து நாள் நடப்பது என்பது சிரமம். எனவே பெரும்பார வண்டிகளை கங்க தேசத்திற்கு முன்பே அனுப்பி, கங்கதேச வீரர் களைப் போருக்கு உதவியாக சில விஷயங்களைச் செய்துவிட்டு, நாம் குதிரைப் படையோடு, யானைப் படையோடு மட்டுமே நகர வேண்டும். குதிரை வீரர்களோ, அதைத் தொடர்ந்து வரும் இளைய படைகளோ, அதைத் தொடர்ந்து ஓடி வருகிறவர்களையோ தவிர்த்து விடவேண்டும்.''

''அவர்களை என்ன செய்யலாம்.

''நம்முடைய சோழதேசத்திற்குக் காவலாக வைக்கலாம். சோழதேசத்தின் எல்லை வரை அவர்களை நடத்தி வந்து அங்கே தங்க வைத்து விடலாம். திரும்புகிறபோது கங்கதேசத்து வீரர்களை கங்க தேசத்திலே நிற்க வைத்துவிட்டு, நம்முடைய குதிரை யானை வீரர்களுக்குத் துணையாக, உதவிப்படையாக அவர்களைத் திரும்ப வரவழைக்கலாம்.''

''நன்றாக இருக்கிறது. மிகத் தெளிவாகச் சிந்திக்கிறாய். ஆனால் விமலாதித்தரை என்ன செய்வதென்று தெரியவில்லை.

''அந்த கீழைச்சாளுக்கியப்படை என்னுடைய கட்டளைக்கோ அல்லது உங்களுடைய கட்டளைக்கோ கீழ்படியுமா என்று தெரிய வில்லை. நாம் கட்டளையிட்டால் அவர்கள் திரும்பி விமலாதித்தன் முகத்தைப் பார்ப்பார்கள். விமலாதித்தன் சொல்ல வேண்டுமென்று நினைப்பார்கள். இது குழப்பத்தை உண்டு பண்ணும்.''

''ஆமாம். நீ சொல்வது சரி.''

''ஏன் விமலாதித்தரை வரவழைக்கிறீர்கள்.''

''நான் வரவழைக்கவில்லை இராஜேந்திரா.''

''நான் நினைத்தேன். நீங்கள் அம்மாதிரியான ஒரு காரியத்தை நிச்சயம் செய்ய மாட்டீர்கள். விமலாதித்தனாகக் கிளம்பி வருகிறான் அல்லவா.''

''அதுவும் உண்மையில்லை இராஜேந்திரா.''

''என்ன உண்மையான விஷயம்.'' இராஜேந்திரர் நெருங்கி வந்து கேட்டார்.

''அருண்மொழி வந்துவிட்டானா.''

சக்ரவர்த்தி கேட்க, இளவரசர் சட்டென்று நிமிர்ந்தார்.

''தொலைவில் பந்தங்கள் அசைகின்றன அருண்மொழி வந்து கொண்டிருக்கிறான்.''

அவர் விசாரித்ததும் செய்தி வந்தது.

''இராஜேந்திரா, உள்ளே இருப்பதைவிட வெளியே போய் விடலாம் என்று தோன்றுகிறது.''

''வெளியே என்றால்...

''வெண்ணாற்றங்கரையில் இறங்கி விடலாம் என்று நினைக்கிறேன்.''

''எதற்கு ஆற்றில் இறங்கிக் கொண்டு இந்த வேளையில்..

''வேளையென்ன வேளை.. மர ஆசனங்களைக் கொண்டு வா. மெல்லியதாகத்தானே தண்ணீர் போகிறது. கால்களை நனைத்துக் கொண்டே பேசலாம்.''

''என்ன தந்தையே விளையாட்டாக இருக்கிறது.''

''விளையாட்டில்லை. இந்த அறையிலும் நாம் பேசுவதை எவரும் கேட்டுவிடக்கூடாது என்பதற்காகத் தான் வெண்ணாற்றங் கரை நடுவே போக விரும்புகின்றேன்.''

இராஜேந்திரர் விளக்கொளியில் தன் தந்தையைக் கூர்மையாகப் பார்த்தார்.

''சரி'' என்று சொன்னார்.

மெல்லத் திரும்பி சைகை செய்து மெய்க்காவல் படையினரை அருகே அழைத்து காதோரம் சில விஷயங்கள் சொன்னார். எழுந்திருந்தார்.

சக்ரவர்த்தி வெற்றிலையையும், பாக்கையும் எடுத்தார். பாக்கை வாயில் போட்டுக்கொண்டு நிதானமாக வெற்றிலையைக் கிழித்து இரண்டு, மூன்று சுருள்களை உண்டார். வாயில் அரைத்துக் கொண்டே மெல்ல நடந்தார்.

மாளிகையிலிருந்து வெண்ணாற்றங்கரைக்குப் போகும் பாதை நெடுகிலும் தீப்பந்தம் வீசிக் காட்டப் பட்டது. அப்படி தீப்பந்தம் வீசிக் காட்டுகையில் அருகே இருக்கும் புதர்களிலிருந்து பூச்சிப் பொட்டுகள் விலகி ஓடும் என்பதால் இன்னும் பல தீப்பந்தங்கள் அசைந்தன.

ஆற்றின் நடுவே மூன்று மர ஆசனங்கள் போடப்பட்டன. ஆற்றில் வேகமாகத் தண்ணீர் வந்தால் தெரிவிக்க என்று ஒரு வீரன் சற்றுத் தொலைவு போய் நின்று கொண்டான். ஒருவேளை ஆற்றில் தண்ணீர் வந்து இவர்கள் தள்ளாடினால் என்ன செய்வது என்று இன்னொரு வீரன் அவர்கள் இருந்த ஆசனத்திற்குச் சற்றுத்தள்ளி நீர் வரும் பாதையில் நின்று கொண்டான். படித்துறையை நோக்கி மூன்று குதிரை வீரர்கள் போனார்கள். இந்தக் கரையில் நான்கு குதிரை வீரர்கள் நின்றார்கள். மடமடவென்று வீரர்கள் நகருவதைப் பார்த்து இராஜேந்திரர் சந்தோஷமடைந்தார்.

''அருண்மொழிக்குக் குடிப்பதற்கு ஏதேனும் எடுத்துவா.'' என்று இன்னொரு வீரனுக்குக் கட்டளையிட்டார்.

அருண்மொழி மாளிகைக்குள் நுழைந்ததும் கீழே இறங்கி குதிரையை வீரனிடம் கொடுத்துவிட்டு, பல தப்படிகள் ஓடிவந்து அரசர் முன்பு குனிந்து வணங்கினான். அரசர் அவனை அருகே வரவழைத்து தோளில் கைபோட்டுக் கொண்டார்.

''ஐயன் நலமா.'' என்று மரியாதையாக சக்ரவர்த்திக் கேட்டார்.

அருண்மொழி சிரித்தான்.

அரசர் அவனை ஐயன் என்று கூப்பிடுவதில்லை.

அருண்மொழி என்று உரக்க விளிப்பார். வேண்டுமென்று கேலியாக மரியாதை கொடுக்கிறார் என்பது புரிய அவனுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது.

''மிக நலமாக இருக்கிறேன் சக்ரவர்த்தி. போர் தீர்மானிக்கப் பட்டுவிட்டது இல்லையா'' என்று கேட்டான்.

''எல்லோரும் போருக்காகவே தயாராகிக் கொண்டிருக்கிறீர்கள். போர் வேண்டாமென்று எவருமே சொல்லவில்லை.

''வேண்டாமென்று எவரும் சொல்ல முடியாது சக்ரவர்த்தி. நம்மை நம்பியிருக்கிற கங்க வீரர்கள், கங்க தேசத்து விவசாயிகள் அடிபடுவதை நாம் பார்த்துக் கொண்டிருந்தால் நமக்கு மரியாதை இல்லை. நீயும் அடிக்கிறாய், இவனும் அடிக்கிறான். என்ன செய்ய என்று அவர்கள் புலம்பினால் அது நமக்கு மிகப்பெரிய அவமானம். பாண்டியர்களெல்லாம் நமக்கு இணக்கமாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள். நம்மோடு இழைந்து போக ஆரம்பித்துவிட்டார்கள். இதே விதமாக கங்கர்களும், குடமலை நாட்டைச் சேர்ந்தவர்களும் மிக விருப்பமாகப் பழகி வருகிறார்கள்.

சோழ மன்னனால் எந்தத் தீங்கும் இல்லை என்று சொல்கிறார்கள். தங்களுடைய ராஜ்ய பரிபாலனம்தான் நடக்கிறது. சோழதேசத் திற்குக் கப்பம் கட்ட வேண்டியிருக்கிறது என்பதுதான் குறை என்பதாகப் பேசுகிறார்கள். அவர்கள் கட்ட வேண்டிய வரி மிகப் பெரியதாக இல்லை என்பதால் நிறைவாக இருக்கிறார்கள். அதே நேரம் மேலைச்சாளுக்கியம் அவர்களைத் தொந்தரவு செய்தால் நாம்தான் போய்க் காப்பாற்ற வேண்டும். மறுபடி தொந்தரவு செய்ய முடியாதபடி மேலைச்சாளுக்கியத்தை முடக்கி வைக்க வேண்டும்.''

''எத்தனை நாள் போர் அருண்மொழி.''

''அரைநாள் போர்.''

''எதனால் அப்படிச் சொல்கிறாய்.

''படையெடுப்புக்குண்டான வலு இல்லை. நிச்சயமாக இல்லை. இருப்பின்..

அருண்மொழி இழுத்துப் பேசினான்.

''அவர்கள் கங்க தேசத்தைத் தாக்கியிருக்க வேண்டும். மாறாய் இரவு நேரம் புகுந்து கொள்ளையடிக்கிறார்கள். மாடுகளை ஓட்டிப் போகிறார்கள். இது சேரதேசத்து நம்பூதிரிகளின் தந்திரம். வெறுப் பேற்றுகின்ற தந்திரம். ஆத்திரமூட்டும் செயல்.

''அப்படி ஆத்திரமூட்டினால்.

''கங்கர்கள் புலம்புவார்கள். குடமலைநாட்டோர் அழுவார்கள். அந்த அழுகையை, புலம்பலைச் சோழ தேசத்திற்கு எதிராகத் திருப்ப லாம். உள்நாட்டுக் கலகம் தூண்டலாம் என்பது அவர்களுடைய திட்டம்.''

''உள் நாட்டுக் கலவரம் கிளம்பினால் என்ன ஆகும்.

''கங்க தேசத்து இளைஞர்களை அவர்கள் பக்கம் இழுக்க முடியும். குடமலை நாட்டு வீரர்களைப் போருக்குத் தயார் செய்ய முடியும். எல்லோரும் ஒன்றாகி சோழதேசத்தைத் தாக்க முடியும். இதற்கு ஆரம்பம் கிராமப்புறங்களில் கொள்ளையடிப்பது, எனவே.. நாம் போருக்குத் தயாராகி மேலைச் சாளுக்கியத்தைத் தாக்குவது நல்லது.''

''என்னவிதமான தாக்குதல்.

சக்ரவர்த்தியார் உரத்துப்பேசி அருண்மொழியைத் தொடரச் சொன்னார்.

''தரைமட்டமாக்க வேண்டும். நகரத்தில் உள்ளோரைக் கைதிகளாகப் பிணைத்துக் கொண்டு வரவேண்டும். கிராமங்களில் உள்ளோரை பயமுறுத்தி அனுப்ப வேண்டும். யானைகளை விட்டு பயிர் பச்சைகளை மேய்ந்துவிட வேண்டும். தானியங்கள் எதுவு மில்லாமல் செய்துவிட வேண்டும். எல்லாப் போர்க்கருவிகளையும் பிடுங்கிவிட வேண்டும். பாரவண்டிகளில் ஏற்றி கங்க தேசத்திற்குக் கொண்டு போய் விடவேண்டும்.''

''போருக்கு எந்தக் காலம் நல்லது.''

''கோடைக்காலம்தான். ஆனி, ஆடி அங்கே மழைக்காலம். அந்த மழையை நம் வீரர்கள் தாங்க மாட்டார்கள். குதிரைகள் களைத்துப் போகும். யானைகள் சறுக்கித் தள்ளாடும். பங்குனியும், சித்திரையும் மிக நல்ல மாதங்கள். நம் வீரர்கள் அங்குள்ள கிராமங்களினுள் போய் கிணற்றில் நீர் மொண்டு குதிரைகளுக்கும், யானைகளுக்கும் தாகம் தணிக்க வேண்டும்.

கங்க தேசம் தாண்டி மேலைச்சாளுக்கியம் நுழையும் வரை மிகக் கவனமாக இருக்க வேண்டும். சேரதேசத்து நம்பூதிரிகள் கிணறுகளில் விஷம் கலக்கி வைப்பார்கள். அங்குள்ள வனங்களில் மறைந்திருந்து கல்வீசித் தாக்கி நம்மைக் கலவரப்படுத்தி, பிறகு விஷ அம்புகளை எய்வார்கள். மலை முகடுகளில் உட்கார்ந்து போகும் பாதையில் பாறைகளை உருட்டி விடுவார்கள். அதுவு மில்லாது அடர்த்தியான வனங்களுக்கு நெருப்பு வைத்துவிட்டால் யானைகள் மிரளும். அண்டாது. புகை நெடி தாங்காமல் குதிரை களும் திணறலாம். அந்த வனங்களூடே மூலிகைகளை வெட்டி புகை ஏற்படுத்தினால் அவை வீரர்களுக்கும், குதிரைகளுக்கும் திணறல் ஏற்படுத்தும். பயணம் தடைப்படும்.

''இவையெல்லாம் தாண்டி ஒரு படை போய்விட முடியுமா.''

''நிச்சயம் போய்விடலாம். முன்னே ஒரு ஆயிரம் பேருக்கு சேதம் இருக்கலாம். அதிக பட்சம் போனால் இரண்டாயிரம் பேர் பாதிக்கப் படலாம். நாம் ஒரு லட்சம் வீரர்களோடு போகிறோம் என்பதால் இந்தப்படை பலத்தை அவர்களால் தாங்க முடியாது.''

''ஒரு லட்சம் வீரர்களோடு நேரே போய் முட்ட வேண்டும் என்று நினைக்கிறாயா அருண்மொழி.''

இந்தக் கேள்வியை இராஜேந்திரர் கேட்க, சக்ரவர்த்தி அது சரியான கேள்வி என்று தலையாட்டினார்.

''இரண்டாகப் பிரிந்து, மூன்றாகப் பிரிந்து தாக்க வேண்டிய அவசியமில்லை. அவர்களுடைய செழிப்பான நகரம் மான்ய கேடம். மான்யகேடத்தைக் கைப்பற்றி அங்குள்ள பெரும் செல்வத் தைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்துவிட்டபின் மேலைச் சாளுக்கியத்தின் வாழ்க்கை ஸ்தம்பித்துவிடும் அதுவும் தவிர.''

''சொல் அருண்மொழி..

''மேலைச்சாளுக்கியன் ஒரு தவறு செய்கிறான்.''

''என்ன.''

''அவன் தனக்கு வடக்கே இருக்கின்ற பராமரரோடு சுமுகமாக இல்லை. எனவே. நாம் மேலைச்சாளுக்கியத்தைத் தாக்க ஆரம்பிக் கிறபோது வடக்கிலிருந்து அவனுடைய மான்ய கேடத்தைக் கொள்ளையடிக்க எவரேனும் முயற்சி செய்யக்கூடும்.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்.''

''மான்யகேடத்தினுடைய பொக்கிஷம் அவ்வளவு சிறந்தது. அரண்மனைத் தூண்களுக்கு தங்கக் கவசம் சார்த்தப்பட்டிருக்கிறது. மிக அற்புதமான ரத்ன சிம்மாசனம் இருக்கிறது. பொக்கிஷ அறையில் குவியல் குவியலாகத் தங்க நாணயங்கள் அச்சிடப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அதிகம் செம்பு கலக்காமல் சொக்கத் தங்கமாகவே, தங்கப் பட்டைகளாகவே வைத்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அதுவும் தவிர...''

''சொல் அருண்மொழி.''

''அராபிய குதிரைகள் பலதும் கடல் மூலம் மேலைச் சாளுக்கியம் வந்தடைந்து, அங்கிருந்து மான்ய கேடயத்திற்கு கொண்டு வரப் படுகின்றன. முழு வெள்ளையாய் நூறு குதிரைகள் இருக்கின்றன

வாம். முழு கருப்பாய் அறுநூறு குதிரைகள் இருக்கின்றனவாம். எல்லா குதிரைகளுக்கும் தங்கச் சேணம் இடப்பட்டிருக் கின்றனவாம்.

''முற்றிலும் தங்கமா.''

''இல்லை. முகப்பகுதிக்கு மட்டும் தங்கம். சேணத்தின் இணைப்புகளில் தங்கம் அடித்து பிணைத்திருக்கிறார்கள்.''

''இந்தத் தகவல் எப்படிக் கிடைத்தது அருண்மொழி.''

''என் தந்தை கிருஷ்ணன் ராமனான பிரம்மராயரின் ஒற்றர்கள் கொண்டு வந்தது. அவர்கள் வைணவ சாதுக்களாக துவாரகை வரை பயணம் போய் திரும்பியிருக்கிறார்கள். துவாரகையில் மிலேச்சர் களுடைய நடமாட்டம் அதிகமிருக்கிறதாம். சில அங்காடிகள் முழுவதும் மிலேச்சருடைய வசம் இருக்கிறதாம்.

''மிலேச்சர்கள் என்றால்...

''பாலைவனப் பகுதியிலிருந்து வந்த அராபியர்கள்.''

''அராபியர்கள் என்றால்...''

''அரபுமொழி பேசுகிறவர்கள். அது ஒரு தனித்த நாகரிகம்.''

''மான்யகேடம் வரை போய்விட முடியுமா.''

''துங்கபத்ரா நதி மிக வேகமுள்ளது. நம்முடைய படைகள் வரும் என்று தெரிந்தால் அங்குள்ள அணைகளைத் திறந்து இன்னும் நீரைப் பெருக்கிவிடுவான். நீரில் இறங்க இயலாது. உள்ளே பாறைகள் அதிகம். யானைகள் போவது மிகவும் கடினம். குதிரைகள் தட்டுத்தடுமாறிப் போகலாம். ஆனால், மறுகரை அடைவதற்குள் சேதம் மிக மோசமாக இருக்கும்.''

''அந்தச் சேதத்தை எப்படித் தடுப்பது.''

''தவிர்க்க முடியாது சக்கரவர்த்தி. சேதப்பட்டுத்தான் நாம் ஜெயிக்க வேண்டியிருக்கும்.

''ஜெயிப்பது நிச்சயம் என்பது போல் பேசுகிறீர்களே.''

''வெகு நிச்சயம். அதில் எனக்கு நெல் முனையளவும் சந்தேகமில்லை.

''சோழ வீரத்தை வைத்துப் பேசுகிறீரா.''

''இல்லை. மேலைச்சாளுக்கியத்தின் படை பலவீனத்தை வைத்துப் பேசுகிறேன். உழவர்களை, கம்மாளர்களை, சிற்பிகளைக் கூட படையில் சேர்த்து பயிற்சி கொடுத்துக் கொண்டிருக்கிறார்

களாம். பாவமாக இருக்கிறது என்கிறார்கள். அறுபது வயது கிழவர்களையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு படையும் வைத்திருக்கிறார்களாம். தற்கொலைப்படை என்று அதற்குப் பெயராம்.''

''யாருடைய காரியம் இது.''

''வேறு யார்? சேர தேசத்து நம்பூதிரிகள்தான். அறுபது வயதுக் கிழவன் தோள்கள் தொங்கிப் போனவன். வலிமை இல்லாதவன் கையில் வேல் எடுத்து வந்தால், நீங்கள் என்ன செய்வீர்கள். விட்டால் வேல் எறிந்து கொன்று விடுவான். விடாது வெட்டினால் உள்ளுக்குள்ளே பச்சாதாபம் பொங்கும். இந்தக் கிழவனையெல்லாம் வெட்டிக் கொண்டிருக்கிறோமே என்ற வேதனை பொங்கும். இது நம்முடைய படைவீரர்கள் வேகத்தைத் தடை செய்யும். குழப்பம் ஏற்படுத்தும்.

''இவர்களை எப்படி எதிர்கொள்வது.''

அதற்கு சில உத்திகள் இருக்கின்றன. இது தந்திரமாகச் செய்யப் படுகின்ற போர். கிழவர்களை முன்னே அனுப்பினால் நாம் வேறு சில விஷயங்களைக் கைக்கொள்ள வேண்டியிருக்கும்.

''என்ன விஷயங்கள்.''

''உப்பும், மூலிகைகளும் கலந்த அமில நீரை வாரி முகத்தில் வீச வேண்டும். அவர்களை வெட்டி வீழ்த்துவது கேவலமல்லவா. உயிரோடு இருக்கவைக்கலாம். முகம் கழுவினால் சரியாகிவிடும். மூன்று நாட்களில் உடம்பின் சிவப்பு மறைந்து விடும். வெட்டினால் இறந்து போவான்.''

''இப்படியெல்லாம் யுத்தம் செய்ய வேண்டுமென்றால் அது தலையெழுத்துதான்.''

சக்ரவர்த்தி அலுத்துக்கொண்டார்.

''சக்ரவர்த்தி அவர்களே..

''சொல் அருண்மொழி.''

''எனக்குச் சில கேள்விகள் இருக்கின்றன.''

''கேட்கலாம்.

''விமலாதித்தர் கீழைச்சாளுக்கியத்திலிருந்து எதற்காகக் காஞ்சிபுரம் வழியாக சோழதேசம் நோக்கி வந்து கொண்டிருக்கிறார். எனக்குப் புரியவில்லை. இந்த நேரத்தில் அவருடைய வருகை

எதற்கு? அவருடைய உதவி மிக அவசியம் என்று நினைக்கிறீர்களா.''

''இல்லையென்று சொல்கிறாயா அருண்மொழி.''

''அவர் படைகள் அவ்வளவு கட்டுக்கோப்பானவை அல்ல. தாக்குவதற்கோ, தாக்குதலைச் சமாளிப்பதற்கோ அவற்றுக்குத் தெரியாது. ஒருவேளை அவர்களை முன்னே அனுப்பினீர்கள் என்றால், மிகக் கடுமையாகத் தாக்கப்படுவார்கள்.''

''அதனால் என்ன ஏற்படும்.''

''நமது படையில் லேசாக கலவரம் ஏற்படாதா.''

''ஏற்படாது.''

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்.''

''கீழைச்சாளுக்கியர்கள் வன்முறையில் பலவீனமானவர்கள் என்று நமக்குத் தெரியும்.

''அப்படியானால் அப்படியொரு பலவீனமான படை நமக்கு எதற்குத் தேவை.

''நீ தான் சற்று முன்பு கூறினாயே.

''என்ன கூறினேன்.''

''ஆரம்பத்தில் சில சேதங்கள் இருக்குமென்று..''

''ஆமாம்.

''அவர்களை ஆரம்பத்தில் அனுப்பினால் என்ன.''

சட்டென்று இராஜேந்திரரும், அருண்மொழியும் சக்ரவர்த்தியை வியப்போடு பார்த்தார்கள்.

''யாரேனும் களப்பலியாக வேண்டும். கீழைச் சாளுக்கியம் ஆனால் என்ன.''

''அதற்காகவா வரவழைக்கிறீர்கள்.''

''நான் வரவழைக்கவில்லை.''

சக்ரவர்த்தி வேகமாக கை தூக்கி மறுத்தார்.

''பலமுறை வரவேண்டாம் என்று சொல்லியும் கேட்கவில்லை. வருகிறேன். என்று பிடிவாதம் பிடித்து சோழ தேசம் நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறான். அவனைக் கடிந்து கொள்ளவும் முடியவில்லை.''

''ஏன் அவனைக் கடிந்துகொள்ள முடியவில்லை தந்தையே. இது போர். உங்களுடைய ஆணைக்குக் கட்டுப்படாமல், எதற்காக இங்கே வருகிறான்.''

''அபத்தமாகப் பேசாதே இராஜேந்திரா. என்னுடைய மகளை விமலாதித்தனுக்குக் கொடுத்திருக்கிறேன்.''

''அதனால் என்ன.''

''அவன் என் மருமகன்.''

''அதனால் என்ன தந்தையே.

''அவன் குந்தவையை ஏசாதும், பேசாதும் இருக்க வேண்டும். குந்தவையை அவன் நல்லபடி வைத்துக்கொள்ள வேண்டும்.

''தந்தையே நீங்கள் பேசுவது புரியவில்லை.''

''குந்தவையை அவன் இழித்தும், பழித்தும் பலவாறு பேசுகிறான். உன் தந்தையாரிடம் நான் அடைப்பக்காரனாகவா இருக்கிறேன் என்று கேட்கிறான். அவளோடு பேச மறுக்கிறான். குந்தவையும், அவனும் பேசி ஆறு மாதங்களாகின்றன.''

இராஜேந்திரருக்குக் கோபம் வந்தது. முஷ்டி மடக்கினான். காலை உதைத்தான். பல் கடித்தான்.

''சொல்லுங்கள். சவுக்கால் அடித்துப் பிய்த்து விடுகிறேன்.''

''யாருக்குத் தொந்தரவு. குந்தவை சந்தோஷப்படுவாளா. அழுவாள். வீறிடுவாள். மருமகனை சவுக்கால் அடித்தால் என்ன புண்ணியம்.

சக்ரவர்த்தியின் குரலில் பெரிய அலுப்பு இருந்தது.

''எனக்குப் புரிகிறது சக்ரவர்த்தியாரே. இப்போதுதான் புரிகிறது. அருண்மொழி கலவரமானான்.

மேலைச்சாளுக்கியர்கள், கீழைச்சாளுக்கியர்களோடு சம்மந்தம் செய்ய வேண்டுமென்று பல்வேறு விதமாக முயற்சிக்கிறார்கள். விமலாதித்தன் ஒரு குறி. மூன்று பெண்களை அவனுக்குக் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்.''

''விமலாதித்தனா? மணந்து விடுவானா?''

''என்ன செய்வாய். வெட்டி எறிவாயா. விதவையாக்குவாயா உன் தங்கையை. முட்டாள்தனமாகப் பேசாதே.''

''என்ன விஷயமென்று தெளிவாகச் சொல்லுங்கள் தந்தையே.''

இளவரசர் இராஜேந்திரர் பதற்றப்பட்டார்.

''இராஜேந்திரா இதற்குத்தான் சொல்கிறேன். அரசியல் மட்டும் ஒரு விஷயமாக இல்லை. இப்போது குடும்ப சூழ்நிலையும், போருக்கான விஷயமாக மாறிவிட்டது. இது சேரர்களின் தந்திரம். சேரதேசத்து நம்பூதிரிகளின் பேச்சுப்படி, மேலைச்சாளுக்கிய அரச குடும்பத்திலிருந்து மூன்று பெண்களைத் தேர்ந்தெடுத்து, கீழைச் சாளுக்கியம் அனுப்பி, அங்கு தங்கச் செய்து, திருமணம் பேசுவதற் குத் தூதுமேல் தூது விட்டிருக்கிறார்கள். விமலாதித்தனும் போய் பார்த்துப் பேசிவிட்டு வந்திருக்கிறான்.''

''ஹா...'' இராஜேந்திரர் பெருங்குரலெடுத்து கூச்சலிட்டார்.

அருண்மொழி பதட்டமானான்.

கரையோரம் நின்ற வீரர்கள் பதட்டமானார்கள்.

''அமைதியாய்ப் பேசு இராஜேந்திரா. ஆரவாரம் செய்யாதே.

சக்ரவர்த்தி அலுப்பும், கோபமாகவும் பேசினார்.

இராஜேந்திரர் சட்டென்று அடங்கினார்.

''சக்ரவர்த்தியார் அவர்களே... இவ்வளவு பெரிய விஷயத்தை என் தந்தையார் இல்லாமல் நீங்கள் ஏன் பேசுகிறீர்கள்.'' அருண் மொழி கேட்டான்.

''உன் தந்தையாருக்கு எல்லாமும் தெரியும். நான் இராஜேந் திரனோடு பேச வந்திருக்கிறேன்.''

இராஜேந்திரர் சக்ரவர்த்தியின் முகத்தை உற்றுக் கவனித்துவிட்டு, தலைகுனிந்து கொண்டார்.

''கிருஷ்ணன்ராமனுக்குத் தெரிந்த பிறகு தான் இராஜேந்திரருக்குத் தெரிய வேண்டுமென்பது உங்கள் கட்டளையா.''

''கிருஷ்ணன் ராமனுக்குத் தெரிந்தபிறகு தான், இந்த இராஜ ராஜனுக்கே தெரிந்தது. கிருஷ்ணன் ராமன்தான் ஒற்றர்கள் அனுப்பி இந்த விஷயங்களைச் சேகரித்து வந்தது. அதுமட்டுமல்ல.

''வேறென்ன..

''மிகச் சரியான ஒரு மனிதரை விமலாதித்தனிடம் அனுப்பி, இவ்விதமான சம்மந்தங்கள் ஏதும் செய்து விடாதே. மனதாலும் நினைத்து விடாதே. அவர்கள் அழைத்து நீர் போனது பிசகு என்று கண்டித்திருக்கிறார்.''

''யார் போனார்கள்.''

''ஈராயிரம் பல்லவரையர்.''

''அப்படியா.''

அருண்மொழியும், இராஜேந்திரரும் ஒரே குரலில் வியந்தார்கள்.

சேர தேசத்தில் வட பக்கத்தில் கங்க தேசத்தின் நடுமையத்தில் மலைகள் நிறைந்த ஊரில், நான்காம் வருணத்தில் பிறந்த ஈராயிரம் பல்லவரையர் மிகப்பெரிய போர் வீரர். அற்புதமான மாதண்ட நாயகன். அந்தச் சோழ அதிகாரியின் கீழ்தான். கங்க தேசமும் அதற்கு மேலுள்ள கிராமங்களும் இயங்குகின்றன. அங்கே மாதண்ட நாயகனாக ஈராயிரத்துப் பல்லவரையர் இருப்பதால் தான் சோழ தேசத்தினுடைய பாதுகாப்பு பலமாயிற்று. அவரின் திறமை மிக உயர்வானது. சோழதேசத்தின் பால் அவருடைய ஈடுபாடு முழுமை யானது.

சோழ தேசத்தைச் சேர்ந்த அற்புதமான இளைஞர்களை ஒன்று திரட்டி, குடகுமலை வீரர்களையும் ஒன்று சேர்த்து, பல்லவரையர் தனக்கென்று ஒரு தனிப் படையை உருவாக்கியிருக்கிறார். அவர்கள் அத்தனை பேரும் பச்சைத் தலைப்பாகைக்காரர்கள். அந்தத் தலைப் பாகையில் தங்கத்தாலோ, தாமிரத்தாலோ, வெள்ளியாலோ, தகுதிக்கேற்ப நாகம் ஒன்றைச் சொருகியிருப்பார்கள். அவர்களுக்கு வேறு எந்த தெய்வத்தையும் விட நாகம்தான் மிக முக்கியமான தெய்வம். அது சக்தி ரூபம். சிவ அம்சம், விஷ்ணு ரூபம் என்றெல் லாம் பேசுவார்கள். எல்லாத் தெய்வங்களுக்கும் பொதுவான, எல்லாத் தெய்வங்களையும் கும்பிடுகின்ற ஒரு நிலைமையை நாகம் கொடுக்கிறது என்று உயர்த்தியாகப் பேசுவார்கள். அது மட்டு மல்லாது விஷத்தை எதிர்கொள்வதற்கும், விஷத்திலிருந்து விடுபடு வதற்கும் அவர்கள் ரகசியமான வைத்திய முறைகள் வைத்திருக் கிறார்கள். குதிரைகளைப் பேணிக் காப்பதில் மிக வல்லவர்கள்.

ஈராயிரத்துப் பல்லவரையர் கொஞ்சம் வேகமானவர். முதன் முறைதான் எச்சரிப்பார். இரண்டாம் முறை அவர் தண்டிக்க ஆரம்பித்து விடுவார். அரச குடும்பங்களில் பலருக்கு அவரைக் கண்டால் அச்சமுண்டு. சோழதேசத்தின் பல சேனாதிபதிகள் அவரோடு பேசுவதையும், விவாதிப்பதையும் விரும்புவதில்லை. இராஜேந்திரசோழருக்கும், இராஜராஜருக்கும் மட்டுமே கட்டுப் பட்டவர்.

ஒருமுறை அருண்மொழியை 'அடேய் பயலே' என்று அவர் அழைக்க, அருண்மொழி வாள் உருவி, ஒன்று நான் உயிரோடு

இருக்க வேண்டும் அல்லது நீ இருக்க வேண்டும் என்று உரத்த குரலில் சொல்ல, அவரும் வாள் உருவி இறங்க, அருண்மொழியின் தந்தை கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் அதட்டி இருவரையும் விலக்கி வைத்தார்.

நீங்கள் இருவரும் மரணமடைவது பற்றிக் கவலையில்லை. ஆனால் சோழ தேசத்திற்காக மரணமடையுங்கள். உங்களுடைய டாம்பீகத்திற்காக, வறட்டுக் கூச்சலுக்காக மரணமடைய வேண்டாம் என்று சொல்ல, தம்பி மன்னித்துக் கொள்ளடா இன்று இரண்டு கைகளையும் விரித்துக் கொண்டு பல்லவரையர் வந்ததாகவும், அருண்மொழி ஓடிப்போய் அவர் கால் தொட்டு வணங்கி என்னையும் மன்னித்து விடுங்கள் என்றும் சொன்னதாகவும், இந்த இளைஞன் சூடாக இருக்கிறான் என்று ஈராயிரத்துப் பல்லவரையர் சபையோரிடம் சொல்லி சந்தோஷமடைந்ததாகவும் ஒரு கதை உண்டு.

அவர் நான்காவது வருணத்தர் என்பதால் அந்தணர்களை அதிகம் மதிப்பதில்லை. கோயில் தாண்டி வேறு எந்த வேலைக்கும் நீங்கள் லாயக்கில்லை. எனவே வேறு தேசத்திற்குப் போய்க் கொள்ளலாம். அதற்கு வசதிகள் செய்து கொடுக்கப்படும். எங்கள் தேசத்துக் கோயில்களை உங்களால் பராமரிக்க முடியவில்லையெனில் நாங்களே பராமரித்துக் கொள்வோம் என்று சொல்ல, சில அந்தணர்கள் மட்டும் அங்குள்ள சக்தி கோயில்களிலும், சுப்ர மணியர் கோயில்களிலும் தங்கினார்கள். அப்படித் தங்கினவர்களை அவர்கள் மிக மரியாதையாக நடத்தினார்கள். நாக வழிபாடு செய்பவர்களுக்கு அந்தணர்களுடைய ஆச்சாரம் தேவையில்லை என்ற கருத்தும் அந்தப் பகுதியில் நிலவி வந்தது. ஆனால் சிவ வழிபாட்டைவிட, விஷ்ணு வழிபாட்டைவிட, நாக வழிபாடு அங்கு பலமாயிற்று. வீதிக்கு வீதி, கிராமத்துக்கு கிராமம் நாகர் சிலைகள் வைத்து வழிப்பட்டனர். புற்றுகள் வளர்க்கப்பட்டன. அதுமட்டுமில்லாது பெண் தெய்வங்களைக் கொண்டாடுவதையே அந்தப் பகுதியினர் விரும்பிச் செய்து வந்தார்கள்.''

ஈராயிரம் பல்லவரையர் கண்டிக்கிறார் என்பதால் நிச்சயம் விம லாதித்தன் பின் வாங்கியிருப்பான். ஏன் பயந்து நடுங்கியிருப்பான்.

ஈராயிரம் பல்லவரையர் விமலாதித்னுக்கும் குந்தவைக்கும் உள்ள பிணக்கைக்கூட சரி செய்திருக்கலாமே என்று அருண்மொழிக்குத் தோன்றியது.

''இப்போது நிலைமை என்ன.''

இராஜேந்திரர் சக்ரவர்த்தியை விசாரித்தார்.''

''மேலைச்சாளுக்கியத்தினர் தொடர்ந்து பல்வேறு விதமான தொந்தரவுகளைக் கீழைச் சாளுக்கியத்தினருக்குக் கொடுத்திருக் கிறார்கள். கீழைச் சாளுக்கிய வீரர்களோடு பேசுகிறார்கள். மேலைச்சாளுக்கியத்திலிருந்து நெல் வண்டிகள் கீழைச்சாளுக்கியம் போய் அங்கே நிறுத்தப்பட்டு விடுமாம். அதிலுள்ள வீரர்கள் இறங்கி மேலைச்சாளுக்கியம் போய் விடுவார்களாம்.

இந்த நெல்லை கீழைச்சாளுக்கியன் எடுத்துக்கொண்டு உபயோகப்படுத்த வேண்டுமென்று விரும்புகிறார்களாம். அப்படி உபயோகப்படுத்தினால் மறுபடியும் வந்து பேசுகிறார்களாம். குடிக்க நீர் கொடுங்கள். மோர் கொடுங்கள் என்று கேட்டு அவர்களோடு சல்லாபிக்கிறார்களாம். நீங்களும் நானும் பங்காளிகள். நமக்கு நடுவே சோழதேசம் வந்துவிட்டதே என்று நெஞ்சில் அடித்துக் கொண்டு புலம்புகிறார்களாம். நான் பேசுவது உங்களுக்குப் புரிகிறது. நீங்கள் பேசுவது எனக்குப் புரிகிறது. ஆனால் சோழன் பேசுவது புரிகிறதா என்று கேட்கிறார்களாம். அந்த நாகரிகம் ஒரு நாகரிகமா என்று கேலி செய்கிறார்களாம்.

விமலாதித்தன் படையால் நமக்குக் குழப்பம் வரவும் வாய்ப் புள்ளது. அவர்கள் பின்னோக்கி ஓடி வந்து நம் படையோடு கலப் பார்கள். நம் படைக்கு வைத்திருந்த உணவுப் பொருட்களையும், மருந்து வகைகளையும் அவர்கள் உபயோகிப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று பரபரப்பார்கள். யானைகளின் பின் பக்கமுள்ள கயிறுகளில் தொற்றி ஏறி அம்பாரியைப் பிடித்துக்கொண்டு வருகிறேன் என்பார்கள். தேர்களில் ஒண்டிக் கொள்வார்கள். நடக்க சோம்பல் படுவார்கள். மிக முக்கியமான விஷயம், விமலாதித் தனிடம் குதிரைகள் குறைவு. காலாட்படையே அதிகம். பிரம்பு போன்ற நீண்ட மெல்லிய வாளை வைத்துக் கொண்டு அதிகம் அலங்காரம் காட்டுவார்கள்.''

இராஜேந்திரர் நிதானமாகக் கவலையோடு பேசினார்.

''அதையும் விடப் பெரிய பிரச்சனை ஒன்று உண்டு இளவரசே. கொள்ளையடிப்பதற்கு முன்னால் போவார்கள். பெண்டுகளை பலாத்காரப் படுத்துவார்கள். வெறும் கட்டெறும்பு கூட்டமாக நடந்து கொள்வார்கள். நம்முடைய படைவீரர்கள் பொன்னோ, பொருளோ பொதுவாகக் கொண்டு வந்து கொட்டுவது போல்

இல்லாமல் தாங்களே ஒதுக்கிக்கொள்ள ஆசைப்படுவார்கள். இடுப்பில் கட்டிக் கொண்டு அலைவார்கள் அல்லது அவர்கள் ஓட்டிவந்த மாட்டு வண்டியின் அடியிலே கட்டித் தொங்கவிட்டு விடுவார்கள். இதை நம் வீரர்கள் பார்த்துவிட்டால் சண்டைதான். இது அரசருடைய பங்கு என்று ஒரு முறை சொன்னபோது, கொள்ளைதானே அடிக்கிறோம். இதில் பங்கு என்ன என்று ஒரு கீழைச்சாளுக்கிய வீரன் பேசி சவுக்கடிபட்டான். அவனை சவுக்கால் அடித்தது விமலாதித்தனுக்கு வருத்தம். அதனால், விமலாதித்தன் படைகளைத் திரட்டிக் கொண்டு வருவது தேவையற்றது என்பது என் கருத்து.

மறைந்த இளவரசர் ஆதித்த கரிகாலர் பாண்டிய தேசத்தை வெறியோடு தாக்கியபோது விமலாத்தித்தன் சிறுபிள்ளை. வெறுமே குதிரையில் பின்னால் போய்விட்டு 'வீரபாண்டியன் தலை கொண்ட' என்று இன்னும் கல்வெட்டு பொறித்துக் கொள்கிறான்.

சோழதேசத்திலேயே மூன்று, நான்கு கல்வெட்டுகள் 'வீரபாண்டியன் தலை கொண்ட' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. கீழைச்சாளுக்கியத்தில் இன்னும் என்னவெல்லாம் கல்வெட்டு களாய்ப் பொறித்துக் கொள்கிறானோ என்று தெரியவில்லை. அவனிடம் ஒரு அதிகப் பிரசங்கித்தனம் இருக்கிறது. அசட்டுத்தனம் இருக்கிறது.''

''போதும். இப்போது என் முன் பேசுகிற பேச்சே, நாளை விமலாதித்தன் முன்பு வரும். அது என் குழந்தையின் தலையில் போய் விழும். அவன் நமது மருமகன் என்பதை நினைவு கொள்ளுங்கள். அவனைப் புறக்கணித்தாலோ அல்லது தாக்கிப் பேசினாலோ குந்தவையின் தலையில்தான் போய் விழும் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.''

''ஆனால், அதற்காக எல்லாவற்றிற்கும் தலையாட்டிக் கொண்டா இருக்க வேண்டும்.''

இராஜேந்திரர் கோபமாக சக்ரவர்த்தியின் எதிர்ப்புக்குப் பதில் சொன்னார்.

''இல்லை. ஸ்நேகமாக, தெளிவாக அவனுக்கு அவனுடைய இருப்பிடத்தை நாம் காட்ட வேண்டியது முக்கியம். ஏனெனில் குந்தவையைவிட சோழதேசம் உயர்வானது என்பதை அறிவேன். அதே நேரம் முடிந்தவரையில் ஒரு தகப்பனாய் என் மகளுக்கு எந்தத் துன்பமும் நேராமல் காப்பாற்றவும் விரும்புகின்றேன். ஆனால்,

இராஜேந்திரா இப்போது பிரச்சினை விமலாதித்தன் அல்ல. மேலைச்சாளுக்கியம். மேலைச்சாளுக்கியம் குறித்து நமது நடவடிக்கைகள். போர் என்று முழங்கப் போகிறோமா அல்லது இன்னும் பொறுத்திருக்கப் போகிறோமா என்பதுதான் கேள்விகள்.''

''சக்ரவர்த்தியாரே போர் பற்றி முடிவு செய்ய வேண்டியது நீங்கள். நாங்கள் எதற்குப் பேச வேண்டும்.''

''தவறு இராஜேந்திரா. நீ இளவரசன். போர் பற்றிய முடிவுகளை நீயும் எடுக்க வேண்டும். உனக்கும் அதில் பெரும் பங்கு இருக்கிறது.''

''சக்ரவர்த்தியாரே போர் போன்ற முடிவுகளைக் கூட்டாக எடுக்காமல் ஒரே ஒருவர் முடிவு செய்வது நல்லது. எத்தனை பேர் வேண்டுமானாலும் பேசலாம். அபிப்ராயங்கள் சொல்லலாம். ஆனால், வாள் உருவி நகர்கிறோமா என்பதை ஒரேயொருவர்தான் முடிவு செய்ய வேண்டும். அது அந்த தேசத்தின் சக்ரவர்த்தியாக இருத்தல்தான் உத்தமம். கோயில் என்ற விஷயம் பற்றி எதிர்ப்பாக நான் அபிப்ராயம் தெரிவிக்க, அந்த இடத்திலே பல சிக்கல்கள் வந்து விட்டன. எனவே, போர் பற்றிய முடிவை நீங்களே எடுங்கள்.''

சக்ரவர்த்தி மெல்லச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் ஒரு கேலி இருந்தது. அது எது குறித்த கேலி என்பது அருண்மொழிக்கும், இளவரசருக்கும் புரிந்தது. இளவரசர் ஒரு தரம் நாணினார். முகத்தில் லேசாக கோபம் மின்னியது.

''சக்ரவர்த்தியார் அனுமதித்தால், உங்களை அமைதியாக ஒரு இருக்கையில் உட்கார வைத்துவிட்டு, போர் பற்றிய எல்லாவித முடிவுகளும் நானே எடுத்து வெற்றி வாகை சூடி வந்து உங்கள் பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.'' என்று உரக்கச் சொன்னார்.

அவர் பேசியது தொலைதூரத்திலுள்ள சேவகனுக்கும் கேட்டிருக்கக்கூடும். ஆனால், எந்த விதமான முகபாவங்களும் இல்லாமல் சக்ரவர்த்தி இராஜேந்திரரையே பார்த்துக் கொண்டிருந்தார்.

''மேலைச்சாளுக்கியத்தை வெல்வது எளிது தந்தையே. இந்த இருபத்தைந்து வருடங்களாக விதம்விதமாக சத்யாசிரியன் நமக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கிறான். கடந்த நூறு வருடங்களாக மேலைச்சாளுக்கியத்தால் சோழ தேசத்து வீரர்கள் பலபேர் மாண்டிருக்கிறார்கள். சோழ தேசத்தில் பல ஊர்கள் தீக்கிரையாக்கப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் நம்முடைய

போர் வீரர்களுக்கு எடுத்துச் சொன்னால், போர்ப்பயிற்சியின் போதே இவைகளை விளக்கிச் சொன்னால், மேலைச் சாளுக்கியத்திற்குக் கடும் சேதம் விளைவிப்பார்கள். போர் என்பது தந்திரங்களால் பின்னப்பட்டதல்ல. தந்திரம் சில சமயம் உதவும் என்றாலும், வாள் உருவி, நெஞ்சு நிமிர்த்தி, அன்னியன் மண்ணிலே கால் வைத்து, பூத கணங்களைப்போல, பேயைப் போல முன்னேறி, எதிர்ப்பட்டோர் எல்லோரையும் சாய்த்து, அடித்து நொறுக்கி பழிக்குப்பழி, ரத்தத்திற்கு ரத்தம், கண்ணுக்குக் கண், கிராமத்திற்கு கிராமம் என்று தாக்கப்பட்டால் வேறு எந்தக் கணக்கும் இந்த வேகத்திற்கு முன்பு நிற்காது. இதுதான் என் அடிப்படையான போர் தந்திரம். இதுதான் வெற்றியைத் தருகின்ற மந்திரம்.

மருமகனை நம்புவதைவிட, மாற்றரசர் துணையை நம்புவதை விட, நம்முடைய சோழ வீரர்கள் கோபத்தை, ரௌத்திரத்தை நம்புவதுதான் நல்லது. மற்றவர்கள் எல்லோரும் பெரும் கூட்டமாக இருப்பார்களே தவிர, செயலாற்ற சோழவீரர்களிடம் இருக்கின்ற திறமை வேறு எவரிடமும் இல்லை. இன்னும் குறிப்பாகச் சொல்லப் போனால்.'' இராஜேந்திரர் சொல்ல ஆரம்பித்து விட்டு, சொல்ல லாமா என்று தயங்கினார்.

சொல்ல வேண்டாம் என்பதுபோல மிக மெல்லியதாக அருண் மொழி தலையசைத்தான்.

சோழ இளவரசர் இராஜேந்திரர் என்ன சொல்வார் என்று அவனுக்குத் தெரிந்தே இருந்தது. இருவரையும் உற்றுக் கவனித்து, கைகளைப் பின்பக்கம் கட்டி சற்று விலகிப் போய் தொலைவி லிருந்து இருவரையும் பார்த்து, ''சொல் இராஜேந்திரா.. சொல்ல வேண்டியதைச் சொல்.'' என்று சக்ரவர்த்தி உத்தரவிட்டார்.

''உங்களுடைய படைகளைவிட, நான் திருவொற்றியூரில் தனியே பயிற்றுவித்திருக்கின்ற படை இன்னும் உக்கிரமானது. வலிவு மிகுந்தது. செயல்திறன் அதிகம் கொண்டது. தாங்கள் கட்டளையிட்டால் என் படைவீரர்கள் அனைவரும் குதிரை ஏறி மேலைச்சாளுக்கியம் வரை பயணப்பட்டு, புயல் வேகத்தில் உள்ளே புகுந்து சூறையாடத் தயாராவார்கள்.''

''எத்தனை குதிரைவீரர்கள் இராஜேந்திரா.''

உடனடியாக அந்தச் செயலுக்கு ஒப்புதல் தந்தது போல சக்ரவர்த்தியார் பேசினார்.

''எழுபதாயிரம் குதிரை வீரர்கள்.''

''மேலைச்சாளுக்கியத்தை அழிக்க இவர்கள் போதுமென்று நினைக்கிறாயா.''

''அதிகம் என்று நினைக்கிறேன்.''

''எழுபதாயிரம் குதிரை வீரர்களுக்கு உதவிக்குப் படைகள் வேண்டாமா.''

''அருகேயிருக்கிற கங்க தேசத்து கிராமங்கள் முழுவதும், நகரங்கள் முழுவதும் என் படைவீரர்களுக்கு உதவி செய்யும்.''

''இல்லை. உதவி செய்தாக வேண்டும்.

''ஆமாம். உதவி செய்தாக வேண்டும். சிறிதளவு சோறு. நிறைய மாமிசம் என்பதே என் குதிரை வீரர்களுக்கு அடிப்படையான உணவு. அங்கேயே ஆடு அறுத்து, இறைச்சியை வேக வைத்தோ, சுட்டுப் பொசுக்கியோ உண்பது என் வீரர்களுக்குப் பழக்கம். வண்ணமாக உட்கார்ந்து இலை போட்டுப் பரிமாறி சாப்பிட வேண்டிய உணவு களை அவர்கள் எப்போதும் எதிர்பார்ப்பதில்லை. வரவர அம்மாதிரி யான உணவுகள் அவர்களுக்குப் பிடிக்காமலும் போய்விட்டது. ஆட்டின் தொடைக்கறியோ, நெஞ்சுக்கறியோ எடுத்துக்கொண்டு தனியே போய் இரண்டு கைகளாலும் கடித்துத் தின்கிறார்கள்''

''பார்த்திருக்கிறேன்.''

சக்ரவர்த்தி பதில் சொன்னார்.

''ஆமாம் சக்ரவர்த்தி. அது நாகரிகக் குறைவாகத் தெரியும். ஆனால், போர் முனையில் எந்தவிதமான சுகபோகங்களையும் எதிர்பார்க்க முடியாது என்பதால், போர் இல்லாத காலங்களிலும் அவர்கள் போர் முனையில் இருப்பதைப் போலவே கடுப்பான தன்மையில் இருப்பார்கள்.''

''அதையும் கவனித்திருக்கிறேன். ஆனாலும், எழுபதாயிரம் படைவீரர்கள் என்பது மிகக் குறைந்த தொகை.

''ஏன் சக்ரவர்த்தியாரே திறனுள்ள படைதானே முக்கியம்.''

''இல்லை. எழுபதாயிரம் படைவீரர்களை, சோழ தேசத்தில் தங்க வைத்துக் கொண்டு அன்னியர்கள் படையெடுத்தால் நாம் வேகமாகத் திறனாகத் தாக்க முடியும். வேறு தேசத்திற்குப் படை யெடுத்துப் போகும் போது, இந்த எழுபதாயிரம் படைவீரர்களை நான் முப்பதாயிரம் என்றுதான் கொள்வேன்.''

''என் அப்படி.

இராஜேந்திரர் வேகமாகக் கேட்டார்.

''பத்து நாள் பயணத்திற்குப் பிறகு, அதில் முழுத் தகுதியும் பெற்ற வீர்கள் வெகு நிச்சயம் குறைந்து போவார்கள். ஒருவேளை வழியில் கடும்மழை அல்லது புயற்காற்று இருப்பின் எழுபதாயிரம் படை வீரர்கள் என்பதை நான் இருபதாயிரம் என்று கொள்வேன். ஒருவேளை வழியில் ஏதேனும் அசம்பாவிதம் ஏற்பட்டு, உறக்கத் தின் போது சேர வீரர்கள் தாக்குதல் நிகழ்த்தினால் எழுபதாயிரம் படைவீரர்கள் என்பதை நான் பத்தாயிரம் என்று கொள்வேன். ஒருவேளை ஒரு மடுவிலோ அல்லது ஆற்றங்கரையிலோ அல்லது ஏரியிலோ குளிக்க நேர்ந்து, அந்த ஏரியில் விஷம் கலக்கப் பட்டாலோ, அப்பொழுது சூழ்ந்து தாக்கப் பட்டாலோ எழுப தாயிரம் படைவீரர்கள் என்பதை நான் ஐயாயிரம் என்று கொள்வேன். ஐயாயிரம் படை வீரர்களை வைத்துக் கொண்டு மூன்று லட்சம், நான்கு லட்சம் படை வீரர்கள் கொண்ட மேலைச்சாளுக்கியத்தை ஒருக்காலும் ஜெயித்துவிட முடியாது. அப்படி ஒரு படையெடுப்பு நடப்பின் அது சோழ சரித்திரத்தில் ஒரு கருப்பு நாளாக அமையும்.

''என்னுடைய படைகளை இழித்துப் பேசுவதென்றால் சக்ரவர்த் தியாருக்கு வெல்லக் கட்டியை நசுக்கித் தின்பதுபோல்.

''என் மகனுக்குப் பிடித்தது என்பதால், எல்லாவற்றையும் பாராட்டிக் கொண்டிருப்பது விவேகம் அல்ல.

சக்ரவர்த்தி சற்றும் நிதானம் குறையாமல் இனிமையாகப் பேசினார்.

அருண்மொழி வியப்போடு அவரையே பார்த்துக் கொண் டிருந்தான்.

அரச குடும்பத்தில் பிறந்த எவராயினும் ரஜோகுணம் மிக்க வராகத்தான் இருப்பார்கள். ரஜோகுணம் என்பது உடனடியாக போகத்தையும், உடனடியாக அன்பையும் காட்டுகின்ற குணம். ஆனால், சக்ரவர்த்தி இந்த ரஜோகுணம் இல்லாது. சத்வ குணத்தோடு சாத்வீகமான புத்தியோடு எப்பொழுதும் இருக்கிறார் என்பது தெரிய, அருண்மொழி வியப்படைந்தான். அவ்வப்போது தனக்கும் பொங்கி விடுகிறது. தானும் கோபப்படுகிறோம். மிக முக்கியமான நேரங்களில் முடிவெடுக்கும் தருணங்களில் கூட உள்ளுக்குள் ஒரு படபடப்பு, உணர்ச்சி வசப்படல் ஏற்படத்தான் செய்கிறது.

இந்த முறையை மிகத்தெளிவாக தகப்பனார் கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் எடுத்துச் சொல்லியும் இதைக் கைக்கொள்ள முடியவில்லை. கடிகையில் இந்த வித்தையைச் சொல்லிக் கொடுத்தும் சறுக்கி விடுகிறது. ஆனால், எந்தச் சறுக்கலும் எப்போதும் இல்லாமல் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் ஒரு நடுநிலையில் இருப்பது கண்டு ஆச்சரியமடைந்தான்.

''அப்படியானால் உங்களுடைய படை மேலைச் சாளுக்கியப் போருக்கு ஆயத்தமாய் இருப்பதாக நினைக்கிறீர்களா.''

''சோழதேசத்தில் இருக்கிற அத்தனை படையும் என்னுடைய படைதான் இராஜேந்திரா. எனக்குக் கட்டுப்படுகின்ற படைதான். உனக்குக் கீழே இருக்கிற எழுபதாயிரம் படைகளும் நான் நில் என்றால் நிற்க வேண்டும். நட என்றால் நடக்க வேண்டும். எழுபதாயிரம் வீரர்கள் மட்டுமல்ல. அந்த எழுபதாயிரம் வீரர்களின் சேனாதிபதியான நீயும் நில் என்றால் நிற்க வேண்டும். நட என்றால் நடக்க வேண்டும். மீறி ஒரு வார்த்தை பேசினாலும் போர் முனையில் நான் மிக வேகமானவனாக, மிகக் கோபக்காரனாக, உடனடியாக தண்டனை அளிக்கின்ற நீதிபதியாக இருப்பேன். என்னை மீறி ஒரு துரும்பும் இங்கு அசைய விடமாட்டேன். அசைந்தவரை அலற வைப்பேன்.''

''சக்ரவர்த்தியாரே, நான் உங்களைக் குறையாகச் சொல்ல வில்லை.

''சொல்லிப் பார். என்னைக் குறை சொல்வதற்கு முன்பு உன்னுடைய யோக்கியதை என்ன என்பதை எண்ணிப்பார். வாய் இருக்கிறதென்று எவர் வேண்டுமானாலும் குறை சொல்லிவிடலாம் இராஜேந்திரா. எழுபதாயிரம் படையை எடுத்துக்கொண்டு மின்னலென மேலைச்சாளுக்கியத்தில் புகுவேன் என்று நீ சொல்வது முட்டாள்தனத்தின் உச்ச கட்டம். ஒரு நல்ல சேனாபதி இப்படி முரட்டு முட்டாளாக இருக்கக்கூடாது. இருப்பின் அந்த தேசம் பாழ்படும். பத்துநாள் பயணத்தில் உன்னுடைய எழுபதாயிரம் சேனை வீரர்களுடைய வலிவு என்ன என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். கங்க தேசத்து கிராமங்களை நம்பி பயணப்படுவேன் என்று நீ சொல்வது இன்னொரு விதமான முட்டாள் எண்ணம்.

சோழர்கள் இல்லாத அன்னியர்கள் ஊடுருவியிருக்கிற பூமியில், எவரை நம்பி எவர் உணவு உண்பது. கங்க தேசம் நமது ஆட்சிக்கு உட்பட்ட பூமிதான். அங்கு சோழ அதிகாரிகள்தான் இருக்கிறார்கள்.

ஆனால், எல்லா கிராமங்களிலும் சோழ அதிகாரிகள் இருக்க மாட்டார்கள். கங்க தேசத்தில் நான் படையெடுத்த போது, அதனால் பாதிக்கப்பட்டவர்கள் வாய் நிறைய வாழ்த்துச் சொல்லி வரவேற்க மாட்டார்கள். இறந்து போன கணவனும், இறந்து போன மகனும் ஒரு பெண்மணிக்கு ஞாபகம் வந்ததென்றால், அங்கு உபசரிப்பு ஒன்றும் உவப்பாக இருக்காது.

நடுநாடு தாண்டி, கங்க தேசம் தாண்டி, இரட்டை பாடி வழியாக அல்லது குடகு வழியாக மேலைச் சாளுக்கியம் போக வேண்டு மென்றால், பதினைந்து நாள் பயணம். அப்போதுதான் ஒரு படையின் பயணம் வலுவாக, நிதானமாக முன்னேற முடியும். அப்படைக்கு முழுக்க முழுக்க நம்முடைய வீரர்கள்தான் உணவு கொடுக்க வேண்டும். உணவை அங்கிருந்து பறித்துக் கொள்ளலாம். சமைப்பது நம்மவர்களாக இருக்க வேண்டும். பரிமாறுவது நம்மவர் களாக இருக்க வேண்டும். கங்க தேசத்து வீரர்களையோ, பெண் களையோ நம்பி ஒருக்காலும் நம்முடைய வீரர்கள் இருந்துவிடக் கூடாது. அப்படி தங்கும் எழுபதாயிரம் வீரர்களுக்கு ஒரு கிராமம் சரியாக இருக்காது. வெட்டவெளி, புல்வெளி, மலைச்சரிவு, ஆற்றங்கரை என்பதுதான் சரியாக இருக்கும்.

இராஜேந்திரா, மேலைச்சாளுக்கியத்திற்குப் படையெடுப்பதற் குண்டான காரணங்கள் மிகத் தெளிவாக இல்லாமல் நாம் படை யெடுத்து விடக்கூடாது. அப்படி நல்ல காரணங்கள் இல்லை யெனில் நாம் உருவாக்க வேண்டும். கங்க தேசத்து வீரர்கள் என்ன செய்தாலும், எவ்வளவு நெருங்கி வந்தாலும் நமக்கு அவர்களைப் பிடிப்பதில்லை. சேர தேசத்துப் பெண்களை, பாண்டியர்கள் சிலசமயம் மணந்திருக்கிறார்கள். ஆனால், சோழதேசத்தில் உள்ள வர்களுக்கு சேரதேசத்துப் பெண்களின் அழகு கூடப் பிடிப்ப தில்லை. கீழைச்சாளுக்கியப் பெண்களின் மீது மிகுந்த பிரேமை யுள்ள சோழ வீரர்கள். பாண்டியப் பெண்கள் மீது பாசமுள்ள சோழ வீரர்கள், சேர தேசத்துப் பெண்களை விரும்புவதேயில்லை. சோழதேசத்து அந்தணர்கள் கூட, சேரதேசத்து அந்தணர்களோடு எந்த விதமான சம்பாஷணையும் நடத்துவதேயில்லை.

அந்த சேரதேசத்து வீரர்கள் கங்க தேசத்திலும், இரட்டைபாடி யிலும், மேலைச்சாளுக்கியத்திலும் பரவியிருக்கிறார்கள். குடகு தேசத்தின் வழியாகத்தான் அவர்கள் மேலைச்சாளுக்கியம் நகர்கிறார்கள். சேர தேசம் முழுவதும் நாம் தாக்கி கையகப்படுத்தி

யிருப்பதால், அந்த தேசத்திலுள்ள அத்தனை விதமான போர் வீரர்களும் வெளியேதான் நடமாடுகிறார்கள். அவர்கள் வெளியே நடமாடினாலும் கங்கதேச வாசிகளாகவோ, கொங்கு தேச வாசிகளாகவோ மாறிவிடமாட்டார்கள். எங்கு போயினும், சேர தேசத்தவர் சேர தேசத்தவராகவே இருப்பர். அதேநேரம் எங்கு தங்குகிறார்களோ அந்த தேசத்தின் பயன்களை முழுவிதமாக அனுபவிப்பார்கள்.

சோழர்கள் மீது கடும் காழ்ப்பு கொண்ட அந்த வீரர்களைத் தாண்டித்தான் நீ மேலைச்சாளுக்கியம் போக வேண்டும். எழுப தாயிரம் வீரர்களும் ஒரு சேதமுமின்றி மேலைச்சாளுக்கியத்தின் நதிக்கரையில் போய் இறங்குவார்கள் என்று ஒருக்காலும் எதிர் பார்க்காதே. இது எளிதான போரல்ல. மிகக் கடுமையான எதிர்ப்பு இருக்கும். ஏனெனில் நாம்தான் போர் தேடிப் போகிறோம். இதனால் சோதனைகள் பலதும் நமக்கு ஏற்படும். நம்முடைய மக்கள் எத்தனை பேர் போருக்குத் தயாராக இருக்கிறார்கள் என்பதும் ஒரு கேள்விக்குறி.

கிராமங்களில் ஆட்டம்பாட்டம் அதிகமாகிவிட்டது. நகரங்களில் உள்ள எல்லாவிதமான சௌகரியங்களும் கிராம மக்களுக்கு வேண்டுமென விரும்பத் தொடங்கி விட்டார்கள். பாதை போடச் சொல்லி அதிகாரிகளை, பல்வேறு கூக்குரல்கள் கேட்ட வண்ணமே யிருக்கின்றன. பாதைகள் போடப்பட்டாலும் அவர்களுக்கு மேலும் வசதிகள் வேண்டுமென்று கேட்கிறார்கள். குளம் வெட்ட வேண்டும் என்கிறார்கள். ஆற்றிலிருந்து மேடான இடமாக இருப்பினும் கால்வாய் திருப்பச் சொல்கிறார்கள். பதினோரு கிராமங்களுக்கு ஒற்றையடிப் பாதைதான் வழியாக இருந்தது. இப்பொழுது மாட்டு வண்டிகள் அங்கங்கே இயங்கத் தொடங்கி விட்டன. எங்கள் ஊருக்கு மாட்டு வண்டி வருவதற்கு வழி செய்யுங்கள் என்கிற கோரிக்கைகள் வந்த வண்ணம் இருக்கின்றன.

தினசரி வாழ்க்கையே சொகுசாகிப் போய்விட்ட நிலையில், யுத்தம் என்பது எப்படியிருக்கும். எப்படி ஆர்வம் இருக்கும் என்ன முனைப்பு இருக்கும். சோழநாடு சுகவாசியான நாடாக மாறி விட்டது. மேலைச்சாளுக்கியத்தை நோக்கி நமது படைகள் நகர்வது பற்றி எனக்கு பலத்த சந்தேகம் இருக்கிறது.''

''அதனால்தான் சொல்கிறேன். எதற்கும் தயாரான என் படையை வைத்துக்கொண்டு... '' என்று இராஜேந்திரர் ஆரம்பிக்க, சக்ரவர்த்தி வேகமாகத் திரும்பினார்.

''இன்னொரு முறை என்னுடைய படை, உன்னுடைய படை என்று பேசினால் நடவடிக்கைகள் மிகக் கடுமையாக இருக்கும். உன்னை இளவரசர் என்று நான் அங்கீகரித்தால் போதாது. மக்கள் அங்கீகரிக்க வேண்டும். மக்கள் அங்கீகரிக்க வேண்டுமென்றால் இன்னும் மரியாதையாகவும், மிருதுவாகவும், முன்யோசனையாகவும் நடந்துகொள்ள வேண்டும். உரக்க நெஞ்சில் தட்டிக் கொண்டு பேசுவது எந்த ஞானமும் இல்லை. அறிவில்லாதவன்தான் அப்படிப் பேசுவான்.''

சக்ரவர்த்தியின் சூடான வார்த்தைகள் இளவரசர் இராஜேந்திரரைப் பதட்டமடைய வைத்தன.

அருண்மொழி முன்னேறி இளவரசர் இராஜேந்திரரின் தோளில் கை வைத்து. ''அமைதி. சக்ரவர்த்தி சொல்வதில் அர்த்தமிருக் கிறது.'' என்று சொல்ல, அந்தக் கைகளை இளவரசர் இராஜேந்திரர் பளிச்சென்று தட்டிவிட்டார்.

''என்னுடைய படை என்று சொல்வது உங்களோடு அன்னியப் படுத்துவதற்கல்ல. சோழதேசத்தின் மக்கள் எத்தனை சுகவாசிகளான மாறினாலும், ஒரு போர்ப்படை மிகத்தயாரான நிலையில் இருக்கிறது என்று சொல்வதற்கு விரும்புகிறேனே தவிர, உங்களை எதிர்த்தோ, உங்களை அவமானப்படுத்தியோ, உங்களுக்கு அன்னிய மாகவோ நான் ஒரு செயல்கூட செய்யவில்லை. மறுபடி மறுபடி நீங்களாக என்னைப் பிரிக்காதீர்கள்.''

''அப்படியா... உன்னுடைய படை என்ன செய்து கிழித்துவிடும் என்று சொல்கிறாய். ஓடிப்போய் மேலைச்சாளுக்கியத்தைக் கைப்பற்றிக் கொண்டு வந்துவிடுமா? ஒரு படையின் உடல் வலிவு பற்றியும், செயல்திறன் பற்றியும் தெரியாமல் வெறும் காட்டுக் கூச்சலாக உத்தரவிட்டால், அந்தப் படை சாதனை செய்துவிடும் என்று நினைக்கிறாயா. பதினைந்து நாட்கள் பயணமில்லாமல் மேலைச்சாளுக்கியத்தைப் போய் அடைய முடியுமா? அடைந்த பிறகு யுத்தம் செய்ய முடியுமா என்று ஒரு இளவரசன் யோசிக்க வேண்டாமா. என்ன முட்டாள்தனம் இது.''

மறுபடியும் முகத்தில் குத்தியதுபோல் பேச்சு வந்து விழுந்தது.

''சக்ரவர்த்தி அவர்களே, மேலைச்சாளுக்கியம் வரை இளவரசர் போய் தாக்குவாரா என்பது பற்றிய கேள்விகள் இருப்பினும், ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகின்றேன். இளவரசர் இராஜேந்திரர் மிகச் சிறப்பான ஒரு தனிப்படையைத் தன் வசம் வைத்திருக்கிறார்.''

''அது ஆபத்தானது என்று உனக்குப் புரியவில்லையா.'' என்று சக்ரவர்த்தி உடனடியாக அருண்மொழியின் பேச்சுக்குப் பதில் சொன்னார்.''

''அது நம் படையினுள் பிரிவினைகள் ஏற்படுத்தும் என்பது தெரியவில்லையா. என்னிடமே திரும்பத் திரும்ப இது சொல்லப் படுகிற அலட்டலைப் பார்க்கும் போது, மற்றவர்களிடம் இது எவ்வளவு வேகமாகச் சொல்லப்படும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. எனக்கு இதில் விருப்பமில்லை. அந்தப் படையை நான் கலைக்க உத்தரவிடுவேன்.''

''தந்தையே ஏன் என்னைத் தவறாகப் புரிந்து கொள்கிறீர்கள். நான் உங்களுக்கெதிராக ஒருக்காலும் எதுவும் நினைக்கவேயில்லை. இதைச் சொல்லத்தானா இந்த நேரம் என்னை நோக்கி வந்தீர்கள்.''

இராஜேந்திரர் குரலில் வேதனை இருந்தது.

''ஆமாம். உன்னுடைய படைகள் என்று நீ உரிமையோடு பேசுவதால், உன்னுடைய படைகள் உரிமை எடுத்துக்கொண்டு சோழ தேசத்துப் படைகளோடு கலக்கமாலோ அல்லது எதிராகவோ செயல்படத்துவங்கி விடலாம். இது அங்கங்கே தலை காட்டத் துவங்கியிருக்கிறது. இதை முதலில் நிறுத்தவே உன்னை நோக்கி வந்தேன்.

''உதாரணம் சொல்லுங்கள்.

''மூத்த படைத்தளபதிகளை இளையபடை சேனாபதிகள் மதிப்ப தில்லை. சோழப்படையில் இருக்கிற எல்லா இளைஞர்களும் இராஜேந்திரனோடு போய் சேர்ந்து விடுவதுதான் வாழ்க்கையில் பிரகாசமான விஷயம் என்று நினைக்கிறார்கள். கடந்த மாதம் மட்டும் உன்னுடைய படையில் ஆயிரத்து முந்நூற்று அறுபத்தாறு பேர் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்கள் அத்தனை பேரும் திருவொற்றியூருக்குத் தனிப்பயிற்சிக்குப் போயிருக்கிறார்கள். இப்படித் தஞ்சையிலிருந்து இளைஞர்கள் போயிருப்பது, தஞ்சை இளைஞர்களிடையே ஒரு குழப்பத்தை உண்டு பண்ணியிருக்கிறது.

ஏன் தஞ்சையை விட்டுப் போகிறீர்கள் என்பதற்கு, தஞ்சையில் என்ன இருக்கிறது. கல் உடைக்கிற பணியும், தேவரடியார்களுக்கு முன்னே சம்மணமிட்டு ஆட்டம் பார்க்கிற பணியும்தானே இருக்கிறது. நல்ல யுத்தம் பார்க்க வேண்டுமெனில், நல்ல போர் வீரனாக மாறவேண்டுமெனில், திருவொற்றியூருக்குப் போக வேண்டியதுதானே சிறந்தது என்று சொல்லப்படுகிறது. அது மட்டுமல்ல இராஜேந்திரா, இங்கிருந்தால் மண்மூட்டை சுமக்கவும், மாடுகளை விரட்டவும், யானைகள் கல் இழுத்து வரும்போது அவைகளை நெறிப்படுத்தவும் வேலைகள் வந்துவிடும்.

எனவே, போர் வேலை வேண்டுமெனில் இங்கிருப்பது நல்லதல்ல என்று இளைஞர்கள் பேசுகிறார்கள். இளைஞர்கள் ஊர் விட்டுப் போவது குடும்பத்தில் குழப்பத்தை ஏற்படுத்துகிறது. கோயில் பணிமுக்கியமில்லை என்ற நினைப்பு இளைஞர்களுக்கு வந்துவிட்டது. இது முதியோர்களுக்கும் பரவினால் இந்தக் கோயில் பணி நடக்காது.

''உங்களுக்கு என்ன வேண்டும் தந்தையே.

குரலில் சற்று அலுப்பு இருப்பினும், கைகளைக் கட்டிக் கொண்டு சக்ரவர்த்தி முன்நின்று இராஜேந்திரர் கேள்வி கேட்டார்.

''இந்தக் கோயில் பணி முடிப்பதற்காகவே மேலைச்சாளுக் கியத்தை நாம் தாக்க வேண்டும். மேலைச் சாளுக்கியனை ஒரு இடத்தில் நிறுத்துவதற்கு மட்டுமல்ல. மறுபடியும் எந்தப் படை யெடுப்பும் ஏற்படுத்தாமல் கங்க தேசத்தையோ, இரட்டை பாடியையோ, தொந்தரவு செய்யாமல், மேலைச்சாளுக்கியத்தில் ஊடுருவாமல் இருப்பதற்கு மட்டும் நாம் அவனைத் தாக்கவில்லை. எனக்கொரு பெரும் ஆசை இருக்கிறது இராஜேந்திரா.

''என்ன அது சக்ரவர்த்தி.

''ஈசான சிவபண்டிதரோடு பேசிய பிறகு தோன்றிய ஆசை அது. மூன்று பனை உயரத்திற்கு தளம். அதற்குமேல் ஐந்துபனை உயரத்திற்கு விமானம். அடிப்பக்க அகலம் ஒன்றரை பனை. அந்த விமானம் முழுவதும் பொன் வேய்தல் வேண்டும். இந்தப் பிரமாண்டம் உனக்குப் புரிகிறதா.''

''புரிகிறது சக்ரவர்த்தி. பெரும்பரப்பில் பொன்வேய வேண்டு மென்று சொல்கிறீர்கள். முழுவதும் பொன்னா அல்லது..

''தாமிரத்தகட்டில் பொன் முலாம் பூசுதல்தான் என்னுடைய எண்ணம். மேலைச்சாளுக்கியத்தில் என்ன பொன் கிடைக்கிறது என்பதைப் பொறுத்தே இதுபற்றி நான் தொடர்ந்து பேசமுடியும்.''

''ஆக, உங்களுக்கு முக்கியமான குறிக்கோள் கோயில் கட்டுவது. அதற்குப் பொன் முலாம் பூசுவது. என்ன வேண்டும் என்று சிற்பியிடம் விசாரித்தீர்களா.''

''இல்லை. இதை முதன்முதலில் இராஜேந்திரா.. உன்னிடமும், அருண்மொழியிடமும் பேசுகிறேன். பஞ்சவன்மாதேவியிடம் கூட நான் பேசவில்லை. ஈசான சிவபாண்டிதருக்கும் அந்த ஒரு எண்ணம் இருந்ததாகப் பஞ்சவன்மாதேவி சொல்லியிருக்கிறாள். ஆனால் ஈசான சிவபண்டிதர் அந்த மேருவைப்பற்றி சொல்லும் போதே எனக்குள் இந்தப் பக்கம் அப்படியொரு மேருவை எழுப்ப வேண்டும் என்ற எண்ணம் வந்துவிட்டது. அந்த மேரு வெகுசில வினாடிகளே தகதகத்து தெரியுமாம். ஆனால், இங்கே இந்தப் பொன் தகடு வெய்யில்பட்டு, மழைபட்டு, இரவின் நிலவொளிபட்டு, நட்சத்திர ஒளிபட்டு, தீப்பந்த ஒளிபட்டு நிச்சயம் தகதகத்து எந்நேரமும் மின்னும்.

''சக்ரவர்த்தியாரே, இதைச் சொல்லும்போது தங்கள் கண்கள் பிரகாசிப்பதை என்னால் கவனிக்க முடிகிறது. உங்கள் குதூகலத்தை என்னால் உணரமுடிகிறது. உங்களுடைய சந்தோஷம்தான் என்னுடைய சந்தோஷம். உங்களுடைய இந்த மிகப்பெரிய ஆவல் வெகு நிச்சயம் பூர்த்தி செய்யப்படும். இதற்காக மேலைச்சாளுக்கியம் என்ன... பரதகண்டம் முழுமையும் அலையலாம். மறுபடி சொல்கிறேன். இந்தப் படையெடுப்பை என்னிடம் விடுங்கள்.''

''உன்னை அனுப்பலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. ஆனால், இப்போது நீ பேசுவதைப்பார்த்த போது, எனக்கு அந்த எண்ணம் வரவில்லை. வெகு நிச்சயம் நானும் மேலைச்சாளுக்கியம் நோக்கி நகருவேன். அப்படி நகருகிறபோது உன்னைப் படையெடுப்புக்குத் தலைமை தாங்கச் செய்ய முடியாது. அது குழப்பம் விளைவிக்கும் எனவே, இந்தப் படையெடுப்பை முற்றிலும் நானே தலைமை ஏற்று நடத்துவேன்.''

''இரண்டாகப் பிரிந்து தாக்கலாமா.''

''இல்லை. அதற்குத் தேவை இருக்காது. கங்கதேசம் வரையிலும் நாம் எந்த எதிர்ப்புமின்றி பயணப்படுவோம். கங்கதேசம் தாண்டி மேலைச் சாளுக்கியத்திற்கு உள்ளே போக எதிர்ப்புகள் ஏற்படும்.

துங்கபத்ரா நதிக்கரையில் சத்யாசிரியனைச் சந்திக்க வேண்டி யிருக்கும். வடகரையோ, தென்கரையோ, நாம் அவனோடு மிகக் கடுமையாய்ப் போரிட வேண்டியிருக்கும். நீ சொல்வதுபோல அரை நாள் போரோ, ஒரு நாள்போரோ அல்ல. கிட்டத்தட்ட ஏழு நாட்களுக்கு மேல் போர் நீடிக்குமென்று நான் நினைக்கிறேன். ஏன் தெரியுமா. அந்த நதியைத் தாண்டுவது எளிதல்ல.

''ஆனால், விமலாதித்தருடைய வருகைக்கு வேறு ஏதேனும் காரணம் இருக்கிறதா.''

சக்ரவர்த்தியார் எதிரே அருண்மொழி கைகளைக் கட்டிக்கொண்டு மிக மரியாதையோடு பேசினான்.

''இருக்கிறது அருண்மொழி. குந்தவைக்குக் கீழைச்சாளுக் கியத்தில் இருக்கப் பிடிக்கவில்லை. இடையறாது அங்கே எல்லோரோடும் வம்புச் சண்டை போட்டு, விமலாதித்தனோடு பிணங்கி இந்தப் பக்கம் வந்துவிட வேண்டுமென்று நினைத்து, ஒட்டு மொத்தமாகக் கீழைச்சாளுக்கியத்திலிருந்து குடிபெயர்ந்து அவள் இங்கே தஞ்சையில் குடியேறுவதற்காக வருகிறாள். அவள் அப்படி வருவது அவள் அத்தை குந்தவைக்கும், அவள் தாய் வானதிக்கும் பிடிக்கவில்லை.

இவை எல்லாவற்றையும்விட, மிக முக்கியமான ஒரு விஷயத் திற்காகவும் நான் மேலைச்சாளுக்கியம் நோக்கி நகரத் திட்டமிட் டிருக்கிறேன். பல்லாயிரக்கணக்கான வீரர்கள் போர் முனைக்குச் சென்றவர்கள். மரணம் பார்த்தவர்கள் ஒரு நகரத்தில் குழுமியிருந்து அங்கு நடைபெறுகின்ற கலைப்படைப்புகளுக்கு உதவியாக இருக்கச் சொன்னால், அவர்களால் இருக்க இயலாது. சிற்பி களுக்குக் கொடுக்கிற முக்கியத்துவம் பற்றி போர் வீரர்கள் கேள்வி கேட்பார்கள். அப்போது நான் முக்கியமில்லை என்று தனியே இருந்து புழுங்குவார்கள். போர்க்காலத்தில் மட்டும் நான் முக்கியமோ என்று கேள்வி கேட்டுக் கொள்வார்கள். தங்களுக்குள் பரஸ்பரம் பேசிக் கொள்வார்கள். போர் என்று அழைக்கிறபோது சிற்பியையும் அழைத்துப் போகலாமா என்று ஏளனமும் பேசலாம்.

''எவன் பேசுவான்.''

இராஜேந்திரர் மறுபடியும் குரல் உயர்த்த, ''இராஜேந்திரா நம்முடைய பேச்சின் தாத்பர்யம் புரியாமல் கூச்சலிடுவதில் அர்த்தமில்லை.

''என் படை செய்யாது என்று சொல்கிறேன்.''

மறுபடியும் அவர் உரத்த குரலில் பேச, சக்ரவர்த்தி அலுப்போடு முகம் திருப்பிக் கொண்டார்.

அருண்மொழி இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தான். இளவரசர் இராஜேந்திரர் பேசுவது தவறு என்று சொல்லுவதற்கு வாய் திறந்தான்.

சக்ரவர்த்தி சட்டென்று இராஜேந்திரர் முன்பு நின்றார்.

''இன்னொரு முறை இப்படிப் பேசினால்.. என்று கை உயர்த்தினார்.

இளவரசர் தலைகுனிந்தார். சட்டென்று தாவி ஓடிப்போய் நீட்டிய சக்ரவர்த்தியின் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

''மன்னித்துக் கொள்ளுங்கள். நான் பிளவுக்காகப் பேசவில்லை. உங்களைவிட நான் மேம்பட்டவன் என்று சொல்லிக்கொள்ளவும் பேசவில்லை. ஒரு படை போருக்குத் தயாராக இல்லாத நிலையில் இருப்பின், அவை வெறும் மாட்டு மந்தைகள். ஒரு போர் வீரன் போர் செய்ய மாட்டேன். இவனை அழைத்துப்போ, அவனை அழைத்துப் போ என்று சொல்வானாயின் அவனை என் கைகளால் வெட்டிக் கொல்வேன். வேறு எதற்கு அவனுக்குச் சோறிடுவது. வேறு எதற்கு அவனுக்குப் பதக்கம் அணிவிப்பது. வேறு எதற்கு அவனுக்குக் கூலி கொடுப்பது. எதற்கு அவனுக்கு மரியாதை. எதற்கு அவனுக்கு வீரக்கழல், வேறு எதற்கு அவனுக்கு கேயூரம். அப்படி நமது படையில் எவன் பேசுகிறான் என்று சொல்லுங்கள். அவனைப் பிரம்பால் அடித்துக் கொல்லுகிறேன்.

கொட்டு முரசு கேட்டவுடன் பொங்கி எழுந்து வேல் பிடித்து விரைந்து கோட்டை நோக்கி ஒருவன் வரவில்லையெனில் அவன் மறவனில்லை. எதிரியை மன்னித்து விடலாம். துரோகியை மன்னிக்க மாட்டேன். அப்படி வராதவன் துரோகி. நீங்கள் சொல் வதை என்னால் கேட்கவே முடியவில்லை. சகித்துக் கொள்ளவே முடியவில்லை. மறுபடியும் சொல்கிறேன் தந்தையே, நமது சோழர்படையில் ஒருவன்கூட நீங்கள் சொல்லுதல் வண்ணம் இருக்க மாட்டான் என்பது என்னுடைய எண்ணம். இது உங்கள் கற்பனை.''

''என் யதார்த்தத்தைப் புரிந்துகொள்ள உனது வயது போதாது. அனுபவம் போதாது இராஜேந்திரா. கருமார்கள் அதிகமான சலுகைகள் பெற்றபின் துடித்துப்போனது அந்தணர்கள் அல்ல

இராஜேந்திரா, மறவர்கள். அந்தணர்கள் எதிர்க்கிறார்கள் என்பதால், இராஜராஜன் ஆட்சியில் எடுபடாது என்பதால் மௌனமாக இருக்கிறார்கள். வில்லையும், வாளையும் செப்பனிட்டுத் தரும் பணிக்கே இவ்வளவு சலுகைகள் வேண்டுமென்றால், இவற்றை எடுத்துக்கொண்டு போர் முனையில் நின்று, உயிரைப் பணயமாக வைத்து, ரணகாயப்பட்டு வெற்றியோடு திரும்புகிறோமே எங்களுக்கு என்ன சலுகைகளெல்லாம் தரவேண்டும்.

கொள்ளையடித்த பொருட்களைப் பங்கு போட்டுக் கொண்டு குதூகலமாய் இருப்பதாக நினைக்கிறீர்களா? திரும்பி வந்தால்தானே குதூகலம். எங்கோ எதிர்தேசத்தில் நெஞ்சில் அம்புபட்டு மகனின் பெயர் சொல்லிப் புலம்பியபடி உயிர் துறந்துவிட்டால், என்ன சன்மானம் கொடுப்பீர்கள். அந்தச் சன்மானத்தை எங்கு வந்து கொடுப்பீர்கள் என்று மறவர்கள் தங்களுக்குள் பேசத் துவங்கி விட்டார்கள். குறிப்பாய் உபசேனாதிபதிகள் தாங்க முடியாமல் அரற்றுகிறார்கள். ஆனால், இது புரியாமல் அந்தக் கம்மாளர்களுக்கு ஆதரவாகக் குரல் கொடுக்கிறாய். அவர்களால்தான் போர் முனையில் ஜெயித்ததாக அவர்கள் முன்னே சொல்கிறாய். உன்னுடைய முட்டாள்தனம் எல்லை தாண்டிவிட்டது.

''என்ன செய்திருக்க வேண்டும்.

இளவரசர் கொஞ்சம் இடி போன்ற குரலில் பேசினார்.

''தருகிறேன்.. தருகிறேன்.. ஆவதைச் செய்கிறேன் என்று தள்ளிப்போட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

''என்னைப் பொய்யனாக இருக்கச் சொல்கிறீர்களா.''

''இல்லை. இதற்குப் பெயர் ராஜதந்திரம்.

''அவர்கள் கேட்பது சாதாரண சலுகைகள். பொன், பொருள் ஏதுவும் கேட்கவில்லை.

''பொன், பொருள் ஏதும் கேட்டிருந்தால் வாரிவழங்கி யிருப்பேன். ஒன்றுக்கு இரண்டு மடங்காகக் கொடுத்திருப்பேன். தோளிலே சால்வையும், நெஞ்சிலே பதக்கமும், கையிலே தங்கக் கங்கணமும், காலிலே செருப்பும், கைகட்டி சேவகம் செய்வதுமாய் வேண்டும் என்று நினைத்தது அவர்களை சோழ அரண்மனையின் உள்ளே அழைத்து அரியணையில் ஏற்று என்பதுபோல் உண்டான விஷயம்.

''சக்ரவர்த்தி, இது எங்கு ஆரம்பித்திருக்கும் என்று நினைக்கிறீர்கள்.''

அருண்மொழிப்பட்டன் ஆவலாகக் கேட்டான்.

''உன் தந்தை கிருஷ்ணன் ராமனான பிரம்மராயரை விசாரிக்கச் சொல்லியிருக்கிறேன். இது இன்று, நேற்று ஆரம்பித்ததல்ல. என்னுடைய ஆட்சிக்காலத்திற்கு முன்பு உத்தமசோழன் ஆட்சிக் காலத்தில், சிதம்பரத்தில் குடியிருந்த சேரதேசத்து அந்தணர்களால் ஆரம்பிக்கப்பட்டது என்று ஒரு சந்தேகத்தை எழுப்புகிறார். எல்லா அந்தஸ்தும் இருக்கும் அந்தணர்களையே இந்த மறவர்கள் துரத்தி விட்டார்கள். நீங்களெல்லாம் வாழ்நாள் முழுவதும் அடிமை யாகவே இருப்பீர்கள். மறவர்களுக்கு ஏவல் வேலை செய்து கொண்டிருப்பீர்கள். அவர்கள் கொள்ளையடித்து பங்கு போட்டுக் கொள்வார்கள். பதக்கம் குத்திக் கொள்வார்கள். வெளியூரிலிருந்து பெண்களைக் கொண்டு வந்து அனுபவிப்பார்கள். நீங்கள் என்ன செய்வீர்கள். உங்களுக்கு என்ன மரியாதை என்று பேசப்பட்டதாக வும், ஒரு தலைமுறைக்கு முன்பு இந்த விஷம் தூவப்பட்டதாகவும் எனக்குச் செய்திகள் வந்திருக்கின்றன.''

''குறிப்பாய் யார் செய்திருப்பார்கள் இதை.

''உடையார்குடியிலிருந்து ரவிதாஸனும், பரமேஸ்வரனும், அவனுடைய மொத்த உறவினர்களும் ஒட்டுமொத்தமாய் நம்மால் விரட்டப்பட்டபோது, சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோயில் அந்தணர்கள் குதித்திருக்கிறார்கள். கூடுதலாய் படை கொண்டு போய் இருந்ததால் சிதம்பரம் முழுவதும் சுற்றி வளைத்ததால், தாக்குவேன் என்று அச்சுறுத்தியதால், சீறி ஆட முயற்சித்த சில அந்தணர்களை முன்னேறி, பிரம்பால் கடுமையாய் அடித்ததால், வீரர்கள் அவர்களைக் கயிறு இறுக்கிப் பிணைத்து கசையால் அடித்த தால், உடனடியாகத் தரைக்கும் கீழே போய் நின்று சரணடையத் துவங்கி விட்டார்கள். நமக்கெல்லாம் வாரிக் கொடுத்த உத்தமசோழ மஹாராஜா கைது செய்யப்பட்டுவிட்டார் என்று பொய்ச் செய்தி பரப்பினார்கள். பொங்கி எழுங்கள் என்று அவர்களிடமும், மற்றோர் களிடமும் பேசினார்கள். ஒருபுல்லும் அசையாது போகவே மௌனமாகி விட்டார்கள். அப்படிப் பேசியவர்களைக் கைது செய்து சோழதேசத்தின் எல்லையிலிருந்து பலகாதம் தள்ளிப்போய், மௌனமாக்கித் துரத்தி விட்டோம். அதில் மூவர் கைது செய்யப் பட்டு அழைத்துப் போகப்பட்டதும் சிதம்பரம் கோயிலிலுள்ள

அந்தணர்கள் எல்லோரும் ஒன்றுகூடி இனி என்ன செய்வது என்று தீர்மானித்து விஷம் கலக்கலாமா. இரவோடு இரவாக எரியூட்டலாமா என்றெல்லாம் யோசித்து, எதுவும் வேண்டாம் என்று முடிவு செய்து, எல்லா இடங்களிலும், பிரிவினையை உபதேசம் செய்யுங்கள் என்று தீர்மானம் செய்து கொண்டார்கள். குறிப்பாய் தொண்டை நாட்டு விவசாயிகளிடமும், கல்தச்சர்களிடமும், கருமார்களிடமும் அங்கு அதிகமாக இருக்கின்ற பாத்திரம் பண்டங்கள் செய்கின்ற உலோகத் தச்சர்களிடமும் இது வேகமாகப் பரப்பப்பட்டது.

ஆனால், தொண்டை நாட்டு மக்கள் சான்றோர்கள். அங்குள்ள கறுப்பான அமைதியான அந்தணர்கள். அங்குள்ள எல்லா வர்ணத்தாரையும் அழித்து, இப்படியொரு பேச்சு இவர்களால் கிளம்பியிருக்கிறது. இதைக் கைக்கொண்டால் நாம் அழிவுக்கு ஆளாவோம் என்பதை விளக்கி, எதனால் சோழர்களை எதிர்க்கக் கூடாது என்பதை மிக விளக்கமாகச் சொன்னார்கள். அவர்களில் காசிக்கும், கயிலாயத்துக்கும் போய் வந்தவர்கள் தங்களுடைய சீடர்களிடம் இன்னும் தெளிவாகப் பேசினார்கள்.

வடக்கே யவனர்களின் தாக்குதல் வந்துவிட்டது. அது தெற்கேயும் வரும். அப்படி வரும்முன் நம்மில் ஒற்றுமை அதிகரித்திருக்க வேண்டும் என்பதை விளக்கினார்கள். யவனர்கள் செய்யும் நாசத்தை எடுத்துரைத்தார்கள். மக்கள் மிரண்டு போய் அந்தணர்களைப் பல கேள்விகள் கேட்டு, தங்களைச் சமாதானப்படுத்திக் கொண்டார்கள். யவனர்கள் வருகை நிச்சயம் நடக்கும் என்பதை ஜாதகரீதியாக அங்குள்ள ஜோதிடர்களும் சொல்ல, அந்த மக்கள் உணர்ச்சி வசப்பட்டு உயர்வு, தாழ்வு என்ற பேதமேயில்லை. நாம் ஒன்றாக இருப்போம் என்று சத்தியம் செய்து கொடுத்துவிட்டார்கள்.

எனவே, தொண்டைநாட்டில் இந்த ஆட்டம் நடக்கவில்லை. ஆனால், அந்த தலைமுறையிலில்லாது அடுத்த தலைமுறையில் குடந்தையில் இந்தக் கூச்சல் ஆரம்பித்துவிட்டது. குடந்தையில் இந்தக் கூச்சல் அதிகரிக்க காரணம் சோழதேசத்து மறவர்களின் அலட்டல். அந்தணர்களின் அளவுக்கு மிஞ்சின அதிகாரம். இதனால் சலிப்படைந்துதான் குடந்தைக் கருமார்கள் கோபமானார்களே தவிர, நீ வீசிப்போட்ட இந்த உயர்குடி ஆயுதத்தை, அதீத சலுகைகளை எடுத்துக்கொண்டார்களே தவிர, வேறு எதுவுமில்லை. எனவே,

இந்தக் கூச்சல் மறுபடியும் எழாது இருக்கவும் போர்முனைக்குப் போகே வேண்டியிருக்கிறது.

அவர்கள் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

சக்ரவர்த்தி உடையார் எத்தனை விதமாக ஒரு பிரச்சினையைச் சிந்திக்கிறார் என்பது பற்றி அருண்மொழிப்பட்டன் வியந்து உள்ளுக்குள் அதிர்ந்து போய்க் கிடந்தான்.

நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது இன்னும் அதிகம் இருக்கிறது என்ற சிந்தனை ஒன்று அவனுள் ஓடிற்று.

''எப்போது படையெடுப்பு நடத்தப் போகிறோம் என்று தெரிந்துவிட்டால் நாம் செய்ய வேண்டியவை என்ன.''

வேறு ஒரு யோசனைப் பகுதிக்கு சக்ரவர்த்தி இராஜராஜர் போக அவர்கள் நிமிர்ந்து கொண்டார்கள். இளவரசர் இராஜேந்திரர் ஓடுகின்ற ஆற்றிலிருந்து கையில் ஜலமெடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டார். முகத்தை மேல் துண்டால் அழுந்தத் துடைத்துக் கொண்டார்.

''சக்ரவர்த்தி, உணவு ஏதேனும் தேவையோ..'' அருண்மொழிப் பட்டன் அன்போடு கேட்டான்.

''அங்கு என்ன இருக்கும்.

''இரவு நேர உணவு தயாராகிவிட்டது. ரசமும், கறியமுதும், கடலைப்பருப்புப் பாயசமும் தயாராகிவிட்டன.''

''அப்படியென்றால் ரசம் கொடுக்கச் சொல். தொண்டை கரகரப்பாக இருக்கிறது.

''உண்பதற்கு.

''உண்பதற்கு வாழைப்பழங்கள் இரண்டு போதும்.

''யார் அங்கே.. என்று அருண்மொழி குரல் கொடுத்ததும், நாலாபுறமும் நீர் தெறிக்க ஒரு போர்வீரன் ஓடிவந்தான். அவர்கள் அருகே வந்ததும் நிாதனமாக நடந்து, தலைகுனிந்து நின்றான். அவனிடம் உணவுக்கான உத்தரவுகளை அருண்மொழி சொல்ல, அதேவிதமாய் நிதானமாய் நடந்து, பிறகு துள்ளி ஓடினான்.

''இவன் உன்னுடைய வீரனா இராஜேந்திரா, வருவதும் போவதும் மிக பக்குவமாக இருக்கிறதே.'' என்று சொல்ல, ''ஆமாம் தந்தையே. என்று பெருமையோடு சொல்லிவிட்டு, சக்ரவர்த்தி முகத்தில் ஒரு புன்னகை இருப்பதைப் பார்த்ததும், சட்டென்று

இராஜேந்திரர் நின்று நிதானிக்க, மெல்லிய குரலில் அருண்மொழி சிரிக்க, சக்ரவர்த்தியும், இளவரசரும் உரக்கச் சிரித்தார்கள்.

''சோழதேசத்தின் மீதுள்ள காதலால்தான் நீ தனிப்படையை உருவாக்கியிருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். ஆயினும், இதுபற்றி அதிகம் நீ பேசக் கூடாது என்பதற்காகத்தான். அதைக் கண்டிப்பாக கண்டனம் செய்தேன். விவரித்துப் பேசினால் உன் படை இதைப் பெரிதாக்கிப் பேசும். அது நம் வீரர்களிடையே காழ்ப்பைக் கொண்டு வரும்.

''இல்லை தந்தையே. எனக்கு நான் செய்கின்ற தவறு புரிகிறது. உண்மையில் நாளை காலையில் உங்களுடைய படைகளிடம் போய் நின்று, மிகச் சல்லாபமாகப் பேசவேண்டும் என்று நினைத்திருக் கிறேன்.''

''அப்படிச் செய்வதிலும் படைகளுக்குள் பிரிவு உனக்குள் ஏற்பட் டிருக்கிறது என்றுதான் அர்த்தம். அடிப்படையிலேயே நீ பிரித்துக் கொள்ள வேண்டாம் என்பதுதான் என்னுடைய யோசனை.''

''சரி தந்தையே. முயற்சிக்கிறேன்.''

''முயற்சித்துதான் இது நடக்க வேண்டுமா.''

''ஆமாம் தந்தையே. அப்படி நினைக்கப் பழகிவிட்டேன். இது மறுபடியும் சரி செய்வதற்கு சற்று நாளாகும். எனவேதான் முயற்சிக் கிறேன் என்று சொன்னேன் சரி. இப்பொழுது சொல்லுங்கள். அப்படி படையெடுப்பு நடத்த வேண்டுமெனில் முதலில் நாம் செய்யவேண்டியது என்ன.''

''இப்பொழுது இளவரசர் இராஜேந்திரருக்குக் கோபம் வரக்கூடிய ஒரு விஷயத்தைச் சொல்லப் போகிறேன்.''

சக்ரவர்த்தி மறுபடியும் புன்னகையோடும், பீடிகையோடும் பேசினார்.

இளவரசர் இராஜேந்திரர் தலைகுனிந்து பிறகு நிமிர்ந்து தந்தையைப் பார்த்து அவர் கைகளைப் பார்த்து கண்களில் ஒற்றிக் கொண்டார்.

''நீங்கள் சொல்லுவதுபோல என் கூச்சலும், சண்டையும்கூட உங்கள் மீதும், சோழதேசத்தின் மீதும் உண்டான காதலால்தான் தந்தையே.'' என்று கழிவிரக்கமான குரலில் சொல்ல, சக்ரவர்த்தி கை நீட்டி இளவரசர் முதுகைத் தடவினார்.

''கீழைச்சாளுக்கியத்திலிருந்து வருகின்ற விமலாதித்தனை நாம் பெரிய அளவில் வரவேற்க வேண்டும். மிகப்பெரிய மரியாதைகள் செய்ய வேண்டும். நல்ல சமயத்தில் வந்தாய் என்று பாராட்ட வேண்டும். மாபெரும் வீரன் என்று வீரர்களுக்கு அவனை அறிமுகப் படுத்த வேண்டும்.

''அந்த முட்டாளையா அவன் எதற்கு லாயக்கு தந்தையே.

''அப்படிப் பேசாதே. அவன் நமது மருமகன். உன் தங்கையை மணந்தவன். நமக்கு உதவி செய்யப் போகிறவன்.''

''என்ன உதவி.''

அலட்சியமாக இளவரசர் கேட்டார்.

''மேலைச்சாளுக்கியத்தை நோக்கி காஞ்சிபுரத்திலிருந்து நமது படை புலிக்கொடியோடு கிளம்பும். நாற்பது வீரர்கள் முன்னே போக பின்னால் விமலாதித்தன் தன் பெரும் படையோடு கங்க தேசத்திற்குள் நுழைவான். கங்கதேச எல்லை தாண்டி மேலைச் சாளுக்கியம் நுழையும்போது, நமது நாற்பது வீரர்களும் புலிக் கொடியை அவர்களிடம் கொடுத்து விட்டு அவர்களை முன்னேறிப் போகச் சொல்வார்கள். ஆக மேலைச்சாளுக்கியத்தில் முதன் முதலில் நுழைவது கீழைச்சாளுக்கிய வீரர்கள்.''

''ஏன் தந்தையே... நான் போனால் என்ன.''

''சேரர்கள் பதுங்கியிருக்கின்ற வனங்களுக்குள் நாம் போய் சிக்க வேண்டாம். நமது படைகள் சிக்கவேண்டாம். முதல் களப்பலி கீழைச்சாளுக்கிய வீரர்களாகவே இருக்கட்டும். இங்கிருந்து என்ன விதமான தாக்குதல்கள் ஏற்படுகின்றன என்பதை அவர்களுக்கு உணவுக்கு வண்டியோட்டிக் கொண்டு போகின்ற, குதிரைகளைப் பராமரிக்கின்ற சேவகர்கள் போய் அறிந்து கொண்டு உடனடியாக தகவல்களைப் பின்னால் தொடருகிற நமது சோழ வீரர்களுக்குத் தெரிவிக்கட்டும்.''

''அதாவது விமலாதித்தன் என்ற பலியாட்டை முதலில் அனுப்புகிறீர்கள்.''

''ஆமாம் இராஜேந்திரா.''

''அரசர்கரசே ஒரு கேள்வி எழுகிறது.

அருண்மொழிப்பட்டன் நிதானமான குரலில் பேசினாள்.

''கேள் அருண்மொழி. நீ என்ன நெருப்பை வீசப்போகிறாய் என்று தெரியும் கேள்.''

''அப்படி முன் படையில் தலைமைத் தாங்கிப் போகின்ற விமலாதித்தர் மரணமடைந்தால் அது மிகப்பெரிய நஷ்டமல்லவா.''

''ஒருவகையில் நஷ்டம். ஒரு வகையில் லாபம்.

''என்ன தந்தையே என்ன வகையில் லாபம்.''

''அவன் இறந்தால் என் மகள் விதவையாவது நட்டம்தான். ஆனால், விடுதலையாவாள் அல்லவா. அது லாபம்தானே.''

''அரசே... என்ன பேசுகிறீர்கள்.''

''குந்தவை ஒரு அளவுதான் பொறுப்பாள். அளவுக்கு மீறிய அதிகாரம் அவளிடம் செலுத்த முடியாது. அதை இந்த மடையன் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். பெரிய இடத்தில் பெண் எடுத் திருக்கிறோம் என்றால், அந்தப் பெண்ணை அனுசரித்துப் போவதற்குப் புரிந்துகொள்ள வேண்டும். அப்படியில்லாது அப்பேற்பட்டவன் நம் தயவில் அரசாட்சி அமைத்தவன், அங்கே சக்ரவர்த்தி என்று முடிசூட்டிக்கொள்ள விரும்புவதும், தானும் கோயில் கட்ட விரும்புவதும் தகுதிக்கு அப்பாற்பட்ட விஷயங்கள். ஒருவன் தன் தகுதியை வளர்த்துக்கொண்டு இதைச் செய்திருக்கலாம். வெறுமே குடித்துக்கூத்தடித்துக் கொண்டு பெண் கொடுக்க எத்தனையோ பேர் முன் வருகிறார்கள். ஆனால் இராஜராஜருக்கு மருமகனாகி விட்டதால், இதைப்பற்றி சிந்திக்க வேண்டியிருக் கிறது என்று சபையில் உளறுகிறவனை, எந்த மனைவியும் பொறுத்துக் கொள்ள மாட்டாள். நீ இப்படிச் பேசாதே என்று குந்தவை எச்சரித்தபோது தான், அவன் அடித்திருக்கிறான்.''

''ஆக குந்தவையின் மீது தவறு இல்லை என்று சொல்கிறீர்கள்.''

''குந்தவை இதை நடுச்சபையில் பேசியதுதான் தவறு என்று சொல்கிறேன். அவளும் முட்டாள்தனம் தான் செய்திருக்கிறாள்.''

''சிவனே... என் சிவனே.. எத்தனை விதமான தொந்தரவுகள் உங்களுக்கு..

இளவரசர் நகர்ந்து சக்ரவர்த்தியின் தோளைப் பிடித்து அவர் கழுத்தில் முகத்தை பதிய வைத்துக் கொண்டார். கன்னத்தில் முத்தமிட்டார்.

''உன்னைத் தூண்டிவிட அவளும் முயற்சிக்கிறாள். நீ கோப மடைந்து விமலாதித்தன் முதுகெலும்பை உடைப்பாய் என்று

நினைக்கிறாள். இது எப்படிப்பட்ட முட்டாள்தனம். அதை நீ செய்தால் காலாகாலத்திற்கும் உன்னைச் சரித்திரம் குறை கூறும். இழிவுபடுத்தும்.''

''விமலாதித்தனைப் பேசித் திருத்த முடியாதா.''

''திருத்தலாம். இங்கு அவன் திருந்தியதாகத்தான் இருப்பான். மறுபடியும் கீழைச்சாளுக்கியம் போனால், அங்கு மேலைச் சாளுக்கிய வீரர்களோ, சேரதேசத்து நம்பூதிரிகளோ காதில் ஓதினால், மறுபடியும் தெளிவு இழந்து திரும்பவும் பிதற்ற ஆரம்பிப்பான். அவன் நிலையில்லாதவன். புத்தி வலுவில்லாதவன்.''

''பேடிக்குப் போய் பெண் கொடுத்தது பிசகல்லவா. இதை ஏன் செய்தீர்கள் தந்தையே.''

''மேலைச்சாளுக்கியத்தை தடுத்து நிறுத்தத்தான். கீழைச்சாளுக் கியத்தோடு உறவு ஏற்படுத்திக் கொள்ளவில்லையெனில், மேலைச்சாளுக்கியம் வெகுநிச்சயமாய் கீழைச்சாளுக்கியத்தோடு கைகோர்த்து சோழ தேசத்தை நாசப்படுத்தும் என்பதால், சோழ தேசத்தைக் காப்பாற்ற என் செல்ல மகள், உயிருக்குயிரான இனிய குந்தவையைப் பலி கொடுத்தேன். குந்தவையின் கெட்டிக்காரத் தனத்திற்கு உறைபோட விமலாதித்தன் காணமாட்டான் என்று நன்கு தெரிந்து, நானும், வந்தியத்தேவரும், எனது தமக்கை குந்தவையும் ஒன்று சேர்ந்து வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்து, குந்தவை என்கிற இளம்பெண்ணை சோழதேசத்தின் நலனுக்காகப் பலி கொடுத்தோம். அதுதான் சொன்னேன்.

முள்ளு முனையில் மூன்று குளம் வெட்டினேன். இரண்டு குளம் பாழ்; ஒன்றில் தண்ணீரே இல்லை.

''என்ன நான் தண்ணீர் இல்லாத குளம் என்று சொல்கிறீர்களா.''

''மழை பொழிந்து நீர் நிரம்பும் என்று நினைத்துக் கொள்கிறேன். அதற்காகக் காத்திருக்கிறேன்.''

சக்ரவர்த்தி கண்மூடிச் சொல்ல, இளவரசர் அவரையே உற்றுப் பார்த்தார். பிறகு தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அங்கு மீண்டும் மௌனம் நிலவியது.

''தந்தையே... இது குந்தவைக்கு நீங்கள் செய்த கொடுமை யல்லவா.''

''அரசனுக்கென்று தனிப்பட்ட எந்தவித சுகமும், அவன் குடும்பம் பற்றிய நலனும் முக்கியமில்லை. ஒரு அரசனுக்கு அவன் தேசம்

முக்கியம். அவன் தேசத்திற்காக எவரையும் அவன் பலி கொள்வான். ஏன், அவன் தன்னையே பலி போட்டுக் கொள்வான்.''

''நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது தந்தையே. மேற்கொண்டு பேசுங்கள். மேலைச்சாளுக்கியம் நோக்கி நாம் நகர வேண்டு மென்றால் என்ன செய்ய வேண்டும்.''

''கீழைச்சாளுக்கியத்தை வரவேற்க வேண்டும் என்று சொன்னீர்கள்.''

அருண்மொழி ஞாபகப்படுத்தினான்.

''விமலாதித்தனைக் கொண்டாட வேண்டுமென்று சொல் கிறீர்கள். கொண்டாடி விடலாம். முட்டாளைக் கொண்டாடுவது எளிது. மேலைச்சாளுக்கியம் நோக்கிப் போவதற்கு முன்பு கீழைச் சாளுக்கியப் படை வீரர்களையும், வீரர்களையும், விமலாதித் தனையும், நானே காஞ்சிமாநகரம் போய் வரவேற்கிறேன். அடுத்தது என்ன செய்யவேண்டும்.''

''பாண்டியர்களை அரவணைத்துக்கொள்ள வேண்டும். சேரர் களுடைய பிடியிலே பாண்டியர்கள் சிக்கவில்லை. இதற்குக் காரணம் தமிழ்மொழியாக இருக்கலாம். அல்லது சைவ சமயமாக இருக்கலாம். பாண்டியர்களை எதிர்த்த போது தங்களுக்கு உதவி செய்ய சேரர்கள் வேண்டுமென்று பாண்டியர்கள் நினைத்தார்களே தவிர, சேரர்களாடு கலந்துவிடவில்லை. அங்கு அந்தணர்களே உயர்வு என்கிற அலட்டலும் பாண்டியர்களுக்குப் பிடிக்கவில்லை.

அதே சமயம் நம்மையும் அவர்கள் நேசிக்கவில்லை. நமக்கும் அவர்களுக்கும் இருந்தது நெடும் பகை. அந்த நெடும் பகையில் ஆதித்த கரிகாலன், வீரபாண்டியனைப் படுத்துக் கிடக்கும்போது கொன்றது நெருப்பிலிட்ட நெய்போல ஆகிவிட்டது. அந்த ஆதித்த கரிகாலனை ஆபத்துதவிகளைவிட்டு, இருட்டில் சுற்றி வளைத்து வெட்டிப் போட்டது நம்மவருக்குக் கோபமாகிவிட்டது. ஆனால், ஆழ்ந்து யோசித்துப் பார்த்தால் ஆதித்த கரிகாலனுடைய கொலை நியாயப்படுத்தப்பட்டதாகவே எனக்குத் தெரிகிறது. உடையார் குடியிலுள்ள ரவிதாஸனையும், பரமேஸ்வரனையும் என்னால் தண்டிக்க முடியாமல் போகுமோ என்பதால் தான், நான் ஸ்ரீமுகம் கொடுத்து அவர்களை ஊர்விட்டு வெளியேறச் சொன்னேன். தூங்கிக் கொண்டிருந்தவனை வெட்டிக் கொன்றானே ஆதித்த கரிகாலன், அவனை எப்படிக் கொல்வதென்று நினைக்கிறாய் என்று ரவிதாஸனோ, பரமேஸ்வரனோ கேட்டால், என்னால் பதில்

சொல்ல இயலாது. அதேசமயம் அவர்கள் அப்புறப்படுத்தப்பட வேண்டும் என்பதில் உறுதியாக நின்று அவர்களை அப்புறப் படுத்தினேன். அவர்களைக் கொன்றிருந்தால் பாண்டிய தேசத்தின் பகை மேலும் அதிகரித்திருக்கும். அந்தணர்களையே வெட்டிக் கொன்றார்களே, நம்மை என்னவெல்லாம் செய்வார்கள் என்று பாண்டிய தேசத்து மக்கள் பேச ஆரம்பித்திருப்பார்கள்.

பாண்டிய தேசத்தில் மறவர்களுக்கு மிகப்பெரிய மரியாதை. போர் வீரர்களுக்குத் தனித்த செல்வாக்கு. எனவே, எனது அரசியல் ஆரம்பம் இழிவுமிக்கதாய் நிகழ்ந்திருக்கும். நல்லவேளை உன்னுடைய தகப்பனார் கிருஷ்ணன் ராமனுடைய யோசனையில் அந்த இழிவைத் தவிர்த்தேன். பாண்டிய மன்னனை வெற்றி கொண்டு பாண்டியர்களைப் பாண்டியர்களே ஆளவேண்டுமென்று விட்டு சோழ அதிகாரிகளை மேற்பார்வை செய்யச் செய்தேன். மதுரையில் மீனாட்சியின் ஆட்சிதான் தொடர்கிறது என்று சொல் வதில் அவர்களுக்குத் திருப்தி அதிகம். அதனால் தான் அவர்கள் நம்மோடு இயைந்திருக்கிறார்கள். சேரர்களை நெருங்காமல் இருக்கிறார்கள்.

இந்த விஷயத்தை மேலும் பலப்படுத்த வேண்டும். பாண்டிய வீரர்களுக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும். சோழப்படை வீரர்களுக்கு என்ன மரியாதை கிடைக்கிறதோ, அதே மரியாதை பாண்டிய தேசத்திலுள்ள படை வீரர்களுக்கும், மற்ற கலைஞர் களுக்கும் தரவேண்டும். பாண்டிய தேசத்தின் கோயில்களைச் செப்பனிட, அங்கு நிவந்தம் கொடுக்க, அங்கு உள்ள விஷயங் களைச் சீர்திருத்தம் செய்ய தனியே ஒரு அந்தணர் குழுவையும், அமைச்சர் குழுவையும் அனுப்ப வேண்டும். போர் முனைக்குப் போகவேண்டிய அவசியமிராத பழுவேட்டரையரையும், பூரிவிக் கிரம கேசரியையும் அங்கே அனுப்பலாம் என்பது என்னுடைய எண்ணம்.

கன்னியாகுமரி வரைபோய் கடலாடிவிட்டு வாருங்கள் என்று சொல்லிவிட்டு, வழிநெடுக உள்ள கோயில்களுக்கு விதம்விதமான நிவந்தங்கள் கொடுக்க வேண்டும் என்பது என் திட்டம். அப்படிப் போகும்போது அங்குள்ள மறவர்களை, கலைஞர்களைப் பார்த்து சோழ தேசத்திற்குப் போங்கள் என்று உற்சாகப்படுத்தி, அப்படிப் போவோருக்கு பொற்காசுகளும் கொடுத்து ஊக்கப்படுத்த வேண்டும்.''

''நாம் இல்லாதபோது பாண்டியர்கள் இங்கு வந்தால் அது நமக்கு நல்லதா.''

''இங்கே தொண்டை நாட்டு வீரர்களும், நடுநாட்டு வீரர்களும் வந்தியத்தேவர் தலைமையில் கூடியிருப்பார்கள். சோழதேசத்தின் ஒரு கல்லைக்கூட ஒருவரும் அசைக்க முடியாது.

''வந்தியத்தேவர் மட்டும் போதுமா.''

அருண்மொழி கேட்டான்.

''அவருக்கு உதவியாய் மூவேந்த வேளார் இருப்பார். கிருஷ்ண ராமனான பிரம்மராயர் போர் முனைக்கு வரவேண்டாம் என்று நான் சொல்வதற்கு இருக்கிறேன்.''

''என் தகப்பனாரா. போர் முனைக்கு வராமலா. நன்றாக இருக்கிறது கதை. உங்களைவிட்டு அவர் அகலமாட்டார்.''

''போதும். என்னோடு அவர் ஊர் சுற்றியது போதும். என்னைவிட வயதானவர். இன்னும் எத்தனை நாளைக்கு குதிரைப் பயணமும், யானைப் பயணமும் செய்து கொண்டிருப்பார். கடும் வெயிலில் பயணம் செய்யப் போகிறோம். அந்த வெயில் அவருக்கு ஆகாது. அவர் பருத்த சரீரம் தாங்காது. அவருக்குத் துணையாக கருவூர்த் தேவர் தஞ்சையிலே இருப்பார். நாம் போய் மீளும் வரை இந்த இடத்தில் கருவூர்த்தேவரும், மூவேந்த வேளாரும், வந்தியத் தேவரும், குந்தவையும், பஞ்சவன்மாதேவியும், சோழதேசத்தைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வார்கள். அவருக்குத் துணையாக நடுநாட்டு, தொண்டை நாட்டுப் படைகள் இருக்கும்.''

''கீழைச்சாளுக்கிய வீரர்களை யார் பின் தொடர்வது.

''உன்னுடைய படைகள்.''

சொல்லிவிட்டு சக்ரவர்த்தி வாய்விட்டுச் சிரித்தார்.

இளவரசருக்கு வெட்கமாகிவிட்டது.

''தவறு தந்தையே. நம்முடைய படைகள்.''

''ஆஹா.. நான் என் படையினை உன் படையோடு சேர்க்க மாட்டேனடா. மேலைச் சாளுக்கியத்தில் உள்ளே நுழைய உன் படைகள்தான் தகுதியானவை.''

''ஏன் தந்தையே இவ்வளவு கேலி செய்கிறீர்கள். நான் தான் ஒப்புக்கொண்டேனே என் தவறை.''

''நீ செய்தது தவறு என்று யார் சொன்னது. நீ படைகள் திரட்டியதும், அதற்குத் தனித்த பயிற்சி அளித்துதம் தவறில்லை. அதை அடிக்கடி வெளியே சொல்லாதே என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். உன்னுடைய படைகள் தான் பின்னால் தொடர்ந்து போவதற்கு ஏற்றவை. ஒரு வேளை முன்னால் செல்கின்ற கீழைச் சாளுக்கியப் படையை மேலைச்சாளுக்கியப் படை தாக்கினால், பின்னால் இருக்கின்ற உன் கருங்குதிரைப்படை மின்னல் வேகத்தில் செயல்பட்டு அவர்களையும் காத்து, அடித்து நொறுக்குகின்ற வேலையையும் செய்யும்.

''சக்ரவர்த்தி நீங்கள் எங்கே இருப்பீர்கள்.''

''போர்ப் படையின் கடைசி ஆளாக என்னுடைய பட்டத்து யானையில் அமர்ந்து, உங்களைப் பற்றி யோசித்துக் கொண் டிருப்பேன். அவ்வப்போது வரும் தகவல்களை நினைத்துக் கொண்டிருப்பேன்.''

''என் படைகளுக்கு யார் தலைமையேற்பார்கள்.''

''நீ''

''உங்கள் படைகளுக்கு யார் தலைமையேற்பார்கள்.''

''அருண்மொழி.''

''எங்கள் இருவரையும் பிரித்துவிட்டீர்கள் அல்லவா.''

''நீங்கள் இப்படி எதிர்ப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். உங்களை இப்படி பிரித்து வைத்திருப்பதுதான் வசதி.''

''நாங்கள் ஒற்றுமையாக இருந்தால், உங்களுக்கு எதிராகத் திரும்பி விடலாம் என்று நினைக்கிறீர்களா.''

ஏளனம் மிகுந்த குரலில் இளவரசர் உரக்கக் கேட்டார்.

''இல்லை. ஒரு குழம்பைக் கிளற இரண்டு அகப்பைகள் எதற்கு. ஒரு அகப்பை போதுமே. இன்னொரு குழம்பை இன்னொரு அகப்பை கிளறட்டுமே.

''இன்னொரு குழம்பா. என்ன அது.''

''மேலைச்சாளுக்கியத்தை எதிர்ப்பது எளிதல்ல. நாம் எல்லோரும் ஏதோ ஒரு முனையில் தடுத்து நிறுத்தப்படுவோம். தாக்கப்படுவோம். அப்போது முழுமூச்சாக அத்தனை பேரும் மேலைச்சாளுக்கியனை முட்டி வீழ்த்த வேண்டியிருக்கும். இரண்டரைலட்சம் படை வீரர்களும் ஒட்டுமொத்தமாய் மேலைச்

சாளுக்கியத்தில் இறங்க வேண்டியிருக்கும். மிகப்பெரிய கொலைக் களமாக அப்போர்முனை திகழும். அப்போரில் நாம் யார் இறக்கப் போகிறோம் என்று தெரியவில்லை. நீ இறக்கலாம். நான் இறக்க லாம். அருண்மொழி துண்டாடப்படலாம். யாவருமே மடிந்து போகலாம். அதுபற்றிக் கவலையில்லை. மேலைச்சாளுக்கியன் குறைந்தபட்சம் அடுத்த நூறு வருடங்களுக்கு சோழதேசத்தை நினைத்துகூடப் பார்க்கக்கூடாது. அப்படிப்பட்ட ஒரு படை அழிவை அங்கு ஏற்படுத்த வேண்டும். ஒரு பாடத்தை அவன் கற்க வேண்டும்.''

''சேனாதிபதியைப் பற்றி நீங்கள் கடைசி வரை பேசவே யில்லை.''

''ஈராயிரம் பல்லவரையரைத்தானே சொல்கிறாய்.''

''ஆமாம். கொங்கு தேசத்திலே மிக வளமாக, பலமாக குடியிருக் கின்ற அவரை நீங்கள் ஏன் மறந்து விட்டீர்கள். அவர் போர் முனைக்கு வரமாட்டாரா.''

''ஒருவேளை, நாம் தோற்றுப் பின்வாங்கினால் மேலைச்சாளுக் கியப்படை முன்னே வந்தால் ஈராயிரம் பல்லவரையர் படைகள் முன்னேறி அவர்களைத் தடுத்து நிறுத்தும். நாம் மறுபடியும் ஒரு அணியாகச் சேர்ந்து மீண்டும் மேலைச்சாளுக்கியம் நோக்கி ஈராயிரம் பல்லவரையர் தலைமையில் தாக்குவோம்.''

''இதையெல்லாம் ஒரே நாளில் சிந்தித்தீர்களா.''

''ஹா... என் பிள்ளை முதன்முதலில் ஒரு நல்ல கேள்வி கேட்டு விட்டான் அருண்மொழி. இன்னும் பாயசம் கொண்டு வரச்சொல்.

சக்ரவர்த்தி கேலியான குரலில் பேச, இளவரசர் கோபத்தோடு ஓடும் ஆற்றில் மிதித்தார்.

அருண்மொழிப்பட்டன் முகத்தில் நீர் அடித்தது. அவன் துடைத்துக் கொண்டான்.

''ஒரு அரசாங்கம் நடத்துபவன். அரசனாக இருப்பவன், இடை யறாது எல்லா விஷயங்களையும் ஒட்டுமொத்தமாக்கி சிந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும். சிந்தித்து திட்டம் போடும்போதே அதற்கு மாற்றுத் திட்டங்களையும் வைத்துக் கொள்ள வேண்டும். உதாரணத்திற்கு விமலாதித்தன் முன்னே படைகளைக் கொண்டு போக மறுத்துவிட்டால், என்ன செய்வாய் இராஜேந்திரா.

அவன் நமது மருமகன். நான் போய் சாகமாட்டேன். எனக்கு கஷ்டம் இருக்கிறது என்று சொல்லிவிட்டால் என்ன செய்வாய் இராஜேந்திரா.

அவன் படைகளை அனுப்புவேன்.

அவனன்றி அவன் படைகள் ஒருபொழுதும் நம் பேச்சைக் கேட்கப் போவதில்லை. அதற்கு பதிலாக ஆட்டு மந்தைகளை அனுப்பலாம்.

''என்ன செய்வீர்கள் தந்தையே.''

''உன்னை முன்னே நிறுத்துவேன். விமலாதித்தனை மறுபடியும் கீழைச்சாளுக்கியம் போ என்று அனுப்புவேன்.''

''குந்தவையை..''

அருண்மொழி கேட்டான்.

''அவளுக்கு உடல்நலமில்லை. அவள் உடனடியாகத் தஞ்சைக் குப் போக வேண்டியிருக்கிறது. அங்கு அவள் தாய்க்கும் உடல்நல மில்லை என்று பொய் சொல்வேன்.''

''என்ன புதிர் போடுகிறீர்கள் தந்தையே.''

''அறுத்துப் போடுவதற்கு.

''ஈஸ்வரா..

அருண்மொழி காது பொத்திக் கொண்டான்.

''என்ன இவ்வளவு வேகமாகப் பேசுகிறீர்கள்.''

''ஒரு செருப்பு காலுக்குச் சரியாக வரவில்லையென்றால், கழற்றி வீச வேண்டியதுதானே. தலையில் வைத்துக் கொண்டா அலைய முடியும்.

சக்ரவர்த்தி பல் கடித்துக் கொண்டு முறைப்பாகப் பேசினார். அவர் கோபம் தீப்பந்த வெளிச்சத்தில் வெகு நன்றாக அருண் மொழிக்குத் தெரிந்தது.

''என்னை எதற்கு முன்னே அனுப்புகிறீர்கள் தந்தையே.

''இம்முறை தாக்குவதற்குச் சேனாபதிகள் எவரும் வரவில்லை. இளவரசர் படைக்குத் தலைமை தாங்கி மேலைச்சாளுக்கியம் நோக்கி வந்து கொண்டிருக்கிறார் என்பது மேலைச்சாளுக்கியத்தில் பரபரப்பை ஏற்படுத்தும். பலவீனத்தை ஏற்படுத்தும். இராஜேந்திரன் போகிறானே நாம் மௌனமாக இருப்பதா என்று விமலாதித்தனை உசுப்பேற்றுவார்கள். அவனும் வரவேண்டியிருக்கும்.

கொங்கு தேசத்தில் கொல்லூரில் இருக்கின்ற ஈராயிரம் பல்லவரையரை முழு படைகளோடு உங்களோடு கலந்து கொள்ளச் சொல்வேன். பல போர்களில் பங்கு பெற்று தனித்த அதிகாரியாகத் திகழ்கின்ற ஈராயிரம் பல்லவரையர் இளவரசர் இராஜேந்திரனுடைய கட்டளைக்குக் கீழ்படிந்து அவரைப் பின்தொடர்கிறார் என்றால் தஞ்சையிலும் கங்கதேசத்திலும் உனக்கு மிகப்பெரிய மரியாதை இருக்கும் இராஜேந்திரா. அதனால் உன்படை வீரர்கள் உற்சாகம் பெறுவார்கள். அந்த உற்சாகம் சோழதேசத்திற்கு உற்சாகத்தைக் கொண்டு வந்து தரும்.

''என் சிவனே... எத்தனைவிதமாக ஒரு விஷயத்தை நீங்கள் யோசிக்கிறீர்கள் என்று நினைக்க எனக்கு பெரும் வியப்பாகவும் பெருமிதமாகவும் இருக்கிறது தந்தையே. அறிந்துகொள்ள வேண்டியது அதிகம் இருக்கிறது என்று இப்போது புரிந்து கொள்கிறேன். நிதானமாக இருக்க வேண்டும் என்றுதான் என் புத்திக்கு அடிக்கடி கட்டளையிடுகிறேன். ஆனாலும் சில சமயங்களில் உணர்ச்சி வசப்படுகிறேன்.''

''நீ உண்மையாக இருக்கிறாய் இராஜேந்திரா. அதனால்தான் உணர்ச்சி வசப்படுகிறாய். ஆனால் இந்த உணர்ச்சிவசப்படலை சரிசெய்து கொண்டால், உன்னை நிதானமாக வெளிப்படுத்தத் தெரிந்து கொண்டால் உன்னைவிட மிகச்சிறந்த சக்ரவர்த்தி எவரும் இருக்கப் போவதில்லை.''

''என்ன சொன்னீர்கள்.''

அருண்மொழி ஆவலோடு கேட்டான்.

''எனக்குப் பிறகு இராஜேந்திரன் தானே சக்ரவர்த்தி. அதனால் அவனைச் சக்ரவர்த்தி என்று அழைத்தேன்.''

''உங்களைவிட்டு நான் பிரிந்துபோக விருப்பப் பட்டதும், அதுபற்றிப் பேசியதும் உண்மைதான்.''

''இதில் தவறில்லை இராஜேந்திரா. பிரிந்துதான் ஆகவேண்டும். வாழை மரத்திலிருந்து கன்றுகள் பிரிந்து வளரவேண்டும். ஒரு மரத்தின் கிளைகள் நன்றாகத் தள்ளி, பிரிந்து வளர வேண்டும். மரத்தோடு ஒட்டி வளர்ந்தால் அது கிளைக்கும் கேவலம். மரமும் பாழ்படும். நீ பிரிந்திருப்பது என்பது வேறு. பிளவு என்பது வேறு. நீ பிரிவது பற்றிப் பேசுவதை இங்கு சிலர் பிளவுபடுத்த நினைப்பார்கள். அதனால்தான் எச்சரிக்கையாக இரு என்று சொன்னேன்.

உனக்கும், எனக்குமிடையே சண்டை என்று நினைத்துக் கொள் வார்கள். அதனால்தான் கவனமாகப் பேசு என்று சொன்னேன்.''

''தந்தையே.. எனக்கென்று தனித்ததாக ஒரு படையை நான் தயார் செய்தது..

''தவறேயில்லை இராஜேந்திரா.. உத்தமசோழர் ஆண்டு கொண்டிருந்த போது, நான் என்ன செய்து கொண்டிருந்தேன் என்று நினைக்கிறாய். வெறுமே ஊர் சுற்றிக் கொண்டிருந்தேனா. திருவிளையாடல் புராணமும், நாயன்மார்கள் கதையும் கேட்டுக் கொண்டிருந்தேனா. நடனமணிகளோடு பேசிக்கொண்டிருந்தேனா. சோழதேசத்தின் உண்மையான வீரர்களைச் சந்தித்து அவர்களிடம் நெருக்கமாய்ப் பேசி எனக்குத் துணையாக இருக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தேன். உத்தமசோழன் முட்டாள். நான் கத்தி இல்லாம லும், கவசம் இல்லாமலும், சிறுபடைகூட இல்லாமலும், இடுப்பில் விபூதிப்பை சொருகி, நெற்றி நிறைய திருநீறு பூசி கோயில் கோயி லாக அலைந்து கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருந்தார்.

நான் அப்போது படையோடு அலைந்திருந்தால், என்னை நிச்சயமாக இரவோடு இரவாய் மடக்கி அழுத்தியிருப்பார். ஆனால், உத்தமசோழனுக்கு ஓலை அனுப்புவேன். என்னவென்று தெரியுமா. மேன்மை தாங்கிய சக்ரவர்த்தி அவர்களுக்கு இப்பவும் இந்த ஓலை கொண்டு வருகின்ற போர் வீரனிடம் நூறு கழஞ்சு பொற்காசு கொடுத்து அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன் என்று எழுதுவேன். எதற்கு என்று அந்த போர் வீரனை உத்தமசோழன் விசாரிப்பான்.

கோயில் பணிகளுக்கு, கிராமத்து கிணறுகளுக்குத் தூர் வாருவதற்கு என்று அவன் சொல்ல, செய்யட்டும். செய்யட்டும். நன்கு செய்யட்டும். நூறு கழஞ்சு என்ன, இருநூறு கழஞ்சு எடுத்துக் கொண்டு போ என்று அனுப்புவார். நூறு கழஞ்சு கோயில் பணிக்கும், இன்னொரு நூறு கழஞ்சு குதிரைகள் வாங்கவும் செலவிடுவேன். அந்த குதிரைகளை என்னை நம்பிய வீரர்களுக்குப் பரிசாக அளிப்பேன். அவர்கள் என்னைச் சந்திக்க, விரைவாக வந்து சேர எத்தனை விதமான வசதிகள் செய்து கொடுக்க முடியுமோ அத்தனையும் செய்து கொடுப்பேன். இந்தப்படை ஒவ்வொரு அரசனுக்கும் தேவை. இன்றிலிருந்து உன் படை வீரர்களுக்குப் பயிற்சிகளைக் கடுமையாக ஆரம்பித்துவிடு.

குழுக்குழுவாகப் பிரித்து தனித்தனியான இடத்தில் விதம் விதமான பயிற்சிகளைச் செய்யச் சொல். குறிப்பாய் அவர்களை மலையேறச் சொல். உடம்பு வலுப்பெறட்டும். உஷ்ணத்தை உடல் தாங்கட்டும். மூன்று மாதத்தில் போர் முனைக்குப் போக வேண்டு மென்று உற்சாகப்படுத்து, துவண்டு விடுபவர்களை, உடனடியாக விரைவாக விலக்கிவிடு.

ஒருவர் சுணங்கினால் ஒரே இரவில் ஒன்பது பேர் சுணங்கு வார்கள். கடற்கரையோரப் பட்டிணங்களுக்கு நான் ஆள் அனுப்பி குதிரைகள் சேகரிக்கிறேன். இதை விட முக்கியமான வேலை கீழைச்சாளுக்கியத்திலும், தொண்டை நாட்டிலும், நடு நாட்டிலும் நாம் தச்சர்களை அனுப்பி நிறைய தேர்கள் செய்யச் சொன்னோம். அத்தனை தேர்களையும் குதிரைகள் பூட்டி கங்க தேசத்தின் எல்லைக்கும், காஞ்சிபுரத்திற்கும் கொண்டு வரவேண்டும் என்று சொல்லிவிடு.

இம்முறை ஒரு வீரன்கூட, கால்நடையாக மேலைச்சாளுக்கியம் நோக்கி நடக்கப் போவதில்லை. அத்தனை பேரும் வண்டியிலோ, குதிரையிலோதான் பயணப்படுவார்கள். எனவே, பயணம் வெகு வேகமாக இருக்கும். எனவே கங்க தேசத்தில் உணவு தயாரிக்கின்ற முறையைத் துரிதமாக்க இப்பொழுதே உத்தரவுகள் பிறப்பித்து செய்துவிட வேண்டும். உணவுக் கூடங்கள் அங்கங்கே ஏற்பாடு செய்ய வேண்டும். பாத்திரங்களோடு போர் வீரர்கள் மேலே போய்விட வேண்டும்.

அடுத்ததாக, யுத்தத்தில் காயம்பட்டு ரத்த இழப்பால் போர் வீரர்கள் இறக்கிறார்கள். இந்த ரத்த இழப்பை உடனடியாக நிறுத்தக்கூடிய மருந்துகளை இப்போதே மருத்துவர்கள் தயார் செய்ய வேண்டும். உத்தமசோழர் இருக்கும்போது இம்மாதிரியான மருத்துவம் இங்கே நன்கு பரவியது. அதை சேரதேசத்து வைத்தி யர்கள் பாண்டிய தேச வைத்தியர்களுக்கும், தொண்டை தேசத்து வைத்தியர்களுக்கும் சொல்லிக் கொடுத்தார்கள். அவர்களை மருந்துகள் தயார் செய்யச் சொல்லி, நாம் போவதற்கு முன்பே கங்க தேசத்திற்கு அனுப்பி, அங்கங்கே மருத்துவச்சாலைகளை ஏற்படுத்தி விடவேண்டும.

இராஜேந்திரா உன்னுடைய படை வீரர்களை நீ தயார் செய்வது போல, நீயே கருமார்களிடம் பேசி ஆயுதங்களைத் தயார் செய்வது பற்றியும் விவாதிக்க வேண்டும்.

குதிரைகள் தேவைப்படும். புதுத்தேரில் குதிரைகளைப் பூட்டுவதால் குதிரைகளுக்கு இழுத்து ஓடுவது சிரமமாக இருக்கும். எனவே கல்லும், முள்ளும் கலந்த பாதையில் போவதற்கு அவற்றுக்கு லாடம் அடிக்கவேண்டும். அந்த லாடம் அடிக்கின்ற கலையை அந்தக் கருமார்கள் வெகு துரிதமாகச் செய்வதற்குப் பயிற்சி பெறவேண்டும். ஆயிரக்கணக்கான லாடங்கள் தயார் செய்ய வேண்டும். லாடம் அடித்த குதிரைகளைத் தேரில் பூட்டி ஓட்டப் பழக்க வேண்டும். எனவே, இம்மாதிரியான வேலைகள் அதிகம் தொடர்ந்து நடைபெற வேண்டும்.''

''தந்தையே... அப்போது கோயில் பணி.''

''அது தானாக நடந்து கொண்டிருக்கும். பாறைகள் வருவதும், சிற்பிகள் அதைச் செதுக்குவதும், மேலே அடுக்குவதும் ஒருகுறையு மின்றி நடந்து கொண்டிருக்கும். அந்த ஏற்பாடுகளை நான் பார்த்துக் கொள்கிறேன். இந்த இடம் விட்டுக் கிளம்பிய பிறகு, அந்த ஏற்பாடுகளைப் பஞ்சவன்மாதேவி கவனித்துக் கொள்வாள்.''

''தந்தையே மறுபடியும் கேட்கிறேன். நீங்கள் எதற்குப் போர் முனைக்கு. கிருஷ்ணன்ராமன் வராத போது, நீங்களும் இங்கே தங்கியிருக்கலாமே.

''ஹா... எல்லாப் புகழையும் நீயே அடித்துக்கொண்டு போகலாம் என்று பார்க்கிறாயா. ஒருக்காலும் நான் அதற்கு விடமாட்டேன்'' என்று சக்ரவர்த்தி சொல்லிச் சிரிக்க. இராஜேந்திரர் மறுபடியும் வாய்விட்டுச் சிரித்தார்.

சக்ரவர்த்தியோடு கைகோர்த்துக் கொண்டார்.

''நான் அவ்விதம் நினைக்கவில்லை. எல்லாப் புகழும் உங்களுக்கே போகட்டும். அது குறித்து எனக்கு நெல் முனையளவும் கவலையில்லை.'' இளவரசர் இராஜேந்திரர் சொல்லி முடிக்க, வாயகன்ற வெள்ளிக் கிண்ணங்களில் சூடாக ரசம் வந்தது. வறுத்த கடலை வந்தது. வாழைப்பழங்கள் வந்தன. வீரர்கள் மூன்று கால்களுடைய மரப்பீடத்தை ஓடுகின்ற நீரில் அழுத்தி நிற்க வைத்து அதன்மீது கொண்டு வந்தவைகளை பரிமாறினார்கள்.

சக்ரவர்த்தி இரண்டு கையாலும் ரசம் வாங்கி சூடு ஊதி உறிஞ்சிக் குடித்தார். மெல்ல இருமினார். மறுபடியும் ஊதி உறிஞ்சிக் குடித்தார்.

''ஆஹா... என் தொண்டைக்கு இதமாக இருக்கிறது.'' என்று உரக்கச் சொன்னார்.

''என்ன ஆயிற்று உங்கள் தொண்டைக்கு.''

''இடையறாது ஒரு கரகரப்பு இருக்கிறது.''

''உங்களுக்கு நெஞ்சில் சளி இருக்கிறது என்று நினைக்கிறேன். அந்தச் சளி மேலேறினால் தொண்டையைப் பாழ்படுத்தும். மூச்சுப்பயிற்சி செய்ய வேண்டும். சில மூலிகைச் சாறுகளைக் குடிக்க வேண்டும்.''

அருண்மொழி மிருதுவான குரலில் சொன்னான்.

''செய்யலாம்.''

''இராஜேந்திரனிடம் இதைச் சொல்லிவிட்டேனல்லவா. எனக்குப் பாதி மனப்பாரம் குறைந்து விட்டது.''

''என்ன தந்தையே.. நான் அவ்வளவு மனச்சங்கடத்தை ஏற்படுத்திவிட்டேனா.''

''இல்லையடா. எது எப்படி திரும்பும் என்று நானாகவே சில கற்பனைகள் செய்துகொண்டு, எனக்கு எதிராக நீ திரும்பினால் உன்னை என்ன செய்வது என்றும் யோசித்து வைத்திருக்கிறேன்.''

''அட... அப்படியா... என்னை என்ன செய்வதாக உத்தேசம் என்று நிறைத்தீர்கள்.''

''சோழ தேசத்தின் வடபகுதியை நடுநாட்டோடும், தொண்டை நாட்டோடும் இணைத்து உன்னை அங்கே சக்ரவர்த்தியாக்கி விடுவது என்று நினைத்திருக்கிறேன்.''

''அதற்கு ஒருக்காலும் சம்மதித்திருக்க மாட்டேன்.''

''எனக்குத் தெரியும். நீ தஞ்சையில்தான் இருக்க விரும்புவாய் என்று.''

''தந்தையே உடனே என்னை இழிவாகப் பேசாதீர்கள்.''

மறுபடியும் அப்பனும், பிள்ளையும் மோதிக் கொள்ளத் தயாரானார்கள்.

அருண்மொழி அறைந்து கைகூப்பினான்.

''போதும் விளையாட்டாக ஆரம்பித்து ஒவ்வொரு முறையும் இது வினையாக முடிகிறது.''

''இந்த மாதிரியான நம்முடைய பிணக்குகளுக்கு என்ன காரணம் தெரியுமா. எது அடிப்படை தெரியுமா.''

இளவரசர் உரத்த குரலில் பேசினார்.

''நீங்கள் கோயில் கட்டுவது தான் தந்தையே. போன வருடமே மேலைச்சாளுக்கியம் நோக்கி நகர்ந்து, சத்தியாசிரியனை அடித்துச் சிதைத்துவிட்டு, திரும்ப வந்து இப்பொழுது கோயில் பணி ஆரம்பித்திருந்தால் மிக உத்தமமாக இருந்திருக்கும். எதிரே இருக்கும் பகைமையை முடிக்காமல் நீங்கள் கோயில் கட்டுகிறீர்களே என்ற வருத்தம்தான் உங்களுக்கு எதிராக என்னைப் பேச வைத்ததே தவிர, ஒருக்காலும் நான் சோழதேசத்தைப் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்று ஆசைப்பட்டதேயில்லை. உங்களுக்கு இளவரசராக இருக்க, எனக்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லை. நீங்கள் சக்ரவர்த்தியாக இருக்கும்போது, இன்னொரு இடத்தில் சக்ரவர்த்தி என்று ஒருநாளும் நான் பட்டம் சூட்டிக் கொண்டிருக்க மாட்டேன்.''

''கோயில் கட்ட விரும்பியது.'' என்று சக்ரவர்த்தி ஆரம்பித்ததும், இளவரசர் கை உயர்த்தினார்.

''எனக்குத் தெரியும். அது உங்கள் தனித்த விருப்பம். அதில் தலையிட எவருக்கும் உரிமையில்லை. காலாகாலத்திற்கும் சோழ தேசத்து நாகரிகமும், உங்கள் பெயரும் நிலைத்து நிற்க நீங்கள் செய்கின்ற அதி அற்புதமான காரியம். இதில் எனக்கு எந்த எதிர்ப்பும் இல்லை. இப்போதும் சொல்கிறேன். நீங்களும், பஞ்சவன்மாதேவியும் தஞ்சையிலே தங்கி, இந்தக் கோயில் பணியைச் செய்யுங்கள். நான் அருண்மொழியோடு மேலைச்சாளுக்கியம் போய் சத்யாசிரியன் முழங்காலை முறித்துவிட்டு, வெற்றி வாகை சூடிவிட்டு வருகிறேன். இப்படி நான் சொல்லும்போதெல்லாம் என்னைக் கேலி செய்தால் நான் என்ன செய்வது. நீங்கள் சொல்லுவதற்குச் சரி என்றுதான் தலையசைக்க வேண்டியிருக்கிறது.''

''உனக்கு அரசியல் புரியவில்லை இராஜேந்திரா. இந்தக் காலக் கட்டத்தில் நீயும், நானும் பிரிந்திருப்பது தவறு. நமக்கிடையே பிரிவு ஏற்பட்டது. பிளவு ஏற்பட்டுவிட்டது என்று ஊர் மக்கள் நினைத்துக் கொண்டிருக்க, நம்முடைய பகைவர்கள் புரிந்து வைத்துக் கொண்டிருக்க, நீ போருக்கும், நான் வீட்டிற்கும் இருந்தால் அப்பனும், பிள்ளையும் பிரிந்துவிட்டார்கள் என்று தெள்ளத்தெளிவாகப் பேசுவார்கள். அந்தப் பேச்சு உன் காதுவரைக்கும் வந்து, உனக்கும் அப்படியோ என்ற சந்தேகம் வரும். அதற்கு மாறாக நீயும், நானும்

ஒரே படைக்குத் தலைமை தாங்கி ஒன்றாகப் போர்முனைக்கு வருகிறோம் என்றால், சோழ தேசத்தை அழிக்கவே முடியாது என்ற நிலைமைக்கு அவர்கள் ஆளாவார்கள். ஒரு சூட்சுமம், ஒரு சூழ்ச்சி, இந்த நேரத்தில், நீயும், நானும் ஒரே இடத்தில் தான் ஓரிரு வருடங்கள் தங்கியிருக்க வேண்டுமென்று நான் விரும்புகின்றேன். நம்முடைய பிணக்குகளையெல்லாம் விட சோழ தேசம் முக்கியம். என் மகளின் நல்வாழ்க்கையைவிட சோழதேசம் முக்கியம். மருமகனின் உயிரைவிட சோழதேசம் முக்கியம். ஏன், என்னைவிட, உன்னைவிட சோழதேசம் முக்கியம். என்ன சொல்கிறாய் அருண்மொழி.''

''நீங்கள் சொல்வது மொத்தமும் சரி சக்ரவர்த்தி, கருமார் பிரச்சினையை ஊதிப் பெரிதாக்கி விட்டார்கள். அந்தணர்கள் அதிகம் பேசத் துவங்கிவிட்டார்கள். நீங்கள் கோயில் கட்டுவதை இளவரசர் எதிர்க்கிறார் என்று வதந்திகள் பரவத் துவங்கிவிட்டன. அரசாங் கத்தில் பிளவு வந்துவிட்டது என்றும் மக்கள் நினைக்கிறார்கள். இது தவிர, இன்னொரு விஷயம் நீங்கள் பேசுவீர்கள் என்று நினைத்தேன். பேசவில்லை. அதனால் நான் பேச ஆசைப்படுகிறேன்.''

''சொல், அருண்மொழி.''

''சாணக்கியனுடைய அர்த்த சாஸ்திரத்திலே இதுபற்றி ஒரு குறிப்பு இருக்கிறது. வேகமான ஒரு சமுதாயத்தில் மூத்தோருக்கும், இளையோருக்கும் உடனடியாக பிணக்கு ஏற்படும். சில சமயம் அது பெரிதாவதும் கூடும்.''

சக்ரவர்த்தியும், இளவரசரும் கூர்ந்து கவனித்தார்கள்.

''இந்த சோழதேசத்தில் இது தவிர, இன்னொரு பிரச்சினை ஏற்படுகிறது. மூத்த போர் வீரர்களுக்கும் இளைய படைவீரருக்கு மிடையே அடிக்கடி உரசல்கள் ஏற்படுகின்றன. இளைய படை வீரர்கள் தங்கள் பேச்சைக் கேட்க வேண்டும். தங்கள் அனுபவத்தை மதித்து நடக்க வேண்டும் என்று முதிய போர் வீரர்கள் விரும்பு கின்றார்கள். இளைய படைவீரர்கள் இந்தக் கிழங்கள் எப்போது சாகும் என்று வாய்விட்டே பேசுகிறார்கள். மறவர்களிடம் இருக் கின்ற இந்தப் பிளவை அந்தணர்கள் உபயோகப்படுத்திக் கொண்டும் இருக்கிறார்கள். ஒருவேளை இது பெரிதானால் அது அந்தணர்களால் ஆவதாக இருக்கும்.

''இது கவலைப்படும் அளவுக்கா இருக்கிறது.''

''இனிமேல் கவலைப்படும் அளவுக்கு வளரக் கூடும்.''

''இதற்கு என்ன தீர்வு.

''முதிய படைவீரர்கள் பலரை நீங்கள் சொன்னது போல மதுரைக்கோ, நடுநாட்டிற்கோ, தொண்டை தேசத்திற்கோ அல்லது கோயில் பணிக்கோ அனுப்பி, இளைய படையோடு மேலைச் சாளுக்கியம் நோக்கி நகர்வது நல்லது.''

''முதிய படைவீரர்கள் தேவையில்லை என்று நினைக்கிறாயா.''

''மிகக் குறிப்பாக, மிகக் கூர்மையாக, மிகத் தெளிவாக மறவர் குல வாழ்க்கையையே வாழ்க்கை என்று நினைப்பவர்களை வைத்துக்கொண்டு சற்று ஒய்வாக, அலுப்பாக யுத்தம் போதுமென்று நினைப்பவர்களை, இங்கு தங்க வைத்து விடலாம் என்று நினைக் கிறேன்.''

''இதை எப்படிச் செய்வது.''

''இதைச் செய்ய ஒருவரை நியமிக்க வேண்டும்.''

''யாது.''

''என் தந்தை கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர். நான் சொன்னால் சீறுவார்கள், இளவரசர் சொன்னால் முணுமுணுப் பார்கள். நீங்கள் சொன்னால் உங்களைக் கெஞ்சுவார்கள். என் தந்தையான கிருஷ்ணன் ராமன் சொன்னால் மறுதலிக்காமல் பயந்து ஏற்றுக் கொள்வார்கள். என் தந்தை இதைத் திறம்படச் செய்வார்.''

''ஆனால் போர் முனைக்கு வராமல் இங்கிருக்க அவர் ஏற்றுக் கொள்ள வேண்டுமே. அவரும் போர்முனைக்கு வருகிறேன் என்றல்லவா பரபரப்பார்.''

''இல்லை. இம்முறை அவ்விதம் பரபரக்கமாட்டார் என்று நினைக்கிறேன்.''

அமைதியான குரலில் அருண்மொழி சொன்னான்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய் அருண்மொழி.''

அக்கறையோடு சக்ரவர்த்தி கேட்டார்.

''அவருக்கு உடம்பும், மனதும் பரந்துவிட்டன. போதுமென்ற இடத்திற்கு வந்துவிட்டார் என்று தோன்றுகிறது. நீங்கள் ஆதரவாகப் பேசி உற்சாகப்படுத்தி அமைதிப்படுத்தினால் நிச்சயம் உற்சாகமாகி தஞ்சையிலேயே தங்குவதற்குச் சம்மதிப்பார்.''

அருண்மொழி சக்ரவர்த்தியைப் பார்த்துச் சொன்னான்.

''இளவரசர் ராஜேந்திரரும் மரியாதையாகப் பேசினால் இன்னும் மகிழ்ச்சியாவார்.''

''பேசிவிட்டால் போகிறது.

இளவரசர் இராஜேந்திரர் உடனடியாக சம்மதம் சொன்னார்.

அரசர் வாழைப்பழம் தின்றுவிட்டு தோலை ஓடுகின்ற ஆற்றில் வீசி எறிந்தார்.

''குடித்த ரசமும், சில்லிப்பும் ஓய்வு கேட்கின்றன. ராஜேந்திரா நான் கரைக்குப்போய் அப்படியே மாளிகைக்குப் போகிறேன். வருகிறாயா'' என்று சொல்ல, இளவரசர் ராஜேந்திரரும் எழுந்திருந்தார். சக்ரவர்த்தி எழுந்திருந்து ராஜேந்திரரின் கைகளைப் பிடித்துக் கொண்டு நடக்க, ராஜேந்திரரும் தந்தையின் தோளைப்பிடித்துக் கொண்டு தண்ணீரில் கால்வைத்து நடந்து கரையேறினார். தீப்பந்தங்கள் அசைந்தன.

அருண்மொழி பின்னால் நடந்து போனான். ராமாயணத்தில் வருகின்ற ராமனும், லட்சுமணரும் மறுபடியும் இங்கே தந்தையும், மகனுமாகப் பிறந்திருக்கிறார்கள் போலும் என்று நினைத்துக் கொண்டான்.

அவர்கள் நடப்பதையே காதலோடு பார்த்தான்.

தமிழ் பேசுகின்ற தேசத்தின், ஒரு காலகட்டத்தின் மிக உயர்ந்த சரித்திரத்தை இவர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள் என்று அவன் மனம் நினைத்துக்கொண்டது. சந்தோஷப்பட்டது.

''ஆனால், இவ்வளவுதானா போருக்கு உண்டான ஆயத்தங்கள். வேறு எதுவும் இல்லையா, ஒருவேளை பாண்டியர்கள் படைதிரட்டி தாக்கினால் என்ன செய்வது என்று சக்ரவர்த்தி யோசித்திருக்க மாட்டார். அதுபற்றி நாம் கேட்கமாட்டோமா அல்லது சக்ரவர்த்தி யோசித்திருப்பார் என்று மௌனமாக இருந்துவிட வேண்டுமா.

இல்லை. கேட்கத்தான் வேண்டும்.

எப்போது கேட்பது.

இப்போதேவா அல்லது தனியாகவா.

சற்று பொறுப்போம். உள்ளுணர்வு ஒன்று சொல்கிறது. வெகு நிச்சயமாய் சக்ரவர்த்தி தனியாகப் பேசக் கூப்பிடுவார் என்று சொல்கிறது. காத்திருப்போம். அப்படியில்லையெனில், சக்ரவர்த்தியைப்

பின் தொடர்ந்து நம்முடைய சந்தேகத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வோம் என்று தீர்மானம் செய்தான்.

சக்ரவர்த்தியும், இளவரசரும் மாளிகைக்குள் நுழைந்தார்கள்.

''கதவைச் சார்த்தி விடு. எவரையும் நுழைய விடாதே.

சக்ரவர்த்தி வாயிற்காப்போனுக்குக் கட்டளையிட்டார். எவரையும் என்பதை அழுத்திச் சொன்னார். அவர்கள் உள்ளே நுழைந்தும் இரண்டு வாயிற்காப்போன்களும் சட்டென்று கதவு இழுத்து மூடிக்கொண்டார்கள்.

அருண்மொழி திகைத்தான். மூடிய கதவையே பார்த்தான். கதவுக்கும் அவனுக்கும் ஐம்பதடி தொலைவு இருந்தது. வேறு ஏதோ வேலைக்குப் போவதுபோல சட்டென்று திரும்பி மாளிகையிலிருந்து தனியே இருந்த சமையலறை பக்கம் போய், ''ரசம் நன்றாக இருந்தது. இன்னும் வேண்டும். பாயசம் அனுப்பியிருக்கலாமே ஏன் அனுப்பவில்லை. என்று கேட்டபடி சமையல் அறைக்குள் நுழைந்தான். அவன் மனதில் மெல்லியதாய் ஒரு துவளல் இருந்தது.

''ஏன் தந்தையே அருண்மொழியை விலக்கி விட்டீர்கள்.'' இளவரசர் கேட்டார்.

''நாம் பேசியதை அருண்மொழி கிருஷ்ணன்ராமனிடம் சொல்வான்.''

''சொல்லலாம். சொல்லக்கூடாது என்று சொன்னால் சொல்லாமலும் இருப்பான்.''

''கிருஷ்ணராமனுக்கு விமலாதித்தனிடம் ஒரு இளகிய மனம் இருக்கிறது. விமலாதித்தனை நாம் முன்னே களப்பலியாக அனுப்புவதை, அவன் கிருஷ்ணராமனிடம் சொன்னால், அவர் விமலாதித்தனிடம் பேச, ஒருவேளை விமலாதித்தன் அதற்கு மறுக்கக்கூடும். நான் உன் தஞ்சையைக் காவல் காக்கிறேன் என்று விமலாதித்தன் காஞ்சியிலிருந்து தஞ்சைக்கு தன் படையோடு வந்தால் அது குழப்பம் விளைவிக்கும்.

''அதை முடிவு செய்வது நாமா, விமலாதித்தனா.''

''முடிவு செய்வது நாம்தான். இருப்பினும் விமலாதித்தன் விரும்பினால், நாம் எதிர்க்குரல் கொடுக்க முடியாது.

''பெண்ணை அறுத்து தனியே வைக்கவும் தீர்மானித்த நீங்கள், இதற்கா பயந்து விடுவீர்கள்.''

''பெண்ணை விலக்கி வைப்பது பற்றி நானும் கவலைப்பட வில்லை. விமலாதித்தனும் கவலைப்படமாட்டான். ஆனால், இந்தப் போரில் ஆரம்பத்தில் இருப்பது யார் என்பதில் குழப்பம் ஏற்பட்டால், அது சத்யாசிரியனுக்குத் தெரிந்தால், கங்க தேசத் திற்குத் தெரிந்தால், பாண்டியர்களுக்கும், சேரர்களுக்கும் தெரிந்தால் நகைப்பாகி விடும். ஒரு முனைப்பான போராக இது இல்லாமல் போய்விடக்கூடும். எனவே, நீ அருண்மொழியைத் தனியே அழைத்து, இது குறித்து கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரிடம் எதுவும் பேசக்கூடாது என்று சொல். என் தனி உத்தரவாக அது இருக்கட்டும். ஏனெனில் நாளை உனக்குக் கீழே பிரம்மராயராகப் பணிபுரிபவன் அவன்தான். அவனிடம் அவன் தந்தையை எதிர்த்து நிற்கச் சொல்ல வேண்டிய உத்தரவும் நீ செய்தால்தான் நன்றாக இருக்கும். நான் செய்தால், நான் தந்தையையும் நம்பவில்லை. மகனையும் நம்பவில்லை என்று ஆகிவிடும் அல்லவா. அதனால் தான் உன்னிடம் சொல்கிறேன்.''

''இப்படிச் சட்டென்று கதவு சார்த்திவிட்டீர்களே.. துவண்டு போகமாட்டானா.''

''போகமாட்டான்.''

''ஏன்.''

''அதற்கு சரியான ஒரு பதிலை மனதில் வைத்திருக்கிறேன்.''

''என்ன.''

''அருண்மொழியை இந்தப் படையெடுப்பிலிருந்து விலக்கி, பாண்டிய தேசத்திற்கு அனுப்பினால் என்ன என்று சொல்லுவதற் காகக் கதவு சார்த்தினேன். அப்படி பாண்டிய தேசம் இல்லாமல், விமலாதித்தன் இங்கு இருக்கும்போது, கீழைச்சாளுக்கியத்திற்குச் சிறு படையோடு அருண்மொழி போனால் என்ன. கீழைச்சாளுக் கியத்தின் மனோநிலை எப்படி இருக்கிறது என்று தெரிந்து வந்தால் என்ன என்று உன்னிடம் விசாரித்து விடுவதாகச் சொல்லிவிடுவேன். அருண்மொழியை இந்தப் போரிலிருந்து விலக்கலாமா, வேண் டாமா என்று பேசுவதாக, அப்படிப் பேசும்போது அருண்மொழி இல்லாமல் இருந்தால் நல்லது என்று சொல்வதாகச் சொல்லி விடுவேன்.''

''ஆனால் உண்மையில் நீங்கள் விரும்பியது, இந்தப் பேச்சு வெளியே போகக்கூடாது என்பதே.

''இந்தக் கட்டளையை அருண்மொழி நிறைவேற்றினால் அவன் உனக்கு பிரம்மராயன். மாறாய் இது கிருஷ்ணன்ராமனுக்குத் தெரிந்து, கிருஷ்ணன்ராமன் மூலம் விமலாதித்தனுக்குப் போனால் அருண்மொழி சாதாரண உபசேனாதிபதி. கோட்டைக்காவல் தலைவன்.''

''ஏன் அவ்வளவு சந்தேகப்படுகிறீர்கள்.''

''நான் அரசனாக இருக்கும்போது சகலரையும் சந்தேகப்படுவது என் உடன் பிறந்து விட்டது. நீயும் அப்படி இரு.

''தந்தையே உங்களைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

''நான் வெற்றி பெற்றுவிட்டேன் என்று அர்த்தம். இன்னும் நீ தேர்ச்சி பெறவில்லை என்றும் அர்த்தம்.

கதவுளைத் திறங்கள் என்று உத்தரவிட, தடேரென்று இரண்டு கதவுகளும் திறந்தன. பாயசம் குடித்தபடியே தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்த அருண்மொழி மெல்ல உள்ளே வந்தான்.

''என்ன... என்னை விலக்கி விட்டீர்கள். அப்படியென்ன ரகசியம்.

நேரடியாய் அரசரிடம் போய்க் கேட்டான்.

''படையெடுப்புக்கு உன்னை அழைத்துப் போக வேண்டுமா. வேண்டாமா என்பது பற்றி பேசப்போயிருந்தோம். நீ படையெடுப்புக்குத் தேவையில்லை அருண்மொழி.''

''ஏன். நான் படையெடுப்புக்கு வராமல் என்ன. மேலைச் சாளுக்கியத்திற்குள் என்னால் ஊடுருவ முடியாது என்று நினைத்துக் கொள்கிறீர்களா.''

''அருண்மொழி. இந்தப் போர் மிகக் கடுமையாக இருக்கும்.

''அதனால் என்னை வேண்டாம் என்கிறீர்களா. என்னைக் குழந்தையாக பாவிக்கிறீர்களா. என்ன இது சக்ரவர்த்தி, ஏன் இப்படி அவமானப்படுத்துகிறீர்கள்.''

''இல்லை. அதைவிடவும் முக்கியமான வேலை இருக்கிறது.

''என்ன.''

''கீழைச்சாளுக்கியம் போகிறாயா.''

இப்போது ராஜேந்திரர் தொடர்ந்தார்.

''அல்லது. பாண்டியதேசத்திற்கு பயணம் செய்து, அங்குள்ள கோயில்களைச் சரிசெய்து, அங்குள்ள மக்களோடு பேசி இன்னும் உறுதி செய்து கொள்கிறாயா.''

அருண்மொழி இருவரையும் ஊடுருவிப் பார்த்தான். மெல்லத் தலைகுனிந்து கொண்டான்.

இவர்கள் பேசியது இதுவல்ல என்பதை அவன் உள்மனம் நன்றாகக் கணித்துவிட்டது. ஆனால், என்ன செய்ய.. இவர் சக்ரவர்த்தி. இவர் இளவரசர். இவர்களுக்குக் கீழ் பணிபுரிகின்ற சாதாரண ஊழியன் நான். இந்நேரத்தில் அப்பா என்ன சொல்வார். மிகப்பக்குவமாக சரி என்று தலையசைப்பார். இவர்களையே வேவு பார்ப்பார். இந்நேரம் அப்பாவிற்கு இங்கே பேசியது அனைத்தும் தெரிந்திருக்கக் கூடும் அல்லது நான் வீட்டுப்படியேறியதும் என்ன பேசினார் என்று அப்பா விசாரிப்பார். சோழதேசத்தின் நன்மைக்காக நீ சொல்லித்தான் ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பார் என்னுடைய இன்றைய நிலை மிக இக்கட்டானது.

அவன் சட்டென்று தலை நிமிர்த்தினான்.

''சக்ரவர்த்தி, பாண்டிய தேசத்திற்குப் போய் அந்த ஜனங்களை வசீகரிப்பது ஒன்றும் கடினமான வேலையல்ல. கீழைச்சாளுக்கியம் விமலாதித்தன் இல்லாமல் அவன் தமையனாலும், உபசேனாதி பதிகள் பலராலும் தகப்பனாலும் செவ்வனே நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

விமலாதித்தன் இருக்கும்போது எப்படி நடந்ததோ அவ்வித மாகவே அரசாங்கம் இயங்கும். அங்கு போய் நான் செய்ய வேண் டியது ஒன்றும் இல்லை. நான் உங்களை வேறு ஒரு செயலுக்கு அனுமதி கேட்கலாம் என்று நினைத்தேன்.''

''என்ன.''

''நீங்கள் போவதற்கு முன் ஒற்றர் படையின் துணையோடு, மாறுவேடத்தில், அனேகமாகக் காவி உடையணிந்து சேரதேசத்து பிராமணர்கள்போல சத்யாசிரியனுடைய அரண்மனைக்குள் நுழைந்தால் என்ன. அவன் தேசத்திற்குப் போய் அவனுடைய தேசத்தினுடைய பலம் எப்படியிருக்கிறதென்று தெரிந்து வந்தால் என்ன. நீங்கள் மூன்று மாதம் பொறுத்துத்தானே பயணப்படப் போகிறீர்கள். அதற்குள் நான் இரண்டு தடவை போய் வந்து விட லாமே. அது உங்களுக்கு உதவியாக இருக்குமல்லவா. பருவநிலை

பற்றியும். எந்தவிதமான சோதனை வரும் என்பது பற்றியும், போர் விவரம் தெரிந்த ஒருவர் ஆராய்வது நல்லதல்லவா. இந்நேரம் நீங்கள் இதைச் செய்து முடித்திருந்தால், இந்தக் கேள்வியை மன்னித்து விடுங்கள். செய்யவில்லையெனில் நான் நாளையே புறப்படு கிறேன்.''

*சக்ரவர்த்தியும், இளவரசரும் திகைத்தார்கள்.*

*இது நல்ல யோசனை. ஆனால், அருண்மொழியைப் போரி லிருந்து இழப்பதா என்ற கேள்வி வந்தது. எப்படிப் போரிலிருந்து இழக்கப் போகிறோம். போர்முனைக்கு அவன் வந்து விடுவானே என்ற எண்ணமும் ஏற்பட்டது. ஆனால் மிகக் கெட்டிக்காரன்.*

*சக்ரவர்த்தி மனதுக்குள் பாராட்டினார்.*

*என் மகனுக்கு ஏற்ற மிகச்சிறந்த பிரம்மராயன். முகம் வேதனைப் பட்டது. மலர்ந்தது சாதாரணமானது. நம்மை உற்றுக் கவனித்தது. எடைபோட்டது. ஏதோ ஒரு கணக்குக்குள் தன்னைத் திணித்துக் கொண்டது. பிறகு அத்தனையும் மீறி சமாளித்து, வேறு ஒரு மிகச் சரியான நகர்வை அருண்மொழி செய்துவிட்டான்.*

*இதற்கு மறுத்தால் தகுந்த காரணம் சொல்ல வேண்டும். ஆனால் மறுப்பதற்கு ஒன்றுமில்லை. இது மிக நல்ல வேலை. அற்புதமான யுக்தி. ஒருவேளை அருண்மொழி மாட்டிக் கொண்டால் மிகப்பெரிய நஷ்டம். தடுத்தால் இதைச் சொல்லித்தான் தடுக்க வேண்டும்.*

''அருண்மொழி இதைச் செய்வதற்கு நிறைய ஒற்றர்கள் இருக்கிறார்கள். வைணவதாசன் மிக அற்புதமாக இதைச் செய்து விடுவான். உன்னுடைய யோசனை மகத்தானது. வைணவதாசனை விட இன்னும் தெளிவாகவும், கூர்மையாகவும் நீ இதைச் செய்வாய். அங்கு போய் உனக்கு ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் அது எனக்கல்ல. இராஜேந்திரனுக்கு மிகப் பெரிய நஷ்டமாக முடியுமே என்று யோசிக்கிறேன்.''

''வெற்றியோடு திரும்புவேன் சக்ரவர்த்தி. நான் யார் என்பதை நிரூபிப்பேன். உங்களுக்கு மட்டுமல்ல. நாளைக்கு சக்ரவர்த்தியாகப் போகின்ற உங்கள் மகன். எனது அருமை நண்பர் இளவரசர் இராஜேந்திரருக்கும், நான் யார் என்பதை நிரூபிப்பேன். இதுவொரு மகத்தான சந்தர்ப்பம். உங்கள் எல்லோரையும் விட முன்னே சத்யாசிரியனுடைய தலைநகரம் நோக்கிப் போவதற்கு அனுமதி கொடுங்கள். இப்போது கூட சொல்ல வேண்டாம். நாளை.. நாளை மறுநாள் நீங்கள் யோசித்து முடிவு சொன்னால் போதும் பாயசம்

அற்புதம். நீங்கள் இன்னும் குடிக்கவில்லையே. நான் இரண்டு கிண்ணம் குடித்துவிட்டேன். இளவரசே நான் விடைபெறுகிறேன். சக்ரவர்த்திக்கு என் நமஸ்காரங்கள்.''

அவன் குனிந்து வணங்கினான். மெல்லப் பின்னடைந்தான். தோட்டத்தில் இறங்கினான். குதிரைக்காக சீழ்கை ஒலி செய்தான். குதிரை கனைத்து தன் இருப்பைத் தெரிவித்தது. கை தட்டினான். அருகே வந்தது. தாவி ஏறிக் கொண்டான். மெதுவாகக் குதிரையைத் தன் வீடு நோக்கிச் செலுத்தினான்.

''என்ன நினைக்கிறாய் இராஜேந்திரா... கிருஷ்ணன் ராமனிடம் போய்விடுமா.''

''அதனால் என்ன. விமலாதித்தனை நான் கையாள்கிறேன். அந்தக் கவலையை என்னிடம் விடுங்கள். போர் பற்றிய வேறு என்னென்ன முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றி மறுபடியும் நாம் எப்போதும் பேசலாம்.

''நாளை மறுநாள் பேசலாம்.

''வேறு என்ன வேலை தந்தையே.

''நீயும் நானும் சிற்பிகளோடு அமர்ந்து அவர்களுக்கு மெல்ல இந்த விஷயத்தைச் சொல்லி அவர்கள் தனியே செயல்பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்துவோம். பிறகு நீயும், நானும் ஒன்றாகச் சேர்ந்து, தஞ்சையைச் சுற்றியுள்ள அந்தணர்களை அழைத்து போர் பற்றிச் சொல்லி, உங்கள் பிரச்சினை பற்றி இப்போது பேச இயலாது என்றும், ஒருமுனைப்பாக இருக்க வேண்டும் என்றும் சொல்லுவோம்.

''பிறகு.

''நாளை மறுநாள் விடியலில் கருமார்களை அரண்மனைக்கு அழைத்து பட்டும், பரிசும் கொடுத்து அவர்களுடைய வேலைப் பளு அதிகரிக்கும் என்பதையும் விவரிப்போம். சபையில் அனைவரையும் ஒன்று கூட்டி மேலைச்சாளுக்கியம் நோக்கி நகர்வதைச் சொல்லு வோம். மக்களுக்கு அது போய்ச் சேரட்டும்.

அதிகாரிகளை அழைத்து குதிரை வண்டிகளையும், குதிரைக்கு லாடம் அடிப்பதையும், நுணுக்கமாகப் பயிற்சிகள் செய்ய வேண்டியதையும் விவரிப்போம். வணிகர்களிடம் பேசுவோம். அரண்மனைப் பெண்டிருக்குச் சொல்வோம். பிறகு ஒரு நல்ல நாள் பார்த்துச் சொல்லும்படி அந்தணர்களையும், ஜோதிடர்களையும்

கேட்டுக் கொள்வோம். பிறகு ஈராயிரம் பல்லவரையருக்கு நம்முடைய வருகையை, நம்முடைய திட்டத்தைச் சொல்லி அவரைத் தயார் நிலையில் வைப்போம். அவரும் அரண்மனைக்கு வரவேண்டும் என்று சொல்லுவோம்.

''தந்தையே இந்த எல்லா செய்கைகளிலும் அருண்மொழி என்னோடு இருந்தால் என்ன.''

''வேண்டாம். அருண்மொழி உன்னை நம்பியும், நீ அருண் மொழியை நம்பியும் இருக்க வேண்டாம். தனித்தனியே செயலாற் றுங்கள். அவன் சொன்னது போல, தன்னுடைய திறமையை உனக்குச் சொல்லட்டும். நீ யாரென்று அவனிடம் காட்டு. அதனால் பரஸ்பரம் ஈர்க்கப்படுவீர்கள். பரஸ்பரம் உங்களுக்குள் நன்மதிப்பு உயரும், வெறும் நட்பு இல்லாது அவரவர் திறமையைப் புரிந்து கொண்டு, அவரவரைத் தக்க இடத்திலே வைப்பீர்கள் தகுந்தபடி உபசரிப்பீர்கள். இதுதான் ஒரு பிரம்மராயருக்கு அழகு. ஒரு சக்ரவர்த்திக்கு அழகு.

எனக்குக் கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் கிடைத்தது போல, உனக்கு அருண்மொழி தயாராகட்டும். அதற்கு இப்போதைக்கு பிரிந்திருப்பதே நல்லது. ஒருவேளை அருண்மொழி நாளைக்குப் பயணப்படுகிறேன் என்று வந்தால், நான் அவனை ஆசீர்வதித்து அனுப்புவேன்.''

அருண்மொழி குதிரையைக் கொண்டு போய் வீட்டு வாசலில் நிறுத்தினான். இறங்கினான். அவன் முகம் கறுத்துக் கிடந்தது. ஏதோ ஒரு வேதனை உள்ளுக்குள் புரண்டு கொண்டிருந்தது. முகம் அலம்பி சற்று நேரம் தியானத்தில் ஈடுபட வேண்டுமென்று நினைத்து படியேறினான்.

அறையில் அமர்ந்திருப்பார் என்று பார்க்க தந்தை அங்கு இல்லை. உள்ளே போய் தனது அறைக்கதவைத் திறந்து, வேட் டியை மாற்றி இடுப்புத் துண்டைக் கட்டிக்கொண்டு, கிணற்றடிக்குப் போய் நீர்த்தொட்டியிலிருந்து நீரை மொண்டு தலைக்கு விட்டுக் கொண்டு குளித்தான். உடம்பில் நீர்பட்டு இறங்கியதும் குளிர்ந்த உடம்போடு மனசு தணிந்தது.

இதெல்லாம் அரசியலில் சகஜம். அருகே அழைத்துக் கொண் டாடுவதும், வெளியே போ என்று தள்ளுவதும் மிகச் சாதாரணமான விஷயங்கள். இதற்கு அஞ்சிவிடக்கூடாது என்ற எண்ணம் அவனுள் ஓடிற்று.

நல்ல உலர்ந்த துண்டுக்கு மாறி, ஈரத்துண்டால் முகம் துடைத்து, திருமண் இட்டு கூடத்திற்கு வந்த போது, அப்பா கூடத்திலுள்ள நாற்காலியில் அமர்ந்திருந்தார். வாசல் கதவு சார்த்தியிருந்தது. வெளியே வீரர்கள் காவலுக்கு நிறுத்தப்பட்டிருந்ததைச் சாளரத்தின் வழியே அருண்மொழி கவனித்தான்.

அப்பா தனியே பேச விரும்புகிறார். என்ன பேசினார் என்று கேட்க விரும்புகிறார் என்பதைப் புரிந்து கொண்டான்.

''வந்ததும் பின்னே போய் குளிக்கிறாயே... என்ன வேதனையான விஷயமா.''

''இல்லை தந்தையே... சாதாரணமாகத்தான் குளித்தேன். புழுக்கம் அதிகமாக இருந்தது.

''புழுக்கம் உடம்பில் இல்லை. மனதில் இருக்கிறது. என்ன நடந்தது.

''எதுவும் நடக்கவில்லை தந்தையே. சக்ரவர்த்தியும், இளவரசரும் பேசினார்கள். அவர்களோடு கலந்துரையாடி விட்டு வருகிறேன்.''

''ஆனால், உன்னை வெளியே தள்ளி கதவு சார்த்தினார்களே அது எதற்காக.

திடுக்கிட்டு கிருஷ்ணன்ராமனைப் பார்த்தான்.

''நீங்கள் என்ன பேசினீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. அதைக் கேட்க எனது ஒற்றர்களால் முடியவில்லை. ஆனால், அவர்கள் இருவரும் போய் கதவு சார்த்திக் கொண்டு, உன்னை வெளியே நிறுத்தி விட்டார்கள் என்றும், நீ சமாளித்துக் கொண்டு சமையல் அறைக்குப் போய், இரண்டு கிண்ணம் பாயசம் குடித்து விட்டு, மறுபடியும் போய் அரசரிடம் பேசினாய் என்றும், தான் மட்டும் தனியே போக உத்தரவு கேட்டாய் என்றும், மறுத்தார் என்றும் எனக்குச் செய்தி வந்துவிட்டது.''

''எப்படியப்பா இவ்வளவு சீக்கிரமாக..

''நீ ஆற்றின் கரையாக வந்து அகத்துள் நுழைந்தாய். என்னுடைய ஆள் ஆற்றைக் குறுக்காகக் கடந்து, அங்கு குதிரை ஏறி இங்கு வந்து சொல்லி விட்டான். வாசலில்தான் உட்கார்ந்திருக்கிறான்.''

''வேறு என்ன பெரிய ரகசியம் அப்பா. அவர்கள் ஏதோ தனித்து குடும்ப விஷயம் பேசத் துவங்கினார்கள். நான் விலகிவிட்டேன்.''

''நீ விலகவில்லை. விலக்கப்பட்டாய். என்ன விஷயம் நடந்தது.''

அருண்மொழி யோசித்தான்.

''உன்னுடைய தயக்கம் இது பெரிய விஷயம் என்பதைக் காட்டுகிறது. மேலைச்சாளுக்கியப் படையெடுப்பு உறுதி செய்யப் பட்டு விட்டது சரியா.''

''சரி''

''விமலாதித்தரை காஞ்சியிலேயே தங்க வைக்க உத்தரவு. சரியா..

''சரி.''

''விமலாதித்தரை மேலைச்சாளுக்கிய படையெடுப்பில் முன்னால் அனுப்பி களப்பலி ஆக்கவும் ஒரு எண்ணம் சரியா.''

அருண்மொழி திகைத்தான்.

இது என்ன. யார் இவர். மாய வித்தைக்காரரா, அவரையே திகைத்தபடி பார்த்தான்.

''உன் திகைப்பு எனக்கு அதை உறுதி செய்கிறது. அப்படித்தான் எந்தச் சக்ரவர்த்தியும் செய்வார். முதலில் மேலைச்சாளுக்கியப் போர் எளிதல்ல. இராஜேந்திரனையோ, தன்னையோ, தன் படையையோ அவர் பலி கொடுக்க விரும்ப மாட்டார்.''

''அப்படி மேலைச்சாளுக்கியத்திற்குப்போக விமலாதித்தன் மறுத்தான் என்றால், இராஜேந்திரர் சென்றிடுவார். அரசர் பின் தொடருவார் சரியா.''

''சரி.

''சேர தேசத்திற்குச் சிலரையும், பாண்டிய தேசத்திற்குச் சிலரையும் அனுப்புவார்கள். நடுநாடு, தொண்டை நாடு வீரர்கள் சோழதேசத்தை வந்தியத்தேவர் தலைமையில் காவல் காப்பார்கள். சரியா.''

''சரி.

''கடைசியாய் நீ எதற்கு அனுமதி கேட்டாய். அவர் என்ன சொன்னார். அது மட்டும் புரியவில்லை. எனக்குச் சொல்லிவிடு. மறுபடி தயங்கினான்.

''நான் சோழதேசத்திற்கு எதிரானவன் அல்ல. சக்ரவர்த்திக்கு எதிரானவன் அல்ல. சக்ரவர்த்தி மிகப்பெரும் காரியத்தில் ஈடுபட் டிருக்கிறார். கோயில் வேலைகளுக்கப்பால் மேலைச்சாளுக்கியப்

போர் என்று சொல்கிறார். மேலைச்சாளுக்கியப் போர் நன்றாக நடக்க வில்லையெனில், நமக்கு நல்ல முடிவு வரவில்லையெனில், சோழதேசம் சிதறிப் போகும். அரசருடைய மிகப்பெரிய கனவான, மிக உயர்ந்த கனவான இந்தக் கற்கோயில் பாழ்பட்டுப் போகும். பாண்டியர்கள் மட்டுமல்ல, அருண்மொழி, சேரர்கள் மட்டுமல்ல. நடுநாடும், தொண்டை நாடும் பிரிந்து போகும். சோழ தேசமும், கங்கதேசமும் தனித்து எழும். என்னிடம் உண்மையைச் சொல்.''

''அரசர் என்னைப் பாண்டிய தேசத்திற்கோ, கீழைச்சாளுக்கியத் திற்கோ போகலாம் என்றும், நான் மேலைச் சாளுக்கியப் படை யெடுப்பைத் தவிர்க்கலாம் என்றும் பேசினார். அப்படி வேண்டாம் நான் மேலைச்சாளுக்கியத்திற்கு எல்லோருக்கும் முன்பாகப் போய் உளவறிந்து, அவர்கள் படைத்திறன் பற்றி உங்களுக்குச் சொல் கிறேன் என்று சொன்னேன். அரசர் சம்மதித்தார் என்றுதான் எனக்குத் தெரிகிறது.

கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் அதிர்ந்தார்.

ஒரு எதிரி தேசத்திற்குள் தன்னுடைய மகனை, பிரம்மராயராக வரக்கூடிய எல்லாத் தகுதிகளும் பெற்றிருக்கின்ற ஒரு இளைஞனை அனுப்ப வேண்டும் என்கிற நினைப்பு அவரைப் பதற அடித்தது. இந்த முடிவுக்கு அரசர் வரவேண்டிய அவசியம் என்ன என்று மனம் வேகமாக யோசித்தது.

இல்லை. இது இவனாகப் போய் சிக்கிக் கொண்ட விஷயம். அரசர் வேறுவிதமாக யோசித்திருப்பார். இவனை நம்பி பிள்ளையை அனுப்பலாமா என்று யோசித்திருப்பார். அதுபற்றிக் கேட்டிருப்பார். இவருக்கும், இவர் பிள்ளைக்கும் நெருக்கும் அதிகரித்து விட்டது என்பதால், எனக்கும் என் பிள்ளைக்குமிடையே இடைவெளியே ஏற்படுத்துகிறார்.

விமலாதித்தனை நான் அதிகமாக நேசிக்கிறேன் என்பதால், அவன் சோழ தேசத்திற்கு இடைஞ்சலாக இருப்பான். என்பதாலும், அவனை மேலைச்சாளுக்கியத்தில் களப்பலியாக கொடுக்க முடியாமல் போய் விட்டால் என்ன செய்வது என்ற கவலையாலும், இவனிடம் இப்படிப் பேசியிருக்கக்கூடும். நல்லது. நானும் சிலவற்றைச் சொல்லித்தானே ஆகவேண்டும்.

அவர் மெல்ல நிமிர்ந்தார்.

''நீ உபசேனாதிபதி. வெகு விரைவில் சேனாதிபதியாகி விடுவாய். வெகு நிச்சயம் பிரம்மராயராகி விடுவாய். ஆனால், ஒரு அன்னிய தேசத்தில் உளவு அறிபவனாக உள்ளே போய் மாட்டிக்கொண்டு விட்டால், சித்ரவதை செய்து கொன்று விடுவார்கள். அது மிக மோசமானது. உன்னை ரணப்படுத்துவார்கள்.

சத்யாசிரியன் கொடுமை செய்வதில் மிக வல்லவன். ஆனால், உன்னுடைய ஜாதகத்தில் அம்மாதிரியான வேதனைகள் வருவதற்கு வாய்ப்பே இல்லை. எனவே, துர்கையின் மீது பாரத்தைப் போட்டு, உன்னை வெகு நிச்சயமாய் மேலைச்சாளுக்கியத்திற்கு ஒற்றர் படைத் தலைவனாக அனுப்புவேன். எப்படியெல்லாம் போக வேண்டும் என்பதை உனக்கு எடுத்துச் சொல்வேன். அதற்கு முன்பு நீயும், சக்ரவர்த்தியும், இளவரசரும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. சொல்லட்டுமா.'' அமைதியாய் அருண் மொழி அவர் எதிரில் உட்கார்ந்தான்.

''திருவொற்றியூரில் மறுபடியும் விமலாதித்தனுக்கும், குந்த வைக்கும் சண்டை ஏற்பட்டு விட்டது. விமலாதித்தன் முகத்தில் தட்டு வீசியெறிந்து, காயம் ஏற்படுத்தி, கன்னத்தில் அறை வாங்கிக் கொண்டு, அவள் அங்கிருந்து பதினைந்து வீரர்களோடு கிளம்பி தஞ்சை நோக்கிவந்து கொண்டிருக்கிறாள். கடைசியாக விமலாதித் தனிடம் சொல்லிவிட்டு வந்த வார்த்தை என்ன தெரியுமா. என் தந்தையை விட்டு, உன்னைக் கொல்லச் சொல்வேன். இது சத்தியம் என்று சூளுரைத்துவிட்டு வந்திருக்கிறாள்.

இப்பொழுது சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் விமலாதித்தனிடம் என்ன பேசினாலும் அது எதிரியின் பேச்சாகத் தான் இருக்கும். நாளைக்கு குந்தவை வந்துவிட்டால், அவளுடைய அத்தை குந்தவையும், பட்டமகிஷி உலகமாதேவியும், ஏன் பஞ்சவன்மாதேவியும் பல இன்னல்களுக்கு ஆளாக வேண்டி யிருக்கும்.

இங்கே வந்தியத்தேவர் பாடு மிகப்பெரிய வேதனையாகப் போய்விடும். சக்ரவர்த்தியாலும் போர் முனையில் முழுவதுமாய் தன் சிந்தனையைச் செலுத்த முடியாது போகும். குந்தவையைத் தஞ்சைக்கு வராமல் எப்படித் தடுப்பது என்று அரசரும். அவர் மகனும் யோசிக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. ஒரு வேளை உன்னைக் கலந்து ஆலோசிக்கலாம். கலந்து ஆலோசிக்காமலும்

போகலாம். எப்படிச் செய்வது என்று என்னைக் கேட்டால், நான் வழி சொல்வேன் என்று சொல். போய்ப் படுத்துறங்கு.

கிருஷ்ணன்ராமன் எழுந்து கூடத்தை விட்டு நகர்ந்து தன்னுடைய அறையை நோக்கிப் போனார்.

அவருக்கு இந்த அரசியல் வெறுப்பாக இருந்தது. ஆனாலும் வேறு வழியில்லை. இறங்கியாகிவிட்டது. இனி தொடர்ந்து பயணப்பட்டேயாக வேண்டும் என்ற திடமும் ஏற்பட்டது.

## 151

நிலவு இன்னும் மறையாமல் மேற்கே நிற்க, சூரியன் கிழக்கே உதித்தான். அவன் கதிர்கள் வானமெங்கும் பரவி சோழதேசத்தில் பாய்ந்து மக்களை எழுப்பிவிட, சோழதேசம் மிக சுறுசுறுப்பாய் இயங்கத் துவங்கியது.

தானிய வணிகர்கள் அதிகாலையிலேயே கடையைத் திறந்து வைத்து, சுத்தம் செய்து காத்திருக்க, மக்கள் ஒவ்வொருவராக வரத் துவங்கியிருந்தார்கள். உணவுப் பொருட்கள் விற்பவர்கள் முதலில் வந்து தானியங்கள் வாங்கிப் போக, அடுத்தபடி பொதுமக்கள் வந்தார்கள்.

உணவுக் கடைகளுக்குப் பானை பானையாகப் பால் போய் இறங்கியது. கிராமத்திலிருந்து மாட்டு வண்டிகளில் காய்கறிகள் கட்டிக் கொண்டு வந்து இறங்கினார்கள். அதிகாலையில் பூப்பறித்த பெண்கள் தெருமுனை நிழல்களில் அமர்ந்து வேகமாக பூத்தொடுக்கத் துவங்கினார்கள்.

அரண்மனையிலுள்ள யானைகளைக் குளிப்பாட்டவும், குதிரை களை நீராட்டவும் அந்தந்த சேவகர்கள் கிளம்பினார்கள். யானைகள் மந்தை மந்தையாய் நடப்பதைப் பார்க்க தெருக்களில் கூட்டம் கூடியது.

மாட்டு வண்டிகள் ஓரமாக நிறுத்தப்பட்டன. மாடுகள் மிரளாமல் இருக்க, இறுக்கிப் பிடித்துக் கொண்டார்கள். ஆனால் யானைகள் குறும்பு செய்தன. தும்பிக்கையை நீட்டி மாட்டுக்கெதிரே 'ஊ... என்று வேகமாக காற்று வீச, மாடுகள் நாலாபக்கமும் அலைந்தன. சில சமயம் பாகர்களே தஞ்சையின் மோழை மாடுகளை நோக்கி செய்யும்படி யானைகளைத் தூண்டினார்கள்.

காலைநேரம் சுறுசுறுப்பாகவும், சந்தோஷமாகவும் இருக்க வேண்டுமல்லவா, மக்கள் வாய்விட்டுச் சிரிக்க வேண்டுமல்லவா, மாடுகள் மிரள்வதைப் பார்த்து பெண்களும், குழந்தைகளும் குதூகலிக்க வேண்டுமல்லவா. நீங்கள் யானைகளைப் போற்ற வேண்டு மல்லவா என்று பேசினார்கள் பாகர்கள்.

''யானைகளை ஏன் தெருவில் கொண்டு வருகிறீர்கள்.'' என்று மாட்டு வண்டிக்காரர்கள் சீறிய போது, ''யானைகளுக்கு இறக்கை இல்லை'' என்று சொல்லி பெரிதாகச் சிரித்தார்கள்.

''வானத்தில் கொண்டுபோக முடியாது'' என்று வம்பு பண்ணி னார்கள்.

''யானைகள் மட்டும் ஆயிரத்து நானூறு இருக்கின்றன இன்னும் யானைகள் வரும். அவைகளை எந்த வழியாய் போகச் சொல்வாய்'' என்று கேட்டார்கள்.

''இன்னும் யானைகள் வருமா. ஏன்...

ஒரு கிழவி கேட்டாள். அவளுக்கு யாரும் பதில் சொல்ல வில்லை.

''ஆனால் எல்லோருக்கும் தெரிந்திருந்தது போர் வரும் என்று.''

''ஆனால், இந்தப் போருக்கான அவசியம் என்ன என்பது தான் பலருக்கும் புரியவில்லை.''

''அதுபற்றி நீ ஏன் கேள்வி கேட்கிறாய். அவசியம் தெரிந்தால் தான் போர் செய்வாயா. வீரர்களுக்கும், பிரம்மராயருக்கும் அவசியம் தெரியும். எனவே சொல்வதைச் செய்து கொண்டிரு. என்று உபசேனாதிபதிகள் கூச்சலிட்டார்கள். மக்களிடையே ஒரு இறுக்கமிருந்தது. ஒரு கவலை இருந்தது. குளக்கரையிலோ, ஆற்றங் கரையிலோ, அங்காடிக்கடை வீதியிலோ பெண்கள் சந்திக்க நேர்ந்தால், வீட்டில் இன்னும் எத்தனை ஆண்கள் இருக்கிறார்கள். எல்லோரும் போருக்கு போவார்களா? என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள்.

தஞ்சை தாண்டிய புறம்படியில் அதற்கப்பாலுள்ள ஆற்றங்கரை தோப்புகளில் போர் பயிற்சிக்கூடங்கள் இருந்தன. அங்கே இளை ஞர்கள் கூட்டம் அதிகமாகியது. தினசரி வருபவர்கள் எப்போதேனும் வருபவர்களைப் பார்த்து கேலி செய்தார்கள்.

எந்த யுத்தத்திற்குப் போனாலும் நீ வெட்டுப்பட்டு சாவது என்பது நிச்சயம். எனவே, உடற்பயிற்சி செய்வானேன். ஒரு ஓரமாக

உட்கார்ந்து கொண்டிரு என்று கேலி செய்தார்கள். அந்த கேலி களுக்கு அடியில் ஒரு கவலை. ஒரு கலவரம் இருக்கத்தான் செய்தது. பொதுமக்களில் அதிகம் கலவரப்பட்டவர்கள் வணிகர்கள்தான்.

''மாட்டு வண்டிகள் கேட்பார்களய்யா, வீட்டிற்கு வந்து வண்டி களும், மாடுகளும் அரசர் கேட்கிறார் என்று எடுத்துக் கொண்டு போவார்கள். எதுவும் சொல்ல முடியாது. மேலைச்சாளுக்கியம் வரையில் இந்த வண்டி தாங்குமா? இதில் சக்கரம் வீணாகிப் போகும். செப்பனிட மாட்டார்கள். அப்படியே எங்காவது விட்டு விட்டு மாடுகளை வழியில் இருக்கும் கிராமங்களில் விற்று விட்டுப் போய்விடுவார்கள். அதனால் நாம் பேரவஸ்தைப் படவேண்டி யிருக்கும். புதிதாக வண்டி செய்ய வேண்டியிருந்தால் உடனடியாக முடியுமா? குறைந்தது ஒரு மாதமாவது ஆகாதா.''

''சரக்குகளை எப்படிக் கொண்டு போவது.

''இருக்கின்ற ஒரு ஓட்டை வண்டியில் இரவும், பகலுமாக மாடுகளைத் துன்புறுத்தி ஓட்ட வேண்டியதுதான். இல்லையெனில் நாமே தலைச்சுமையாக எடுத்துப்போக வேண்டி வரும். ஆனாலும், இந்த மறவர்கள் செய்கின்ற அநியாயத்திற்கு ஒரு வரைமுறையே இல்லை.

''போதும். உரத்துச் சொல்லாதே.

சொன்னவரை, மற்றவர் கண்டித்தார்.

''இப்படி நாலாபக்கமும் படை வீரர் போய் வெற்றி பெற்று வந்தால் நம் வியாபாரம். பெருகத்தானே செய்யும். இந்தப் படை யெடுப்பு நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று வேண்டிக் கொள். சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வெற்றி பெற வேண்டுமென்று நேர்ந்து கொள். அப்படி வெற்றி பெற்று அங்கு கொள்ளையடித்த பெரும் பொருட்களோடு வீரர்கள் திரும்பினால், நெல்லுக்கும் மற்ற தானியத்திற்கும் நம்மிடம்தானே வரவேண்டும்.

நல்ல நெல் இருக்கிறது என்று சொல்லி ஒரு காசுக்கு இரண்டரை கலம், மூன்று கலம் நெல் கொடுக்கலாம். ஆரம்பத்தில் கோபப் படுவார்கள். பிறகு காசு விட்டெறிந்து வாங்கிக் கொண்டு போவார்கள். இன்றைக்கு ஒரு காசுக்கு பதிமூன்று கலம் நெல் விற்கிறது. யுத்தம் முடிந்து வெற்றி பெற்றுத் திரும்பினால் விலை ஏறத்தான் செய்யும்.

எல்லா நெல்லும் உங்களுக்கு அனுப்பி விட்டோம். இங்கு நெல்லே இல்லை. என்ன செய்வது என்று உரத்த குரலில் கூறலாம். ஆனால், எங்கேனும் நெல்லைப் பதுக்கி வைக்கலாம். ஒரு வணிகர் உயரமான நெற்குதிர் கட்டி, நான்கு புறமும் சுவர் எழுப்பி பரணை வழியே அடுத்த அறைக்கு அனுப்புவார். எங்கிருந்து நெல் முளைக்கிறது என்று தெரியாமல் வாங்குவோர் திகைப்பார்கள். கொஞ்சம்தான் இருக்கிறது. கொஞ்சம் தான் இருக்கிறது என்று ஒரு காசுக்கு ஐந்து கலம் நெல் விற்பார்.

''நெல்லில் முதலீடு செய்வதை விட, வாசனை திரவியங்களில், ஏலக்காயில் முதலீடு செய்வது நல்லது. போர் முடிந்து வருகின்ற வர்கள் மிக உல்லாசியாக இருப்பார்கள். மரணம் பார்த்து வந்தவ னல்லவா. பெண்டுகளோடு கூடியிருப்பதற்கு மனம் அவசரப்படும். பெண்டுகளிடம் போவதற்காக உடம்பு முழுவதும் வாசனைத் திரவியம் பூசிக்கொண்டு திரிவான். என்ன வேண்டுமானாலும் கொடுத்து வாங்கிக் கொள்வான். ஒரு வீரன் முழங்கை உயர தங்க மதுக்கோப்பையை எங்கிருந்து எடுத்து வந்தான் என்று தெரிய வில்லை. ஒரேயொரு குப்பி மல்லிகை வாசனை திரவியத்திற்கு தங்கக் கோப்பையைக் கொடுத்துவிட்டு எடுத்துப் போனான். போரில் வெற்றியடைந்தால் கும்மாளம்தான்.''

''இல்லையெனில்.''

யாரோ ஒருவர் கேள்வி எழுப்ப, சகலரும் அவரை முறைத்துப் பார்த்தார்கள்.

''அச்சான்யமாகப் பேசாதே. சக்ரவர்த்தியாவது போரில் தோல்வி யுறுவதாவது. இந்தப் போருக்காக வெகு நாள் அவர் யோசித் திருப்பார். விதம் விதமாகத் திட்டங்கள் தீட்டியிருப்பார். போன வருடம் மையத்திலிருந்து இந்தப் போருக்கான ஆயத்தங்கள் துவங்கி விட்டன என்று கிருஷ்ணன் ராமனான பிரம்மராயரிடம் வேலை செய்கிற ஒரு அதிகாரிச்சி எனக்குச் சொன்னாள். அவள் மிகவும் கெட்டிக்காரி. எதற்கும் லாயக்கில்லாத கரம்பு நிலங்களை அரசாங்கத்திடமிருந்து விலை கொடுத்து வாங்கிக் கொண்டாள். கிட்டத்தட்ட பெரும்பகுதி நிலங்கள் இனாமாகவே கிடைத்தன. ஏன் இந்த நிலங்கள் வாங்குகிறாள் என்று பலரும் கேள்வி கேட்டார்கள். பிறகுதான் தெரிந்தது அந்த வழியாக நீண்ட நெடும் வாய்க்கால் ஒன்று ஊடறுத்துப் போகப் போகிறது. அப்படியொரு வாய்க்கால்

வெட்டுவதற்கு அரசர் அனுமதி வழங்கியிருக்கிறார் என்பது தெரிந்தது.

அரசாங்கத்திடமிருந்து வாங்கிய பெரும்பகுதி நிலங்களை நல்ல விலைக்கு அவள் விற்றாள். கொழுத்த பணக்காரியானாள். நெஞ்சு வலிக்கிறதென்று அரண்மனை சேவகத்திலிருந்து விலகிக் கொண்டு, இப்போது பெருநிலக்கிழாராக இருக்கிறாள். மூன்று போக சாகுபடி. கரையோரமெல்லாம் பன்னீர் மரக்காடு. கோடைக் காலத்தில் நிலத்தை வெறுமே விட்டுவிட்டு, ஆடி மாதம் காவிரி ஆற்றில் நீர் வந்ததும் அந்த மரங்களின் கிளைகளையும், மாடு களையும் மடக்கிப் போட்டு, மேல் உரமாக சாணமிட்டு, ஆனி மாதங்களில் நடவு ஆரம்பித்து விடுகிறார்கள். ஒருமுறை மழை பெய்தால் போதும். மடை மாற்றும் வேலைகூட இல்லை. கால் வரைக்கும் சேறு கழுத்து வரைக்கும் பயிர். பயிரோட ஆள் நடந்து போனால், தலை மட்டும் பச்சையில் மிதந்து வருவதுபோல் தெரியும். ஒரு கதிருக்கு ஒரு பிடி நெல் தருகிறது.

''படையெடுப்புக்கு பிறகு என்ன விற்பது. என்ன வாங்குவது.

வணிகர்கள் ஒரு குழுவாய் உட்கார்ந்து யோசித்தார்கள்.

''உபரியாய் தங்கம் வைத்திருப்பவர்கள் விற்று விடுங்கள்.''

''உபரியாய் என்றால்.

''வீட்டிலுள்ள பெண்டிருக்கு, அணிகலன்கள் போக, உபரியாய் உள்ள தங்கக்கட்டிகளை, பொற்கொல்லர்களை விரட்டி வேகமாக நகைகளைச் செய்யச் சொல்லுங்கள்.''

''விரைவாக என்ன நகைகள் செய்ய முடியும்.

''காதோலைகள் செய்ய முடியும். உள்ளங்கை நீளத்திற்கு மெல்லிய பட்டைகளாய் தங்கத்தை மாற்றினால், காதோலை ஆயிற்று. அந்தக் காதோலையை தேவரடியார்கள் வாங்குவார்கள். அவர்கள் வாங்குவதைப் பார்த்து குடும்பப் பெண்களும் வாங்கு வார்கள். காரை என்கிற கனமான கழுத்து அணிகலன்களும் எளிதில் செய்துவிடலாம். தொங்கட்டான் பதித்தால் கூடுதலாக விற்கலாம்.

''பதிலுக்கு என்ன வாங்குவது.''

''நிலம் வாங்குங்கள். தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில் நிலங்களை வாங்குங்கள். பிரம்மதேய நிலங்களை விட்டுவிடுங்கள். அந்தணர்களுக்குண்டான நிலங்கள் பறிமுதல் செய்யப்படப் போகின்றன. அப்படியொரு பேச்சு இருக்கிறது. கிராமத்தில் இது

நிகழவும் நிகழ்ந்து விட்டது. வேளாண் வகை நிலங்களைக் கேட்டு வாங்கி பயிர் செய்து வைத்திருங்கள். போரில் வெற்றி பெற்று வந்தால், அந்தச் செல்வத்திற்கு வெகு நிச்சயமாய் நிலங்கள் வாங்கு வார்கள்.

அது தவிர, ஊருக்குள் ஜனங்கள் பெருத்துப் போய் அவர்களும் நிலம் வாங்க வேண்டும் என்று முயற்சிப்பார்கள். அந்த அதிகாரிச்சி செய்தாளே, அதைப் போல கரம்பு நிலங்களை வாங்கி அங்கங்கே பெரிதாய்க் கிணறு வெட்டி வைத்துக் கொண்டால், வீட்டு மனையாகக்கூட விற்றுவிடலாம். ஏன் வீடுகள் கட்டி வைத்தால் அப்படியே கூட வைத்துவிடலாம். ஏனெனில் போருக்குக் கருமார் கள்தான் போவார்களே தவிர அந்தணர்களும், மரத்தச்சர்களும் போக மாட்டார்கள்.''

''இல்லை. நீங்கள் சொல்வது தவறு. கருமார்கள் போகாது இருக்கலாம். மரத்தச்சர்கள் போவார்கள். ஏனெனில் இந்த முறை போருக்கு ஆயிரக்கணக்கான தேர்கள் போகின்றன. தேர்களைச் செப்பனிட வெகுநிச்சயமாய் மரத்தச்சர்கள் அழைத்துப் போகப் படுவார்கள். ஐந்தாம் வருணத்தினருக்கு அதிகம் வேலை இருக்காது என்று சொல்கிறார்கள். குதிரைகளைப் பராமரிக்க முன்பு இவர்கள் போனதுண்டு. இப்பொழுது அவர்கள் குதிரைகளை அவரவரே பராமரித்துக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. எனவே, இங்கு ஆட்கள் இருப்பார்கள். அதுமட்டுமல்ல, இங்கே கோவில் கட்டுவதால் சிற்பிகளுக்கு மிகப்பெரிய மரியாதை வந்து விட்டது. அவர்கள் நிலம் வாங்குவதற்கும், இங்கேயே குடியேறு வதற்கும் முயற்சி செய்கிறார்கள். வீட்டுப் பெண்களிடமும் நீங்கள் தங்கம் விற்கலாம். அந்தக் காசுக்கு நிலங்கள் வாங்கலாம். விற்பது நகைகள், வாங்குவது நிலங்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள்.

கரம்பு நிலங்களை வாங்குபவர்கள் நிலங்களை இப்போதே வளைத்து உங்களுக்காகப் பிடித்து வைத்துக் கொள்ளுங்கள். நிலத்தைச் சீர் செய்து அங்கேயே ஓதிய மரங்கள் நட்டு கிணறு தோண்டினால் போதும். வீடுகள் கட்டுவதற்கு உதவும். நல்ல கன்னார் கிடைத்து விட்டால் செங்கல் வைத்து சூளை போடச் சொல்லி, சூளைபோட்டு பிறகு வீடுகட்டத் துவங்கிவிடலாம். இப்போதே சீர் செய்யும் பணியை ஆரம்பித்து விடுங்கள். படை

நகர்ந்ததும் சூளை போட்டு விடுங்கள். பத்து நாட்களில் செங்கல் சுட்டுப் பிரித்து விடலாம்.

இந்தப்பக்கம் பத்து வீடு, அந்தப்பக்கம் பத்து வீடு, தோட்டத்தில் மூங்கில் வேலி, வாசல் பக்கம் திண்ணை. புழக்கடையில் கிணறு என்று செய்து விட்டீர்கள் என்றால், ஒன்றுக்குப் பத்தாக லாபம் பார்க்கலாம். என்ன முக்கியம் என்றால் உங்களுக்குக்கென்று, இந்த வேலைக்கென்று குறைந்தபட்சம் அறுபது ஆட்கள் தேவைப்படு வார்கள். அந்த ஆட்களை நிர்வகிக்க முடியுமென்றால் இது அற்புதம். இதில் இன்னொரு தந்திரமும் இருக்கிறது. இந்த அறுபதுஆட்களில் பாதிக்குப் பாதி இப்பொழுது வேலை செய்கிற அடிமை வீரர்கள் கிடைத்தார்கள் என்றால், இன்னும் துரிதமாக வேலையாகும். அவர்களுக்குச் சிற்பிகளிடமும், போர் வீரர்களிட மும் வேலை செய்வது பிடிக்காது. அங்கு முழு மரியாதை கிடைக்க வில்லை என்கிறார்கள். நாம் மரியாதையாகக் கூப்பிட்டு நல்ல விதமாகக் கூலி கொடுத்தோம் என்றால் துரிதமாக வேலை செய்வார்கள்.''

''எது செய்தாலும் தெளிவாகச் செய்யுங்கள். வணிகர் சங்கத்துக்கு நன்கொடை அளிக்க மறுத்து விடாதீர்கள். ஒற்றுமையாக, பலமாக இருக்கும்போது தான் நம்மால் நன்றாக வளர முடியும். இப் பொழுது இந்த நேரம் சிற்பிகளின் காலம். நாளை போர் வீரர்களின் காலம். அதற்குப் பிறகு வணிகர்கள் காலம். போர் முடிந்து வரும்போது நம் கை ஓங்கியிருக்க வேண்டும் போங்கள் இரவு, பகல் பாராது வேலை செய்யுங்கள் சோம்பலுக்கு இடம் தராதீர்கள்.''

அவர்கள் எல்லோரும் தூசு தட்டிக் கொண்டு எழுந்து நின்றனர்.

''ஐயா, ஒரு வேளை போர் வரவேயில்லை என்றால்...

''ஒரு இளைஞன் குரல் கொடுத்தான்.

எல்லோரும் திரும்பி அவனை முறைத்துப் பார்த்தார்கள்.

''போர் வரும். நிச்சயம் வரும். போர் வரவேண்டும் என்று பிரார்த்தனை செய்.''

ஒரு மத்திம வயதுக்காரர் முறைப்போடு பதில் சொன்னார். மற்றவர்கள் அதைத் தலையாட்டி ஊங்காரமிட்டு ஆமோதித்தனர்.

''வணிகர்கள் கூட்டம் கூட்டமாய், அலைகிறார்கள் பார்த்தீரா.''

ஒரு அந்தணர் இன்னொரு அந்தணரிடம் விசாரித்தார்.

''நானும் கேள்விப்பட்டேன். நிலம் வாங்க அலைகிறார்களாம். என்னுடைய நிலத்தைப் பார்த்துவிட்டு மதிப்பு சொல்ல வருகிறாயா என்று கேட்டேன். உன் நிலம் எனக்கு வேண்டாம் என்கிறார்கள். என் நிலம் என்ன குறைந்துவிட்டது. ஆற்றுப்படுகை ஓரம் வந்து பார் என்று சொன்னேன்.

''உன்னுடைய நிலம் உன்னுடையதாக இருக்கும் போது, எனக்கு விற்கவோ, வாங்கவோ எந்தவிதத் தயக்கமுமில்லை. உன் நிலம் உனக்குத்தான் சொந்தம் என்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால், இல்லை என்று எவரேனும் சொன்னால் என் பாடு என்ன ஆகும். அந்தணரிடமிருந்து வாங்கிய நிலம் பொது மக்களுக்குத் தர வேண்டும் என்று புரட்டிவிட்டால் என்ன ஆகும். உங்கள் மீது சக்ரவர்த்திக்கு நல்ல மதிப்பு இல்லை. உங்கள் சொத்துக்கள் எதுவும் வாங்காமல் இருப்பது தான் நல்லது. இல்லையெனில் இது அரசு அவமதிப்பாகப் போய்விடும். அந்தணர்களோடு சங்காத்தமே வேண்டாம் என்று விலகிப் போகிறார்கள். வருத்தமாக இருக்கிறது.

தவளை தன் வாயால் கெடும். பேசிப் பேசி இந்த இழிந்த நிலைக்கு வந்துவிட்டோம். உத்தமசோழர் காலத்தில் கொடிகட்டிப் பறந்திருந்தோம்.

ஒருவர் ஆதங்கத்தோடு சொல்ல, இன்னும் இரண்டு பேர் சேர்ந்து கொண்டார்கள்.

''உத்தமசோழர் காலத்தில் கொடிகட்டிப் பறந்தது தான் தவறு. உத்தமசோழனின் சேனாதிபதிகள் நாலைந்து பேர் அந்தணர்களாக இருந்ததால் நமக்குக் கொக்கரிப்பாய் போயிற்று. கடைசியாய் விசாரித்ததில் அவர்கள் பாண்டியனின் ஆபத்துதவிகளாம். சேர தேசத்து நம்பூதிரிகளாம். உண்மையில் நாம் அவர்களிடமும் அவமானப்பட்டோம். இனிமேல் அந்தணர்கள் பந்திக்கு மட்டும் வாருங்கள் என்று சபைக்கு அழைக்காமலேயே இருந்தார்கள். வந்து சோறு மட்டும் சாப்பிட்டு விட்டுப் போ என்று இழிவாகப் பேசினார்கள். அவர்கள் தத்துவச் செறிவுகளாம். நாம் வெறும் சோற்றுப் பிண்டங்களாம். அதையும் தாங்கிக் கொண்டுதானே இருந்தோம்.''

''அதர்வண வேதத்தை வைத்துக்கொண்டு ஆடினார்களய்யா. அதனால் வந்த பழி இது.''

''சூரியன் உதித்த பிறகுதானய்யா நமஸ்காரம் செய்யவும் அதிகாரம் உண்டு. ஆனால், அந்த நம்பூதிரிகள் எழுந்தவுடனேயே மகாகணபதி பூஜை என்று ஆரம்பித்து விடுவார்கள். சூரியன்

உதிக்கும் போது ஹோமங்கள் முடிந்து போயிருக்கும். அந்த குருட்டுப் பிசாசுகளின் வருகைதான், நம்மைக் குடைசாய்த்து விட்டது. நல்லவேளை துரோகிகள் என்ற பதட்டத்தோடு ஒழிந்து போனார்கள். இருந்திருந்தால் இன்னும் அதிகமான அவமானமும், அடக்கு முறையும் நடந்திருக்கும். தேவையில்லாமல் நம்முடைய ஜனங்களிடமிருந்து நாமே பிரிந்து இப்படி அசிங்கப்பட்டிருக்க வேண்டாம்.

''ஆமாம். இதை எப்படித் தீர்ப்பதென்றே தெரியவில்லை. கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்களுக்கு மேல் ஆயிற்று. கோயில் கட்டுகிற விஷயத்தில் கூட நாம் சரியாக நம்மை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. ஒரு சில கிராமத்து அந்தணர்களால் ஒட்டு மொத்தமாய் எல்லோரும் அவமானப்பட்டுக் கொண்டிருக் கிறோம். இதை எப்படிப் போக்குவது. மறுபடியும் சக்ரவர்த்தியின் நன்மையை எப்படிப் பெறுவது. அரசாங்கத்தை எதிர்த்துக்கொண்டு எந்தக் கூட்டமும் தழைத்ததாகச் சரித்திரமேயில்லை.

தஞ்சையிலிருந்து நாம் வெகுதூரம் தள்ளி நிற்கிறோம். இந்த பழமர்நேரி கிராமத்திற்கு யாராலும் எந்தத் தொந்தரவும் இல்லை. வலது கையால் ஆசீர்வதித்தாலும், இடது கையால் ஆசீர்வதித் தாலும் ஏன் என்று கேட்பார் இல்லை. நம் விளை நிலங்களுக்கு வரி இல்லை. கிருஷ்ணர் கோயிலையும், சிவன் கோயிலையும் பராமரித்தால் போதும், வேளாளர்கள் மிக மரியாதையாக நடந்து கொள்கிறார்கள். படிக்க வேண்டிய வேத பாடங்களோ ஏராளமாய் இருக்கின்றன. நாம் அமைதியாய் இருந்தால் போதும். அரசர் மறந்துவிடுவார்.''

''எதை''

''நம் மீது பூசப்பட்ட அவமானத்தை.''

''எப்படி.

''இப்போதுதானே கோயிலுக்கு எந்த உதவியும் எங்களால் செய்ய இயலாது என்று நாம் சொல்லி மறுக்க, நடுநாட்டிலிருந்தும், தொண்டை நாட்டிலிருந்தும் வந்த பிராமணர்கள் அரசாங்க நிர்வாகத்தில் புகுந்து கொண்டார்கள்.''

''நாம் வெறுமே வேதம் படித்துக் கொண்டிருந்தால் மறந்து விடுவார்களா.''

''இல்லை, கடுமையான ஒரு சூழ்நிலையில் நாம் நிற்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அவருடைய கோபம் எளிதில் மறக்கக் கூடியதல்ல. ஒருமுறை அரசரிடம் கெட்ட பெயர் வாங்கி விட்டால், தொடர்ந்து அவர் நினைப்பு நம்மைப் பற்றியதாகவே இருக்கும். ஒதுங்கியிருப்பது பயன் தராது.

''பிறகு, வேறு என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்கள்.''

''அரசருடைய சபையின் வாசலில் போய் நின்று...

''தினமும் வேதம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமா?''

''அதற்குத் தனியாக ஆட்கள் இருக்கிறார்கள். இதை முக்கியமான தாகவும் எவரும் கருதவில்லை. வேதம் சொல்வதைத் தடுக்கவும் இல்லை. மறுக்கவும் இல்லை. அதனால் அரசரின் நன் மதிப்பைப் பெற்று விடவும் முடியாது. சற்று விலகி நின்று சொல்லுங்கள் என்று கோட்டைக் காவலாளி சொல்கிறாரே தவிர, வேறு எந்த மரியாதை யும் அங்கு கிடைத்துவிடவில்லை.

''என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்.''

ஒரு அந்தணர் அலுப்போடு கேட்க, ''மருவூர் அந்தணர்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.''

''அது சிறிய அக்ரஹாரமல்லவா.''

''சிறிய, பெரிய என்ற விஷயமெல்லாம் முக்கியமில்லை. அங் கிருக்கிற அக்ரஹாரம் ஒட்டு மொத்தமாய், கெட்டிக்காரத்தனமாய் உள்ளுக்குள் சண்டையிட்டாலும் வெளியே சொல்லாது, ஒற்றுமை யாக இருப்பது போல் நடித்து சில விஷயங்கள் செய்து கொண் டிருக்கிறது.

''என்ன என்று சொல்லுமேன்.''

''அரசர் மேலைச்சாளுக்கியம் நோக்கி படையெடுக்கப் போகிறார்.

''ஆமாம். தெரிந்த கதைதான். கடந்த மூன்று, நான்கு மாதங்களாக மெல்ல மெல்லப் பரவி, அந்த விஷயம் இப்போது வலுவாகி விட்டது. நிச்சயம் நகரப்போகிறார் என்று தெரிந்து விட்டது.

அப்படி அரசர் நகரும்போது, இவர்களும் அரசரோடே மேலைச் சாளுக்கியம் போகப் போகிறார்கள்.''

''என்ன.''

பல அந்தணர்கள் திடுக்கிட்டு எழுந்தார்கள். ஒருவர் தலை சுற்றி தள்ளாடி சுவர் மீது மோதி சரிந்து விழுந்தார். அவர் முகம் வெளிறிக் காணப்பட்டது.

''மருவூர் அந்தணர்கள் யுத்தத்திற்குப் போகிறார்களா? பைத்தியமா பிடித்து விட்டது அவர்களுக்கு.''

''ஏனெனில் வேறு எப்படியும் அரசருடைய நன்மதிப்பைப் பெற முடியாது என்று கருதுகிறார்கள்.''

''வெட்டுப்பட்டு சாகப்போகிறார்கள்.''

''அந்தணர்களை யார் வெட்டுவார்கள் என்று கேள்வி கேட்கிறார்கள்.''

''எப்போது போகப் போகிறார்களாம்.

''அரசர் படை யெடுத்து அங்கு போவதற்கு முன்பு போகப் போகிறார்களாம்.''

''பைத்தியக்காரத்தனமாக இருக்கிறதே.''

''இல்லை. மிகக் கெட்டிக்காரத்தனமான ஒரு நடவடிக்கை.

''எப்படி.

''கங்கதேசம் வரையில் சோழதேசத்தின் கொடி பறக்கின்ற ஆட்சி. அவர்கள் அதிகாரத்திற்கு உட்பட்ட பிரதேசம். அதுவரை தங்கு தடையின்றி பிரயாணம் செய்யலாம். அதாவது கிட்டத்தட்ட அரசர் போகின்ற தூரத்தில் முக்கால் தூரம் தாண்டியதும், மேலைச் சாளுக்கியம் வந்துவிடும். உள்ளே நுழையும்போது நம்பூதிரிகளாய் நுழைந்து விடுவது என்று திட்டமிட்டிருக்கிறார்கள். அல்லது கங்க தேசத்தின் விளிம்பிலேயே நின்று அரசருக்கு விடைகொடுத்து விட்டு, அரசருடைய படைகள் பெரும்பகுதி நகர்ந்தவுடன் அதிலே கலந்து இவர்களும் நடந்துபோய் போர்முனை வரை நின்று பார்த்து விட்டு வருவது என்று சொல்கிறார்கள்.

''அந்தப் பயணம் நடந்து தானா.''

''குதிரையா கொடுப்பார்கள் அந்தணர்களுக்கு.

''தர்ப்பைப் புல்லில் சேணம் தரித்து அல்லது தேங்காய் நாரில் சேணம் தரித்து, நூலில் சேணம் தரித்து கற்றுக் கொள்ளலாம். தவறு இல்லை. அதன் மீது மான்தோல் போட்டுக் கொள்ளலாம். தவறு இல்லை. குதிரையின் வாய்ப்பகுதிகளில் இருக்கும் கடிவாளங்களும் தர்ப்பைப் புல்லில் ஆனவை. கவலையில்லை. குதிரை பறக்க,

குடுமி பறக்க, பூணூல் பறக்க, ருத்ராட்ச மாலை பறக்க அந்த அந்தணர் கூட்டம் புரவி ஏறி கங்கதேசம் தாண்டி, மேலைச் சாளுக்கியத்தில் நுழைவது எவ்வளவு கண்கொள்ளாக் காட்சி. மருவூர் அந்தணர்கள் இதைச் செய்யத்தான் போகிறார்கள்.''

''நாம் என்ன செய்வது.''

''இந்தக்... கேள்வியைப் பல அக்ரஹாரத்து அந்தணர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஒரு அக்ரஹாரத்திற்கு இரண்டுபேர் என்று அனுப்பலாமா என்றுயோசித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு அக்ரஹாரம் நான்கு பேர், பத்து பேர் அனுப்பினாலும் ஆட்சேபணை இல்லை.

''மேலைச்சாளுக்கியம் இங்கிருந்து எவ்வளவு தூரம்.''

''பதினேழு நாள் பயணம்.''

''அடேயப்பா.''

''பகல் முழுவதும் பயணம் செய்தால் பதினேழு நாட்களில் சேர்ந்துவிடலாம். நடுவிலே உடம்பு வலி தாங்காமல் தங்கினால் இன்னும் தாமதமாகும்.''

''ஆனால் இது ஒரு நல்ல வாய்ப்பு.

''ஆமாம். நல்ல வாய்ப்பு.''

''அரசர் இதை விரும்புவாரா.''

''எதற்கு.

''இதெல்லாம் இடைஞ்சல் என்று சீறினால்.''

''அப்படிச் சீறுவதற்கு வாய்ப்பு இல்லை.

''ஏன்.''

''போகின்ற அத்தனை பேரும் ஏதோ ஒரு வகையில் உதவியாகத்தான் இருப்பார்கள் என்று அரசர் நம்புகிறார். ஏனெனில்...

''என்ன. ஏனெனில்.

''ஐந்தாம் வருணத்தினரை அதிகம் அழைத்துப் போவதில்லை எனவே, நீங்கள் மற்றவர்களுக்கு விசிறினாலோ, மருந்து கொடுத் தாலோ அல்லது அவர்கள் குளிக்கும்போது குதிரைகளை பிடித்துக் கொண்டு நின்றாலோ கவலையில்லை. கூடாரத்து சாமான்களை இறக்கி வைப்பது போன்ற சிறிய வேலைகளையும் அந்தணர்கள் செய்யலாம்.

''என்னப்பா விளையாடுகிறாய். இதுவரை இல்லாத ஒரு இழிநிலைக்குத் தள்ளி விடுவாய் போலிருக்கிறதே.''

''வேறு வழியில்லை என்று மருவூர் அந்தணர்கள் நினைக்கிறார்கள். மருவூர் அந்தணர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். அசாத்தியமான தந்திரசாலிகள், அதுவும் தவிர, எதுவும் செய்வதற்கு நெஞ்சுரம் உள்ளவர்கள். இப்பழியைத் துடைத்தே ஆக வேண்டும் என்று கோபமாக நிற்கிறார்கள். வரகூர், ஒன்பத்து வேலி, கிருஷ்ணன் கோயில், திருப்பூந்துருத்தி போன்ற ஊர்களில் அந்தணர்களால் தான் அரசருக்கெதிரான இந்த நிலைமை ஏற்பட்டு விட்டது என்று குற்றம் சொல்கிறார்கள். அதைத் தாங்கள் நீக்கப் போவதாக சபதம் செய்திருக்கிறார்கள். எனவே, நீங்கள் விருப்பப்பட்டால் மருவூர் அந்தணர்களோடு சேர்ந்து மேலைச்சாளுக்கியம் வரை போய் வரலாம். அதுவும் தவிர...''

''என்ன அதுவும் தவிர.''

''மேலைச் சாளுக்கியத்தில் நல்ல சிவன் கோயில்கள் இருக்கின்றன. அங்கு சிவனெறிச் செல்வர்கள் அதிகம். வேதபண்டிதர்கள் அதிகம். நர்மதையாலும், துங்கபத்ரையாலும், பெருத்த வயல் நிலங்களில் அந்தணர்கள் ஆட்சி செய்கிறார்கள் அவர்களைச் சந்திக்கலாம். கோயில்களில் சுவாமி தரிசனம் செய்யலாம். அதுவும் நல்ல மனமாறுதலாக இருக்கும். பெரிய விஷயங்களைத் தெரிந்து கொண்டதாக இருக்கும். ஒரு படையோடு யாத்திரை போவது நல்லதுதானே என்று கேட்கிறார்கள். அதற்கான பயிற்சிகளில் இறங்கி விட்டார்கள்.''

''என்ன பயிற்சி... இதற்கு ஏன் பயிற்சி.''

''பயிற்சியில்லாமல் முடியுமா. ஒரு வேளை குதிரை கிடைக்கவில்லை என்று வைத்துக் கொள். நடக்க வேண்டாமா? அந்தணர்கள் வெறும் காலோடு பத்து கல் தொலைவு நடந்து, நாய் வசியப்படுத்தும் மந்திரமும், யானைகளை விரட்டுகின்ற மந்திரமும், பாம்பை அப்புறப்படுத்தும் மூலிகையையும் தெரிந்து கொள்கிறார்கள்.''

''ஒரு கேள்வி.''

''என்ன.''

''ஒருவேளை நமது சக்ரவர்த்தி அந்தப் படையெடுப்பில் தோல்வியுற்றுத் திரும்பினால்.''

மத்திம வயது அந்தணர் கேட்க, எல்லோரும் அவரைத் திரும்பி முறைத்தார்கள்.

''முட்டாள்தனமாகப் பேசாதே.''

''இவர்கள் கூட வந்தால்தான் தோல்வி ஏற்பட்டதென்று எவனாவது கொளுத்திப் போட்டால் போதும். குப்பென்று அரசருக்கு கோபம் பற்றிக்கொள்ளும், வந்ததும் முதல் வேலையாக நம்மையும் துரோகிகள் என்று நாடு கடத்தலாம். அதற்கும் தயாராக இருக்க வேண்டுமென்கிறார்கள் மருவூர் அந்தணர்கள்.''

''அடப்பாவிகளா.''

''அவர்கள் சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. எந்த வேலையிலும் ஆபத்து இருக்கிறது. அரிவாள் எடுத்த பிறகு வெட்டும் போது, விரல் வெட்டிக் கொண்டால் என்ன செய்வது என்றால், விறகு வெட்ட முடியாது. வீட்டில் அடுப்பு எரியாது. எனவே, விறகு வெட்ட பயப்படாமல் விறகு வெட்டித்தான் ஆகவேண்டும் என்கிறார்கள்.

''அதிலும் உண்மை இருக்கிறது. நான் மேலைச் சாளுக்கியம் போகப் போகிறேன்.''

ஒரு அந்தணர் உரக்கக் கத்தினார்.

பலபேர் அதை ஹுங்காரமாகவும், மேல் துண்டை விசிறிப் போட்டும், ஆரவாரித்தும் வரவேற்றார்கள்.

''நமது கிராமத்திலிருந்து பத்து கல் தொலைவு எது.''

''அரண்மனை.''

''அப்படியா. தினமும் ஒரு முறை தஞ்சை அரண்மனையைப் போய் பார்த்துவிட்டு வருவது என்ன தவறாகி விடும். ஒருமாதம் பயிற்சி செய்தால் உடம்பு வலுப்பெறுமல்லவா.''

''நிச்சயம் வலுப்பெறும்.

''வேதபாடங்கள் கற்பது எவ்வளவு தூரம் இருக்கிறது.''

''ஓரளவுக்குத் தேர்ச்சி பெற்றிருக்கிறேன்.''

''அது போதும். மேலைச்சாளுக்கியம் போய் வந்து விட்டால், முழுமையாகத் தேர்ச்சி பெற்றவனை விட முக்கியமானவனாகி விடுவாய். முழுமையாய் தேர்ச்சி பெற்றவர் உன் அக்ரஹாரத்தில் எத்தனை பேர் இருப்பார்கள்.

''மூன்று, நான்கு பேர் இருப்பார்கள். அவ்வளவு தான்.''

''அவர்கள் மேலைச்சாளுக்கியம் வருவார்களா.''

''இல்லை. அவர்களுக்கு வரமுடியாது. அந்த வலுவும் மன நிலையும் இல்லை.''

''அதுதான் நல்லது விளக்கு, தட்டு என்று பல்வேறு விஷயங்கள் எடுத்துக்கொள். ஆரவாரமாகப் பூஜை செய். இதைப் பார்த்தால் போதும், அந்தணர்கள் நமக்காகப் பூஜை செய்கிறார்கள் என்று சேனாதிபதிகளும், உபசேனாதிபதிகளும் அரசருக்குச் சொல்லி விடுவார்கள்.''

''எங்கு கிளம்பி விட்டாய்.''

''மருவூர் அந்தணர்களைப் போய் பார்த்து வருகிறேன்.''

''எதற்கு.

''ஒருமுறை நன்றி சொல்லலாம். ஸ்நேகமாக்கிக் கொள்ளலா மல்லவா.''

''அடேயப்பா மருவூர் புத்தி உனக்கும் வந்துவிட்டதே.

''காரணமின்றி நரி இடமும் போகாது. வலமும் போகாது.''

''போய் வா...

''வணிகர்கள் நிலம் கேட்டால் விற்றுவிடலாமா.''

''நிலத்திற்கு, போர் முடிந்த பிறகு மதிப்பு உயரும். வணிகர்கள் கரம்பு நிலத்தில் வீடுகள் கட்டி கிராமங்கள் உருவாக்கப் போகிறார்களாம்.

நல்ல தேக்கு மரங்களைப் பார்த்து, பஞ்சமரை அழைத்து, இதமாகப் பேசி வெட்டிச் சாய்த்து வை. குதிரைகளையோ அல்லது யானைகளையோ வைத்து உன் வீட்டிற்கு அருகே வை. உலர்ந்த தேக்கு மரத்தை உடனே உபயோகப்படுத்தலாம். பலகைகளாக அறுத்து வைத்தால் இன்னும் உபயோகம். அதிரசம் போல உள்ளங் கையில் காசு கொடுத்துவிட்டு வாங்கிப் போவார்கள். படை யெடுப்புக்கு முன்னே தேக்கு மரம் தேர்ந்தெடுத்து வெட்டி எடுத்துப் போய் விடு. நன்கு முற்றிய மரமாக இருந்தால் வெகு சீக்கிரத்தில் நீர் சுருங்கும். வெட்டிப் பலகையாக்கி அடுக்கி மேலே கூரை போட்டு விட்டால் அத்தனையும் பொற்காசு. வெய்யில் காலமல்லவா. நெல்லும் வைத்துக் கொள். எவரிடத்தும் கை நீட்டக் கூடாது.''

''ஐயா, தஞ்சாவூரின் வடக்குப் பக்கம் இருக்கின்ற அந்தணர்கள் அரசரோடு மேலைச்சாளுக்கியப் படையெடுப்புக்குப் போவதாக சபதம் செய்திருக்கிறார்கள். நாமும் போவது நல்லதில்லையா.''

தேவாரம் ஓதும் இளைஞன், சிவாச்சாரியார் நால்வரைப் பார்த்துக் கேட்டான்.

அவர்கள் சற்று விலகி அவனுக்கு அமர ஆசனம் கொடுத்தார்கள்.

''திருஞானசம்பந்தம் உட்கார். இளநீர் குடிக்கிறாயா.''

ஒரு காயை அவன் பக்கம் உருட்டி விட்டார்கள்.

அந்த இளநீரைத் திருப்பிப் பார்த்தான். அவன் தலை சீவப் பட்டிருந்தது. துளை போடப்படவில்லை. விரலால் அழுத்தி ஓட்டை போட்டுவிடலாமா என்று முயற்சித்தான்.

இளைஞனான ஒரு பிராமணன் கை உயர்த்தினான்.

''அமைதி. தேவாரம், திருவாசகம் பாடுகின்ற ஓதுவார், கையைத் தேவையில்லாமல் கிழித்துக் கொள்வானேன். அது, அது செய்வதற்கு ஆட்கள் இருக்கிறார்கள். அவர்கள் அந்த வேலையைச் செய்வதே நல்லது. அடேய்... இங்கு வா.''

ஒரு சிறுவனுக்குக் கட்டளையிட்டான்.

அந்தச் சிறுவன் ஓடிவர, இளநீர் கண் திறக்கச் சொன்னார். இடுப்பிலிருந்து கத்தி எடுத்து இளநீரை கண் சீவி கொடுத்து, பந்தலில் போடப்பட்டிருந்த ஓலையைச் சட்டென்று நறுக்கிக் கொண்டு வந்து அந்த ஓட்டையில் அழகாகச் சொருகி கொடுக்க, இளநீர் இப்போது குடிப்பதற்குண்டான கிண்டி போல மாறியது. மெல்ல தலை சாய்த்து திருஞானம் இளநீர் குடித்தான். இளநீர் சுவையாக இருந்தது. ஒரு சொட்டு இளநீர் கூட தேங்காயில் தங்காமல் திருஞானசம்பந்தம் தொண்டையை நனைத்தது.

''இப்போது ஒரு பத்து தேவாரம் பாடலாமல்லவா.''

''ஆமாம். தேங்காயின் சுவை தொண்டையை நனைத்து பாடவேண்டுமென்ற ஆவலையே ஏற்படுத்திவிட்டது.

''இதுதான்... இதுதான் முக்கியம். உன் வேலையைச் செய்வ தற்கு மற்றவர் உதவ வேண்டும். மற்றவர் வேலையைச் செய்ய நீ உதவ வேண்டும். ஆனால், சோழதேசத்தில் எல்லாம் வகை தொகை யில்லாமல் நடக்கிறது. எதற்கு அந்தணர்கள் மேலைச்சாளுக்கியம் போக வேண்டும். மிகப்பெரிய தவறு அதில் இருக்கிறது. அந்த

ணர்கள் வாள் தரிக்கலாகாது என்பதுதான் விதிமுறை. இப்போது மேலைச்சாளுக்கியம் வரை போய் அங்கு நடக்கின்ற யுத்தத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பி வருகின்ற இந்த அந்தணர்கள், இடுப்பில் வாள் தரித்துக்கொண்டு வந்தால், நாங்கள் போர் பார்த்து விட்டு வந்தோம் என்று கையில் வேல் ஏந்திக் கொண்டால் நன்றாகவா இருக்கும்.

''தஞ்சையின் அந்தணர்கள் வன்முறையாளராக மாறிவிட்டால் வைதிகம் பார்ப்பது யார்? எங்கள் குழுவிலும் அரசரோடு போவதைப்பற்றி பேச்சு வந்தது. ஒருவரும் போவதில்லை என்று முடிவு செய்தோம். மறந்தும் போக வேண்டாம் என்று தீர்மானித் தோம். நமது வேலை. சிவப்பணி. கோயிலைப் பராமரித்தல். அரசர் அங்கு வெற்றி பெற வேண்டுமென்று இடையறாது பூஜை செய்தல். ஒவ்வொரு சேனாதிபதியின் வீட்டிற்கும் போய் உபசேனாதி பதிகளைச் சந்தித்து, அவர்களிடமிருந்து சிறு தொகையினை வசூலித்து, அரசர் என்று போருக்குக் கிளம்புகிறாரோ அன்று மகாசண்டியாகம் நடத்துவதாகத் தீர்மானித்திருக்கிறோம்.

அரசர் போரிலிருந்து வெற்றி வாகை சூடி திரும்பும் வரை, அந்தச் சண்டி ஹோமத்தின் தழல் எரிந்து கொண்டிருக்கும்.

அதாவது மகாசண்டியை முடித்து, தொடர்ந்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு துர்க்கைக்கு முறை போட்டு அதே அக்னியில் நெய் வார்த்து பூஜை செய்வோம். அரசர் தஞ்சையை வந்து சேர்ந்தவுடன் மறுபடியும் மகாசண்டியாகம் நடந்து, இந்த மொத்த யாகமும் பூர்த்தியாகும்.''

''அரசர் வர ஒரு வருடம் ஆயிற்று என்றால், என்ன செய்வீர்கள்.''

திருஞானசம்பந்தம் வினவினார்.

''அந்த ஒரு வருடமும் சண்டியாகம் நடந்து கொண்டுதான் இருக்கும். நவசண்டி என்று ஒன்பது விதமான துர்க்கைகள் உண்டு. தினம் தினம் ஒவ்வொரு துர்க்கைக்கு என்று நாள் தவறாது ஹோமம் நடக்கும். இந்த விஷயத்தை அரசரிடம் தெரிவிக்கவும் ஏற்பாடுகள் செய்திருக்கிறோம். இப்படிச் செய்வதை விட்டுவிட்டு மேலைச் சாளுக்கியம் போகலாம். அரசருக்கு முன்னே நின்று, அவர் வருகைக்கு வரவேற்பு தெரிவிக்கலாம் என்பது சற்று குறுக்குப் புத்தி. அவர்கள் யோக்கியதையை விட்டு கீழே இறங்கி விட்டார்கள் என்பதைக் காட்டும் செயல்.

ஓதுவார்கள் எல்லோரையும் திரட்டி எங்களுக்குத் துணையாக இருக்கச் சொல். வைதிக அந்தணர்களை நம்புவதைவிட, உங்களை நாங்கள் நம்புகிறோம். நாம் ஒட்டு மொத்தமாக பெருங்கூட்டமாகப் போய் நின்றால், சிவநெறிச் செல்வரான சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவருக்கு மகிழ்ச்சி அதிகரிக்கும். அந்த மகிழ்ச்சிக்கு இடையே, கோயில் பணிகளுக்கிடையே, வேறு பணி உண்டா என்று கேளுங்கள். ஒவ்வொரு நாளும் காலையில் சிற்பிகளுக்கு அருகே போய், அவர்கள் வேலை துவங்கும் முன்பு இரண்டு நாழிகை தேவாரப் பதிகங்கள் பாட தீர்மானிப்பதாகச் சொல்லுங்கள்.

அரசர் அகமும், முகமும் குளிர்ந்து விடும். ஏனெனில் அரசர் படைகளோடு சோழதேசத்தை விட்டு நகர்ந்தபிறகு, இங்கு ஆளப்போவது சிற்பிகள்தான். நான் சொல்வது புரிகிறதா. வல்லவரையர் வந்தியத் தேவரும், குந்தவையும், மூவேந்த வேளாரும் வெகு நிச்சயமாய் இருப்பார்கள். ஆனால், அவர்கள் கவனம் முழுவதும் அரசரிடமிருந்து வரும் தகவலைப் பொறுத்துத்தான் இருக்கும். இங்கே உள் நாட்டு நிர்வாகங்கள் முழுக்க சிற்பிகள் கவனித்துக் கொள்வார்கள். அவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.''

''அப்படியா சொல்கிறாய். கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் இங்கு இருப்பின் அது நடைபெறாதே.

''அவர் சேனாதிபதி. அவரில்லாமலா படையெடுப்பு.''

''அவரை இந்த முறை படையெடுப்புக்கு அனுப்ப மாட்டார்கள் என்ற ஒரு பேச்சு நிலவுகிறதே.

''தள்ளாமை வந்துவிட்டதல்லவா. இருப்பினும் அவர் தஞ்சையின் வடமேற்கு எல்லையில் காவல் இருப்பாரே தவிர, இங்கு அமர்ந்திருக்க மாட்டார் என்பது என்னுடைய எண்ணம்.''

''எப்படி.

''ஒருவேளை நமது படைகளுக்குப் பின்னடைவு ஏற்படின், மறுபடி தாக்க இன்னொரு தலைவரும், இன்னொரு படையும் தயாராக இருக்கும்.''

''அடேயப்பா... சிவாச்சாரிகளாக இருந்து கொண்டு பெரிய அரசியல் பேசுகிறீர்களே... அதுவும் படை நடத்துதல் பற்றி, இத்தனை தெளிவாகத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே.''

''எல்லாம் பழக்கதோஷம்தான்.''

''யாரோடு பழக்கம்.

''சேனாதிபதிகளும், உபசேனாதிபதிகளும் குடும்பத்தோடு கோயிலுக்கு வருகிறார்களல்லவா. மாலை போட்டு திருநீறு அளித்து, சந்தன பிரசாதங்களையும், தொன்னையில் வெண் பொங்கலையும் கொடுத்து, எடுத்த காரியம் யாவிலும் வெற்றி என்று சொன்னால், அகமகிழ்ந்து பேசத் தொடங்கி விடுவார்கள்.

கணவன், மனைவி இருவரையும் மாலை மாற்றிக் கொள்ளுங்கள் என்று சொல்லி, என்ன நடக்கிறது சோழதேசத்தில் என்று விசாரித்தால், காதோரம் நிறைய சொல்கிறார்கள்.''

''படையெடுப்பு உறுதிதானா.''

''உறுதிதான்.''

''நாளை நாள் நன்றாக இருக்கிறது. நாளையே ஒரு பத்து ஓதுவார்கள் சிற்பிகளிடம் போய் தேவாரப்பாடல் பாடும் வேலையைத் துவங்கி விடுவோம்.

''பெருந்தச்சர் குஞ்சரமல்லரிடம் பேசினால் என்ன? சொல்லி விட்டுச் செய்தால் என்ன?''

''ஏன், செய்துவிட்டுச் சொல்லலாமே. தேவாரம் பாடாதே என்று தடுத்து விடுவாரா.''

''அதுவும் நல்லதுதான்.''

''ஏதோ தோன்றியது வந்தோம். கோயில் பணி நல்லமுறையில் நடக்க வேண்டுமென்ற எண்ணத்தில் செய்தோம் என்று சொல்லுங்கள். யார் தடுப்பார்கள்.''

''இது உங்களுடைய நல்ல ஆலோசனை சிவாச்சாரியாரே. மிக்க நன்றி.''

''நாம் ஜாதியில் வேறுபட்டிருக்கலாம். ஆனால், கோயில் பணியில் ஒன்றுக்குள் ஒன்றாக இருப்பவர்கள். உனக்குத் தெரிந்ததை எனக்குச் சொல். எனக்குத் தெரிந்ததை உன்னிடம் சொல்கிறேன். போய் வா.''

திருஞான சம்பந்தனுக்கும் அவர்களைக் குனிந்து நமஸ்கரித்து விட்டு விடைபெற்றான்.

சிவாச்சாரியார்கள் ஒருவரையொருவர் பார்த்து முறுவலித்துக் கொண்டார்கள்.

''என்ன திடீரென்று ஓதுவார் மீது அக்கறை.''

''அரசாங்கம் அக்கறை கொள்ளச் சொல்கிறதே.

''என்ன சொல்கிறது.''

''ஆரியம் பாடினால் மட்டும் போதாது. தமிழும் பாட வேண்டு மென்று. அரசாங்கம், குறிப்பாய் சக்ரவர்த்தி வற்புறுத்துகிறார். இப்பொழுதே அணைத்துக் கொண்டால் பிற்பாடு உதவுமல்லவா.''

''அதுதானே பார்த்தேன். கூப்பிட்டு இளநீர் தரும் கருணை பொங்குகிறதே என்று.

''அவர்கள் வாய்விட்டு சிரித்தார்கள்.''

''அவர்கள் சிரிப்பொலியோடு தேவரடியார்கள் பதினைந்து பேர் கோயிலுக்குள் வர, அவர்கள் சிரித்த சிரிப்பும் ஒன்றாகக் கலந்தது.

அந்த சிவாச்சாரியார்கள் எழுந்தார்கள். செப்புத் தகடுகளை எடுத்துக்கொண்டு சன்னதி நோக்கி நடந்து, அங்கு நின்று கொண்டார்கள். படியேறிய தேவரடியார்களை வருக... வருக என்று வரவேற்றார்கள்.

அவர்கள் கொண்டு வந்த மாலையை சிவலிங்கத்தின் மீது அழகுற போட்டார்கள். நெய் தீபம் காட்டினார்கள். சிவலிங்கத்தின் நெற்றியி லிருக்கிற சந்தனத்தைச் சிறிதளவு எடுத்து உருட்டிக் கொண்டு வந்து, அங்குள்ள பெண்களின் கையில் கொடுத்தார்கள். வில்வ இலைப் பிரசாதமும் கொடுத்தார்கள்.

''ஏதேனும் செய்தி உண்டா, போர் வரும்போல இருக்கிறதே.''

அப்பாவியாய் கேட்டார்கள்.

''அப்படியா... போரா. எங்களுக்குத் தெரியவில்லையே.

அவர்களைவிட அப்பாவியாய் தேவரடியார் பெண்கள் நடித் தார்கள்.

''யாரோடு போர்.''

''மேலைச்சாளுக்கியத்தோடு தான்.''

''மேலைச்சாளுக்கியமா. அது எங்கு இருக்கிறது.''

''திருவொற்றியூர் தாண்டிப் போக வேண்டுமடி..'' என்று ஒரு பெண் பதில் சொல்ல, சிவாச்சாரியார்கள் மெல்ல அந்தப் பெண்ணை உறுத்துப் பார்த்தார்கள்.

''உண்மையில் தெரியாதா அல்லது தெரியாதது போல் நடிக்கிறீர்களா.''

வெளிப்படையாகக் கேட்டார்கள்.

''எங்களுக்குத் தெரிந்தது ஆடலும், பாடலும்தான். போர் பற்றியோ, ஊர் பற்றியோ எங்களுக்கு எதுவும் தெரியாது. சொன்னால் கேட்டுக் கொள்கிறோம்.

சிறிது நேரம் நின்றார்கள்.

''உச்சி காலத்திற்கு நேரமாயிற்று. பிற்பாடு பேசுவோம்.

அந்தணர்கள் உள்ளே போய் திரைபோட அந்தப் பெண்கள் உதடு பிதுக்கிவிட்டு, கோயில் சுற்றினார்கள்.

''என்னடி போர் வருமா.''

''வரும். வருமென்ன வந்து விட்டது. அந்த யானைப் பாகன் மகன் யானைக்கு நடக்க சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறான் பார்.''

''கோயில் யானை எட்டு வயதுப் பிள்ளையிடம் மண்டியிட்டு அமர்ந்து எழுந்து நின்றது. மறுபடியும் மண்டியிட்டது. அந்தப் பிள்ளை ஏறி உட்கார்ந்து கொண்டான்.

யானை எழ மறுத்தது. அவன் பிரம்பினால் சுள்ளென்று அடித்தான்.

யானை நிதானமாய் மேலே எழுந்தது. கண்களை உயர்த்தி அந்தப் பிள்ளையைப் பார்த்தது.

அதன் தலை மேல் உச்சியிலுள்ள மரத்தில் தட்டாது பின்னால் நகர்ந்தது. பிறகு குனிந்து, அழுந்தி கொட்டகை வாசலில் முகம் படாது நகர்ந்து வெளியே வந்தது. பாகன் தன் யானையை மிக சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மகன் யானையை அடக்க வேண்டாம். யானை தானாக அடங்கி தன் மகனைக் காபந்து செய்யும் என்பதைப் புரிந்து கொண்டான். அருகே போய் கண்களுக்கு அருகேயுள்ள கன்னத்துப் பகுதியைத் தடவிக் கொடுத்தான்.

உன்னை நம்பித்தான் போகிறேன் என்று சொன்னான்.

தேவரடியார் பெண்கள் வியப்பாக யானைப்பாகனைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''என்ன... இத்தனை சின்னப் பிள்ளைக்கு யானை ஏற்றம் சொல்லித் தருகிறீர்களே... கொஞ்சம் வயதாக வேண்டாமா... அவன் இன்னும் குழந்தைதானே.''

ஆறுதலாகப் பேசுவதுபோல ஒரு தேவரடியார் முன்னேறிச் சொன்னாள்.

மற்றவர்கள் அவள் பேச்சைப் புரிந்து கொண்டார்கள்.

''இல்லையம்மா, என்னை ஆயத்தமாய் இருக்கச் சொன்னார்கள்.''

''எதற்கு. மேலைச்சாளுக்கியம் போகவா.''

ஒரு பெண் இடையில் புகுந்து பேசினாள். மற்றவர்கள் பல் கடித்தார்கள்.

''இது தவறு. அவனாக ஊர் பெயரைச் சொல்ல வேண்டுமே தவிர, நர்மாகச் சொல்லக்கூடாது.

''மேலைச்சாளுக்கியத்திற்கு நான் ஏன் போகிறேன் அம்மா. நான் என்ன படைவீரனா. கோயில் பாகன்தானே.''

''பிறகு எதற்கு ஆயத்தம் என்று சொன்னார்கள்.''

''யானைகள் வருகின்றனவாம்.''

''எங்கிருந்து.''

''மதுரையிலிருந்து.

''அதனாலென்ன.''

''அவர்களுக்குக் கொட்டகை அமைக்கவும், உணவு கொடுக்க வும், யானைப்பாகர் தங்குவதற்கு வசதி செய்யவும், கோயிலிலுள்ள தென்னந்தோப்பை ஒழித்துக் கொடுக்கச் சொல்லியிருக்கிறார்கள். தென்னந் தோப்பின் ஓரத்தில் குடிசைகள் போட்டாயிற்று.

யானைகள்தா ர் பாவம். நிழலில், வெயிலில் மழையில் நனைந்து கொண்டு தென்னந்தோப்பிலேயே தங்க வேண்டியிருக்கும். அப்படி அவர்களை அங்கு தங்க வைத்தால், இங்குள்ள மண்டபங்களில் தங்க வைக்க முடியுமா என்பதைப் பார்த்து வரச் சொல்லியிருக்கிறார்கள்.

அப்படி நாலாபக்கமும் நான் ஓடினால், இந்த யானையை யார் கவனித்துக் கொள்வது. அதனால்தான் என் எட்டு வயது மகனிடம் இதை ஒப்படைத்துவிட்டு, மற்ற வேலைகளுக்குப் போகலாம் என்றிருக்கிறேன். இன்னும் மூன்று நாளில் என் பிள்ளை முற்றிலும் தயாராகி விடுவான்.''

''யானை அமைதியாக இருக்கிறது. குழந்தை போல் இருக்கிறது.

''ஆமாம் அப்படித்தான்: ஒரு குழந்தையாகத்தான் நான் அதை வளர்த்து வந்தேன்.''

''எத்தனை யானைகள் வரும்.

''நிறைய யானைகளம்மா.''

''நிறைய என்றால் எவ்வளவு.

''எனக்குச் சரியாக கணக்குத் தெரியவில்லை. என்னிடம் சொல்லவும் இல்லை. ஆனால், ஒரு உபசேனாதிபதி காதோரம் சொல்லிவிட்டுப் போனார்.''

''என்ன...

''அடுத்த பௌர்ணமிக்கு மதுரையிலிருந்தும், சேர தேசத்திலிருந்தும் யானைகள் வரும். தஞ்சையில் மட்டும் ஆயிரம் யானைகள் நிற்கும்படியாக இருக்கும் என்று சொன்னார்.''

''என்ன.'' தேவரடியார்கள் அதிர்ந்தார்கள்.

''ஆமாம். அம்மா ஆயிரம் யானைகள் தஞ்சையைச் சுற்றி பல்வேறு இடங்களில் நிற்க வைக்கப்பட்டிருக்கும். இந்த மாதிரி அமைதியான கோயில் யானைகள் அல்ல. குழந்தைகளுக்கெல்லாம் பணியாது. எல்லாம் முரட்டு யானைகள். மது குடித்துப் பழக்கப் பட்ட யானைகள். அடித்தால் பதிலுக்கு சீறி வரும் யானைகள்.''

''ஆயிரம் யானைகளா. உணவுக்கு...

''தென்னை மட்டைகளை உரித்துப் போடுவதுதான்.''

''போதுமா.''

''வடக்கே காவிரிக்கரை ஓரத்திலுள்ள புல் கொடுத்துப் பசியாற வைக்க வேண்டியதுதான். யானைகள் வைக்கோலும் தின்னும்.

''அப்போது மாடுகள் தீவனத்திற்கு.

''கஷ்டம்தானம்மா. போர் என்று வந்துவிட்டால் யானைகளுக்குத்தான் முதல் உரிமை. பிறகு குதிரைகளுக்கு. அதற்குப் பிறகுதான் மாடுகள். இந்த முறை மாட்டு வண்டிகளே இருக்காது என்று சொல்கிறார்கள். எனவே மாடுகளெல்லாம் வைக்கோலை நம்பியிராமல் புல் தின்று பசியாற வேண்டியதுதான். இந்த வெயிலில் காவிரிக்கரை புற்களே சுருண்டிருக்கிறது. இதைவிடவும் அவஸ்தை ஆடுகளுக்கு. பச்சை இலைகளை ஒடித்துப் போட்டுத்தான் அவைகளை பசியாற வைக்க வேண்டும்.

''எதற்கு ஆயிரம் யானைகள். ஏதேனும் உற்சவமா.''

''என்னம்மா விளையாடுகிறாய். ஆயிரம் யானைகளை வைத்துக் கொண்டு என்ன உற்சவம் நடத்தப் போகிறார்கள். போருக்கு யானைகள் போகின்றன.''

''எங்கே நடக்கிறது போர்.''

''மேலைச்சாளுக்கியத்தில் என்று சொல்கிறார்கள்.''

''உறுதியாகி விட்டதா.''

''உங்களுக்குத் தெரியாதா? என்னிடம் கேட்கிறீர்கள். அரசசபை வரைக்கும் உங்கள் செல்வாக்கு பரவியிருக்கிறதே அம்மா. ஏதேனும் தெரிந்தால் என்னிடம் சொல்லுங்கள். எனக்கு வேலை இருக்கிறது.

அவன் நகர்ந்தான்.

''போர் என்றால் உபசேனாதிபதிகளும், சேனாதிபதிகளும் மும்முரமாக ஈடுபடுவார்களே.''

''ஆமாம், நம்முடைய ஆடல், பாடலுக்கு அதிகம் ஈடுபாடு காட்டமாட்டார்கள்.''

''ஈடுபாடு காட்டுவதா. அருகே வரமாட்டார்கள். போர் பற்றிய சிந்தனையிலேயே இருப்பார்கள். அப்படி மீறி வருபவர்களைக் கண்டிப்பார்கள். என்ன செய்வது.

''நாம் மெல்ல வணிகர் பக்கம் திரும்பி விட வேண்டும். வணிகர்களைக் கண்டால் மிக மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும். இப்பொழுது போர் வீரர்களைத்தான் நாம் அதிகம் கொண்டாடுகிறோம். வணிகர்கள் தாங்கள் வீடுகளுக்கு நடனமாட அழைத்தால் பிற்பாடு வருகிறோம் என்று சொல்லி விடுகிறோம், அல்லது பேசாமல் போய் விடுகிறோம். இனி அப்படி இருக்கக் கூடாது. வலியப் போய் வணிகர்களிடம் ஸ்நேகம் வைத்துக் கொள்ள வேண்டும்.''

''எதற்காக வணிகர்கள் ஸ்நேகிதம்.

''காசு. காசு வேண்டாமா. வெறுமே அரசாங்கம் கொடுக்கின்ற நெல் கூலியையும், மூன்று கழஞ்சு காசுகளிலும் நம்முடைய பிழைப்பு ஓடுமா. காவிரிக்கரையின் அருகே, இங்கே இருக்கின்ற வீடுகளைவிட உறுதியான, அகலமான வீடுகள் கட்டலாம் என்று வணிகர்கள் திட்டம் போட்டிருக்கிறார்களாம். குறிப்பாகத் திருவை யாறில் காவிரிக் கரையோரம் தனியாக ஒரு குடியிருப்பு செய்யப் போகிறார்களாம்.''

''யார் சொன்னது.

''வணிகர் வீட்டு வேலைக்காரி சொன்னாள்.''

''அப்படியா.''

''திருவையாறு ஒரு நடை போய் வருவோமா.''

''நடந்தா.''

''இல்லை. வீரர்களிடம் வண்டிகள் கேட்போம். மாட்டு வண்டியில் போய் விடுவோம்.

''சிறுதேர் அதிகம் வருகிறதாமே.

''போருக்கென்று தஞ்சைக்கு நூறு வண்டிகள் கொண்டு வந்திருக்கிறார்கள். முன்னும் பின்னும் அலைகிறதாம். உனக்கும், எனக்கும் யார் வில்வண்டிகள் தருவார்கள். அதுவும் குதிரை கட்டிய வில்வண்டி.

''கேட்டுப் பார்ப்பது.''

''யாரை.''

''யாராவது உபசேனாதிபதியை.''

''அந்த வண்டியில் எத்தனை பேர் போக முடியும்.''

''குதிரை ஓட்டி தவிர இரண்டு பேர் போகலாம். மூன்று பேர் நெருக்கமாகப் பயணம் செய்யலாம்.''

''அட... நாலைந்து வண்டிகள் இருந்தால் போதுமே.

''இப்போது எங்கு போவது.''

''அரசர் கோயில் கட்டுகிறாரல்லவா அந்தப் பக்கம் போவோம். அங்கு சேனாதிபதிகள், உபசேனாதிபதிகள் யாரேனும் இருப்பார்கள். பேச்சு கொடுப்போம்.''

''வெகு நிதானமாகப் பயணம் செய்தால், தங்கி ஓய்வெடுத்துக் கொண்டால் வெகு எளிதாக நூறு கல் தொலைவுக்கு இந்தக் குதிரைகள் போய்விடும். சோழ தேசத்தின் விளிம்பு வரை பாதைகள் மிகச்சரியாக இருக்கின்றன. எல்லா கிராம மக்களையும் பாதைகளைச் சீர்செய்யச் சொல்லியிருக்கிறோம். காடுகளாலான பகுதிகளைக் கூட ஆட்களை அனுப்பி சரி செய்திருக்கிறார்கள். ஆரம்பத்தில் ஒரு இருநூறு வண்டிகளுக்குப் பாதையில் சிரமங்கள் ஏற்படலாம். பிற்பாடு அந்தப் பாதை சரியாகி விடும். முதல் நூறு வண்டிகளில் பாதைகளைச் சரி செய்யக்கூடிய மறவர்களையும்

வேலையாட்களையும் அனுப்புகிறோம். மழை இல்லாது இருப்பின் பயணம் மிகச்சரியாக இருக்கும்.

அருண்மொழி, இராஜேந்திரர் அருகே வில் வண்டியில் நின்று ஓட்டியவாறு பேசிக் கொண்டிருந்தான்.

''அருண்மொழி, நூறு வண்டிகள்தான் வந்திருக்கின்றன. மீதி வண்டிகள் எங்கே.

''அவற்றை நான் தஞ்சைக்குக் கொண்டுவரச் சொல்ல வில்லை.

''எங்கு கொண்டு வரச்சொல்லியிருக்கிறாய்.''

''குடந்தையில் சிலவும், நடுநாட்டில் சிலவும் வைத்திருக்கிறேன், கீழைச்சாளுக்கியத்திலிருந்து வருகின்ற வண்டிகள் காஞ்சியிலிருந்து அப்படியே வடமேற்கே நகர்ந்து விடும். காஞ்சிபுரத்திற்குப் பிறகு கணக்கு கேளுங்கள் ஆயிரம் வண்டிகளுக்கு மேலே சொல்கிறேன்.''

''ஏன் தஞ்சைக்கு வந்தால் என்ன.''

''தஞ்சைக்கு யானைகள் வருகின்றன.''

''எங்கிருந்து.''

''மதுரையிலிருந்து.''

''அதனால் இவைகள் வரக்கூடாதா.''

''கூட்டம் அதிகமாகி விடும். தஞ்சை தாங்காது. அதுவும் தவிர கண்படும் என்பது என்னுடைய அபிப்ராயம். நம் மக்களே வியந்து நிற்கும் அளவுக்கு நாம் எதுவும் செய்து விடக்கூடாது. யானைகளைப் பிரிக்க முடியவில்லை. அதுவும் தவிர அரசர் யானைகளைப் பார்வையிட விரும்புகிறார். இதைத்தான் இந்தப் போரில் மிக முக்கியமாக பயன்படுத்தப்போகிறேன் என்று சொல்கிறார். துங்கபத்ரையைத் தாண்டுவது யானையின் உதவியால்தான் முடியும் என்று சொல்கிறார். ஆயிரம் வண்டிகள் கூடப்போதாது. அது தவிர தனித்த குதிரைப்படை வருகிறது. அதைத்தவிர யானைகளில் பெரும்படை வருகிறது. ஒரு யானையின் மேல் மூங்கில் பிரம்பாலும், மரத்தாலும் அம்பாரி அமைத்து அதில் மூன்று பேரும், பாகன் ஒருவனும் அந்த யானைக்குப் பின்னால் கயிறு பிடித்தபடி குத்திட்டு அமர்ந்தவாறு இரண்டு இளையபடை வீரர்களும் என்று, ஆறு பேர் பயணிப்பார்கள்.

விமலாதித்தருடைய படை, ஈராயிரம் பல்லவரையருடைய படை, கங்க மன்னனுடைய படை, ராஷ்டிரகூட மன்னருடைய படை, தடிகை பாடி ஏரி இறக்கத்தில் நமக்குக் கீழ் அடங்கியிருக்கிற படை, நுளம்ப பாடி படை என்று அங்கங்கே சேர்ந்து கொள்ளும்.

''துங்கபத்ரயை அடையும்போது எத்தனை பேர் எண்ணிக்கையில் இருப்பார்கள்.''

''மூன்றரை லட்சம் போர் வீரர்கள் இருப்பார்கள் என்பது என்னுடைய கணக்கு.

ஒரு நாளும் அணையாமல் தகதகத்து எரிந்து இரவில் மெல்லக் கனன்று கிடந்த அடுப்பை கருமார்கள் இழுத்து அணைத்தார்கள். மண்ணால் கட்டப்பட்ட புகைக்கூண்டை இடித்து நெருப்பின் மீது விழச் செய்தார்கள். பிறகு அதன் மீது நீருற்றினார்கள். களிமண் குழம்புத் தீயை அணைத்து குழியை நிரப்பியது அடுப்பு அடங்கு வதையே எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். துருத்திகள் நோண்டி எடுக்கப்பட்டன. இரும்பு வளையல், சால், குழல், ஏற்றக்கால் என்று பலதும் பிரித்து எடுக்கப்பட்டன. பெரும் பாரவண்டிகளில் ஏற்பட்டன.

கருமார் பெண்கள் முல்லைப்பூவைத் தொடுத்து சரமாக்கி தலையில் சூட்டிக்கொண்டு வேறு மாட்டு வண்டியில் ஏறினார்கள். பொழுது விடிந்ததும் மாட்டு வண்டிகள் வடமேற்காய் நகரத் துவங்கின. மாட்டு வண்டிக்கு முன்னும் பின்னும் சலங்கை பொருந் திய சிறிய குத்தீட்டிகளோடு கருமார்கள் நடந்து போனார்கள். ஊர் எல்லையைத் தாண்டியதும் மாட்டு வண்டியிலிருந்து செருப்பு களைக் கீழே போட்டார்கள். கருமார்கள் அந்தச் செருப்புகளை அணிந்து கொண்டார்கள். பின்னால் தொங்கிய தோல் கயிறை எடுத்து முழங்கால் வரை இறுக்கக் கட்டிக் கொண்டார்கள். வேகமாக நடந்தார்கள்.

யுத்தம் நடப்பது உறுதியாகி விட்டது. எனவேதான் சோழ எல்லைகளில் குறிப்பாய் மேல்பாடி என்று அழைக்கப்படுகின்ற இடத்துக்கு அருகே பாலாற்றங்கரைப்பக்கம் அவர்கள் குடியேறப் போகிறார்கள். அங்கு நின்று பல்வேறு திசைகளிலிருந்து வந்து இரும்பு உருக்கை உருக்கி நிறைய அம்புகள் செய்யப் போகிறார்கள். நடுநாட்டிலிருந்தும், தொண்டை நாட்டிலிருந்தும் கனமான

பிரம்புகள் அளவாக நறுக்கித் தரப்படுமாம். அதற்கு எஃகு முனை அடிக்க வேண்டும்.

அதிகம் இரும்பு செலவழிக்காமல் போனவுடன் குத்தி நிற்பதற்குண்டான கூர்மையான பகுதி மட்டும் போதும். வால் பக்கம் சிறகு வைக்கவும், தக்கை வைக்கவும் வேறு ஆட்கள் இருக் கிறார்கள். யானைகளிலிருந்து எறிவதற்காக மிகக் குறுகிய குத்தீட் டிகளைச் செய்யப் போகிறார்கள்.

குத்தீட்டிகளுக்குப் பிடி மரமாகவும், முனை இரும்பாகவும் இருக்கும். மேல் பாடியில் செய்ததும் அப்படியே நேராக கங்கதேசம் நோக்கி எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள்.

கங்கதேசத்தின் ஏதேனும் ஒரு அரண்மனையில் மிகப் பத்திரமாய் பலத்த காவலோடு இவை இருக்கும். இங்கிருந்து படைகள் நகர்ந்ததும், கங்கதேசத்திலுள்ள அம்பு மூட்டைகள் இன்னும் வடமேற்கே மேலைச் சாளுக்கியம் நோக்கி நகரும். கங்க தேசத்தின் எல்லையில் அம்புகள் வீரர்களுக்கு வினியோகிக்கப்படும். அது வரை வெறும் உடைவாளோடு சிற்சில அம்புகளோடும், வீரர்கள் பயணித்தால் போதும். வீரர்களின் பயணம் லேசாக இருக்க வேண்டுமென்று ஆயுதங்கள் செய்வதும், வினியோகிப்பதும் தள்ளி நடக்கிறது. முன்பெல்லாம் சகல ஆயுதங்களையும் வீரர்கள் கழுதை போல சுமந்து போவார்கள். இப்போது அப்படியில்லை. போர் நடக்கின்ற இடத்தில் அவர்களுக்கு ஆயுதங்கள் தரப்படும்.

இது அற்புதமான யுக்தி. இது இராஜேந்திரரின் யுக்தி என்று சொல்கிறார்கள். இளவரசர் இந்த முறை மனம் வைத்து, கருமார்கள் கேட்ட சலுகைகளைக் கொடுத்தால் மொத்த வாழ்க்கையும் திசைமாறிப் போய்விடும். இதை வெகு நிச்சயம் இராஜேந்திரர் செய்வார் என்று கருமார்களுக்குத் தோன்றியது.

இந்த மாட்டு வண்டிகளுக்கும், இப்படிக் குடிபெயர்தலுக்கும், முன் பணமும் இராஜேந்திரர் கொடுத்ததாகத்தான் சொன்னார்கள்.

எங்களுடைய இடங்களைவிட்டுப் போகிறோமய்யா என்று கருமார்கள் சொன்னபோது, மொத்த சோழ தேசமும் உங்களுடைய தப்பா... சக்ரவர்த்தியினுடைய இடத்தைத் தவிர, வேறு எது கேட்டாலும் உனக்குக் கொடுப்பதற்கு இராஜேந்திரர் தயாராக இருக்கிறார்.

தஞ்சையிலேயே தொடர்ந்து செய்யலாமே... குறிப்பாக கருந்தட்டாங்குடியிலேயே இதைச் செய்ய முடியுமே, எதற்குக் குடி பெயர்தல்.

குடி பெயருவதற்குக் கற்றுக் கொள்ளுங்கள். நானும் கூட குடி பெயர்வேன் என்று இராஜேந்திரர் சொன்னாராம். உணவுக்கு நெல், மேலே காசு, உடுக்கத் துணி ஆற்றங்கரையில் வாசம், கசக்கிறதா. திடீரென்று நடந்த இந்தக் குடிபெயர்ப்பைத் தஞ்சை பரபரப்பாய் பேசிற்று.

''கருமார்களை எதுவரை அழைத்துப் போவாய் இராஜேந்திரா.''

சேனாபதியான கிருஷ்ணன்ராமன் கேட்டார்.

''மேலைச்சாளுக்கியம் வரை.''

''ஏன் என்ன அவசியம்.''

''யுத்தம் முடிந்தபிறகு அங்கிருந்து வேலும், வாளும், கேடயங் களும், இரும்புச் சாமான்களும் இங்கே கொண்டு வந்துவிட வேண்டும்.''

''எதற்கு.

''அடுத்த போருக்கு உருக்கி பயன்படுத்தலாம். அது தவிர கோயில் கட்டவும் இரும்பு உலோகங்கள் வேண்டுமென்று சக்ரவர்த்தியார் நினைக்கிறார். அதுவும் தவிர...

''என்ன, அதுவும் தவிர.''

''நானும் என் தந்தையைப்போல ஒரு பெரிய கோயில் கட்டலாம் என்ற எண்ணத்தில் இருக்கிறேன்.''

அப்போது எனக்கும் கருவிகள் செய்ய இரும்பு உலோகம் தேவைப்படுமல்லவா. கருமார்கள் அவற்றைக் கவனித்து எடுத்து வருவார்கள்.''

இராஜேந்திரன் பதிலுக்கு, கிருஷ்ணன் ராமன் திகைத்துப் போனார்.

அருண்மொழி அதைவிடப் பெரிதாகத் திகைத்தான்.

''எங்கே கோயில் கட்டப் போகிறீர்கள் இளவரசே.''

''சொல்கிறேன். என்னோடுதானே இருக்கப் போகிறாய். எல்லாம் சொல்கிறேன்.''

இராஜேந்திரர் அவனைச் சமாதானப்படுத்தினார்.

பெரிய கோவேறு கழுதைகளில் மருந்துகளும், காயங்களுக்குக் கட்டுப் போடுவதற்குண்டான துணிகளும், நூற்றுக்கணக்கான வைத்தியர்களும் அடுத்தபடி நகர்ந்தார்கள். தொண்டை நாட்டில் உள்ள மருத்துவர்கள்தான் அதிகம் அனுப்பப்பட்டார்கள்.

கிராம நிர்வாகங்கள் வணிகர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. வணிகத் தலைவர்கள் பெருந்தனக்காரர்களாகவும், சிறுதனக்காரர் களாகவும் பதவியேற்றார்கள்.

வல்லவரையர் வந்தியத்தேவர் அரண்மனை பொறுப்பேற்றார். தஞ்சையின் சுற்றுப்புறங்கள் முழுவதும் உள்ள கிராமங்களுக்கு நிர்வாக அதிகாரியாகவும் மூவேந்த வேளாளர் நியமிக்கப்பட்டார்.

சேனாதிபதியான கிருஷ்ணன்ராமன் காஞ்சியில் குடியிருக்க முடிவு செய்தார். படைகளோடு தஞ்சையின் காவல் தெய்வம் நிசும்பசூதனியை வணங்கிவிட்டு, குதிரை ஏறி அரசரிடம் விடைபெற்று வடக்கே நகர்ந்தார்.

இராஜேந்திரரும், அருண்மொழியும், குந்தவையும், வந்தியத் தேவரும், சக்ரவர்த்தியும், வானதியும், பட்டமகிஷி, உலகமா தேவியும், எல்லாரையும்விட பஞ்சவன் மாதேவியும், குந்தவையின் வருகைக்காக காத்திருந்தார்கள். குந்தவை பல்லக்கில் வருகிறாள் என்றதும் பயந்தார்கள். என்ன... என்ன என்று விசாரித்தார்கள்.

தலைவலியாம், ஜுரமாம்; மூச்சிரைப்பும் இருக்கிறதாம் என்று சொல்ல, கவலையானார்கள்.

சக்ரவர்த்தி குடந்தைக்குப் போய் அவளைக் கூட்டி வரலாமா என்று நினைத்தார். ஆனால் இந்த நேரம் சக்ரவர்த்தி நகர்ந்தால் குழப்பமாவார்கள். மக்கள் பதட்டப்படுவார்கள் என்பதால் பல்லைக் கடித்துப் பொறுமையாக இருந்தார்.

ஆறு சக்கரத்துடன் கூடிய தேர் ஒன்று ஒரே நாளில் வடிவமைக் கப்பட்டு, அதில் மெத்தென்று படுக்கை விரிக்கப்பட்டு, மேலே கூடாரம் எழுப்பப்பட்டு, நான்கு புடவைகள் கட்டப்பட்டு தெருவை வலம் வந்தது. அந்தத் தேர் நன்றாக ஓடுகிறது என்பதை உறுதி யாக்கிக் கொண்டு குடந்தையை நோக்கி உடனே அனுப்பப் பட்டது. குடந்தையைத் தாண்டி உடையார்குடிக்கு அருகே இருக்கின்ற சிறிய ஏரியின் கரையில் பல்லக்கை அந்தத் தேர் சந்தித்தது.

பல்லக்கிலிருந்து கைத்தாங்கலாக சக்ரவர்த்தியாரின் மகள் குந்தவை இறக்கப்பட்டு தேருக்கு மாற்றப்பட்டார். தேர் திரும்பி

தஞ்சையை நோக்கி விரைந்தது. ஆறு நாழிகையில் தஞ்சையை அடைந்தது.

ஜனங்கள் ஆவலாகத் தேரைப் பார்த்தார்கள். தேரைச் சுற்றி யிருக்கின்ற குதிரை வீரர்கள் மக்களை நெருங்க வொட்டாது விரட்டினார்கள்.

தேர் அரண்மனைக்குள் போயிற்று. அரசரின் மாளிகை முன்பு நின்றது. அரசரும், வானதியும், பட்டமகிஷியும், பஞ்சவன்மா தேவியும் படிகளில் நின்று கவலையோடு தேரைப் பார்த்தார்கள்.

குந்தவை கீழிறங்கினாள். தள்ளாடி நடந்தாள். தொலைவி லிருந்து தன் தகப்பனைப் பார்த்து இரண்டு கைகளையும் விரித்தாள். தடுமாறி ஓடி வந்தாள்.

சக்ரவர்த்தியார் கீழிறங்கினார். பஞ்சவன்மாதேவி குந்தவையை இறுக்கத் தழுவிக் கொண்டாள். மெல்ல அணைத்துக் கொண்டாள். சக்ரவர்த்தியார் குந்தவையின் முகத்தை கையில் ஏந்திக் கொண்டார். கவலையோடு பார்த்தார்.

தாதிகளும், போர் வீரர்களும், சேவகர்களும் இந்தக் காட்சியைப் பார்த்து மனமுருகி நின்றார்கள். சக்ரவர்த்தி சட்டென்று குந்த வையை வாரிக் கொண்டார். இரண்டு கைகளாலும் எடுத்து படியேறி அரண்மனைக்குள் நுழைந்தார். அரண்மனைக் கதவுகள் சார்த்தப் பட்டன.

## 152

''என்னை ஏனப்பா வேங்கை நாட்டுக்குக் கொண்டு போய் கொடுத்தீர்கள்.'' அழுகையோடு, சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரின் மகள் குந்தவை பேசினாள்.

''வல்லவரையர் வந்தியத்தேவருக்குத் தஞ்சையிலிருந்து என் அத்தை குந்தவை கிடைத்தது போல, தஞ்சாவூரில் ஆண்டு கொண் டிருக்கும் உங்களுக்கு, அருகே இருக்கும் கொடும்பாளூரிலிருந்து என் தாய் கிடைத்ததுபோல, எனக்கு சோழதேசத்து அருகிலேயே ஏதேனும் ஒரு இளவரசரைப் பார்த்து, அவரையும் வீட்டோடு மாப்பிள்ளையாக்கிக் கொண்டிருக்கக் கூடாதா. ஏழுநாள் பயணம், பத்து நாள் பயணம் என்று எங்கோ இருக்கின்ற கீழைச் சாளுக்கியத் திற்குக் கொண்டு போய் என்னை ஏனப்பா கொடுத்தீர்கள்.''

''என்னம்மா, என்ன ஆயிற்று.''

சக்ரவர்த்தி அடிக்குரலில் தன் மகளின் தலையைத் தடவிய படியே கேள்வி கேட்டார்.

குந்தவையின் கட்டிலைச் சுற்றி பட்டமகிஷியும், வானவன் மாதேவியும், பஞ்சவன்மாதேவியும், மற்றுமுள்ள அரசரின் மனைவி களும் சூழ்ந்திருந்தார்கள்.

அரசர் கடைசியாய் திருமணம் செய்து கொண்ட பெண், குந்தவையின் கால்களை வருடிவிட்டுக் கொண்டிருந்தாள். அவளுக்குக் குந்தவை வயதுதான் இருக்கும். பிடித்துவிட வேண்டா மெனச் சொல்லி, மெல்ல குந்தவை தனது கால்களை விடுவித்துக் கொண்டாள்; எழுந்து உட்கார்ந்தாள்.

''விமாலாதித்தன் முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறானா.''

அரசர் கூர்மையாகப் பார்த்துக் கேட்டார்.

''இல்லையப்பா. தவறு அவர் மீது இல்லை. அவர் எடுப்பார் கைப்பிள்ளை. சற்று பயந்த சுபாவம். உங்களைப் போலவோ, இராஜேந்திரனைப் போலவோ எதையும் எதிர்த்து நிற்கின்ற துணிவும், கம்பீரமும் இல்லை. சிறு வயதிலிருந்தே அங்கே, இங்கே விரட்டப்பட்டு வெவ்வேறு இடங்களில் தஞ்சமடைந்து வாழ்க்கை குழப்பமாகியதால், அவர் தூங்கும்போது அருகே போய் தோளில் கை வைத்தாலே பயந்து போய் வெலவெலத்து எழுந்து கொள்கிறார். பிறந்த விதமும், வளர்ந்த விதமும் பயங்கரக் கதையாக இருக்கின்றன. அவர் பட்ட துன்பமெல்லாம் மிக மிக அதிகம். அதனால் அவர் மீது நான் சிறிய குறைகூடச் சொல்லமாட்டேன்.''

''வேறு யாரைக் குறை சொல்வாய்.''

''உங்களைத்தான் சொல்வேன்.''

அவள் திரும்பி அரசரைச் சுட்டிக் காட்டினாள். அரசருடைய விழிகள் விரிந்தன. என்ன சொல்கிறாய் என்பது போல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

பஞ்சவன்மாதேவி சற்று நகர்ந்து குந்தவையின் இடுப்பைச் சுற்றிக் கொண்டாள்.

''சக்ரவர்த்தி உன் தந்தையாக இருப்பதால், நீ எளிதில் குற்றம் சொல்லிவிட முடியும். எங்களுக்கெல்லாம் இல்லாத உரிமையை எடுத்துக் கொண்டு நீ விளையாடவும் முடியும். ஆனால், இது

போர்க்காலம் கண்மணி. அரசரின் மனது புண்படும்படி எதுவும் செய்துவிடாதே.'' மிருதுவாக உபதேசித்தாள்.

''ஹா... மேலைச்சாளுக்கியத்தின் மீது போர் என்று காது குளிர வரும் வழியில் கேட்டேன். இதைச் செய்வதற்கு இத்தனை நேரமாயிற்றா என்றுதான் புலம்பினேன். என்னைக் கொண்டு போய் வேங்கை நாட்டில் கீழைச் சாளுக்கியத்தில் கொடுக்கும்போது, மேலைச்சாளுக்கியத்தை ஒழித்து விட்டிருக்கக் கூடாதா.

பெண்ணை ஓரிடத்தில் கொடுக்கிறோமே, அவள் சுற்றுச்சூழல் என்ன என்று ஆராயக்கூடாதா? நாலாபுறமும் ஓடி ஒளிந்த ஒரு இளவரசனுக்கு தன் மகள் வாழ்க்கைப்பட்டாளே, அவள் வாழ்க்கை, பத்திரமாக இருக்க வேண்டுமே என்று யோசிக்கக் கூடாதா? வல்லவரையர் வந்தியத்தேவரை எப்படி கண்ணுக்குள் வைத்திருக் கிறீர்கள். எல்லாவிதப் பதவிகளும் கொடுத்து எத்தனை சீரும் சிறப்புமாய் சுற்றி வந்தீர்கள். என் புருஷனுக்கு அந்தவித உபசர ணைகள் செய்துவிடக்கூடாதா? வேங்கை நாட்டுக்கு அனுப்புவது ஏன்? இதை நீங்கள் ஏன் மிக முக்கியமான பணியாக நினைத்தீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

வேங்கை நாட்டில் மேலைச்சாளுக்கியத்தின் தொந்தரவு இல்லாமல் இருந்திருக்க வேண்டும். விதவிதமான கலவரங் களையும், வேதனைகளையும் அவர் அங்கு சந்திக்கும்படி நேரிடு கிறது. ஒட்டு மொத்தமாகப் பிரச்சினைகள் வந்தால் அவற்றைப் பிரித்துப் பார்த்து, சரி செய்கின்ற நேர்த்தி, திறன் அவரிடம் இல்லை. அவருக்கு அந்தத் திறன் இல்லை என்று சுட்டிக்காட்டுகிற போது, என்மீது கோபமும், ஆத்திரமும் வருகிறது. பெண் பிள்ளை எதிர்த்துப் பேசுகிறாள் என்று வடுகு மொழியில் உரக்கக் கத்துகிறார். எனக்கு வடுகு தெரியும். ஆனால் பேச மாட்டேன் என்று சபதம் செய்திருக் கிறேன். ஏனெனில் இவருடைய வடுகு பண்டிதர்கள், தமிழ் ஒன்றும் அத்தனை இனிமையான மொழி இல்லை என்று சபையில் சொல்ல, எல்லோரும் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

நான் தமிழில்தான் பேசுவேன். வடுகு மொழியில் பேச மாட்டேன் என்று அந்தச் சபையில் சபதம் செய்தேன். அது பலருக் குக் கோபம். சோழ இளவரசி திமிரில் ஆடுகிறாள் என்று ஆத்திரம். ஆனால் சொல்ல பயம். வெளிப்படுத்த வெட்கம். வெட்டி வீழ்த்தி விடுவார்களோ என்று உங்களைக் கண்டு அச்சம். இராஜேந்திரன் என்று பெயர் சொன்னாலே கொலை நடுக்கம்.

''குந்தவை, பிரச்சினை என்ன என்பதைச் சொல்.

மறுபடியும் வானதி அவளை நெறிப்படுத்தினாள்.

''எனக்கு சக்களத்திகள் உருவாக்க வேங்கி நாட்டில் பலபேர் முயற்சி செய்கிறார்கள்.''

''அது இயல்புதானே குந்தவை.''

''என்னால் ஒப்புக்கொளள முடியாது. நான் மட்டுமே விமலாதித்தருக்குத் துணையாக இருக்க வேண்டுமென்று விரும்பு கின்றேன். அப்படி இன்னொருத்தி வேண்டுமெனில் என்னை விட்டுவிட வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறேன்.''

அரசர்.சங்கடத்தில் நெளிந்தார்.

அங்குள்ள எல்லா அரசிகளும் தலைகுனிந்து அமர்ந்திருந்தார்கள்.

''விமலாதித்தரும் இதை ஏற்று என்னிடம் பிரியமாகத்தான் நடந்து கொண்டிருந்தார். ஆனால் வேங்கியின் புலவர்களும், அமைச்சர்களும் விடுவதாக இல்லை.

அமைச்சருக்குப் பை நிறைய பொன் கொடுத்து, ஏன் இப்படி என் புருஷனுக்குப் பெண் தேடுகிறீர்கள் என்று கேட்டபோது, ''இது அரசியலம்மா. மேலைச் சாளுக்கியமும், கீழைச்சாளுக்கியமும் கை கோர்த்து இறங்கி விட்டால், அந்த பலத்தை சோழதேசம் தாங்காது, சோழதேசத்தை நிர்மூலம் செய்துவிட முடியும்.

சோழதேசத்தை நிர்மூலம் செய்து விட்டால் வெகு எளிதில் கங்கர்களும், ராஷ்டிரகூடர்களும், தடிகை பாடியும், நுளம்ப பாடியும், பாண்டிய தேசமும், சேரதேசமும், மேலைச்சாளுக் கியத்தின் வசமாகி விடும். எனவே, மான்யகேடத்திலிருந்து குமரி முனை வரை மேலைச்சாளுக்கியத்தின் கொடி பறக்கும். மிகப் பெரிய சாம்ராஜ்ஜியம் உருவாகும். இப்படியொரு சாம்ராஜ்ஜியம் உருவாக இடைஞ்சலாக இருப்பது உங்களுடைய கணவர் விமலா தித்தர். ஏனெனில் விமலாதித்தரைக் கேட்காது, விமலாதித்தருடைய தமையனான சக்திவர்மன் எதுவும் செய்வதில்லை. இளவரசனான விமலாதித்தர்தான் இங்கே நிர்வாகம் இயங்குவதற்கு அடிப்படை யாக இருக்கிறார். இவர்கள் இருவருமே சோழதேசத்தைச் சார்ந்திருப்பதால் மேலைச் சாளுக்கியமும், கீழைச்சாளுக்கியமும் இணைய முடியவில்லை.

என்னிடம் பை நிறைய பொற்காசுகள் கொடுத்துப் பயனில்லை. சக்திவர்மனின் தாய்மாமன்கள் நான்கு பேர். இரண்டு அத்தைகள்,

ஏற்கெனவே மேலைச்சாளுக்கியத்திற்கு விலை போய்விட்டார்கள். சக்திவர்மனைப் போல வேங்கி தேசத்துப் பெண்ணையே மணக்காமல், விமலாதித்தர் உங்களை மணந்ததுதான் இப்பொழுது மிகப்பெரிய இடைஞ்சல்.

உங்களுக்கு விஷம் கொடுக்கவும், தோட்டம் துறவுகளில் நீங்கள் நடந்து போகும்போது உங்கள் மீது கொடிய நாகத்தை ஏவி விடவும், நீங்கள் யானையில் பயணம் செய்தால் அந்த யானைக்கு அதிகமாக மதுவும், விஷமும் கொடுத்து யானையை மிரளச் செய்யவும் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். எந்தக் காரணத்திலும் யானையில் பயணம் செய்யாதீர்கள்,'' என்றார்கள்.

நானும் இதை விமலாதித்தரிடம் சொன்னேன். மூன்றாம் நாள் காலை, நான் பொற்பை கொடுத்த அதிகாரி கொலையுண்டு கிடந்தார்.

''நான் இனிமேல் வேங்கி நாட்டில் இருக்க முடியாது என்று சொல்லிவிட்டேன். ஆனால், அந்தத் தாய் மாமன்கள் நேரே பேசும் போது தேனொழுகப் பேசுகிறார்கள். அந்த அத்தைகள் என் பக்கம் தலை காட்டுவதேயில்லை. இன்னும் அதிகம் விசாரித்ததில் இந்த வருட இறுதிக்குள் மேலைச்சாளுக்கியம் எப்படியும் கீழைச்சாளுக் கியத்தில் புகுந்து அங்குள்ளவர்களை சமாதானம் செய்து பேசி, அங்கிருந்து பெரும் படை திரட்டி திருவொற்றியூரின் வழியே காஞ்சியைத் தாக்கி, பிறகு குடந்தையை அடைந்து, பிறகு சோழ தேசத்தை நிர்மூலம் செய்வதற்குத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்று தெரிய வந்தது. சத்யாசிரியனிடமிருந்து சக்திவர்மனுக்கு வந்த ஓலை. இது சக்திவர்மனுக்கு போவதற்கு முன்பு நான் மடக்கிக் கொண்டு வந்து விட்டேன். இந்த ஓலை அலங்காரமான சமஸ் கிருதத்தில் எழுதப் பட்டிருக்கிறது.

''சத்யாசிரியன் சொன்னதை மனதில் வாங்கி, யாரோ ஒரு முட்டாள் புலவன் தன் புலமையைக் காட்ட இவ்வோலை எழுதி யிருக்கிறான். இதில் செய்தி குறைவாகவும், செய்யுள் மிகுதியாகவும் இருக்கிறது.

''எந்த விதத்திலும் சமாதானத்திற்கு உடன்பட மறுக்கிறீர்கள். அண்ணனும், தம்பியும் யானையின் மீது அமர்ந்து சிங்கங்கள் நடமாடும் காட்டில் உலா வருகிறீர்கள். யானைக்கு சிங்கத்தைக் கண்டால் பெரும் பயம். இரண்டே தாவலில் சிங்கம் உங்கள் தொடையில் அமர்ந்து, உங்கள் பிடரியில் அறையும் என்பதை

மறந்துவிட்டீர்கள். மத யானையை விட்டுக் கீழிறங்கி தங்க சிம்மாசனத்தில் அமர்ந்து கொள்ளும். இது கடைசி எச்சரிக்கை'' என்று எழுதப்பட்டிருக்கிறது.''

''இதை விமலாதித்தன் பார்த்தாரா.''

''ஒரு முறை இந்த ஓலையைக் கொடுத்தேன். பிரித்துப் படித்து விட்டு, இதுபோல் பல ஓலைகள், கடைசி முறை என்று வந்திருக் கின்றனவே. இதற்காகவா பயந்து விட்டாய் என்று என்னைக் கடிந்து கொண்டார்.''

''நீ என்ன சொல்ல விரும்புகிறாயம்மா.''

''விமலாதித்தரை வீட்டோடு மாப்பிள்ளையாக்கிக் கொள் ளுங்கள். அல்லது...

''அல்லது.''

''விமலாதித்தருக்கு எந்த எதிர்ப்புமில்லாத அரசு பதவியை வழங்குங்கள்.''

''அவரது தமையன் சக்திவர்மன் இருக்கும்போதே அரசபதவி யைக் கொடுக்க வேண்டும் என்று சொல்கிறாயா அல்லது சக்தி வர்மனை அழித்துவிட்டு அரசபதவியைக் கொடுக்க வேண்டும் என்று சொல்கிறாயா.''

சக்ரவர்த்தி கூர்ந்து மகளைப் பார்த்தபடி கேள்வி கேட்டார்.

''அது உங்கள் விருப்பமப்பா.''

குழைவான குரலில் குந்தவை சொன்னாள்.

சக்ரவர்த்தியும், சுற்றியுள்ள அவரது மனைவிகளும் கவலை யானார்கள்.

குந்தவை இன்னும் குழந்தையாக இருக்கிறாள். பொறுப்பற்றுப் பேசுகிறாள் என்று எல்லோருக்கும் புரிந்தது.

''ஏன் முகமெல்லாம் வீங்கியிருக்கிறது.

''எனக்கும், அவருக்கும் சண்டை.

தாழ்ந்த குரலில் அவள் பதில் சொன்னாள்.

''சண்டை என்றால்.

பட்டமகிஷி கூர்மையாக அவளைப் பார்த்துக் கேட்டாள்.

குந்தவை உடனே பதில் சொல்லவில்லை. ஆனால், அவள் பதிலுக்காக எல்லோரும் காத்திருந்தார்கள்.

''என்னைப் பாழ்படுத்திவிட்டாய் என்று அவரோடு சண்டையிட்டேன். கத்தியை எடுத்து அவரைக் கொல்லப் பாய்ந்தேன். அவருடைய மெய்க்காவல் வீரர்கள் மடக்கித் தள்ளி விட்டார்கள். கீழே விழுந்ததில் அங்கங்கே காயம் ஏற்பட்டுவிட்டது. இடுப்பில் நல்ல வலி.

அரசர் பல் கடித்தார். முஷ்டி மடக்கினார்.

''யார் அவர்கள்'' என்றார்.

பஞ்சவன்மாதேவி சட்டென்று அரசரின் தோளில் கை வைத்தாள்.

''நன்றாக இருக்கிறதே கதை. நான் உங்களைத் தாக்கினால், உங்கள் மெய்க்காவல் வீரர்கள் சும்மா விடுவார்களா. நீ செய்தது முட்டாள்தனம். எதற்காக புருஷனைக் கொல்லப் புகுந்தாய்.

''நான் ஏன் மணந்து கொண்டேன் என்றிருக்கிறது. உன்னை ஏன் காதலித்தேன் என்ற எண்ணம் வருகிறது. நீ இப்படியே நடந்து கொண்டால் நான் ஒன்றல்ல, மூன்று திருமணங்கள் செய்து கொள்வேன். இது உறுதி என்று உரக்கச் சத்தமிட்டார். எனக்குக் கோபம் வந்துவிட்டது. கொன்று விடலாம் என்று கத்தியோடு பாய்ந்தேன்.''

''கூறுகெட்ட குழந்தையாய் இருக்கிறாயேடி.

வானதி உரக்கக் கத்தினாள்.

எல்லோரும் மனதில் அதைத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், இதை நாம் சொல்லலாகாது என்று அடக்கி வைத்திருந்தார்கள். வானதி உரக்கக் கத்தியதும் அரசருடைய அத்தனை மனைவியரும் முகம் மலர்ந்தார்கள்.

''சும்மாயிரு. உன் புருஷன் சக்ரவர்த்தி. என் புருஷன் வெறும் மண்ணாங்கட்டி. உன் புருஷன் ஊர் மெச்ச கோயில் கட்டிக் கொண்டிருக்கிறார். என் புருஷன் உடைந்து விழுந்த அந்தப்புரத்து ஓடுகளைக் கூட சரி செய்வதில்லை. மழை வந்தால் வழி நடையெல்லாம் ஈரம். அறைக்குள் சாரல் அடிக்கிறது. கேட்டால் மழை போன பிறகு சரி செய்து கொள்ளலாம். மழை போன பிறகு கேட்டால், மழையில்லையே பிறகு சரி செய்து கொள்ளலாம் என்று மாற்றி மாற்றிப் பேசுகிறார். வெட்கம் கெட்ட மனிதனாக இருக்கிறார்.

ஆத்திரத்தோடு அவள் பேச, மறுபடியும் எல்லோரும் முகம் சுருங்கினார்கள்.

''மறுபடி கேட்கிறேன். நான் என்ன செய்ய வேண்டுமென்று நீ எதிர்பார்க்கிறாய்.

சக்ரவர்த்தி பேசினார்.

அவர் குரலில் மெல்லிய அலுப்புத் தெரிந்தது.

பட்டமகிஷி பேசுவதற்கு வாய் எடுத்தபோது, பஞ்சவன்மாதேவி மெல்ல விரல் உயர்த்தி வேண்டாமென்று தடுத்தார்.

பட்டமகிஷி அடக்கிக் கொண்டார்.

''மேலைச்சாளுக்கியத்திலிருந்து வணிகர்களாகவும் குருமார் களாகவும், சமண சன்னியாசிகளாகவும், மருத்துவர்களாகவும், சேடிப் பெண்களாகவும் நானூற்று இருபது பேர் வேங்கி நாட்டில் குடியமர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

வேங்கி நாடு சுத்தம் செய்யப்பட வேண்டும். அன்னியரின் ஊடுருவல் அதிகமாக இருக்கிறது. அப்படி அதைச் சுத்தம் செய்ய வேண்டுமென்றால் மேலைச் சாளுக்கியத்தை அடித்துத் தடுக்க வேண்டும். குருமார்கள் என்ற பெயரில் வந்தவர்களை அழிக்க வேண்டும்.''

''யார் அவர்கள்.''

''சேரதேசத்து குருமார்கள். முன் குடுமி அந்தணர்கள். ஹோமம் செய்கிறார்கள். மக்களிடம் சாக்தம் பரப்புகிறார்கள். சக்தி உபாசனையே பெரிது என்று சொல்கிறார்கள். சிவன் கோயில்கள் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. மெல்லியதாய் சிவநிந்தனை செய் கிறார்கள். கிருஷ்ணபூஜையும் செய்கிறார்கள். வைணவம் வேகமாக பரப்பப்பட்டு வருறது. அதேபோல சமண சன்னியாசிகளும் அதிகம் அலைகிறார்கள்.

வேங்கி நாடு குழப்பமாக இருக்கிறதப்பா. மேலே பரதகண்டத் தின் தலைவாயிலில் யவனர்கள் நுழைந்து விட்டார்கள். அவர்கள் ஆட்சி செய்ய ஆரம்பித்து விட்டார்கள் என்று பேசப்படுகிறதப்பா. வடக்கேயிருந்து சாதுக்களும், சன்னியாசிகளும், காபாலிகர்களும், இன்னும் பல்வேறு மதத்தினரும் தெற்கு நோக்கி வரத் துவங்கி விட்டார்கள். காஷ்மீரம் என்று ஒரு தேசம் இருக்கிறதாம். உயர்ந்த மிக அழகான சாமவேதம் சொல்கின்ற அந்தணர்கள் அந்தப் பக்கத்திலிருந்து வந்தார்கள். யவனர்களைப்பற்றி பயத்தோடு பேசுகிறார்கள். யவனர்கள் மதம் மாறச் சொல்கிறார்களாம். கோயில்களை இடிக்கிறார்களாம்.

''சரி. விமலாதித்தன் எங்கே.

''யாருக்குத் தெரியும். பெரிய உத்தமன் போல் பேசி, சேடிப் பெண்களோடு விளையாடிக் கொண்டிருப்பான்.''

''எங்கே என்று கேட்கிறேன்.''

''தெரியாதப்பா, தெரிந்து கொள்கின்ற உடல்நிலையும், மனோ நிலையும் எனக்கு இல்லை.

''பிறகு என்ன செய்வதாக உத்தேசம்.''

''என்னை வெட்டிப் போட்டாலும் நான் வேங்கி நாட்டிற்குப் போகமாட்டேன்.''

''அது உன் புகுந்த வீடல்லவா.''

''எனக்கு ஒரேயொரு வீடு. அது தஞ்சை. இங்கிருந்து போவதாக இல்லை. என் தங்கை வந்திருக்கிறாளாமே. அவளுக்கு தங்குவதற்கு குடில் அமைத்துக் கொடுத்திருக்கிறீர்களாமே. எனக்கு அதுபோல் ஒரு சிறிய குடில் அமைத்துக் கொடுக்கக் கூடாதா? இந்த அரண்மனை வேண்டுமென்று சொல்லவில்லை. உங்களுக்கு இடைஞ்சலாக ஒரு பொழுதும் நான் இருக்க மாட்டேன்.''

அவள் சொல்லிவிட்டு அழத் துவங்கினாள்.

அரசர் கவலையோடு அவளை விட்டு நீங்கினார்.

மேலைச்சாளுக்கியத்திற்கு படையெடுத்துப் போக வேண்டியது அவசியம்தான். ஆனால், அதற்கு இவளா காரணம். இவளைக் காரணம் காட்டியா மேலைச் சாளுக்கியம் போவது.

## 153

போர்வையை விலக்கி திடீரென்று எழுந்தவன் போல மேகத்திலிருந்து சூரியன் வெளியே வந்து சோழதேசத்தைப் பரபரப்பாக்கினான். விடிந்து வெளிச்சம் மிகுந்திருந்த அந்த பூமி சூரியனின் கதிர் பட்டதும் மேலும் சுறுசுறுப்பாயிற்று.

''இரவு என்ன நடந்தது. ஏதேனும் செய்திகள் உண்டா. யாரேனும் வந்திருக்கிறார்களா.'' என்று மக்கள் பரபரத்துப் பேசிக் கொண்டார்கள்.

குந்தவையின் வரவை அவர்கள் விதவிதமாகப் பேசினார்கள். வீரூர் விமலாதித்தனை இழித்துரைத்தார்கள். சிலர் குந்தவையைக் கடிந்து கொண்டார்கள். சிலர் சக்ரவர்த்தி உடையாரை நொந்து கொண்டார்கள்.

''எத்தனை உயரத்தில் போனாலும், என்ன அற்புதங்கள் செய் தாலும், பெண் பெற்ற ஒருவனுக்கு இந்தத் தொந்தரவுகள் இருக்கத் தான் செய்யும். பெண்ணைப் பெற்றவன் இதை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். அவர் மேலைச்சாளுக்கியத்தின் மீது படை யெடுப்பாரா அல்லது குந்தவையின் தலையைத் தடவிப் பேசிக் கொண்டிருப்பாரா. இப்பொழுது இதில் பரிதாபமானவர் சக்ரவர்த்தி தான்.'' என்று வயது முதிர்ந்தோர் பேசிக் கொண்டிருந்தார்கள்.

வல்லவரையர் வந்தியத்தேவர் விமலாதித்தனைக் காஞ்சி புரத்தின் எல்லையில் முறைப்படி வரவேற்றார்.

''திருவொற்றியூருக்கே வந்திருப்பேன். போர் ஆயத்தங்கள் ஆரம்பித்துவிட்டதால்'' என்று தயங்கிச் சொல்ல விமலாதித்தன் அவரைப் பிரியமாக மறுத்தான்.

உண்மையில் வல்லவரையர் வந்தியத்தேவர் காஞ்சிபுரத்துக்கு வந்து வரவேற்பார் என்று அவன் நினைக்கவேயில்லை. ஏதேனும் சேனாதிபதியோ அல்லது அமைச்சர்களோதான் வரவேற்பார்கள் என்று நினைத்தான்.

வல்லவராயரே வந்திருப்பது அவனுக்கு சந்தோஷத்தையும், சோழதேசம் இன்னும் நம்மை மதித்துக் கொண்டிருக்கிறது என்ற நிம்மதியையும் கொடுத்தன.

''வாழ்க சோழம். வளர்க சக்ரவர்த்தி. எப்படியிருக்கிறார் என் மாமனார்.''

குழைவாகக் கேட்டான்.

வல்லவரையர் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

இவன் நல்ல இளைஞன். ஆனால் விதி இடையறாது வெவ் வேறு ரூபத்தில் இவனைத் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறது. சிறு வயதிலிருந்தே இங்கும், அங்கும் புரட்டி இழுக்கப்பட்டதால் இவன் சரியான மனவளர்ச்சியும், உடற்பயிற்சியும், யுத்தப் பயிற்சியும் இல்லாது இருக்கிறான். உள்ளுக்குள் உடைந்து மறுபடியும் கட்டுப் போட்டிருக்கிறது. அது பலவீனமாகத்தான் காட்சி தரும். அது அவன் வாழ்க்கையைத் தொடர்ந்து சிக்கலாக்

கும். இப்போது சில நாட்கள் இவனோடு தங்கிப் பேசுவது மூலம் அவனை ஓரளவுக்கு சரிசெய்து விட முடியும்.

சக்ரவர்த்தியின் சகோதரி குந்தவை கெட்டிக்காரி. அரசியல் நுணுக்கமும், மனிதர்களை அறியும் திறனும் மிக்கவள். மன்னரின் மகள் குந்தவை வரப்போகிறாள் என்று தெரிந்ததும், ''குந்தவை யைப் பற்றி மறந்துவிட்டு அவளைச் சக்ரவர்த்தி வரவேற்பார். விமலாதித்தனை யாரேனும் வரவேற்க வேண்டாமா. அவன் நம் மாப்பிள்ளை அல்லவா, மாப்பிள்ளை மட்டுமல்ல; கீழைச்சாளுக் கியத்தின் இளவரசனல்லவா. அவனை சரியானபடி வரவேற்கா விட்டால், அதுவே பிரச்சினைக்குக் காரணமாகிவிடுமல்லவா. அவன் சண்டித்தனம் செய்கின்ற பையன் இல்லையென்றாலும், அவனுக்குண்டான மரியாதையைக் கொடுத்து விடுவதுதான் நல்லது.

உண்மையில் இராஜேந்திரன் போய் வரவேற்க வேண்டும். இராஜேந்திரனிடம் சொன்னால் சீறுவான். அருண்மொழியை அனுப்புகிறேன் என்று சொல்லுவான். அருண்மொழியை அனுப்பு வது நல்லதல்ல. அருண்மொழி உபசேனாதிபதி. என்னதான் கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரின் மகனாக இருப்பினும், அவனுடைய தகுதி சாதாரணமானதுதானே. எனவே அரசர் அனுப்பினார் என்று நீங்கள் போய் வாருங்கள். முடிந்தால் சக்ரவர்த்தியிடம் ஓலையும் வாங்கித் தருகிறேன்.

ஆனால், அது நல்லதா என்று தெரியவில்லை. நீங்கள் போனால் போதும். குந்தவையின் வருகை சாதாரணமாக இருப்பின், நானே கூட உங்களுடன் கிளம்பி விடுவேன். ஆனால், அவள் அழுது புலம்பி ஆர்ப்பாட்டம் செய்ய, இங்கு வரப்போகிறாள். அது அத்து மீறாமல் இருக்க நான் இருப்பது அவசியம். நான் இல்லையென்று தெரிந்தால் கூடுதலாகவே ஆட்டம் போடுவாள். நான் என்ன சொல்கிறேன் என்பதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறதா.''

''உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் பல்வேறு நல்ல அம்சங் களோடு பிறந்திருக்கிறார் என்று ஜாதக ரீதியாக சொல்வார் கள். குரு உச்சம், சூரியன் நட்பு என்றெல்லாம் பேசுவார்கள். எனக்குத் தெரிந்து உன்னுடைய வழிகாட்டலும், பல பேருடைய நட்பும்தான் சக்ரவர்த்தியைப் பலம் பொருந்தியவராக ஆக்குகின்றன. விமலாதித் தனை இந்த நேரத்தில் வரவேற்பது மிக மிக முக்கியம். நான் போய் அதைச் செய்கிறேன். அவன் பிரச்சினையான பையன் அல்ல.

இருப்பினும் பிரச்சினை வந்தால் எதிர்கொள்ள முடியும். அவனை அமைதிப்படுத்த முடியும்.''

குந்தவை அருகே வந்தாள். தலை நரைத்து கண்கள் ஓரம் சுருக்கம் விழுந்து வெண்தாடியுடன், அகலமான மார்புடன், மார்பு முழுவதும் நரைத்த மயிருடன் இருக்கின்ற புருஷனுக்கு அருகே போய், அவன் முகத்தையும், மார்பையும் தடவிக் கொடுத்தாள்.

''என்னுடைய தம்பி சோழச் சக்ரவர்த்திக்கு என்ன ஜாதகம் என்பது பற்றி நான் அதிகம் யோசித்ததில்லை. ஆனால் பெண்ணான எனக்கு அற்புதமான ஜாதகம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. என்னுடைய ஏழாம் இடமும், எட்டாம் இடமும் பலமாக இருக்கின்றன. என் களத்திர ஸ்தானம் மிக மிக ரம்மியமான கிரகங்களால் சூழப்பட்டிருக்றது. நீங்கள் இந்த வீட்டு மாப்பிள்ளை. உங்களைப் போல் இன்னொரு மாப்பிள்ளையை அழைத்து வருவதற்கு ஏவலாமா. ஆனால், சொன்னவுடனேயே, சொன்ன விஷயத்தின் வீரியத்தைப் புரிந்துகொண்டு மிகச் சந்துஷ்டியாக நான் போய் பிரச்சினையை மேற்கொள்கிறேன் என்கிறீர்கள். இது எனக்குப் பூர்வ ஜென்மக் கொடுப்பினை.

''இந்த ஜென்மமில்லை, இனி எத்தனை ஜென்மம் பிறப்பினும், எங்கெல்லாம் பிறப்பினும் எனக்கு வல்லவரையர் வந்தியத்தேவர் வேண்டும். இந்த வாணர் குலப் பேரரசர் வேண்டும். இவரே என்னைக் காதலிப்பவராகவும், கடிமணம் புரிபவராகவும், கடைசி வரை தோளோடு, தோள் நின்று என்னையும், என்னைச் சுற்றியுள்ளோரையும் காக்கின்ற கடவுளாகவும் இருக்க வேண்டும். நீரே புருஷன். புருஷன் என்பதற்கு அர்த்தமே நீர்தான்.

இந்த விஷயத்திற்காக, உங்களை அனுப்புவதற்கு மன்னித்துக் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள், தனிமனிதரல்ல. சோழ தேசத்தின் நன்மைக்காக நாம் பல்வேறு தியாகங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. அதில் இதுவும் ஒன்று. நீங்கள் காஞ்சிக்குப் போவதைப் பற்றி இப்பொழுது சொல்லப்போவதில்லை. சொன்னால் சக்ரவர்த்தி வருத்தப்படுவார் எல்லாவற்றிற்கும் வந்தியத்தேவரைத்தான் தொந்தரவு செய்ய வேண்டுமா என்று என்னைச் சீறினாலும் சீறுவார்.

''எனவே, நீங்கள்...'' என்று மெல்ல இழுக்க. ''இன்னும் மூன்று நாழிகையில் நான் தஞ்சையில் எல்லையைக் கடந்து விடுவேன் குந்தவை... நான் யார் என்று எனக்குத் தெரியும். மிகச்சிறிய ஒரு

அரசர் குலத்தில் பிறந்தவன். அரசரின் நேரடி வாரிசு என்றும் சொல்ல முடியாது. வாணர் குலத்தில் இருந்தால் எங்கேனும் சிறிய படைக்குச் சேனாதிபதியாக இருப்பேனே தவிர, தமிழ் தெரியாத கங்கருக்கோ, ராஷ்டிரக்கூடருக்கோ அல்லது கீழைச் சாளுக்கிய வேங்கி தேசத்து அரசருக்கோ கப்பம் கட்டி, அவர் படைக்குச் சேவை செய்து கொண்டிருப்பேனே தவிர, நாகரிகமும், மொழி வளமும் மிக்க இந்த சோழதேசத்தில் நான் இவ்வளவு பெரிய பதவியை வகித்திருக்க மாட்டேன். இப்படி வகிக்கக் காரணம் நீதான்; உன்னுடைய அன்பு தான்!

நீ விரலசைத்தால் இந்தச் சோழதேசத்தின் சக்ரவர்த்தியே எழுந்து நின்று என்ன வேண்டுமென்று கேட்கிறார். ஆனால் நீ, ஒவ்வொன்றுக்கும் என் முகம் பார்க்கிறாய். அப்படியானால் நான் சக்ரவர்த்தியை விட உயர்ந்தவன் என்றல்லவா பொருள். இப்படித் தானே இங்குள்ளவர்கள் நடத்துகிறார்கள். உலகத்தில் அழகான மனைவி கிடைத்துவிடலாம். ஆனால், அழகான மனைவியே கெட்டிக் காரியாகக் கிடைப்பது மிக அரிது. அழகான, கெட்டிக்காரியான மனைவியும் கிடைத்துவிடலாம். ஆனால், அழகான, கெட்டிக் காரியான மனைவி, நல்லவளாக இருப்பது என்பது அரிதினும் அரிது. நீ அரிதினும் அரிதானவள். பெரிதினும் பெரிதானவள்.

என் தந்தையாரும், தாயாரும் உன்னைத் திருமணம் செய்த போது பயந்தார்கள். தம்பி... உன்னை உன் மனைவி அலட்சியப் படுத்தினால் மொத்த சோழ தேசமும் அலட்சியப்படுத்தும். எனவே, அதற்கும் தயாராக இரு என்று சொல்லிதான் உன்னோடு உண்டான திருமணத்திற்குச் சம்மதித்தார்கள். ஆனால், நீ யாரென்று எனக்குத் தெரியும். அது அப்போதே புரிந்திருந்தது. நீ எதைச் செய்யாமல் உயர்ந்த மனுஷியாய் வலம் வருகிறாயோ, அதை உன்னுடைய மருமகள் சோழ சக்ரவர்த்தியின் மகள் குந்தவை செய்து விட்டாள். தான் பெருங்குடிப்பிறப்பு என்று ஒவ்வொரு கணமும் எண்ணி, தன்னைத்தானே வியந்து தன் புருஷனை அவமானப்படுத்துகிறாள். அவனுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைக்கிறாள். அவன் உதவாக்கரை என்று இழிவுபடுத்துகிறாள். அதுதான் பிரச்சினை. அதுதான் எல்லா குழப்பங்களுக்கும் காரணம்.

பல்வேறு சோதனைகளால் சோர்ந்து கிடக்கின்ற அந்த விமலாதித்தனை, உன் மருமகள் குந்தவை உற்சாகப்படுத்தியிருந்தால், இந்நேரம் அவனே சக்ரவர்த்தியாகி இருக்கலாம். ஏற்கெனவே

அடிபட்டு நொந்து போயிருக்கின்ற விமலாதித்தனை இன்னமும் கடுமையாக நோக வைக்கிறாள். அவன் அடிக்காமல் என்ன செய்வான். அங்கு சண்டை வராமல் என்ன செய்ய முடியும். ஒழிந்து போ என்று திருப்பி அனுப்பாமல் இருப்பது சோழசக்ரவர்த்திக்கு பயந்துதான். சோழதேசத்திற்குக் கொடுக்கின்ற மதிப்புதான். அந்த குந்தவையைப் பார்க்கப் பார்க்க இந்தக் குந்தவையின் உயர்வு எனக்குப் புரிகிறது.

நல்ல பெண்களை, பக்குவப்பட்டவர்களை, தெளிவானவர் களை ஊர் எப்படிக் கூப்பிடுகிறது தெரியுமா. உத்தமி என்று அழைக்கிறது. குந்தவை நீ உத்தமி. புருஷனுக்கு மட்டும் உத்தமியாக இருப்பவர்கள் உண்டு. ஆனால், சோழதேசத்திற்கே நீ உத்தமியாக இருக்கிறாய். இந்தப் பணியைச் செய்வதில் சிரமங்கள் ஏதுமில்லை.''

அறுபத்தோரு வயது வல்லவரையர் வந்தியத்தேவரும், அவரைவிட ஒரு வயது குறைந்த குந்தவையும் இறுக்கத் தழுவிக் கொண்டார்கள். மெல்ல முத்தமிட்டுக் கொண்டார்கள். சிறிதுநேரம் பிணைந்தபடியே நின்றிருந்தார்கள். ஒருவரையொருவர் உற்றுப் பார்த்தார்கள். மெல்ல விலகினார்கள். சிரித்தார்கள்.

குந்தவை கைதட்டினாள். சேடிப் பெண்கள் உள்ளே நுழைந் தார்கள். அவருடைய பயணத்திற்கு விரைவாக ஆயத்தங்கள் செய்தார்கள். அரண்மனையின் பின்பக்கம் திட்டிவாசல் வழியாகப் பதினைந்து மெய்க்காவல் வீரர்களுடன், வல்லவரையர் வந்தியத் தேவர் அரண்மனையை விட்டு வெளியேறினார்.

இரண்டு குதிரைகள் வெகு முன்னதாகவே அவர் வருகையை அங்கங்கே தெரிவிக்க நகர்ந்துவிட்டன.

விமலாதித்தனைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, தன் மனைவி குந்தவை பற்றியும், அவன் மனைவி குந்தவை பற்றியும் ஓடிய எண்ணங்களைத் தடுத்து நிறுத்தி, மறுபடியும் நிகழ்கால நினைவுக்கு வந்தியத்தேவர் வந்தார்.

''தமையனார் எப்படியிருக்கிறார். மக்கள் எப்படியிருக்கிறார்கள். வெயில் இந்த வருடமும் கடுமைதானா. ஆனால், நல்ல மழை பொழிந்ததென்று கேள்விப்பட்டேன். ஆற்றில் வெள்ளம் வரக் கூடிய அளவுக்கு நல்ல மழையாமே. பயிர் சேதம் உண்டா. சோழதேசத்துக்கு என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்.'' என்று உரிமையுடன் கைநீட்டினார்.

''உங்களுடைய பூஜைக்கென்று ஒரு வெள்ளைக் கல்லில் வினாயகர் சிலை கொண்டு வந்திருக்கிறேன். உண்மையில் உங் களையும், அத்தையையும் சந்தித்துக் கொடுக்க வேண்டும் என்று நினைத்தேன். நீங்கள் முந்தி வந்ததால் உங்களுக்கு மட்டும் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது.

சலவைக்கல்லில் தேய்த்து செய்யப்பட்ட உள்ளங்கை அளவு வினாயகர் சிலையைக் கொடுத்தான்.

வினாயகரின் இடுப்பு நாகமும், பூணூலும், ஆயுதம் பிடிக்கின்ற கைகளும், கைகளிலுள்ள விரல் நகங்களும் நுணுக்கமாக செய்யப் பட்டிருந்தன.

'அற்புதம்... அற்புதம்... அது ஏன் விமலாதித்தா, சிற்பக்கலை மட்டும் இந்த மனிதரிடம் இவ்வளவு சிறப்பாக வெளிப்படுகிறது. இசையை விட, பாட்டு ஆட்டத்தைவிட சிற்பம் உயர்ந்ததாக மாறிவிட வில்லையா. அதுவும் சமீப காலங்களில்.

''ஆமாம் மாமா. மனிதனுக்குக் கடினமான பணிகளை எதிர்கொள்வதில் இயல்பாகவே விருப்பம். கடினமானது எது மாமா, மண்ணா... இல்லை பாறை. அந்தக் கருங்கல்லை என் இஷ்டத்திற்கு வளைப்பேன் என்ற முயற்சிதான் சிற்பம்.

''அடாடா... அற்புதமான விளக்கமாக இருக்கிறதே.

''ஆமாம் மாமா. மரத்தால் என்ன செய்ய முடியுமோ அத்தனை யும் மனிதன் செய்து விட்டான். உயர்ந்த வீடுகள், மாளிகைகள், கதவுகள், தூண்கள் என்று செய்துவிட்டான். உத்திரங்களில் சிற்பம் செய்து தன் தலைக்கு மேல் சொருகிவிட்டான். இப்போது கல்லுக் குத் திரும்பி விட்டான். கல்லுக்கு அடுத்தது எங்கு போவான் சொல்லுங்கள்.''

அவனை வியப்போடு வல்லவரையர் வந்தியத் தேவர் பார்த்துக் கொண்டிருந்தார்.

மத்திம வயதைத் தாண்டியும் இளவரசனாகவே இருக்கின்ற அவனைப்பார்த்து, அவருக்கு மெல்லியதாய் கவலையும், பரிதாபமும் ஏற்பட்டன.

''தெரியவில்லையே விமலாதித்தா. கல்லுக்குப் பிறகு என்ன செய்வான்.''

''இரும்பு, இரும்பின் மீது தனிக்கவனம் செய்ய மனிதர்கள் ஆரம்பித்துவிட்டார்கள். கருமார்களுக்கு முக்கியத்துவம் வரத்

துவங்கிவிட்டன. வடக்கேயிருந்த யவனர்கள் வந்துவிட்டார் களல்லவா. அந்த யவனர்களிடம் விற்பொறிகள் இருக்கின்றன. அந்த விற்பொறிகளிலிருந்து தப்பித்துக் கொள்ள, சீறும் அம்புகளி லிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள என்ன செய்வது. இரும்புதான் தடையாக இருக்கிறது.''

''கேடயமா.''

''இல்லை. கவசம். முழு கவசம் யாரங்கே.''

அவன் உரக்கக் கத்தினான். வடுகு மொழியில் வேகமாக உத்தரவிட்டான்.

வந்தியத்தேவர் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

இரண்டு வினாடிகளுக்குள் ஒரு கவசம் வந்தது மார்பு முழுவதும் போர்த்தப்பட்டிருக்கின்ற மெல்லிய கவசம் அது. தலைக்கவசம் தனியாக இருந்தது. பிடரிப் பக்கம் சங்கிலிகள் தொங்ன. விமலா தித்தனே அதை ஒரு வீரனுக்கு இடது முழங்கைக்கென்று ஒரு தனி கவசம் பிறகு தலைக்கவசம் என்று மாட்டி நிற்க வைக்க, அந்த வீரன் ஒரு வினோதமான மனிதனாகத் தோன்றினான்.

''இதைப் போட்டுக்கொண்டு எப்படி குதிரையேறுவது.''

''ஏறலாம். ஏறி யுத்தம் செய்யலாம். சற்றுப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். மற்றபடிக்கு இதை அணுகுவதில் எந்தச் சிரமும் இல்லை. இவனை அம்பால் அடி'' என்று சொல்லி கவசம் அணிந்த வீரனை நிற்க வைத்து, இன்னொரு வீரனைச் சற்று விலகிப் போகச் சொல்லி முழு வேகத்தில் அம்பு தொடுக்க, அம்பு அவனைத் தாக்கி சற்றுத் தள்ளாட வைத்ததே தவிர அந்தக் கவசத்தைத் துளைக்கவில்லை.''

''எப்படி இருக்கிறது மாமா.''

''அற்புதம். ஆனால், கொஞ்சம் கோழைத்தனமாக இல்லை.

''இல்லை மாமா. இதில் எந்தக் கோழைத்தனமும் இல்லை. ஓடி ஒளியவில்லை. தன் மீது அம்பு படாதிருக்க தடுத்துக் கொள்கிறார். நாம் குறுக்கே சங்கிலி போட்டு அதைத் துணியால் சுற்றிக் கொண்டு அந்தச் சங்கிலியை தடுப்பதாக உபயோகப்படுத்தி சண்டை போடுவ தில்லையா. கவசம் கேவலம் என்றால் கேடயமும் கேவலம் தானே.''

வந்தியத்தேவர் விமலாதித்தனுடைய பேச்சுக்கு ஆமோதித்தார்.''

இவன் தெளிவாகத்தான் இருக்கிறான். இவனைப்பற்றி ஒன்றுமில்லாதவன் என்று குறை சொல்வதற்குக் குந்தவைக்கு என்ன துணிச்சல், போரில் ஈடுபாடு உள்ளவனாகவும், பேச்சில் தெளிவுள்ளவனாகவும் இருக்கின்ற இவனை ஏன் இவ்வளவு கரித்துக் கொட்டுகிறார்கள் என்று வியந்தார். எல்லோரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டேயிருந்தார்கள்.

வந்தியத்தேவர் சட்டென்று துவங்கினார்.

''என்ன பிரச்சினை விமலாதித்தா.''

அவன் திரும்ப வீரர்களைப் பார்த்தான்.

வீரர்கள் வணங்கி அகன்றார்கள்.

''யார் பிரச்சினை என்று கேளுங்கள் மாமா.''

''சரி. யார் பிரச்சினை.''

''சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரா. என்ன உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரா. என்ன விளை யாடுகிறாயா.''

''இல்லை. குற்றம் அவர் மீதுதான். என்னதான் பெண் பெற்றாலும் பெண்ணை எப்படி வளர்க்க வேண்டுமோ அப்படி வளர்க்க வேண்டும். ஒரு பெண்ணை ஆண்போல் வளர்த்துவிட்டு, அவளுக்கு ஏன் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். நான் அரசியல் ரீதியாக வேங்கி நாட்டிற்கு விமோசனம் என்றுதான் குந்தவையை மணந்து கொண்டேனே தவிர, குந்தவை பேரழகி என்றோ, அறிவில் சிறந்தவள் என்றோ நான் நினைக்கவேயில்லை. ஆனால், ஒரு எண்ணம் இருந்தது. உங்கள் மனைவி குந்தவையைப் போலவே இவளுக்கும் பெயர் இருக்கிறது. ஒருவேளை அவர் போல இவளும் அற்புதமானவளாய் இருப்பாள் என்ற மயக்கம் என்னிடம் இருந்தது. ஆனால், பெயர் மட்டுமே ஒற்றுமை. மற்றவை அனைத்தும் வெவ்வேறானவை.

உங்கள் மனைவியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அற்புதமான பெண்மணி என்று பலரும் வியந்து வியந்து போற்றுவதை நான் காதாரக் கேட்டிருக்கிறேன். சோழ தேசத்தில் மிக உயர்ந்த பதவியில், மிகச் செல்வாக்கோடு திகழ்ந்தாலும் அவர்கள் பணிவு மிக்கவர்கள். அன்பு மிக்கவர்கள். தாயைப் போன்றவர்கள் என்று பல பொது மக்கள் பேசுவதை நான் கேட்டுப் பரவசப்பட்டிருக்கிறேன். ஆனால், பேயைப் போலவும் ஒரு குந்தவை இருப்பாள் என்று எனக்கு இப்போது புரிந்துவிட்டது.

உங்களிடம் காண்பிக்க வெட்கமாக இருக்றதே, இருந்தாலும் என்ன செய்ய் இதோ பாருங்கள்'' என்று மேல்துணியை விலக்கி இடப் புஜத்தைக் காட்டினான்.

பெரிய கத்திக்கீறல் இருந்தது. வந்தியத்தேவர் கண்சுருக்கிப் பதறினார். ''என்ன இது'' என்றார்.

''தூங்கும்போது கிழித்துவிட்டாள்.''

''அப்படியா...

''ஆமாம். அயர்ந்து தூங்குகிறபோது அருகே வந்து உட்கார்ந்து பளிச்சென்று கிழித்து விட்டாள். என் மனைவி குந்தவை ஏன் இன்னும்உயிரோடு இருக்கிறாள். எப்படி அவளை விட்டு வைத் திருக்கிறேன் எனக்குப் புரியவில்லை. இதற்கு காரணம் சக்கரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர்.''

''என்ன முட்டாள்தனம்.

''இதைவிட பெரிய முட்டாள்தனம் உண்டு மாமா. மேலைச் சாளுக்கியத்திலிருந்து தூதாக வந்தவரை நாங்கள் திரும்ப செய்தி சொல்ல, நிரந்தர தூதுவராக வைத்திருக்கிறோம். அவனைத் தூது வரும் மேலைச் சாளுக்கியர் என்று சொன்னால் பொதுமக்கள் வெறுப்பார்களே என்று, இங்கே ஒரு சிறிய பதவி கொடுத்து வைத்திருக்கிறோம். இது ராஜாங்க ரகசியம். இது தெரியாமல் அந்த அதிகாரியிடம் போய் எண்ணூறு பொற்காசுகள் ஒரு பை நிறைய கொடுத்து, இங்கே என்ன நடக்கிறது. அரசாங்கத்தினுடைய ரகசி யங்கள் என்னென்ன. எனக்குச் சொல்லக்கூடாதா என்று கேட்கிறாள்.

''அவன் எண்ணூறு பொற்காசுகளையும் என்னிடம் கொடுத்து விட்டு உன் மனைவி உனக்கு எதிராகச் செயல்படுகிறாள் என்று சொல்கிறான். இதற்கு எங்கே போய் முட்டிக் கொள்வது.

நான் அந்தப் பொற்காசுகளை அவனிடமே கொடுத்து, இது என் தமையனார் காதுக்குப் போகாமல் இருக்கும்படி கேட்டுக் கொண்டேன். தமையனார் காதுக்குப் போனால் எனக்கு எவ்வளவு கேவலம். என் பொது மக்களுக்குத் தெரிந்தால் என்னை எவ்வளவு இழிவாகப் பேசுவார்கள். சோழச் சக்கரவர்த்தியைப்பற்றி, குந்தவையைப்பற்றி எவ்வளவு மட்டமாகப் பேசுவார்கள் என்பது ஏன் இவளுக்குத் தெரியவில்லை. நான் தவித்துப் போனேன். சோழ தேசத்தின் பகை வந்தாலும் பரவாயில்லை. கீழைச்சாளுக்கியத்தின் மானம் காப்பாற்றப்படும் என்று அவளைத் திருப்பி அனுப்பி

விடலாமா என்று நினைத்தேன். ஆனால், அதற்கு அவள் வாய்ப்பே தரவில்லை.

''என்ன நடந்தது.''

''தானே ஊர் திரும்பி சோழ தேசத்திற்குப் போக வேண்டும். வேங்கி நாடு பிடிக்கவில்லை என்று சொல்லிவிட்டாள். எனவே, கூட இருந்த, அழைத்துப் போன நான், திரும்பக் கொண்டு வந்து விடுவதற்காகவே சோழதேசம் வந்திருக்கிறேன். அதன் பிறகு மறுபடியும் நாடகம். மறுபடியும் அடிதடி. சோழ எல்லைக்குள் நுழைந்ததும் தான் எல்லா விதத்திலும் சுதந்திரமாகி விட்டதாக ஒரு நினைப்பு. எகத்தாளமான பேச்சு. இழிவான வார்த்தைகள்.''

''அவளை அடித்தாயா விமலாதித்தா.''

''அவள் என் மனைவி மாமா.''

''சக்ரவர்த்தியின் மகள் என்பதை மறந்து விட்டாயல்லவா.''

''என்ன செய்யப் போகிறீர்கள். என்னை மாறு கை, மாறு கால் வாங்கித் தொங்கவிடப் போறீர்களா. செய்யுங்கள். எனக்கு அதுபற்றிக் கவலையில்லை. மனைவியிடம் அடிபடுவதுதான் புருஷனின் லட்சணம் என்றால் நான் புருஷனாக இருப்பதற்கு பிரியப்படவில்லை. அவள் எனக்கு மனைவியாக இருக்க வேண்டிய அவசியமில்லை.

''பிரச்சினையை வேறுவிதமாக சந்தித்திருக்கலாமே விமலா தித்தா. சந்தோஷமாக நீ போய் உன் தாய் வீட்டில் சிறிது நாள் இருந்துவிட்டு வா என்று சொல்லியிருக்கலாமே.

''என் எந்தப் பேச்சையும் அவள் கேட்பதில்லை. என்னையும் சோழதேசத்தில் வந்து இரு என்று சொல்கிறாள். அது மட்டுமில்லை. உங்களையும் இழிவாகப் பேசுகிறாள். குந்தவையின் புருஷன் வீட்டோடு மாப்பிள்ளையாக இல்லையா. அவரும் இளவரசர்தான். வல்லத்து இளவரசர். இப்போது என்ன வல்லத்திலா குடியேறியிருக் கிறார். தஞ்சை அரண்மனையில், ஒரு பகுதியில் சுகமாக வாழ வில்லையா. தஞ்சை விவகாரங்களைக் கவனிக்கவில்லையா, அப்படி இருந்துவிட்டுப் போங்களேன் என்கிறாள்.

எனக்கு அதில் சம்மதமில்லை. அதுமட்டுமல்ல; என்னுடைய தமையனாருக்கு இதில் துளியும் விருப்பமில்லை. அதுமட்டுமல்ல; இப்போதே நான் சோழதேசத்திற்கு அடிமைசாசனம் எழுதிக் கொடுத்து விட்டதாக என்னுடைய மக்கள் பேசுகிறார்கள். நான்

சோழதேசத்திலேயே இருப்பின், அது இன்னும் இழிவாக முடியும். அப்படி நான் இங்கு சோழதேசத்தில் இருந்தால், மேலைச்சாளுக்கியத்தின் தொந்தரவுகள் என் தமையனாருக்கு அதிகமாகும்.

''எனக்குப் புரிகிறது விமலாதித்தா. சக்ரவர்த்தியின் சார்பில் குந்தவையின் செயலுக்கு நான் மன்னிப்பு கேட்கிறேன். எங்களுக்கு குந்தவையைப் பற்றித் தெரியும். ஆயினும் பெண்ணைப் பெற்றவர்களுக்கு பெண் மீது கொஞ்சம் கரிசனம் இருக்கத்தான் செய்யும்.''

''எனக்குப் புரிகிறது மாமா. இதனாலேயே சக்ரவர்த்தியை எப்படி நான் சந்திப்பது என்று வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன். நீங்கள் வந்தது மிகவும் நல்லதாயிற்று. இந்தச் செய்தி தெரிந்து கோபத்தில் யாரேனும் உபசேனாதிபதியைத்தான் வரவேற்பதற்கு சக்ரவர்த்தி அனுப்புவார் என்று நினைத்திருந்தேன். உங்களை அனுப்பியிருக்கிறார் என்பது சக்ரவர்த்திக்கு என் மீது உள்ள நம்பிக்கையை, தெலுங்கு தேசத்தின் மீதுள்ள காதலைத் தெரியப்படுத்துகிறது. உங்கள் வருகையைப் பார்த்து என் வீரர்கள் இந்நேரம் மழ்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள்.''

''வீட்டு விவகாரத்தை விடு. மேலைச் சாளுக்கியர்கள் பற்றி உன்னுடைய எண்ணம் என்ன.''

''அயோக்கியர்கள். கங்க தேசத்தின் எல்லைகளை பாழ்படுத்தியிருக்கிறார்கள். இந்த முறை யுத்தத்தினுடைய தன்மையே மாறியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. மேலைச்சாளுக்கியத்தில் தர்ம யுத்தமாக இருக்காது. சேரர்கள் விதம் விதமாக அவர்கள் மனதைக் கலைத்திருக்கிறார்கள். சோழரின் படையை எதிர்கொள்ள முடியாது என்று சொல்றார்கள்.

கங்க தேசமும், ராஷ்டிரகூடமும், இரட்டை பாடியும், நுளம்ப பாடியும், சோழதேசமும், நடுநாடும், தொண்டை நாடும், பாண்டிய தேசத்துப் படைகளும் ஒன்று சேர்ந்து வரும்போது எப்படி எதிர்கொள்ள முடியும் எனவே, தர்மயுத்தம் செய்ய முடியாது என்கிறார்கள்.''

''பிறகு வேறு எப்படி யுத்தம் செய்வார்களாம்.''

''இரவில் மறைந்திருந்து தாக்குவார்களாம். இரவில் இரண்டு பக்கமும் மலைகளில் நின்றபடி நெருப்பு வீசுவார்களாம். வீரர்கள் தங்கும் குளங்களில் பெண்களை விட்டு கடும் விஷம் கலப்பார்களாம். வீரர்கள் உணவு சமைக்கும் இடத்தில் சிறிய பையன்களை

ஓடவிட்டு, அவர்களிடம் குப்பிகளை கொடுத்து உணவுகளில் விஷம் கலக்கச் செய்வார்களாம்.''

வந்தியத்தேவர் முகம் சுருக்கினார்.

''சேரதேசத்து நம்பூதிரிகளல்லவா இப்படிச் செய்வார்கள்.''

''ஆயிரத்து நூற்று இருவர் என்று தனியாக ஒரு சேரதேசத்துப் படை இருக்கிறது. ஆனால், பத்தாயிரம் பேர்களுக்கு மேல் சேரதேசத்து வீரர்கள் அங்கே கலந்திருக்கிறார்கள். அவர்களால்தான் கங்க தேசத்திற்கு மிகப்பெரிய வேதனை நடந்து கொண்டிருக்கிறது. கங்க மக்களை வெறுப்படையச் செய்றார்கள். ஏன் அடி வாங்கு கிறீர்கள். உங்களைக் காப்பாற்ற சாளுக்கிய அரசன் சத்யாசிரியனைத் தவிர, வேறு எவனும் வரமாட்டான். நீதானே அண்டை நாட்டார். நாங்கள்தானே பங்காளிகள். எவனோ சோழனை, பரதேசியைத் தலைவனாகக் கொள்கிறீர்களே என்று கேட்கிறார்களாம்.''

''இதில் உன்னுடைய எண்ணம் என்ன.''

''நிச்சயமாக மேலைச்சாளுக்கியத்தோடு போர் செய்ய வேண்டும்.''

''யார்.''

''நாம்.''

''நாமெனில் யார் விமலாதித்தா.''

''ஏன் இப்படிக் கேட்கிறீர்கள் மாமா. நீங்களும் நானும் வெவ்வேறா.''

''உங்களிடமுள்ள சைன்யங்கள் எவ்வளவு. இந்த மேலைச் சாளுக்கிய படையெடுப்பில் உன் பங்கு என்ன.''

வல்லவரையர் வந்தியத்தேவர் விஷயத்தைத் தொட்டார்.

''பதினாறாயிரம் படைவீரர்களும், நாலாயிரம் ஊழியர்களும் கொண்டு வந்திருக்கிறேன். பதினாறாயிரத்தில் பதினைந்தாயிரம் குதிரைப்படை. ஆயிரம் வீரர்கள் ஓட்டமும், நடையுமாக வந்து விடுவார்கள்.''

''சிறு தேர்கள் கேட்டிருந்தோமே.

''அதைச் சோழ அதிகாரிகள் நின்று செப்பனிட்டு சோதனை செய்து வாங்கிப் போய் விட்டார்களே.''

''அவற்றுக்குண்டான குதிரைகள்.''

''தொண்டை நாட்டிலிருந்து வருன்றன என்று சொன்னார்கள். திருக்கடல் மல்லையில் குதிரைகள் இறங்கியிருப்பதாகவும், திருவொற்றியூருக்குத் தேர்கள் போயிருப்பதாகவும் சொன்னார்கள்.''

''வண்டிகளை எடுத்துப் போனவர் யார்? உன்னுடைய படைகளைப் பார்க்கலாமா.''

''விமலாதித்தன் துள்ளி எழுந்தான். எப்பொழுது போர் இருக்கும் என்று ஆவலாக வினவினான்.

அவனை வல்லவரையர் வந்தியத்தேவர் அணைத்துக் கொண்டார்.

''உள்ளேயிருக்கின்ற அத்தனை துன்பங்களையும் ஒரே வீச்சில் துடைத்துவிட்டு, போருக்காக விரைகிறாய் அல்லவா விமலாதித்தா, உன்னைத் தொடும்போது நான் ஒரு இளவரசனைத் தொடுகிறேன் என்று தோன்றவில்லை. வெகு சீக்கிரத்தில் நீ அரசபதவியை ஏற்பாய் என்று தோன்றுகிறது.

''இதென்ன விபரீதமான பேச்சு. தமையனார் இருக்கிறாரே.''

''உன் தமையனார் ஓய்வெடுக்க விரும்புவதாகவும், வடக்கே காசி தேசம் வரை போய், கங்கை நீராட விரும்புவதாகவும் தெரிவித்ததாக ஒரு பேச்சு உண்டு. எப்போது இந்த விருப்பம் வந்துவிட்டதோ. அப்போது அரசாட்சியில் பிடிப்பு ஏற்படாது. எனவே உன்னை நீ மனதளவில் அரசனாக இருக்கத் தயார் செய்து கொள். நிச்சயம் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் இதற்கு உதவுவார்.''

''குந்தவை போய் குற்றம் சொன்னால்...

''விமலாதித்தா...

சட்டென்று வல்லவரையர் வந்தியத்தேவர் கை உயர்த்தினார்.

''குந்தவையை இராஜராஜர் பெரிதாக நினைக்க மாட்டார். சில பெண்டுகள் இம்மாதிரி துடுக்குத்தனமாக இருப்பார்கள். அவர்களை வேறு விதமாக நீ கையாள வேண்டும். நான் இன்னும் ஐந்தாறு நாட்கள் உன்னோடு இருப்பேன். அப்பொழுது சில விஷயங்கள் சொல்லித் தருகிறேன்.''

''சொல்லிக் கொடுப்பீர்கள். நானும் கற்றுக் கொள்வேன். அதை பயன்படுத்த அங்கே வேங்கி நாட்டில் குந்தவை இருக்க வேண்டு மல்லவா.''

''விமலாதித்தா, யோசிக்காமல் பேசுகிறாய். விமலாதித்தனுடைய தமையனார் சக்திவர்மன் தேசாந்திரம் போக விரும்புகின்றார். வேங்கி நாடு மொத்தத்தையும் விமலாதித்தனிடம் கொடுத்து, விமலாதித்தனை அரசனாகப் பதவியேற்கும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. அப்போது நீ எங்குப்பாய். அருகிலிருந்தால் பட்டமகிஷி. தஞ்சையில் அமர்ந்து சேடிப் பெண்களை வாட்டிக் கொண்டிருந்தால், உனக்குப் பட்டமும் கிடைக்காது. பதவியும் கிடைக்காது. விமலாதித்தனுக்கு அருகே எவர் இருக்கிறாரோ, அவர்தான் பட்டமகிஷியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார் என்று ஒரு வார்த்தை சொன்னால் போதும், உனக்கு முன்பு அவள் வேங்கி நாட்டில் இருப்பாள்.''

விமலாதித்தன் வாய்விட்டுச் சிரித்தான்.

அவனுக்கு வல்லவரையர் வந்தியத்தேவரை மிகவும் பிடித்துப் போயிற்று.

## 154

விமலாதித்தனோடு பேசிய அத்தனை விஷயங்களையும் தனித் தனி ஓலை நறுக்குகளில் எழுதி வந்தியத்தேவர் தஞ்சைக்கு அனுப்பினார். காஞ்சியிலிருந்து திருவக்கரைக்கு, திருவக்கரையி லிருந்து உடையாளூருக்கு, உடையாளூரிலிருந்து கொள்ளிடத்திற்கு, கொள்ளிடத்திலிருந்து குடந்தைக்கு, குடந்தையிலிருந்து தஞ்சைக்கு என்று அந்த ஓலைக்குழல் பல்வேறு வீரர்கள் கைமாறி ஒரு நாள் உதயத்தின் போது இராஜராஜரிடம் அடைந்தது. ஓலைகள் படித்துப்பார்க்கப்பட்டன. நாலாபுறமும் ஆட்கள் அனுப்பி முக்யமான சேனாதிபதிகளையும், பிரம்மராயரையும், மூவேந்த வேளாரையும், பெருந்தச்சர் குஞ்சரமல்லரையும் உடனே வரச்சொல்லிச் சபை கூடிற்று. உபசேனாதிபதிகளும் கலந்து கொண்டார்கள்.

ஒற்றர் படைத் தலைவன் வைணவதாசன் ஓடிவந்து கலந்து கொண்டான்.

''இளவரசர் இராஜேந்திரர் கடைசி நேரம் வந்து கலந்து கொண்டார்.

''விஷம் கலப்பார்கள். இரவில் தாக்குவார்கள் மலைகளில் அடிவாரத்தில் படை நகரும்போது மேலிருந்து தாக்குவார்கள். அவ்வளவுதானே, அவற்றை வெகு எளிதாகச் சமாளிக்கலாம். ஆனால் என் வீரர்களுக்கு உணவு தயாரிக்கிறபொழுது எவரையும் அண்ட விடுவதில்லை. மூங்கிலால் நெருக்கமாகப் பின்னப்பட்டக் குச்சிகளை நாலாபுறமும் வைத்துவிடுவேன். அதைச்சுற்றி வட்ட மாகத் தடைகளை ஏற்படுத்தி விடுவேன். எல்லாத் திசைகளிலும் பலமாகக் காவல் போடுவேன். மரத்தின் நிழலிலோ கட்டடத்தின் அடியிலோ உணவு சமைக்கப்படும். சமைத்த பாத்திரங்கள் மூடியிருக்கும். சோறு குறைவாகவும், இறைச்சிகளைச் சுட்டுத் தின்றும் மீன்களை வதக்கியும் உண்போமே தவிர, கம்பங்களியை உருண்டையாக்கிப் பானைகளில் வைத்து மூன்று நாட்கள் எடுத்துப் போவோமே தவிர, வழியிலே மோர் வாங்கிக் கரைத்து உண்போமே தவிர, வேறுவிதமான உணவு தயாரிப்பு இல்லை.

''இன்னும் கவனமாக இருக்க உத்தரவிடுகிறேன். சுற்றியுள்ள நீர் நிலைகளில் நாய்களையும் ஆடுகளையும் நீர் குடிக்க விட்டபிறகே நீர் அருந்துவோம். நம்மோடு வரும் மருத்துவர்களும் அந்த நீரில் சில பொடிகளைத் தூவிப் பார்த்து, அதன் சுத்தத்தைத் தெரிந்து கொள்கிறார்கள். விஷமற்றது என்று அவர்கள் சொன்னாலொழிய நான் குடிப்பதில்லை.

நீங்கள் முதலில் செய்த காந்தளூர்ச்சாலைப் போரின்போதே இவ்வித முயற்சிகள் கையாளப்பட்டன என்று நான் அறிந்தேன்.

நுளம்ப பாடியைத் தாக்கும்போது சேரர்கள் இதேவிதமான தந்திரங்களை இரண்டு முறை கையாண்டு நம்முடைய வீரர்கள் மடிந்தும் போயிருக்கிறார்கள். எனவே, இரவு நேரம் தாக்குவது என்று அவர்கள் முடிவு செய்து விட்டால் என்னுடைய நடவடிக்கை மிகக் கடுமையாக இருக்கும். இரவு நேரம் தாக்குபவர்களைச் சித்ரவதை செய்ய எனக்குத் தெரியும். என்னுடைய உண்மையான முகத்தைப் பார்ப்பீர்கள். மலைச்சரிவுகளை மிகக் கவனமாகத் தாண்ட வேண்டும் என்பதாக என் வீரர்களுக்கு நான் பயிற்சி கொடுத்திருக்கிறேன்.

என் வீரர்கள் இளமையாக இருப்பவர்கள். மலைச்சரிவின் மீது முன்னதாகப் போய் ஏறி நின்று கொடி அசைப்பார்கள். பிறகு படை தாண்டும். இந்த முறை படைகளை இரண்டாகப் பிரித்து, ஒரு படை காவல் காக்க, ஒரு படை உறங்க வேண்டும். உச்சி நேரத்தில் ஒரு

படை உறங்கப் போக, அடுத்த படை எழுந்திருந்து காவல் காக்க வேண்டும், அந்தி சரிந்ததிலிருந்து இரவின் உச்சி வரையில் ஒரு படையும், இரவின் உச்சியிலிருந்து விடியல் வரையில் ஒரு படையும் காவல் காக்கும், நம்முடைய படைகளே பாதி விழித்துக் கொண்டிருக்கும்போது, எவர் அருகே வரமுடியும். அதற்கு இப் பொழுதிலிருந்தே பயிற்சி கொடுத்து விடுகிறேன். இம்மாதிரி பயிற்சி கொடுத்துத் தரவேண்டுமென்று ஈராயிரம் பல்லவரையருக்கும், விமலாதித்தருக்கும் சொல்லி விடுங்கள்.''

''விமலாதித்தருடைய படைகளை முன்னே அனுப்புவதா, பின்னே அனுப்புவதா.''

''கங்க தேசத்தின் எல்லை வரை விமலாதித்தருடைய படை முன்னே போகட்டும். மேலைச்சாளுக்கியம் நெருங்கிவிட்டது என்றால் விமலாதித்தன் படைகளைத் தங்க வைத்து, என் படைகள் முன்னே போகட்டும். என்னைத் தொடர்ந்து விமலாதித்தர் வரட்டும். அவரைத் தொடர்ந்து பழுவேட்டரையர் சோழப்படைகளோடு வரட்டும். அவரைத் தொடர்ந்து ஈராயிரம் பல்லவரையர் வரட்டும். அதற்குப் பிறகு யானைப்படைகளோடு நீங்கள் வாருங்கள். மறுபடி சொல்கிறேன்.

சிறு தேர், என் படைகள் முதலில், பிறகு குதிரையிலுள்ள விமலாதித்தன் படைகள் விமலாதித்தன் காலாட்படைகளில் ஒருவர்கூட படையெடுப்பில் கலந்து கொள்ள மாட்டார்கள். உதவி ஆட்களும் தேவையில்லை. அதற்குப் பிறகு ஈராயிரம் பல்லவரையர் அருகேயிருந்து நம்முடைய படைகளோடு கலந்து கொள்ளட்டும். பிறகு பழுவேட்டரையர் சோழதேசத்து தெரிஞ்சக் கைக்கோளக் குதிரைப்படையோடு வரட்டும். பிறகு நீங்கள் யானைப்படை களோடு வாருங்கள். இவற்றுக்குப் பின்னால் கிருஷ்ணன்ராமன் வரட்டும்.'' இளவரசர் இராஜேந்திரர் பேசினார்.

''மிக நன்றாக இருக்கிறது அணிவகுப்பு.''

''சேனாதிபதி கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் தொடை தட்டினார். காஞ்சியைச் சீர் செய்துவிட்டுத் திரும்பியிருந்தார்.

''ஒரு சேனாதிபதியைப் படையின் கடைசியில் கொண்டு வருவதற்கு மிகப்பெரிய துணிச்சல் வேண்டும். ஒரு சேனாதிபதிக்கு இதைவிட மிகப்பெரிய அவமரியாதை ஏதுமில்லை.''

''ஹா... ஆரம்பித்துவிட்டீர்களா. நான் பின்னால் நிற்கிறேன். நீங்கள் முன்னால் போங்கள். சரியா, இதில் எனக்கு எந்தவித வருத்தமும் இல்லை.

அலுப்போடு இராஜேந்திரர் பதில் சொன்னார்.

அவர் கோபமாகிக் கொண்டிருக்கிறார் என்று எல்லோருக்கும் புரிந்தது.

சக்ரவர்த்தி, இராஜேந்திரரை உறுத்துப் பார்த்தார்.

''ஏன் அவரைப் பின்னால் வரச் சொல்கிறாய் என்ற விளக்கத்தைச் சொல். அலுத்துக் கொள்ளாதே ஆர்ப்பாட்டமாகப் பேசாதே. எத்தனை முறை உனக்குச் சொல்வது. அவர் உன்னிலும் வயதானவர். இந்த தேசத்தின் பிரம்மராயர். பேசத் தெரியாமலேயே நீ வாழ்நாள் முழுவதும் பேசிக் கொண்டிருப்பாய் போலிருக்கிறது.''

கடைசி வார்த்தைகள் சற்று சீற்றத்தோடு வந்தன.

''மன்னித்துக் கொள்ளுங்கள் பிரம்மராயரே, காரணத்தை நான் சொல்லியிருக்க வேண்டும்.

இராஜேந்திரர் சட்டென்று குரலில் குழைவு காட்டினார்.

பிரம்மராயர் முகம் மெல்லியதாக மலர்ந்தது.

''யார் முன்னால் போனாலும், யார் பின்னால் போனாலும் இங்கு எந்தவிதமான மாற்றமும் இல்லை. ஏனெனில் நாம் படையெடுத்துப் போன்ற நேரம் துங்கபத்ரை பொங்கிப் பிரவாகமாக ஓடிக் கொண்டிருக்கும். அல்லது நீரைத் தேக்கி ஓடும்படி செய்வார்கள். எனவே கரையில் அமர்ந்து ஒட்டு மொத்தமாய் நாம் இறங்கி சத்யாசிரியனை வளைத்துத் தாக்க வேண்டியிருக்கும். நம்முடைய படைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தாலும் பரவலாக கரையில் நிற்பது என்பதுதான் முடிவான விஷயமாய் இருக்கும். அதனால்தான் சக்ரவர்த்திக்குத் துணையாக நீங்கள் பின்னால் வாருங்கள் என்று சொல்வதற்கு முயன்றேன். அதுவுமல்லாது என்னுடைய படைகள் கிளம்பி இரண்டு நாள் பொறுத்துதான் நீங்கள் தஞ்சையிலிருந்து கிளம்பும்படியாக இருக்கும். முற்றிலும் தயாராகி ஒவ்வொரு படையாக நகர்வதற்கு அத்தனை நேரம் பிடிக்கும். அந்த நேரம் தெற்கேயிருந்து ஏதேனும் சலசலப்பு வருகிறதா என்று பார்ப்பது முக்கியம். அப்படியொரு சலசலப்பு வருமாயின், இங்கு சரியான படைவீரர்கள் இல்லாமல் போகக்கூடாது. சரியான படை இல்லா

மல் போகக்கூடாது. அதற்காகத்தான் மிக முக்கியமாக உங்களை நிறுத்தினேன்.''

''தெற்கேயிருந்து சலசலப்பு வருமா.'

பழுவேட்டரையர் கேட்டார்.

''தெரியாது. வரலாம்.

''வந்தால் திரும்ப இரண்டு நாளாகுமே.

''அதனால் தான், இங்கு கனமான ஒரு தலையை நிறுத்தி வைக்க விரும்பினேன்.''

''எனக்கு இராஜேந்திரரின் பேச்சு சம்மதமாக இருக்கிறது.

சக்ரவர்த்தி சொன்னார்.

எல்லோரும் மௌனமாக இருந்தார்கள்.

''ஏன் மௌனமாக இருக்கிறீர்கள். யாருக்கேனும் கேள்விகள் உண்டா.'' கேட்டார்.

பழுவேட்டரையர் தொண்டையைச் செருமிக் கொண்டார்.

எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

''உங்களுக்கு முன்னால் கிருஷ்ணன் ராமனான பிரம்மராயரும், உங்களுக்குப் பின்னால் நானும் வருகிறோம். பிரம்மராயரைக் கடைசியாக நிறுத்துவது அவ்வளவு உசிதமல்ல. கங்க தேசம் போனதும் ஈராயிரம் பல்லவரையரைப் பின்னால் நிறுத்தி கிருஷ்ணன்ராமனை இளவரசருக்குப் பின்னால் போகச் சொல்வது தான் நல்லது என்பது என் அபிப்ராயம். அதற்குப் பிறகு நான். இதுதான் சரியான வழிமுறை.

''ஏன் கிருஷ்ணராமனை அவ்வளவு முன்னால் அனுப்பு றீர்கள்.''

பூரிவிக்ரமகேசரி வியப்போடு கேட்டார்.

''இது கடுமையான போர். நெடும்பயணம். நீங்கள் சொல்வது போல விஷத்தாலோ, இரவு நேரத் தாக்குதலாலோ முதல் படைச் சிதறடிக்கப்பட்டால், அடுத்து விமலாதித்தன் என்பது சரியே அல்ல. அந்தப்படையும் விரைவாகச் சிதறடிக்கப்படும். முதல் படையை விட இரண்டாம் படை கூடுதலான பலத்தை வைத்திருக்க வேண்டும். இங்கே கிருஷ்ணன்ராமன்தான் சரி. முதல் படை கலகலத்துத் திரும்ப, இரண்டாம் படை அந்த கலகலப்பைப் பார்த்து சிதறிப் போனால், நம்முடைய போர்த் தந்திரம் தவறு என்று

சகலருக்கும் தெரிந்து போகும். அது நமது படையை அதிகம் குழப்பும்.''

''பழுவேட்டரையருடைய பேச்சு சரியாக இருக்கிறது.''

பூரி விக்ரமசேகரி உரத்த குரலில் சொன்னார்.

சபை மௌனமாக இருந்தது.

''யாராலும் பழுவேட்டரையருக்குச் சரியான பதில் தரமுடிய வில்லை.'' சக்ரவர்த்தி பேசினார்.

இராஜேந்திரர் வாயடைத்து நின்றார். பழுவேட்டரையர் பேச்சு சரியோ என்று அவரும் யோசித்தார், ஆழ்ந்து சிந்தித்தார்.

''பழுவேட்டரையர் சொல்வது சரியல்ல. அருண்மொழி எழுந்தான்.

''இராஜேந்திரன் சொல்வது சரியென்று சொல்ல வருகிறாயா? எப்போதும் இராஜேந்திரனுக்குத்தான் தாளம் போடுவாய்'' என்பது போல ஒரு கேலியான குரலில் சக்ரவர்த்தி பேச, அருண்மொழி இல்லையென்று தலையாட்டினான்.

''என்ன சொல்ல வருகிறாய் அருண்மொழி.''

''இந்தப் படையை முதன்முதலில் நடத்திப் போவது நீங்கள்தான்.''

கூட்டம் நிமிர்ந்து நின்றது.

சக்ரவர்த்தி பளிச்சென்று சந்தோஷமானார்.

ஆனால், மறுபடியும் சாதாரணமா இறுக்கிக் கொண்டார்.

''உங்களுடைய படைகள்தான் முன்னே போக வேண்டும். உங்களைத் தொடர்ந்து இளவரசர் போக வேண்டும். இளவரசரைத் தொடர்ந்து விமலாதித்தர் போக வேண்டும். விமலாதித்தரைத் தொடர்ந்து ஈராயிரம் பல்லவரையர் போக வேண்டும். ஈராயிரம் பல்லவரையரைத் தொடர்ந்து கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் போக வேண்டும். அவரைத் தொடர்ந்து பழுவேட்டரையர் வர வேண்டும். இதுதான் நான் சொல்கின்ற வரிசை.''

''அரசருக்கு முன்னே நீ போவாயா அருண்மொழி.''

பழுவேட்டரையர் ஆவலோடு கேட்டார்.

''என்னையா, எத்தனை போர்கள் பார்த்தவர்கள். இந்தப் போர் முக்கியமென்பது உங்களுக்குத் தெரியாதா? நெடும் பயணம் என்று நீங்கள்தானே சொன்னீர்கள். அந்த நெடும் பயணத்தை அரசர் துவங்

வைப்பதுதான் வீரர்களிடையே ஒரு வேகத்தைக் கொடுக்கும். அரசரே முன் நின்று போகிறார் என்றால், இதனுடைய படை யெடுப்பின் முக்கியத்துவம் அதிகமாகிறது. அரசரைத் தொடர்ந்து இளவரசர் போகிறார் என்றால் அவருடைய மதிப்பும் கூடுகிறது. விமலாதித்தரை மிக பத்திரமாக நடத்திக் கூட்டிக் கொண்டு போவது தான் நல்லது. வல்லத்து அரசர் வந்தியத் தேவர் சொல்வதிலிருந்து அந்தப் படைகள் சாதாரணமாகத்தான் இருக்கின்றன. அப்படி பலவீனமான ஒரு படையை முன்னும், பின்னும் பாதுகாப்பாக அனுப்புவதும் நல்லது. பலவீனமான படைக்குப் பிறகு மிகப்பல மான ஈராயிரம் பல்லவரையர் படைகள்; அதற்குப் பிறகு என் தகப்பனார் பிரம்மராயர்; அதற்குப் பிறகு பழுவேட்டரையர் என்பது மிகக் கம்பீரமான விஷயம்.

''தெற்கேயிருந்து ஒரு சலசலப்பும் வராது சக்ரவர்த்தி. பெருந்தச்சர் குஞ்சரமல்லர் உரத்த குரலில் பேசினார்.

அவருக்குச் சம்பந்தமில்லாத விஷயம் என்பது போல் பழுவேட்டரையரும், அருண்மொழியும் அவரை வினோதமாகப் பார்த்தார்கள்.

''மதுரைப் பக்கம் சில கற்களைத் தேர்ந்தெடுக்கவும், இரும்பு உலோகங்களுக்கான தாதுக்களைச் சேகரிக்கவும், காடுகளிலிருந்து மூங்கில் கொண்டு வரவும் என்னுடைய ஆட்களை அனுப்பியிருக் கிறேன். அங்கு போனவர்கள் பெரும் சுமையோடு வந்திருக் கிறார்கள். எல்லா இடங்களிலும் பாண்டிய வீரர்கள் நன்கு உதவி செய்கிறார்களாம்.''

''மதுரையில் தவறு இருந்தால், கிருஷ்ணன் ராமனுடைய ஒற்றர் படை ஏதேனும் சொல்லியிருக்குமே.

வைணவதாசன் கைகட்டி பிரம்மராயர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''இது பதில் சொல்லக் கடினமான கேள்வி. ஒற்றர் படை இதுவரை எந்த ஆபத்தையும் அறிவுறுத்தவில்லை. அதனாலேயே எந்த ஆபத்தும் இல்லை என்று சொல்லிவிடவும் முடியாது.

''இப்படிப் பேசியே பெரியாளாகி விட்டீர்களய்யா.''

பூரி விக்ரமகேசி சொல்ல, சபை மெல்லச் சிரித்தது.

''பொறுப்புள்ளவர் எல்லாம் தெரிந்ததுபோல பேசமாட்டார். அதிகம் பொறுப்பில்லாதவர்கள் எதுவேண்டுமானாலும் பேசலாம்.''

''பிரம்மராயரே விஷயத்திற்கு வாரும்.

ப்பழுவேட்டரையர் எட்டிப் பார்த்துப் பேசினார்.

''தெற்கேயிருந்து எந்தவிதத் தொந்தரவும் வராது என்று எடுத்துக் கொண்டால், வல்லவரையர் வந்தியத்தேவரைத் தஞ்சைக்கு தென்மேற்கேயுள்ள வல்லக்கோட்டையில் குடிபுகச் சொல்லலாம். இரண்டு விதத்தில் அது நன்றாக இருக்கும். எல்லையைப் பாதுகாப்பது மட்டுமல்லாமல் மேற்கேயிருந்து கற்கள் வருவதையும் அவர் கவனம் கொள்ளலாம். மேற்கே கற்கள் வருவதற்கான நடமாட்டங்கள் எப்போதும் இருப்பதால் திடீரென்று ஒரு படையெடுப்பு உருவாவதற்கு எந்தவித வாய்ப்பும் இல்லை. விமலாதித்தரை அவர் படையோடு மதுரைப் பக்கம் அனுப்பினால் என்ன.''

''என்ன... விமலாதித்தர் தேசாந்திரம் போக வேண்டுமென்று உங்களிடம் கேட்டாரா.''

பூரிவிக்ரமகேசரி முறைப்பாய் சொல்ல, எல்லோரும் பதட்டமாய் பிரம்மராயரின் முடிவை எதிர்த்தார்கள்.

''அது மரியாதை இல்லை.

இராஜேந்திரர் சொன்னார்.

''பலவீனமான படை என்று வல்லவரையர் வந்தியத்தேவர் சொன்ன பிறகும் கூடவா, மரியாதையைப் பற்றிப் பேசுகிறீர்கள்.''

''அவர் இந்த தேசத்து மருமகன்.''

''நாம் நடத்தப்போவது யுத்தம், வலுவுள்ளவர், வலுவில்லாதவர் என்றுதான் பேச வேண்டுமே தவிர, இந்த தேசத்தின் மருமகன், மாமன் என்ற பேச்சுக்கு இடமேயில்லை.''

''பிரம்மராயரே, விமலாதித்தரை முன்னால் அனுப்புவதா, பின்னால் அனுப்புவதா என்று பேசலாமே யொழிய, மதுரைக்கு அனுப்பலாம் என்று எப்படிச் சொல்கிறீர்கள். அது குடும்பத்தில் குழப்பத்தை ஏற்படுத்தும்.

''அதாவது இந்தப் படையெடுப்பு விமாலாதித்தரைப் பத்திரமாய் மேலைச்சாளுக்கியம் கூட்டிப்போய் பிறகு கூட்டிக் கொண்டு வர வேண்டும் என்பதுபோல்தான் இருக்கிறது.''

பிரம்மராயர் சொன்னதும் இராஜேந்திரர் சற்று வேதனையோடு கண்களை மூடிக் கொண்டார். எதிரே இருந்த பிரம்மராயரை உற்றுப் பார்த்தார்.

''ஆமாம். அப்படித்தான். இதில் என்ன தவறு.

''ஏன் இராஜேந்திரா, ஒரு பெரும் போரில் இம்மாதிரியான விஷயங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கக்கூடாது. விமலாதித்தரை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்ற கவனத்தோடா போர் செய்வீர்கள்.''

''இப்போது பிரச்சினை அதுவல்ல.

''அதட்டுகிற குரலில் சக்ரவர்த்தி உரத்துப் பேசியதும் சபை மௌனமாகியது.

''யார் படை யெடுப்புக்குத் தலைமை தாங்குவது. எவருடைய படை முன்னே போவது. இந்த இரண்டு கேள்விகள். நான் இராஜேந் திரனைப் படையெடுப்புக்குத் தலைமை தாங்கச் சொல்லலாம் என்று நினைத்தேன். பல்வேறு படையெடுப்புகளில் நான் ஈடுபட்டு வெற்றி வாகை சூடியிருக்கிறேன். இப்போது இராஜேந்திர சோழனுக்கு இந்தப் படையெடுப்பினுடைய முக்கியத் துவமும், அதைக் கையாளும் விதமும் தெரியும் என்பதால், அவனுடைய வெற்றிகள் இனி முக்கியம் என்பதால், அவன் முதலில் போகலாம் என்று எண்ணம் இருந்தது. ஆனால்...'' சக்ரவர்த்தி நிறுத்தினார்.

''எல்லோரும் அவரையேப் பார்த்தார்கள்.

''அருண்மொழியின் பேச்சு எனக்கு மிகச் சரியாகப்படுறது. அருண்மொழிப்பட்டன் தெளிவாக ஒரு விஷயத்தைக் குறிப் பிட்டான். ஒரு வேளை முன்னே போகின்ற இராஜேந்திரனுடைய படைகள் அங்குள்ள சேர வீரர்களுடைய அல்லது மற்ற வீரர் களுடைய வேகத்தைத் தாங்காமல் சற்று பின் வாங்கினால், அதற்குப் பின்னே இருக்கின்ற விமலாதித்தன் படை கலகலத்து தான் போகும். எனவே, அது முக்கியமல்ல.

சக்ரவர்த்தி தொடர்ந்து பேசினார்.

''இப்படி நீங்கள் பேசிக் கொண்டிருக்கும்பொழுது, இன்னொரு விஷயமும் எனக்குத் தோன்றுகிறது. இந்தப்படையைத் தலைமை யேற்று நடத்தி இந்தப் படையில் முதலாவதாகப் போகப் போவது நானே. வேறு எவருமில்லை. ஏனெனில், இந்தப் போரில் நான் இறந்தால் என் மகனை உடனடியாகச் சோழ தேசத்திற்குப் பின் வாங்கச் சொல்வேன். மறுபடியும் படை திரட்டி வந்து மேலைச் சாளுக்கியத்தைத் தாக்கச் சொல்வேன். ஆனால் படையெடுப்பின் முதல் பகுதியில் இராஜேந்திரன் முன்னேறி அவனுக்கு ஏதேனும்

ஒன்று என்றால், நான் சோழதேசம் திரும்ப முடியுமா. நான் சோழதேசத்தைத் திரும்பி ஆள்வதற்கு அர்த்தம் இருக்குமா? எனவே, இளவரசனான இராஜேந்திரனை முன்னே அனுப்பக்கூடாது என்று நான் திட்டவட்டமாக நினைக்கிறேன்.''

சபை எழுந்து நின்று கர்ஜித்தது.

''உங்கள் பேச்சுக்கு ஒரு வரைமுறையே கிடையாதா.''

பழுவேட்டரையர் சீறினார்.

''போதும் உளறாதீர்கள்.''

பூரிவிக்ரமகேசரி சக்ரவர்த்தியை அதட்டினார்.

''எப்போதுமே இப்படித்தான், உண்மை பேசுகிறேன் என்று ஏடாகூடமாகப் பேசுகிறீர்கள்.''

கிருஷ்ணன்ராமன் அலுத்துக் கொண்டார்.

அருண்மொழி கைகட்டி அவரையே பார்த்துக் கொண்டிருந் தான்.

இராஜேந்திரரின் கோபம்தான் அதிகம் இருந்தது.

''மரணம் எவருக்கு வேண்டுமானாலும், எப்பொழுது வேண்டு மானாலும் நேரலாம். இந்தச் சபையை விட்டு வெளியே போகும் போது கல் தடுக்கி, தரையில் விழுந்து நெற்றியில் அடிபட்டு நான் இறக்க நேரிடலாம். சோழதேசம், அஸ்தமித்து விடாது. ஒரு தனி மனிதரை நம்பிக்கொண்டு சோழதேசம் இல்லை. உத்தமர் சோழர் மகனான மதுராந்தகன் கண்டராதித்தனை இங்கே சக்ரவர்த்தியாக அரியணையில் அமரவைக்க முடியும். விஜயாலய சோழரின் குலம் ஒன்றும் பூண்டோடு அழிந்துவிடாது. முதலில் போனால் மரணம். கடைசியில் போனால் சுகம் என்று போரில் எந்தவிதமான பிளவும் இல்லை. எங்கிருந்தாவது ஒரு பனை மரத்தின் உச்சியிலிருந்து ஒருவன் அம்பெய்தால் என்ன ஆவது.

போர் முடிந்துவிட்டது என்று எழுந்து நின்று வெற்றி முழக்கம் செய்தவரை, நமது முன்னோர்களில் ஒருவரான இராஜாதித்தரை பூதுகன் அம்பெய்து கொல்லவில்லையா? அரிஞ்சயர் போரில் அடிபட்டு மரணமடையவில்லையா? போர் என்பது எதிரிகளை மட்டும் நாசமாக்கத்தான் இருக்கிறது என்பதை யார் சொன்னார்கள். நம்மிலும் மரணம் ஏற்படும். நாம் அதற்கும் துணிந்தவர்கள். என் மரணத்தைப் பற்றி சக்ரவர்த்தி அவர்கள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. வாழ்வா, சாவா என்று தான் போருக்குப்

போறோமே தவிர, மான்யகேடத்தில் வெள்ளை நிறத்து கோதுமைப் பெண்களைத் தேடிக் கொண்டு போகவில்லை.

''நாம் அனைவரும் மரணம் கண்டு பயப்படுபவராக இருப்பின் எதற்கு மேலைச் சாளுக்கியம் போக வேண்டும். இருக்கின்ற இடத் திலேயே கொடி பறக்க விட்டுக்கொண்டு சும்மா இருக்கலாமே.''

இளவரசர் உரத்த குரலில் சொல்ல எல்லோரும் அவரையே பார்த்தார்கள்.

அரசர் கையமர்த்தினார். எல்லோரும் அமர்ந்தார்கள்.

''இது அப்படி அல்ல. சோழதேசத்தில் யாரோ ஒருவர் பதவி யேற்பார் என்று நான் மரணமடைய முடியாது. மதுராந்தகன் கண்டராதித்தனுக்கும் ஒரு மகன் இருக்கிறான். எனவே, அவன் படையெடுப்பை நடத்த முடியாது. மான்ய கேடத்தைக் கைப்பற்று வது என்பது என்னுடைய நெடுநாள் கனவு. ஒருவேளை அந்த மான்யகேடத்தைக் கைப்பற்ற முடியாது போனால், என்னுடைய வாழ்நாளில் செய்ய முடியாது போனால், அதை நீ செய்ய வேண்டும் என்பதால்தான் உன்னைச் சற்று பின்னே வரச் சொல்றேன். அதுவும் தவிர, அருண்மொழி சொன்னது போல இவ்வளவு பெரிய படையெடுப்பை நான் முன் நின்று நடத்தினால் தான் வீரர்களுக்கு உற்சாகமாக இருக்கும். மெல்லியதாய் நம் படையில் சில பிரிவுகள் இருக்கின்றன. ஒருவேளை இராஜேந்திரன் போனால், என்னுடைய படைவீரர்கள் சோர்வடைவார்கள். நான் முன்னேறிப் போனால் இராஜேந்திரன் படை வீரர்கள் சோர்வடைய மாட்டார்கள். சக்ரவர்த்தி போவதுதானே நியாயம் என்று சொல்வார்கள். எனவே, அம்மாதிரியான சர்ச்சைகள் படைக்குள் இருக்கக்கூடாது என்பதற் காகவும் நானே படையெடுப்பு நடத்தி முதலில் இறங்குவேன். இன்னொரு யோசனையும் என் மனதில் வருகிறது. எல்லோரும் சற்று அருகே வந்து நான் பேசுவதைக் கேட்க வேண்டும். இது ரகசியத்திலும் ரகசியம்.''

எல்லோரும் நெருக்கமாக வந்து சக்ரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''தஞ்சையிலிருந்து குடந்தை போய், குடந்தையிலிருந்து திருவக் கரைபோய், திருவக்கரையிலிருந்து எண்ணாயிரம், பிரம்மதேசம் வழியாகக் காஞ்சிபுரம் போய், அங்கே விமலாதித்தனிடம் பேசிவிட்டு விமலாதித்தனோடு வடமேற்கே நகர்வேன். ஆனால், விமலாதித்தன் மட்டும் நகர்வான். நான் படைக்கு முன்னும்,

பின்னும் நகர்ந்து கொண்டிருப்பேன். விமலாதித்தன் என் படையோடு நடந்து தெற்கே திரும்பி காஞ்சிபுரத்திலிருந்து திருவண்ணாமலையின் வழியாக பாண்டிய தேசம் நோக்கிப் போவோம். அந்த எல்லைகளை ஏழு நாட்கள் சுற்றிப் பார்த்துவிட்டு அங்கிருந்து நேராக கங்கதேசத்தில் உங்களோடு கலந்து கொள்வேன். கங்க தேசத்தில் மறுபடியும் தலைமை வத்து முதல் ஆளாக முன்னேறிப் போவேன்.

நான்கு சக்கரங்களோடு கூடிய துரிதமான நான்கு புரவிகளுடைய வில்வண்டி இதற்கு உதவும். யானைகளோடு கூடிய நம்முடைய படை கங்கதேசத்து நடுமையத்தை அடைவதற்கு முன்பு, நான் அங்கு வந்து கலந்து கொள்வேன். இதை நான் செய்தே ஆக வேண்டும். பாண்டிய தேசம் சோழதேசத்தைத் தொந்தரவு செய்யாது என்ற நிலைமையை எனக்குள் திடமாக உறுதிப்படுத்திக் கொண்டால்தான் என்னால் படையெடுப்பைச் சீராக நடத்த முடியும்.

''அது சரி. இதற்கு ஏன் இவ்வளவு சுற்ற வேண்டும். காஞ்சிபுரத்தில் விமலாதித்தனைச் சந்திக்க வேண்டுமென்று என்ன நிர்ப்பந்தம். காஞ்சிபுரத்திலிருந்து சித்தூர் வழியாக நுளம்ப பாடியைத் தாண்டி, சித்ரதுர்காவுக்கு விமலாதித்தன் போய் விடட்டும். நீங்கள் இப்பொழுதே மாறுவேடத்தில் மதுரைப் பக்கம் போய் வந்து விடுங்கள். தஞ்சையிலிருந்து நேரடியாக திரிசீரபுரம் போய் கொடுமுடி, கருவூர் வழியாக பவானி ஆறு தாண்டி, அங்கே யிருந்து வடக்கே நகர்ந்து விடலாம். தடிகைப்பாடி நம்மோடு இணைந்த தேசம். அங்கு எங்கேனும் விமலாதித்தனைச் சந்தித்துக் கொள்ளலாம்.

''இல்லை. நான் சொல்வதைக் கேளுங்கள்.''

அருண்மொழி குறுக்கே பேசியபோது, அவன் தோளில் கை வைத்து அவனைச் சற்று பின்னுக்கு நகர்த்தினார் இராஜேந்திரர்.

''மதுரை எப்படியிருக்கிறது என்று பார்க்க சக்ரவர்த்தியார் ஏன் போக வேண்டும். எப்பொழுது படையெடுப்பிற்கு நான் தலைமை தாங்கவில்லையோ, நான் முதலில் போகவில்லையோ அப்பொழுது நான் மதுரைக்குப் போனால் என்ன? மாறுவேடத்தில் அல்ல. மிகச் சிறிய படையோடு இப்பொழுதே கிளம்பி மதுரைக்குப் போய் நீங்கள் படையெடுப்புக்குத் தயாராகும்போது, உங்களோடு

வந்து கலந்து கொள்கிறேன். இங்கு என் படைகளை அருண்மொழி கவனித்துக் கொள்ளட்டும்.''

''அது அல்ல இளவரசே. உங்களை விட்டு நான் பிரிய மாட்டேன்.''

அருண்மொழி சட்டென்று கூறினான்.

சபை அவர்கள் இருவரையும் பார்த்தது.

''இது நல்ல யோசனையாக இருக்கிறது. இதை நான் சொன்னால் சற்று சங்கடமாக இருக்கும். இளவரசரே இந்த யோசனையைச் சொன்னதுமிக உன்னதமானது. அருண்மொழி அவரோடு போகட்டும். சிறிய படை அல்ல. இளவரசரின் மொத்தப் படையும் மதுரை போகட்டும். இரண்டு நாள் தங்கி, திரும்பவும் தஞ்சைக்கு அல்லது மேல்பாடிக்கு வந்து விடட்டும். போகும் வழியில் கேரளியர்கள் எந்தவிதமான தந்திரங்கள் செய்வார்கள் என்று படைகளுக்கு அருண்மொழியும், இராஜேந்திரரும் பயிற்சிகள் கொடுக்கட்டும், மதுரை மக்கள் மிரளமாட்டார்கள். இது பயிற்சி என்று தெரிந்து உற்சாகப்படுத்துவார்கள். ஆனால். இன்றோ, நாளையோ கிளம்ப வேண்டும். அப்பொழுதுதான் நல்ல ஓய்வோடு இரட்டைபாடி வரமுடியும். இரட்டைபாடியில் உங்கள் வருகைக்காகக் காத்திருந்து அங்கிருந்து கங்கதேசத்திற்கு ஒட்டுமொத்தமாக நகருவோம்.

''அப்படியானால், இப்போது வரிசையைச் சொல்லுங்கள்.''

சக்ரவர்த்தி கட்டளையிட்டார்.

சபை மௌனமாக இருந்தது.

அருண்மொழி கை உயர்த்தினான்.

''சும்மாயிரு அருண்மொழி, நீ ஒரு உபதளபதி. இங்கு இத்தனை பெரியவர்கள் இருக்கும்போது, மறுபடி மறுபடி நீ பேசுவது பல சங்கடங்களை உருவாக்குகிறது.

சட்டென்று சக்ரவர்த்தி கோபமாகப் பேசினார்.

அருண்மொழி கொஞ்சம் நிலைகுலைந்து போனான்.

இராஜேந்திரர் அவனை ஆதரவாகப் பார்த்தார்.

''அருண்மொழி, படை வரிசை என்பது மிக முக்கியமானது. கூடுமானவரை அதைச் சக்ரவர்த்தியின் பொறுப்பில் விடுவதே நல்லது.''

கிருஷ்ணன்ராமன் அருண்மொழிக்கு ஆறுதலாகச் சொன்னார்.

''அப்படியல்ல பிரம்மராயரே. படையெடுப்பின் வரிசையை அருண்மொழியால் நிர்ணயிக்க முடியாது. அருண்மொழி கெட்டிக் காரன். ஆனால், அனுபவம் போதாது. இராஜேந்திரனே இந்தப் படையெடுப்பு வரிசையில் தவறு செய்துவிட்டான். ஆரம்பத்தில் அவன் சொன்ன அந்த வரிசை அபத்தத்திலும் அபத்தம். எனக்கு அவனைப்பற்றி கவலையாக இருக்கிறது.

இப்போது இராஜேந்திரருக்குப் பிரம்படிபோல் சொற்கள் வந்து விழுந்தன.

இராஜேந்திரர் வாயைப் பொத்திக்கொண்டு கோபமாகத் தரையை வெறித்துக் கொண்டிருந்தார்.

''யாரைச் சொல்லச் சொல்கிறீர்கள் சக்ரவர்த்தி.''

பிரம்மராயர் மிகச் சாதுர்யமாகச் சக்ரவர்த்தியை நோக்கி கேள்விகள் போட்டார்.

''ஏன், நீங்கள்தான் சொல்லுங்களேன். ஏன் இன்னும் அதிக மௌனமாக இருக்கிறீர்கள். இராஜேந்திரன் இருந்தால் பேசக்கூடாது என்று பிரம்மராயர் நினைத்தால், அது எனக்கல்லவா கேவலம். படையெடுப்பும் அரசாங்கக் காரியமும் கவனிக்கும் போது, எனக்குப் பதவிகள்தான் முக்யமே தவிர, அவன் என் மகன் என்ற பிரேமை யெல்லாம் முக்கியமில்லை, இராஜேந்திரனைக் கண்டு நீங்கள் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. நீங்கள் சொல்லுங்கள் படையெடுப்பு வரிசையை...

இந்த முறை அடி, கிருஷ்ணராமனான பிரம்மராயருக்கு விழுந்தது.

அவர் முகம் மெல்லியதாய் கறுத்து சுருங்கியது.

''நான் சொல்லட்டுமா சக்ரவர்த்தி.

பழுவேட்டரையர் எழுந்து நின்றார்.

''வேண்டாம்.''

''ஏன்.''

''பழுவேட்டரையரின் கேள்வியில் கோபம் இருந்தது.

''நீங்கள் யுத்தத்திற்குப் போய் ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. பாண்டியப் படையெடுப்பிலும், ஈழப் படையெடுப்பிலும், சேரதேசத்துப் படையெடுப்பிலும் முழு மூச்சாகக் கலந்து கொள்வது போல வடக்கே நீங்கள் நகர்ந்ததில்லை. மேலைச்சாளுக்கியத்தின்

தட்ப வெப்ப நிலை கூட உங்களுக்குத் தெரியாது. படையெடுத்துப் போற ஊரின் தட்பவெப்ப நிலை தெரியவில்லையெனில் படை யெடுப்பு வரிசை சரியாக இருக்காது.''

''அப்படியானால் இதைப்பற்றி விமலாதித்தன்தான் சரியாகச் சொல்ல முடியும்.

பூரிவிக்ரம சேகரி கொஞ்சம் சிரிப்பொடு சொல்ல, சக்ரவர்த்தி கோபமாய் அருகேயிருந்த மரப்பீடத்தை ஓங்கி அறைந்தார்.

''வெகு நிச்சயமாய் விமலாதித்தனால் சொல்ல முடியும். விமலாதித்தனைக் குறைவாக எடை போடுகிறீர்கள். அவர் அதிகம் பாதிக்கப்பட்டவர். சிறுவயதிலேயே நாலாபக்கமும் அலைக் கழிக்கப்பட்டவர். ஐந்து வயதுக் குழந்தையாக நாடு கடத்தப்பட்டு, கலிங்கத்தில் குதிரை லாயத்திற்கு நடுவே வளர்ந்தவர். அரசன் என்று ஊர் சொன்னாலும் அதிகாரமின்றி காட்டில் படுத்து உறங்கியவர். அவர் தகப்பன் வேங்கி தேசத்து அரசன் தானார்வனைக் கொன்று, ராஷ்டிரகூட அரசன் வீமன் விமலாதித்தனையும், அவன் தமையன் சத்யவர்மனையும், கலிங்கத்திற்குத் துரத்திவிட்டான். கலிங்கத்தி லுள்ள உறவினர்கள் உதவி செய்தும் கீழைச்சாளுக்கியத்தில், அதாவது வேங்கி தேசத்தில் அவர்களால் கால் ஊன்ற முடிய வில்லை. மறுபடியும் அங்கிருந்து தப்பித்து, நான் தஞ்சம் கொடுக்க, திருவையாறு வந்து தங்கியிருந்தார். உங்களைவிட, என்னைவிட, இராஜேந்திரனை விட அவர் வெகுதூரம் பயணப்பட்டவர். பல நாடுகளுக்குப் பயணப்பட்டவர். எந்தவித வசதியுமின்றிப் பயணப் பட்டவர். இந்தப் படையெடுப்பில் அவர் பங்கு முக்கியமாக இருக்குமென்று என் உள்ளுணர்வு சொல்கிறது.

''நீங்கள் என்னை என்ன இழிவுபடுத்தினாலும் நான் பேசித்தான் ஆகவேண்டும் சக்ரவர்த்தி.''

மறுபடி அருண்மொழி கை உயர்த்திப் பேசினான்.

''சபையில் தாமதிக்காமல் சட்டென்று வேகமாக ஒரு இளைஞன் பேசுவது தவறு என்பதை முதலில் புரிந்து கொள். அதற்குச் சந்தர்ப்பம் வரும்போது பேசு; மற்றவர்கள் பேசிய பிறகு பேசு. அவசரப்படாதே. இராஜேந்திரருடைய துடுக்குத்தனம் உன்னிலும் பரவியிருக்கிறது என்பது, எனக்கு வேதனையாக இருக்கிறது. இரண்டு முட்டாள்களை நம்பி நான் என்ன பொறுப்பைக் கொடுக்க முடியும்.''

''அளவுக்கு அதிகமாக அருண்மொழியைக் கோபித்துக் கொள்கிறீர்கள்.''

கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் பேசியதும் சக்ரவர்த்தி சட்டென்று அவர் பக்கம் திரும்பினார்.

''என்ன பிள்ளைப்பாசமா.''

''ஏன், உங்களுக்குச் சுத்தமாக பிள்ளைப்பாசம் இல்லை என்று சொல்லப் போகிறீர்களா? அல்லது இருப்பது தவறு என்று சுட்டிக்காட்டப் போகிறீர்களா.''

கிருஷ்ணன் ராமன் அதேவேகத்தில் பேச, அங்கு வினோதமான ஒரு கோபச்சூழல் உருவாயிற்று.''

''அடடா... இது ஏன் நமக்குள் இத்தனை கோபமும், வேகமும் வருகிறதென்று எனக்குப் புரியவில்லை.

பழுவேட்டரையர் நிதானமாகப் பேசினார்.

''சக்ரவர்த்தியார் சொல்வது சரி. ஒரு முழு படையெடுப்பில் நான் கலந்து கொண்டு ஏழு வருடங்கள் ஆகிவிட்டன. தள்ளாமை இருக்கிறது. இருப்பினும் வடக்கில் நான் நகர்ந்ததேயில்லை. இதுவே குமரிமுனை வரை போர் எனில், நாம் வெகு வேகமாக விவாதிக்க முடியும். சக்ரவர்த்தி இன்னொன்று சொல்கிறார். அருண் மொழிப் பட்டனுக்கு அனுபவமில்லை என்றார். இளவரசர் இரா ஜேந்திரர் அவசரப்படுகிறார் என்றும் சொல்கிறார். இவையும் எனக்கு சரியாகத்தான் படுகின்றன.''

''அப்போது யாரைய்யா முடிவு செய்வது?''

இளவரசர் கோபமாகப் பழுவேட்டரையரைப் பார்த்துக் கேட்டார்.

''சக்ரவர்த்திதான். நீங்களே முடிவு செய்யுங்கள் என்று அவரை நோக் இங்கு உள்ள யாருமே பேசவில்லை என்பது சற்று வருத்தமான விஷயம். ஒரு சக்ரவர்த்தியின் கீழ் நாம் நடக்காது போனால், ஒரு உத்தரவின் கீழ் நாம் கீழ்ப்படியாது போனால், இந்தப் படையெடுப்பு நமக்குப் பல துன்பங்களைத் தரும்.''

சக்ரவர்த்தி கண்கள் மூடி ஆசனத்தின் பின்பக்கம் சாய்ந்து கொண்டார்.

தன்னைப் பழுவேட்டரையர் சரியாகப் புரிந்து கொண்டது அவருக்குச் சந்தோஷமாக இருந்தது.

''இந்த இடம் அப்படிப்பட்ட இடமல்ல.''

கிருஷ்ணன்ராமன் பழுவேட்டரையரை மறுத்தார்.

''நாம் இங்கு விவாதம் செய்து கொண்டிருக்கிறோம். அருண் மொழிப்பட்டன் என்ன சொல்கிறான் என்பதை காது கொடுத்துக் கேட்பதில் எந்தத் தவறும் வந்துவிடப் போவதில்லை. படை யெடுப்பு நடத்துவதில் அனுபவம்தான் முக்கியமென்றால், உங்களை விட அனுபவம் மிக்க கிழட்டு வீரர்கள் உண்டு. அவர்களிடம் போய் இந்தப் படையெடுப்பு வரிசையைக் கேட்பீர்களா. படையெடுப்பு வரிசை சொல்ல அனுபவம் மட்டுமல்ல; அறிவும் வேண்டும்.

''உண்மை. இவர் சொல்வது சரிதான். அனுபவமும், அறிவும் வேண்டும். இவை இரண்டும் ஒருசேர இந்த இடத்தில் மிகச் சரியான அளவில் பெற்றிருப்பவர் சக்ரவர்த்தி மட்டுமே நீங்கள் கூட இல்லை.''

பழுவேட்டரையர் கிருஷ்ணன்ராமனைச் சுட்டிக் காட்டினார்.

''புரிகிறது தந்தையே. பழுவேட்டரையர் பேசுவது புரிறது. இந்த இடத்தில் சரியான அனுபவமும், அறிவும் உள்ளவர்கள் நீங்கள் மட்டுமே. நீங்கள் சொல்லுங்கள் படையெடுப்பு வரிசையை...

இளவரசர் சொல்ல கிருஷ்ணன்ராமனும் சரி என்று தலை யசைத்தார்.

பூரி விக்ரமகேசரி எழுந்து நின்று, ''நல்லது உங்களையே கேட் கிறோம். படையெடுப்பு வரிசையை நீங்களே முடிவு செய்யுங்கள்.''

''ஆமாம். நீங்கள் முடிவுசெய்வதுதான் சரியாக இருக்கும்.'

பழுவேட்டரையர் சொல்ல, அருண்மொழி மௌனமாக இருந்தான்.

எல்லோரும் அருண்மொழியையே பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

''ஏன் அருண்மொழி ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாய்.

''சக்ரவர்த்தி அருண்மொழியை நோக்கிப் பேசினார். இப்போது அவர் குரல் குழைவாக இருந்தது.

''சபையிலுள்ள மூத்தோர்கள் பேசும்போது, நான் என்ன சொல்வது. படை வரிசையை நீங்களே முடிவு செய்யுங்கள் சக்ரவர்த்தி.''

கொஞ்சம் வருத்தமான குரலில் அருண்மொழிப்பட்டன் வினயமாகப் பேசினான்.

''வரிசை எப்படியாக இருந்தாலும் நாம் துங்கபத்ரை நதிக்கரை போகும்போது தேக்கி நிறுத்தப்படுவோம். அப்போது வரிசை என்பது மிக நிச்சயமாகச் சிதறும். சிதறுவது நல்லது. வரிசை என்பது ஒன்றன்பின் ஒன்றாக வராமல் நாம் துங்கபத்ரா போய், நெடுக கரை முழுவதையும் அடைத்துக் கொள்ள வேண்டும். அப்படி அடைத்துக் கொள்கிறபோது ஒன்றோடு ஒன்று கலந்து விடாமல் அவரவர் படைகளை, அவரவர் அருகே வைத்துக் கொள்ள வேண்டும் அதாவது இராஜேந்திரனுடைய படைகள், விமலாதித்தன் படைகளோடு சேர்ந்து விடக்கூடாது. ஒரு சிறு சிறு இடைவெளிவிட்டு கொடி மாற்றங்கள் செய்து, உடை மாற்றங்களை வைத்து, நாம் அழகாகப் பிரிந்து நிற்க வேண்டும் அதேசமயம் துங்கபத்ரை நதிக்கரை முழுவதும் பரவி நிற்க வேண்டும். அவரவருக்கான உதவி ஆட்கள் அவரவர் படையின் பின்னே நிறுத்தி வைக்கப்பட்டிருக்க வேண்டும். ஒரே கொடி அசைவில் துங்கபத்ரா நதிக்கரைக்குப் போகவேண்டும். இறுகலான இடமோ, அகலமான இடமோ, பாறைகள் நிறைந்த இடமோ, அதுபற்றிக் கவலையில்லை. ஒரு கொடி அசைவில் சகலரும் ஒரே நேரத்தில் துங்கபத்ராவைத் தாண்ட வேண்டும். அரை நாழிகையில் கடக்க வேண்டும்; இன்னொரு கால் நாழிகையில் கரை மீது ஒன்றாக அங்கிருந்து மான்ய கேடத்தை நோக்கி நாம் விரைவாக நகரவேண்டும். ஆனாலும், படையெடுப்புக்கு ஒரு வரிசை, நிச்சயம் உண்டு. ஏனெனில் கங்க தேசம் மிகக் கவனமாகத் தாண்ட வேண்டிய இடம். போர் செய்யப் போவது என்பது ஒட்டு மொத்தமாக என்பதால், அதை நினைவில் வைத்துக் கொண்டு நான் படை வரிசையை அமைக்கிறேன். இராஜேந்திரனுடைய ஒரு யோசனை நன்றாக இருந்தது.

இராஜேந்திரன் மதுரைக்குப் போகட்டும். அருண்மொழி அவனைப் பிரிய வேண்டாம். அவர்கள் இரண்டு பேரும் படைவீரர்களுக்குக் கடுமையாக போர்ப் பயிற்சிகள் தரட்டும். மதுரையிலுள்ள சிறிய குன்றுகளின் மீது படை வீரர்கள் விரைவாக ஏறவும் சறுக்கி இறங்கவும் தெரிந்து கொள்ளட்டும் இராஜேந்திரனுடைய குதிரைகள் உயரமானவை. வங்கக்கடலில் வந்து இறங்கிய யவனர்கள் கொண்டு வந்து கொடுத்தவை. ஈழத்தில் கைப்பற்றியவை.

கீழைச்சாளுக்கியத்திலிருந்து வரும் விமலாதித்தன் குதிரைகள் சற்றுக் குள்ளமானவை. உயர்ந்த கோவேறு கழுதைகளைப் போலத் தான் நிறைய பிடரி மயிர்களுடன் அந்தக் குதிரைகள் நிற்கின்றன. ஆனாலும் அவை வேகமாக ஓடுன்றன. இந்தப் படையெடுப்பில் நாலாயிரம் யானைகளோடு நான் முதலில் நகர்வேன். தன்னுடைய குறுங்குதிரைகளோடு என்னை விமலாதித்தன் தொடர்வான். அதற்குப்பிறகு வலிமை மிக்க ஈராயிரம் பல்லவரையர், அதற்குப் பிறகு பழுவேட்டரையர், அதற்குப் பிறகு கிருஷ்ணன்ராமன். தஞ்சையை வந்தடைந்து இளவரசர் இராஜேந்திரன் கிருஷ்ணன் ராமனைத் தொடர வேண்டும்.''

''அப்பா... நீங்களே சொல்லுங்கள் என்று சொன்னதும், என்னை ஓரமாக உட்கார வைத்து விட்டீர்கள். மிகுந்த சந்தோஷம் சக்ரவர்த்தி. இராஜராஜத்தேவர் வாழ்க. கடைசி வரை இந்தச் சோழ தேசத்தின் கதாநாயகனாகத் தானே இருக்க வேண்டுமென்ற மாறாத ஆசையில் நீங்கள் இருக்கின்றீர்கள். தந்தையே, உங்களைத் தவிர யாரும் எந்தவிதப் புகழ்ச்சியும் பெற்றுவிடக்கூடாது என்பதில் கவனமாக இருக்கிறீர்கள். இதற்கு என்ன காரணம் சொல்வீர்கள். நான் இறந்து போனால் அடுத்தபடி நீதான் சக்ரவர்த்தியாக வேண்டும் என்று எனக்குப் பேச்சில் இனிப்பு வெல்லம் கொடுப்பீர்கள். ஆஹா... நான் நாளைய சக்ரவர்த்தி என்று தஞ்சையிலேயே கும்மாளம் அடித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று ஆசைப் படுகிறீர்கள். ஒன்றரை லட்சம் வீரர்களுடைய நம்முடைய படை துங்கபத்ரா நதிக்கரையைத் தொட்டதும், நீங்கள் யானைகளோடு கீழிறங்கி, எதிர்க்கரைக்குப் போய் சத்யாசிரியனைக் கொன்றுவிட்டு, மான்யகேடத்திலிருந்து திரும்ப, நான் துங்கபத்ரையின் தென் கரையில் உட்கார்ந்திருப்பேன். அப்படித்தானே. என் இளைய படை முழுவதும் மனம் வெதும்பி நகம் கடித்துக் கொண்டிருக்கும். அப்படித்தானே.''

''அப்படியில்லை இராஜேந்திரா. சக்ரவர்த்தியார் சொல்வது சரி.''

கிருஷ்ணன்ராமன் உள்ளே புகுந்தார்.

''இந்தப் படையெடுப்பு பரவலாகத்தான் கடைசியாக முடியும். துங்கபத்ரா நதிக்கரையில் நாம் நிச்சயம் தேக்கி வைக்கப்படுவோம். உடனே ஒருகாலும் இறங்க முடியாது. அப்படியிருக்க இரண்டாவது, மூன்றாவது படை என்ற கம்பீரமே தேவையில்லை. இன்னொன்றும் தோன்றுகிறது. துங்கபத்ரை நதிக்கரையோடு

மேற்கு நோக்கிப் போய் குறுகலான இடத்தில், பாலம் அமைத்தோ, கயிறு பிடித்தோ குதிரைகளோடு தாண்டி சத்யாசிரியனை நோக்கிக் கிழக்கேத் திரும்பிவிடலாம். இதை நீதான் செய்ய வேண்டும். போகும்போது வைகையில் வெள்ளம் வந்திருக்கும். கேரளத்து மலைகளில் மழை ஆரம்பித்துவிட்டது. உனது வீரர்களை முன்னும் பின்னுமாக வைகையைத் தாண்டுவதற்குப் பழகச் சொல். ஒவ்வொரு குதிரை வீரராகக் கயிறு பிடித்து குதிரைகளோடு நீந்தி, ஒருவர் சரிந்தாலும் இன்னொருவர் இழுத்துப் பிடித்து கரையேறி விடலாம்.

வைகை ஒரு காட்டாறு. அங்கு வேகமாக நீர்ப்போக்கு இருக்கும். வைகையையே உங்கள் வீரர் தாண்டிவிட்டால் வெகு நிச்சயமாகத் துங்கபத்ராவைத் தாண்டிவிடலாம். ஏனெனில், வைகையைப் போல மணல் அல்ல, பாறைகள். குதிரைகள் பாறைகளில் காலூன்றி மிக அழகாக நகர்ந்து விடும். ஏதேனும் சில குதிரைகள் பாறையிடுக்கில் கால் சிக்கிக் கொள்ளலாம். அப்பொழுது வீரர்கள் உடனே நீரில் மூழ் குதிரையின் காலை எடுத்துவிட வேண்டும். எல்லா வீரர்களையும் நீரில் மூழ்கி குதிரையின் காலை தூக்கச் சொல். இந்த மதுரைப் பயணம் மிகச் சிறப்பாக உனக்கு அமையும் என்பது என்னுடைய அபிப்ராயம்.''

கிருஷ்ணராமன் சொல்ல அவரை நன்றியோடு சக்ரவர்த்தி பார்த்தார்.

''எல்லோரும் ஒரு புள்ளிக்கு வந்து விட்டோமோ.''

சக்ரவர்த்தி உரத்துக் கேட்க, சகலரும் அமைதியாக இருந்தார்கள். மெல்ல ஆமென்று தலையாட்டினார்கள்.

''இராஜேந்திரா, மறுபடியும் உன் சம்மதத்தைச் சொல்.''

''முழு சம்மதம் தந்தையே. என் பொறுப்பு மிகப் பெரிய தென்று உணர்கிறேன். என் மதுரைப் பயணம் என் வீரர்களைப் பலப்படுத்தும். அந்தப் பயிற்சியோடு கங்க தேசத்தில் உங்களைச் சந்திக்கிறேன். உணவு உட்கொள்வது பற்றியும், உறங்காது விழித்திருத்தல் பற்றியும், மாறி மாறி ஓய்வெடுத்தல் பற்றியும், எந்தச் சப்தம் கேட்டாலும் விழித்துக்கொண்டு சீறும் நிலைக்கு வருகின்ற பக்குவத்தையும், நான் என் வீரர்களுக்குத் தருவேன். இந்த மேலைச்சாளுக்கியப் படையெடுப்பில் என் வீரர்கள் கோப மாகவும், கொடூரமாகவும், தாக்குதல் நடத்துவார்கள். என்னுடைய

தங்கையின் வாழ்வைச் சீரழிக்கப் பார்த்த மேலைச்சாளுக்கியர்களை நான் கதறடிப்பேன்.''

''உன் மதுரைப் பயணம் எப்போது.''

சக்ரவர்த்தி, இராஜேந்திரரை நோக்கிக் கேட்டார்.

''இப்போதே... இன்று மாலையே.''

கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் விரல்விட்டு எண்ணினார்.

''நாளை காலையில் விடியல் வேளையில் குரு ஹோரையில் நகருங்கள். அது நல்லது.''

''உங்கள் வீரர்கள் பெண்டு பிள்ளைகளிடமிருந்து விடைபெற வேண்டுமல்லவா. அதற்கு அவகாசம் கொடுங்கள்.''

''கிருஷ்ணன்ராமன் சொல்ல, சரியென்று மெல்லியதாய் இராஜேந்திரர் தலையசைத்தார்.

''அப்படியானால் போருக்கு நகரப் போகிறோம். அல்லவா.''

பழுவேட்டரையர் எழுந்து சொல்ல எல்லோரும் எழுந்தார்கள்.

சக்ரவர்த்தி நிதானமாக எழுந்தார்.

''போர் என்று தஞ்சையிலும், குடந்தையிலும், கொள்ளிடக் கரையிலும், கிழக்கே நாகப்பட்டினத்திலும், மயிலாடுதுறையிலும், திரிசீரபுரத்திலும் பறையறிவித்து விடுங்கள்.''

''எப்பொழுது அறிவிப்பது.

''கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் சொன்னபடி நாளைக்கு காலை குரு ஹோரையில் பறைகளும், எக்காளங்களும் முழங் கட்டும். படையெடுப்பின் முதல் கட்டமாக திருவையாறு நோக்கி இராஜேந்திர சோழன் நடந்து, பிறகு மேற்கு நோக்கி திரும்பி திருக் காட்டுப்பள்ளி, பழமர்நேரி வழியாகக் கல்லணையை அடைந்து, அங்கிருந்து மதுரைக்குப் போகட்டும். திரிசீரபுரத்திலிருந்து படைகள் இங்கு வரட்டும். வல்லக் கோட்டையில் வல்லவரையர் வந்தியத்தேவர் வந்து தங்கட்டும். பெருந்தச்சரின் கீழ் தஞ்சை நிர்வாகம் நடைபெறட்டும். நான் படையெடுக்கப் போகிறேன் என்ற செய்தியை ஈசான சிவபண்டிதரிடமும், பிறகு கருவூர்த்தேவர் ஐயாவிடமும் சொல்லிவிட்டு வருகிறேன். தயாரான பிறகு நல்ல நாள் பார்த்து நான் வடக்கு நோக்கி நகர்வேன். தஞ்சைக்குப் போய் அங்கிருந்து முன்னேறுவேன். விமலாதித்தனை இரட்டைப்பாடியில் சந்திப்பேன். நமது முக்கியமான எல்லையான மேல் பாடியில் இரண்டு

நாள் தங்குவேன். ஆற்றங்கரையில் யானைகளை இறக்கி நகர்த்தி பயிற்சிகள் செய்வேன். மேல்பாடியைத் தொட்ட தும் நம்முடைய படை எங்கும் நிற்காமல் பகல் முழுவதும் பிரயாணம் செய்யும். பிறகு இளைப்பாறும், சோழ எல்லையைத் தாண்டிவரும் மக்களை வந்து சந்திப்பதும், பேசுவதுமாகச் சற்று தாமதப்படும். மக்களைப் புறக்கணித்துவிட்டு வேகமாகப் படை யெடுத்துப் போனால், மக்கள் கலவரமடைவார்கள். பேசிவிட்டுப் போனால் ஒரே கவனமாக விழித்துக் கொண்டிருப்பார்கள். உள்நாட்டில் எந்தவிதக் குழப்பமும் ஏற்படாமல் கவனமாகப் பார்த்துக் கொள்வார்கள். இதைத்தான் பிரம்மராயரும் செய்ய வேண்டும். பழுவேட்டரையர் எங்கும் நிற்காமல் குடந்தை தாண்டி, குடந்தையிலிருந்து கொள்ளிடக் கரையும், கொள்ளிடக் கரையிலிருந்து எண்ணாயிரமும், எண்ணா யிரத்திலிருந்து காஞ்சி புரமும் போய் காஞ்சிபுரத்தினுடைய நிலைமையைப் புரிந்து கொண்டு அங்கிருந்து திருவொற்றியூருக்குப் பயணப்பட்டு விமலாதித்தன் போன பாதையாகவே அவரும் இரட்டைபாடி வந்து சேரட்டும்.''

விமலாதித்தன் படைகளைப்பற்றி அங்குள்ள தளபதிகளிடம், அதிகாரிகளிடம் விசாரித்துத் தெரிந்து கொள்ளட்டும். ஒரு படை வெறுமே நிற்கும்போது தெரிகின்ற யோக்கியதையை விட, அது போர் நோக்கி நடக்கும்போது என்ன யோக்கியதையில் இருக்கிற தென்று நன்றாகத் தெரிந்துவிடும். குறிப்பாய் அதிகம் மது அருந்து கிறார்களா என்பதைப் பார்க்கவும் இது வசதியாக இருக்கும். சபை கலையலாம். போருக்கு எல்லா விதத்திலும், ஆயத்தமாகலாம். அது குறித்த செலவுகள் எதுவாயினும் நீங்களே செய்யலாம். என் அனுமதி தேவையில்லை.

''அரண்மனையை விட்டு அரசர் நகர்ந்து அந்தப்புரத்திற்குப் படியேறி உள்ளே நுழைந்தார். அதிகாரிகள் அந்தப்புரத்துக் கதவு களைச் சார்த்தினார்கள்.

அரசர் கை தட்ட மேலும் அதிகாரிகள் வந்து நின்றார்கள். அரசர் கை தட்டியது மனைவியர்களுக்குக் கேட்டது. அதிகாரிச்சிகள் வந்து சூழ்ந்து கொண்டதும் உட்புறக் காவலைப் பலப்படுத்தும்படியும், போர் நாள் அறிவிக்கப்படும் என்பதையும் சொல்ல, அவர்கள் வாள் உருவி சோழம். சோழம் என்று உரக்கக் கத்தினார்கள்...

அந்தப்புரம் முழுவதும் அந்தக் கூக்குரல் ஒலித்தது. பட்டமகிஷி வெளியே வந்தாள். பஞ்சவன்மாதேவி அரசருக்கான துணிகளை அடுக்கி வைத்து மூட்டையாகக் கட்டி வைக்கச் சொன்னாள்.

''சோழம்...'' என்ற குரல் கேட்டதும் மேல் துணியை மாற்றிக் கொண்டு, வேறு துணியால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, மறுபடியும் திலகம் எழுதிக் கொண்டு மெல்லியதாய் விபூதி பூசிக்கொண்டு அரசரை நோக்கி நடந்தாள்.

''என்ன, அந்தப்புரக் கதவுகளை மூடிவிட்டீர்கள்.''

சமையல் செய்கிறவன் அதிகாரிச்சியைக் கேட்டான்.

''போர்'' என்று ஒரே வார்த்தையில் சொன்னாள்.

அவன் திகைத்து நின்றான்.

''மேலைச்சாளுக்கியத்தினரா...'' என்று கேட்க, அவள் முகம் திருப்பிக் கொண்டாள்.''

சமையல்காரன் ஓடிப்போய் தன் சீடனிடம் சொல்ல, சீடன் விறகு வெட்டுபவனிடம் சொல்ல, விறகு வெட்டுபவன் கோவேறு கழுதை ஓட்டுபவனிடம் சொல்ல, கோவேறு கழுதை ஓட்டுபவன் குதிரைச் சேவகனிடம் சொல்ல, அடுத்த ஒரு நாழிகையில் அரண்மனையை விட்டு அந்தச் செய்தி கோட்டைக் காவல் மூலமாக வெளியே கசிந்தது. இரண்டாவது நாழிகை வணிகர்களைத் தொட்டது.

வணிகர்கள் மின்னல் வேகத்தில் செயல்பட்டார்கள். கடைகளி லிருந்த தானியங்களை மெல்ல பின்புறம் வழியாகக் கூலியாட்களை வைத்து வீட்டுக்குள் எடுத்துப் போனார்கள்.

ஒற்றர்களின் மூலமாய் அதிகாரிகளுக்கு இந்தச் செய்தி போயிற்று. தஞ்சையின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந்த மூவேந்த வேளாளரரிடம் இந்த விஷயம் போயிற்று.''

''அடுத்த இரண்டாவது நாழிகையிலேயே சிறுபறை அடித்துக் கொண்டு கடைவீதி வழியாக ஒரு வீரன் உரத்த குரலில் முழங்கினான்.

''இந்த முறை நல்ல நெல் விளைச்சல் இருக்கிறது. உயர்ந்த நெல் நல்லபடியாக அறுவடை முடிந்து வந்து விட்டது. தானியங்கள் கிடைக்கவில்லை என்றோ, விலை அதிகமென்றோ எவரேனும் கேள்விப்பட்டால், உடனடியாக அருகுள்ள கிராம அதிகாரிகளிடம் தெரிவிக்க வேண்டியது'' என்று உரத்த குரலில் முழங்கினான்.

வணிகர்கள் தலை குனிந்து கொண்டார்கள். அந்த வாரம் முழுவதும் ஏன், எதனால், எதற்கு இந்தப் பறையறிவிப்பு என்று பேச்சு கிளம்பி, போர் நாளை அறிவிக்கப்படும் என்பது தெரிவிக்கப் பட்டது. சக்ரவர்த்தி அடிக்குரலில் மிருதுவாக தன் மனைவியரிடம் போர் பற்றி விளக்கினார்.

நான் நான்கைந்து நாட்களில் மேலைச்சாளுக்கியம் நோக்கி நகர்வேன் என்று சொன்னார்.

''மெல்ல முணுமுணுப்புகளும், கேவல்களும் அங்கு எழுந்தன.

பஞ்சவன்மாதேவி எந்தச் சலனமும் காட்டாமல் இருந்தாள்.

பட்டமகிஷி தந்திசத்திவிடங்கி என்றும் உலகமாதேவி என்றும் அழைக்கப்படுகின்ற கம்பீரமான பெண்மணி திரும்பி, அரசரை மற்ற பெண்கள் சூழ்ந்து கொள்வதை மெல்ல அதட்டி அடக்கினார்.

''வெற்றி வாகை சூடி வாருங்கள். இது உங்களுடைய மேன்மையான நேரம் என்று ஜோதிடர்கள் சொல்கிறார்கள். அதே நேரம் சனி கிரகத்தால் கடுமையான வேலைப் பளுவும், சிந்தனை அதிகரிப்பும் இருக்கும் என்றும் சொன்னார்கள், நல்லத் தூக்கமும், படுக்கை சுகமும் கெடும் என்றும் சொன்னார்கள்.



**உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவர் அவர் மனைவியர் தந்திசத்தி விடங்கி, வானதி, பஞ்சவன்மாதேவி (இது நாவலாசிரியரின் அனுமானம். சரித்திர ஆராய்ச்சியாளர்கள் உறுதி செய்யவில்லை.)**

உங்களுக்கு மட்டும் நாங்கள் ஆரூடம் பார்க்க வில்லை. சோழ தேசத்திற்கே கூட பார்த்தோம். சோழ தேசத்தினுடைய உன்னதமான காலம் இது என்று சொன்னார்கள். தமிழர்களுடைய உன்னதமான காலம் என்று வர்ணிக்கிறார்கள். இந்தக் கோயில் நிச்சயம் கட்டி முடிக்கப்படும் என்று சொல்கிறார்கள். அதே நேரம்... என்று சொல்ல வந்தவள் சட்டென்று நிறுத்திக் கொண்டாள்.

''என்ன அதே நேரம்...

''ஒன்றுமில்லை. அதேநேரம் சிறு விஷயங்கள் கூட பெரிதாய் விஸ்வரூபம் எடுத்து கவலைப்பட வைக்கும் என்று சொன்னார்கள்.''

''ஆரூடம் யார் பார்த்தது.

''நானும், வானதியும்.

''யுத்தம் வருமென்று நினைத்துப் பார்த்தீர்களா.''

''இல்லை. ஆரூடக்காரரே யுத்தம் வருமென்று சொன்னார்.''

''ஆரூடக்காரனிடம் போக வேண்டிய அவசியமென்ன.''

''குந்தவை பற்றிய தகவல் வந்ததிலிருந்து எங்களுக்குப் பெரிய மனக்கிலேசம் இருந்தது. குந்தவையினுடைய வாழ்க்கை ஏன் நேராக இல்லை என்று நாங்கள் வருத்தப்பட்டு ஆரூடக்காரனிடம் போனோம்.

''இப்போது குந்தவை வந்துவிட்டாளே, அவளிடம் விசாரித்தீர் களா.

''விசாரித்தோம். தவறு குழந்தையின் மீதுதான் இருக்கிறது. அவளைக்கூட குற்றம் சொல்ல முடியாது. நம்முடைய வளர்ப்பு தப்பு.

வானதி அடிக்குரலில் சொன்னாள்.

''உனக்கு இது தெரிந்தது பற்றி எனக்கு சந்தோஷம். பெரிய நிம்மதி. பஞ்சவன்மாதேவி என் பயணத்திற்கு வேண்டிய.'' என்று சக்ரவர்த்தி முடிக்கும் முன் பஞ்சவன்மாதேவி. ''சகலமும் ஏற்பாடாகி விட்டது. உதவியாள் யார் என்று தெரிந்தால் எல்லாம் ஒப்படைத்து விடுவேன்'' என்றாள்.

அரசர் உறுத்து பஞ்சவன்மாதேவியைப் பார்த்தார். பஞ்சவன் மாதேவி பதிலுக்கு அரசரையே உறுத்துப் பார்த்தாள்.

''என்ன ஏற்பாடாயிருக்கிறது.''

''உங்களுக்கு பத்து நாட்களுக்கு வேண்டிய துணிமணிகளும் உங்களுக்கென்று தனியாக சமைக்க வேண்டிய உணவுப் பாத்திரங் களும், எண்ணெய்க் குடுவையும், தந்தச் சீப்பும், சிகைக்காயும், வாசனைப் பொடியும், இலைத்திருநீறும், முத்திரை மோதிரமும், ஓலை நறுக்குகளும், எழுத்தாணிகளும், உங்கள் கூடாரத்தில் எரிய பெரிய அகல்விளக்குகளும். சிறிய அகல்விளக்குகளும், எண் ணெய்த் தூக்கும். ஊஞ்சற் கட்டிலில், மடக்கு ஆசனமும், அகிற் தோலும், வாசனை திரவியங்களும் வைத்திருக்கிறேன். இவை தனித்தனியாக இருக்கின்றன. ஆனால். ஒரே குதிரையில் இவற்றை ஏற்றிவிட முடியும். உதவியாள் யார் என்று சொன்னால் அவரிடம் விவரமாகச் சொல்லி ஒப்படைத்துவிடுவேன்.''

அவர் அவளையே ஆழ்ந்து யோசித்துப் பார்த்தார்.

''உதவியாள் நீ. நீயும் பயணப்பட சித்தமாய் இரு. என்று சொன்னார்.

மற்ற மனைவியரிடையே சலசலப்பு தோன்றி சட்டென்று அடங்கியது.

சக்ரவர்த்தி வெளியேறினார்.

பஞ்சவன்மாதேவிக்கு சந்தோஷத்தால் தலை மெல்லக் கிறுகிறுத்தது.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் ஈசான சிவ பண்டிதரை மரியாதை நிமித்தம் போய் சந்தித்தார்.

''நாளை காலையில் இராஜேந்திரர் கிளம்பலாம் என்று யார் குறித்துக் கொடுத்தது.'' பண்டிதர் கேட்டார்.

''கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர்.''

''உடனடியாகக் கிளம்ப வேண்டும் என்று ஏதேனும் சட்டமா?''

''அப்படித்தான் அவரிடம் சொல்லப்பட்டது. உடனடியாகக் கிளம்ப வேண்டும் என்று நீங்கள் கட்டளையிட்டால் நாளை காலைதான் சரியான நேரம். நிதானமாக ஆற அமர கிளம்பலாம் என்றால், அது வேறு நாள்.''

''ஏன். நாளை என்ன பிரச்சினை.''

''நாளை காலை கிளம்புகிறவர் கடும் கோபத்திற்கும், பதட்ட மான செயலுக்கும் ஆளாவார்கள். செவ்வாயின் ஆதிக்கம் மிகுந்த நாளாக இருக்கிறது. இந்தப் படையெடுப்பில் பலி அதிகம் கொடுக்கும்படியாக இருக்கும்.''

''பார்.''

''யார் கிளம்புகிறார்களோ, அவர்கள். அதாவது இராஜேந்திர ருடைய படை தவறாகவும், வேகமாகவும் முன்னேறி பலத்தத் தாக்குதலுக்கு உள்ளாகும். பின்னால் மறைந்திருந்து தாக்கவும் முயல்வார்கள். அப்படியொரு கிடுக்கிப்பிடியில் நிச்சயம் சிக்கிக் கொள்ளும். அதே நேரம் இந்த ஹோரையில் இந்த நாளில் கிளம்பினால் துர்க்கை அவன் தோளில் அமர்ந்து வருவாள். வெற்றி நிச்சயம்.

''சேதமில்லாத வெற்றிதானே வெற்றியாகக் கருதப்படும். நிறையச் சேதங்களோடு வெற்றிபெற்றால் அது வேதனை தானே.''
''இல்லை மன்னா, வெற்றிதான். முக்கியம். மல்யுத்தத்தில் மூன்று பல் போனால் அது பெரிய சேதமல்ல. எதிராளியின் உயிர் போவது தான் வெற்றி. ஆனால், நீங்கள் கிளம்பும்போது சரியான ஹோரை பார்த்துக் கிளம்புங்கள்.''

''அதை நீங்கள் கணித்துத் தருகிறீர்களா?''

''என் குழுவோடு பேசி, நாளை விடியலில் இராஜேந்திரன் நகர்ந்த பிறகு உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.''

''இன்னும் தாமதம் செய்ய முடியாது.''

''இல்லை. சரியான நாள் எனக்குத் தெரிந்து விட்டது. ஆயினும் ஒருமுறை புடம் போட்டுப் பார்த்து விடுகிறேன்.''

''ஈசான சிவபண்டிதர் எழுந்து நின்று சக்ரவர்த்திக்கு விடை கொடுத்தார்.

''இந்தச் சிறுதேர் மிக நன்றாக இருக்கிறது இராஜராஜா. அந்த மதுரைப் பையனின் கைவண்ணமல்லவா. நமது சாலைகளைச் செப்பனிட்டு நன்கு மண் பரப்பினால் இங்கே பயணம் மிக அற்புதமாக இருக்கும். விரைவாக இருக்கும். குறைந்தபட்சம் தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களுக்கு இம்மாதிரி வண்டிகளில் போவது நல்லது. தொடர்புகள் மேம்படும். தொடர்புகள் மேம் பட்டால் நாகரிகம் அதிகரிக்கும். வியாபாரம் செழிக்கும். போரி லிருந்து இந்த வண்டிகள் வந்தால் வாங்கி விடுவார்கள். சிறிய குதிரைகளாக இருப்பின் பெண்டுகள் கூட ஓட்டிச் செல்லலாம்.

தேரிலிருந்து இறங்கியவாறு கருவூர்த் தேவர் இராஜராஜரை நோக்கி வந்தார்; தழுவிக் கொண்டார். இராஜராஜர் அடி பணிய

தலையில் கை வைத்து, தோளை இறுக்கியபடியே நடந்து அரண் மனை படியேறினார்.

''இரவெல்லாம் தூங்கவில்லையா. விடிய இன்னும் சற்று நேரம்தானே இருக்கிறது.''

''இல்லை கருவூர்த்தேவரே. இராஜேந்திரசோழன் கிளம்பிப் போன பிறகு சற்று ஓய்வெடுக்கலாமென்றிருக்கிறேன். அதுவரை இங்கே பணிகள் அதிகமிருக்கின்றன.''

''எனக்கு ஏதேனும் உத்தரவுகள் உண்டா இராஜராஜா.''

கருவூர்த்தேவர் பிரியத்தோடு கேட்டார்.

இராஜராஜர் கை கூப்பினார்.

''யார், யாருக்கு உத்தரவு கொடுப்பது. மொத்த சோழ தேசத்தையும் நீங்கள் காவல் தெய்வமாக நின்று காக்க வேண்டும்.''

''அந்த சிவன் காப்பான். காக்காது போனால், அவனுக்குத் தானே நஷ்டம். இவ்வளவு பெரிய கோயில் எழுப்ப வேண்டுமென்றால் நீ வெற்றி பெற்றே ஆக வேண்டும். இவ்வளவு பெரிய கோயில் கட்டுவதற்குத் திட்டமிடப்பட்டிருக்கும் பொழுதே இது முழுக்கக் கட்டி முடிக்கப்பட்டு விடும் என்று தெரிந்து விட்டால், உனக்கு வெற்றி என்பதும் நிச்சயமல்லவா. போரில் தோல்வியுற்ற எந்த மன்னனும் இவ்வளவு உயரமாகக் கட்டடம் எழுப்ப முடியாதே. குறிப்பாக தாமிரத்தகடு சார்த்தி பொன் வேய வேண்டுமென்று நினைக்கிறாய் என்றும் சொன்னார்கள். அதுமிக அற்புதமான விஷயம். ஒருமுறை கயிலாயம் போய்விட்டு ஈசான சிவபண்டிதர் மேரு பற்றி திகைப்போடு பேசுகிறார்.

கயிலாயத்தில் கரடியின் தோல் போர்த்தி அந்தக் கரடியின் கால் பாதத்தையே பாதரட்சையாக அணிந்து, அங்குள்ள எருமையின் தலையைப் பாடம் பண்ணிக் கவசமாகத் தரித்து வந்திருக்கிறேன். மானசரோவரில் அலைந்திருக்கிறேன். இது புதுவகை மிருகம் என்று நினைத்து அம்படித்தும் பார்த்து விட்டனர். அம்பு கரடியின் தோலைத்தாண்டி உள்ளே வரவில்லை. அவர்கள் பயந்துபோய் ஓட பனிப்புயலில் சிக்கி மாண்டு போனார்கள். அப்பேர்ப்பட்ட கயிலாயத்தை, இங்கே நீ எடுப்பிக்க முயற்சிப்பது அற்புதம். உன்னுடைய கோயில் பணி பல கோயில்களை உருவாக்கும். சைவ சமயத்தைத் தழைக்க வைக்கும். சனாதன தர்மத்தை வாழ்விக்கும். நீ

செய்வது அற்புதமான காரியம். அதற்காகவே இந்தப் போர் என்றால், தஞ்சையிலிருந்து உன்னுடைய ஊரைக் காவல் காக்கிறேன்.

சத்யாசிரியன் தந்திரம் மிக்கவன். எந்த மதத்திலும் சாராது எல்லாரையும் காலின் கீழ் வைத்திருக்க ஆசைப்படுபவன். வெறும் அரசியல் பேச்சு. அரசாங்க நடவடிக்கையும் ஆபாசமானவை. சேரதேசத்து அந்தணர்களுக்கு இடம் கொடுத்து உத்தமசோழர் போல் அவனும் அழியப் போகிறான்.

சேரதேசத்து அந்தணர்களோ முழுக்க முழுக்க விஷ அம்புகளை நம்பிக் கொண்டிருக்கிறார்கள். வலிவு என்பது இறந்து போய் வெறும் தந்திரமே யுத்தத்தினுடைய ஆதாரமாக இருக்கிறது. இவையெல்லாம் மிக மிக முக்கியமான காரணம். வடக்கே கல் விழுந்து கொண்டிருந்த இமயமலைக் கணவாய்கள் திறந்து, அகலமாகி, நிலத்தில் குலுக்கல்களால் பல்வேறு வழிகள் தோன்றி, அந்தப் பாதைகளும் சீராகி யவனர்கள் உள்ளே வரத் தலைப்பட்டு விட்டார்கள்.

ஐந்து நதிகள் பாயும் தேசத்தினூடே புகுந்து ஜனகர் ஆண்ட இடத்திற்கு வந்துவிட்டார்கள். காசியையும் கயாவையும் கைப்பற்றப் போகிறார்கள். மெல்ல மெல்ல தெற்கே கன்னியாகுமரி வரை வரப்போகிறார்கள். மதமாற்றத்தில் ஈடுபடப் போகிறார்கள். இந்த சனாதன தர்மத்தைப் பாழாக்கப் போகிறார்கள்.

ஆனால், அது முடியாது. பரத கண்டத்தின் மேன்மை மெல்ல மெல்ல சரிந்து வருவதைக் காண்கிறேன். வடக்கே உள்ள மன்னர்கள், பரஸ்பரம் செய்கின்ற துரோகத்தால் யவனர்கள் பாடு கொண்டாட்டமாகி வருகிறது. ஒற்றுமையின்மையினால் பரத கண்டம் வலுவிழந்து சனாதன தர்மத்தின் சிறிய கிளைகளெல்லாம் பெரிய கொம்புகளாகி, தாங்கள் தான் சகலமும் என்று ஆட்டம் போடுகிறார்கள். சத்தியத்தை நாட எவருக்கும் தெரியவில்லை. தவறான சடங்குகளை அந்தணர்கள் தூக்கிப் பிடித்துக் கொண்டு ஆட, மற்றவர்களும் அதற்குச் சாமரம் வீசிக் கொண்டிருக்கிறார்கள். பல முனிவர்களும், ரிஷிகளும் வழிவகுத்துக் கொடுத்த சத்தியப் பாதையைக் கல்லும் முள்ளும் போட்டு மூடி வருகிறார்கள். அராபியக் குதிரைகள் அதில் பயணம் செய்து வருகின்றன.

இது காலத்தின் சுழற்சி. உயர்ந்தது தாழும், தாழ்ந்தது உயரும். மறுபடியும் உயர்ந்தது தாழும். தாழ்ந்தது உயரும். சிவனெறிச் செல்வனே இராஜராஜா. நீ சனாதன தர்மத்தின் ஒரு பெரிய தூண்.

சூரிய சந்திரர்கள் உள்ளளவும் உன் புகழ் இந்த உலகத்தில் பேசப் பட்டுக் கொண்டிருக்கும். திரும்பத் திரும்ப உன் புகழைப் புலவர்கள் பாடிக் கொண்டிருப்பார்கள். தலைமுறை தலைமுறையாய் புதிய புதிய அறிஞர்கள் உன்னைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள்.

அரசர்க்கரசன் நீ. உனக்காகவோ, உன் மகனுக்காகவோ, உன் மனைவி, மக்களுக்காகவோ நீ போருக்குப் போகவேயில்லை. பெரிய நாகரிகத்திற்காக நீ போருக்குப் போகிறாய். தென்திசை மேருவாக உன் கோயில் தகதகப்பதை நான் மனக்கண்ணுக்குள் பார்க்கிறேன். வெற்றி உனதே. போய் வா.

தஞ்சையின் நிசும்பசூதனியின் கோயிலில் நீ வரும் வரை நான் அமர்ந்திருப்பேன். வல்லத்துக் கோட்டையில் வந்தியத் தேவரை அமர வைத்ததும், பெருந்தச்சருக்குத் தஞ்சாவூர் அதிகாரத்தைக் கொடுத்ததும் அற்புதமான விஷயங்கள். இராஜேந்திரன் மதுரைக்குப் போவதும் உத்தமம். உனக்கருகே விமலாதித்தனை நீ வைத்துக் கொள்வதும் மிக புத்திசாலித்தனமான விஷயம். அதனால் கீழைச் சாளுக்கியம் மிக நன்றியோடு உன்னை நினைத்துக் கொண்டிருக் கும். பிரம்மராயரை ஏன் அதிகம் வருத்த வேண்டும். மற்றபடிக்கு பெரும் இழப்புகள் ஏதுவும் இருக்காது. வலது பக்கம் விமலாதித்தனை வைத்துக் கொண்டது போல, இடது பக்கம் இராஜேந்திரனையும் வைத்து, அவன் மீதும் ஒரு கண் வைத்துவிடு. அத்துமீறாமல் இருக்கட்டும்.''

''அத்துமீறுவான். அடிபடுவான் என்று ஈசான சிவபண்டிதர் சொல்கிறார்.''

''அவர் கிடக்கிறார். சிவனுக்குத் தெரியும். என்ன செய்ய வேண்டு மென்று. ஈசான சிவபண்டிதரை எண்ணாயிரத்துக்கு அனுப்பி விடுங்கள். இல்லையெனில் இங்குள்ள அந்தணர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு இது சரியா, அது சரியா என்று அரசாங்க நடைமுறைகளை விசாரித்துக் கொண்டிருப்பார்கள். உனக்கு அனுப்புவதில் சிரமம் இருந்தால் சொல். அவரை எப்படிக் கிளப்புவதென்று எனக்குத் தெரியும். நான் அடிக்கடி போய் பெருந்தச்சரைப் பார்த்துக் கொள்கிறேன். கவலைப்பட வேண்டாம். நிசும்பசூதனி கோயிலுக்குப் போய் உன்னுடைய வெற்றிக்காக மௌனமாக இருந்து பிரார்த்திப்பேன். என் வருகையை எவருக்கும் சொல்ல வேண்டாம். வாழ்க இராஜராஜர், வாழ்க இராஜேந்திரர். வாழ்க சோழதேசம். வாழ்க சைவ சமயம். வாழ்க சனாதன தர்மம்.''

என்று உரத்த குரலில் கூறிவிட்டு அரண்மனையை விட்டு இறங்கி தன்னந்தனி ஆளாய் இருளில் மறைந்தார்.

பெருத்த சிகையும், கலைந்த தாடியும், கசங்கிய உடையும் தனி ஆளாய் அவர் கைவீசி அரண்மனையை விட்டு வெளியேறுவதும், வாயிற்காவலர்கள் அவர் பின்னால் ஓடுவதும் நிழல் போலத் தெரிந்தன. அங்கேயே வாயிற்படியிலேயே அரசர் உட்கார அவருக்கருகே பஞ்சவன்மாதேவி அமர்ந்தாள்.

''என்ன தேவி அந்தப்புரத்துள் புகைகிறதா.''

''ஆமாம்.''

''நீ வருவதாலா.''

''ஆமாம்.''

''அதட்டி அடக்க வேண்டுமா.''

''வேண்டாம். அப்படிச் செய்யாதீர்கள். ஆதரவாகப் பேசுங்கள். உங்களை நம்பித்தான் போகிறேன் என்று சொல்லுங்கள். குதூகல மாகி விடுவார்கள். வல்லவரையர் வந்தியத்தேவருக்குக் கட்டுப்பட வேண்டும் என்றும் ஒரு வார்த்தை சொல்லுங்கள். தஞ்சை அரண்மனைப் பொறுப்புப் பட்டமகிஷி உலகமாதேவிக்கு என்று சொல்லிவிடுங்கள். அது போதும். இந்த சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆள்வதற்கே அவருக்குப் பொழுது சரியாக இருக்கும்.''

''சரி. சொல்லி விடுகிறேன். என்னுடன் வருவதில் உனக்கு விருப்பம்தானே.''

''நான் சுமையாக இருப்பேனோ என்று பயமாக இருக்கிறது.''

''எந்த விதத்தில்.''

''உங்களோடு உங்கள் வேகத்திற்கு என்னால் குதிரையில் பயணிக்க முடியுமா.''

''இது ஒன்றும் பெரிய வேகமில்லை. நிதானமாகத் தான் போகப் போகிறோம். சீரான வேகத்தில்தான் போகப் போகிறோம். இரவு நேரங்களில் ஓய்வெடுத்துக் கொண்டுதான் போகப்போகிறோம். துங்கபத்ரா நதிக்கரையை அடைந்த பிறகு நாம் மேற்கொள்ளும் நடவடிக்கையில் தான் நம் வெற்றி இருக்கிறது. என்னுடன் வா. உலகம் மிகப்பெரியது பஞ்சவன் மாதேவி. அதை உனக்குக் காட்டுகிறேன். விதவிதமான வாழ்க்கைகள். ஆனால் கணவன், மனைவி, குழந்தை, தாய், தந்தை, தாத்தா, பாட்டி என்று ஒரே

விதமான பாசப்பிணைப்பில்தான் இருக்கிறார்கள். உடல் வேறு, முகம் வேறு, உடை வேறு. ஆனால் உணர்வுகள் ஒன்றே. பேரனைத் தோளில் போட்டுக் கொண்டு நடக்கின்ற கிழவனையும், மனைவியைக் கட்டிக் கொண்டு கொஞ்சுகின்ற கணவனையும், மகளை அணைத்தபடி வரும் தாயையும் எங்கும் பார்க்கலாம். அப்படியானால் உலகம் ஒரேவிதம்தானே. எந்த மொழி பேசினாலும் அடிப்படை விஷயங்கள் ஒன்றுதானே என்று தெளிவாகும். இன்னும் இரண்டு நாளில் புறப்பட சித்தமாகி விடு. உனக்கென்று நல்ல குதிரையைத் தேர்ந்தெடுத்து, அதனோடு இரண்டு நாளும் நன்குபழகு. பேசு. அது உன் உடம்பு வாசனையை அறிந்து கொள்ள நன்கு இடங்கொடு.

நாளை காலை... இராஜேந்திரர் நகர்ந்ததும் அரண்மனை முழுவதும் உலகமாதேவியினுடைய ஆளுமைக்கு வருகிறது என்று அறிவித்து விடுகிறேன்.''

''எல்லாம் சரி... சற்று நேரமாவது உறங்குங்கள்.''

''உறக்கமா. இனியா. இனி உறக்கம் என்பது வெற்றி பெற்று தஞ்சைக்கு வந்த பிறகுதான். வந்தாலும் பிரச்சினைகள் அதிகமிருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. கோயில் கட்டும் பணியில் முழுவதுமாக நம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இன்னும் ஆறேழு வருடங்களுக்கு தூக்கமிருக்காது பஞ்சவன் மாதேவி. அதற்கு மேல் உயிரோடு இருப்பேனா. ஒருவேளை தூங்காமலேயே இறந்து விடுவேன் என்று நினைக்கிறேன்.''

''போதும் போருக்குப் போகும்போது இதென்ன அச்சான்யமான பேச்சு.''

''ஆறேழு வருடத்திற்குப் பிறகு இறந்து விடுவேன் என்று சொல்வதுகூட தவறா. அச்சான்யமா.''

''உங்களுக்கு மரணமே கிடையாது.''

''ஆஹா... சந்தோஷம். உலகில் இருந்தபடியே அணுஅணுவாக அவஸ்தைப்பட்டுக் கொண்டிரு என்று ஆசீர்வதிக்கிறாயா.''

''மரணத்தை விடுதலை என்று சொல்கிறீர்களா.''

''இல்லை.''

''பிறகு.

''மனம் விடுபட்டுப் போவதுதான் விடுதலை.''

'மனம் விடுபட்டுப் போவதென்றால்.''

''இப்போதைக்கு வேண்டாம். பிறகு பேசுவோம். இதற்குப் பேசுவதற்கு ஒரு நேரம் கிடைக்கும்.''

''இப்போது நீங்கள் உறங்கியே ஆக வேண்டும், எழுந்திருங்கள்.''

அவர் தோளைப் பிடித்து அவரை அணைத்து அரண்மனைக் குள் இழுத்துப் போனாள். கட்டிலில் தள்ளி நெஞ்சு தடவி, உடம்பு வருடி தூங்க வைத்தாள்.

தந்திசத்திவிடங்கியும், வானதியும் சற்றுப் பொருமினார்கள்.

''அக்கா.. நம்மால் மேலைச்சாளுக்கியத்திற்குக் குதிரையில் போக முடியாதா.'' வானதி கேட்டாள்.

தந்திசத்திவிடங்கி தலையசைத்தாள்.

''என்னால் முடியாது. உன்னால் முடியும் என்றும் எனக்குத் தோன்றவில்லை.''

''பஞ்சவன்மாதேவியரால் மட்டும் எப்படி முடிறது.''

''அங்கே பார். இந்த நடுநிசியில் இந்தக் குதிரை லாயத்தில் குதிரையைத் தேடிக் கொண்டிருக்கிறாள்.'' பட்டமகிஷி சுட்டிக் காட்டினாள்.

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, ஒரு குதிரையை வெளியே கொண்டு வந்து குதிரைச் சேவகன் கொடுத்தான். சட்டென்று தாவி ஏறினாள். அரண்மனைக்குள்ளே இருக்கின்ற மண் பகுதியில் அந்தக் குதிரை அதிகம் சத்தமிடாமல் குதித்து தாவி ஓடியது. முகத்தைத் திருப்பி பஞ்சவன் மாதேவியை வாசனை பிடித்தது. பஞ்சவன்மாதேவி நெருங்கி மார்போடு குதிரையின் கழுத்தை அணைத்துக் கொண்டு அதைத் தடவிக் கொடுத்தாள்.

இராஜேந்திரசோழரின் படைவீரர்களில் தஞ்சையைச் சேர்ந்தவர்கள் பதினேழு பேர் மட்டுமே உண்டு. மற்றவரெல்லாம் வெளியூரிலிருந்து வந்தவர்கள். எனவே வீடுகளுக்குப் போய் வருதல் என்று இல்லவேயில்லை. இன்று இரவு போர்க்களம் நோக்கிப் போகிறோம் என்றதும், அவர்கள் பேயாய் ஆர்ப்பரித்தார்கள். மதுபானக் குடங்கள் வாங்கிக் கொண்டார்கள். மதுவை நிரப்பிக் கொண்டு குடித்தார்கள். உரத்த குரலில் பாடினார்கள். நெருப்பு சுற்றி ஆடினார்கள். சுட்ட கறியைத் தின்றார்கள். படுத்துத் தூங்கினார்கள்.

விடியும் நேரத்தில் இறங்கி தஞ்சைப் புறம்படிக்குச் சற்றுத் தள்ளியுள்ள ஆற்றங்கரையில் இறங்கி நீந்திக் குளித்தார்கள். அழுக்கு வேட்டியை உலர்த்திப் பிழிந்து மேலே சுற்றிக் கொண்டார்கள். உலர்ந்த வேட்டியை இடுப்பில் கட்டிக்கொண்டார்கள். நெற்றி நிறைய திருநீறுடன் குதிரை ஏறினார்கள். ஏறுவதற்கு முன்னாலேயே ஈட்டிகளோடு வரிசையானார்கள். விடிந்து மேலே கதிர் பரவும் நேரம் இராஜேந்திரர் இளவரசர் கிரீடத்தோடும், கழுத்து நிறைய விதவிதமான மாலைகளோடும், ஆயுதங்களோடும் இடுப்பில் நீண்ட கத்தியோடும், இரும்புச் சங்கிலியைத் துணியில் சுற்றி இறுக்கிய வாறு உரக்கக் குரல் கொடுத்தார்.

தஞ்சை விழித்துக் கொண்டது.

அந்தணர்கள் உரத்த குரலில் தேவி மகாத்மியத்தைச் சொல்லிக் கொண்டு முன் போக, மக்கள் பூக்கள் வாரிப்போட, கைகள் அசைத்து விடைகொடுக்க, இராஜேந்திரர் ஒரு சிறுபடையோடு அரண் மனைக்குள் நுழைந்து அரசரின் அந்தப்புரத்து வாசலில் நின்றார். வாசற்கதவு திறந்தது.

''மன்னர் நெற்றி நிறைய திருநீறோடும், ஜரிகை வேட்டியோடும், மேலே வெள்ளைத் துணியோடும் வாசலுக்கு வந்தார். அரசரின் அத்தனை மனைவியரும் வந்தார்கள். வானதி தட்டில் பெரிய ஆரத்தியோடு வர, இரோஜந்திரரின் மனைவி வீரமாதேவி கீழிறங்கி இராஜேந்திரருக்குத் திலகமிட்டாள்.

அரசர் முன்னேறி இராஜேந்திரரை ஆரத் தழுவிக் கொண்டார்.

''கருவூர்த்தேவர் வெற்றி நிச்சயம் என்று சொல்கிறார்.நம்மில் எவருக்கும் எந்தவித ஆபத்தும் இல்லையென்று சொல்கிறார். மிகப் பெரிய காரியத்தைச் செய்வதற்காக நீயும், நானும் பிறந்திருக் கிறோம். சனா ்ன தர்மத்தைத் தழைக்க வைப்பதுதான் நம்முடைய வேலையாம். எனவே, இப்பொழுது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் அனைத்தும் சரி என்கிறார். மதுரைப் பயணம் வெற்றிகரமாக நடக்க ட்டும். நான் உன்னை நம்பித்தான் வடக்கு நோக்கி, மேலைச் சாளுக்கியம் நோக்கி நடக்கின்றேன்.

''வீரர்களிடம் கடுமையாக நடந்து கொள்ளாதே. முடிந்த மட்டும் பரிசுகள் கொடு. நெருங்கி நின்று பேசு. புரிந்து கொள். ஆனால், கசந்து கொள்ளாதே. அருண்மொழிப்பட்டன் சொன்னது போல நாம் துங்கபத்ரை நதிக்கரையில் தேங்கி நிற்போம். அனேகமாக நீதான் கீழிறங்கி தாக்குதலை ஆரம்பிப்பாய். மதுரை மக்களிடம் பிரிய

மாகப் பேசு. நெருக்கமாக நில். விசாரணை செய். உதவிகள் செய். கோயில்களுக்கு நிவந்தங்கள் கொடு. அங்கங்கே நெல் வாங்கி நிவந்தங்கள் கொடு. கொடுக்கக் கொடுக்கத்தான் அரசனிடம் பிரியம் வரும்.

இன்னொரு முக்கிய விஷயம். எங்கேயும் அந்தணர்களைப் பகைத்துக் கொள்ள வேண்டாம். இது இப்போதைக்குத் தேவை யில்லாத விஷயம். அந்தணர்கள் அடங்கி விட்டார்கள். எதிர்ப்பு இத்தோடு போதும். சந்தோஷமாகப் போய்வா. வெற்றி பெற்று வந்து இந்தச் சோழதேசத்தின் சக்ரவர்த்தி பதவியை ஏற்றுக் கொள். எனக்கு ஓய்வு கொடு.''

இராஜேந்திரருக்கு மட்டுமே கேட்கும் வண்ணம் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் பேச, இராஜேந்திரர் அவரை இறுக்கத் தழுவிக் கொண்டார்.

''இது கொடுப்பினை தந்தையே. உங்களைத் தந்தையாகக் கொண்டது மிகப்பெரிய கொடுப்பினை. யோசித்துப் பார்த்தபோது, உங்கள் மீது மிகப்பெரிய மரியாதை வந்துவிட்டது. வேகம் மட்டும் போதாது; விவேகம் வேண்டும் என்பதை உங்களிடமிருந்து தெரிந்து கொண்டேன். என்னைப்பற்றி எந்தவிதக் கவலையும் உங்களுக்கு வேண்டாம். எல்லோருக்கும் பிரியமானவனாய் நான் நடந்து கொள்வேன். போர்க்களம் போகும் வரை மெதுவாகப் பேசுவேன். அமைதியாகவே இருப்பேன்.

மதுரை நகர மக்களைச் சந்தோஷத்தில் ஆழ்த்திவிட்டு வருவேன். உங்களுக்குச் செய்தி வரும். நாம் கங்க தேசத்தில் சந்திப்போம். சித்ரதுர்காவை நான் வரும்வரை நீங்கள் தாண்ட வேண்டாம். அருண் மொழியை ஆசீர்வதித்து அனுப்புங்கள். சக்ரவர்த்தி கோபித்துக் கொண்டு விட்டாரென்று இரவெல்லாம் கொஞ்சம் புலம்பிக் கொண்டிருந்தான். நான்தான் அதட்டி அடக்கி வைத்தேன்.''

சக்ரவர்த்தி திரும்பினார்.

''அருண்மொழி என்று குரல் கொடுத்தார்.

அருண்மொழி குதிரையிலிருந்து இறங்கி ஓடி வந்தான். சக்கர வர்த்தியின் காலில் நீண்ட நெடுஞ்சாண் கிடையாய் விழுந்து வணங்கினான்.

''ஏய்... நீ அந்தணன். என்னை ஏன் வணங்குகிறாய்.''

''இல்லை. நான் உங்கள் அடிமை, வெறும் குலப்பெருமை மட்டும் ஒருவன் தன்மையை உயர்த்தி விடாது. இந்தச் சிந்தனையும், அனுபவமும்தான் ஒருவனை உயர்த்தும், நல்ல அனுபவங்கள் எனக்குச் சித்திக்க வேண்டுமென்று ஆசீர்வாதம் செய்யுங்கள். உங்கள் மனம் புரிந்து கொள்ளாது, ஏதேனும் துடுக்காகப் பேசியிருப்பின் மன்னித்துக் கொள்ளுங்கள்.''

''என்ன, என்னாயிற்று உனக்கு. உன்னை நம்பியல்லவா சோழதேசத்தையே ஒப்படைக்கிறேன். சோழதேசத்தின் எதிர்காலம் இராஜேந்திரன். இராஜேந்திரனின் எதிர்காலம் உன் கையிலல்லவா இருக்கிறது. அருண்மொழிப்பட்டனே, கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் எத்தகைய உதவிகளெல்லாம் எனக்கு செய்திருக்கிறார் என்பது உனக்குத் தெரியாது. அதையும்விட அதிகமான உதவிகள் நீ என் மகனுக்குச் செய்ய வேண்டும். இந்தப் படையெடுப்பு உன்னைப் பக்குவப்படுத்தும். இராஜேந்திரனை விட்டு எங்கும் அகல வேண்டாம். இரவும் பகலும் அவனோடே இருப்பதற்கு முயற்சி செய். உன்னை வெளியே அனுப்ப ஏதேனும் கட்டளையிட்டாலும் போக முடியாது என்று மறந்துவிடு.''

''இல்லை அப்படி நடக்காது. என்னைப் பிரிக்காதீர்கள் என்று அவரிடம் சொல்லி உறுதிமொழி வாங்கிக் கொண்டு விட்டேன். சென்று வருகிறேன்.''

மறுபடியும் விழுந்து வணங்கினான்.

சக்ரவர்த்தி, அருகே இருந்த அருண்மொழியின் குதிரை மீது தாவி ஏறினார். அந்தச் சிறு குதிரைப்படையைச் சுற்றிப் பார்த்தார்.

''உங்கள் வசம் சோழதேசத்தின் இளவரசர் இராஜேந்திரர் இருக்கிறார். இளவரசரல்ல, வெற்றிபெற்று விட்டு வந்தபிறகு அவர் சக்ரவர்த்தி. எனவே உங்களிடம் இருக்கின்ற சக்ரவர்த்தியைக் கவனமாகப் பார்ப்பது உங்களுடையப் பொறுப்பு. உங்கள் உயிரைக் கொடுத்தேனும் அவரைக் காப்பது உங்கள் பொறுப்பு. என்று சொல்ல, அவர்கள் கேடயத்தை வாளால் தாக்கி ''சோழம்... சோழம்...'' என்று கத்தினார்கள்.

சக்ரவர்த்தியின் குதிரை வர, அருண்மொழியின் குதிரையிலிருந்தே அவர் தன்னுடைய குதிரைக்குத் தாவினார். அரண்மனை வாசல் நோக்கி விரைந்தார்.

இராஜேந்திரரும், அருண்மொழியும் அவரவர் குதிரையில் ஏறிக்கொள்ள, அந்தச் சிறுபடை அவர்களைச் சூழ்ந்துகொள்ள, அரசருக்குப் பின்னே அந்தச் சிறுபடை போயிற்று.

''அரசர் அரண்மனைக்கு வெளியே உள்ள மண்மேட்டில் தன் குதிரையைச் செலுத்தி நின்றுகொள்ள, எதிரேயுள்ள இளவரசர் படை உரக்க ஆரவாரித்தது.

இளவரசர் இராஜேந்திரர் வாள் உயர்த்தி விடைபெற, அடுத்ததாக அருண்மொழிப்பட்டன் தன் தோளிலிருக்கும் வில்லை எடுத்து, வானம் நோக்கி அம்பு தொடுத்தான். வீரர்கள் வாள் உயர்த்தினார்கள். அந்த விடியற்காலையிலேயே வீரர்களும் குடித்து, குதிரைகளுக்கும் மதுவை குடிக்கக் கொடுத்திருப்பார்கள் போலிருக்கிறது. குதிரைகள் எகிறிக் கொண்டேயிருந்தன. வீரர்கள் உரத்த குரலில் சிரித்தும், பேசியும் அலட்டிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் நகர்ந்ததும், படை பெரிய ஆரவாரத்தோடு பின் தொடர்ந்தது. அந்தப்படை போகிற போக்கைப் பார்த்து இராஜராஜர் முகம் கறுத்தது. கவலையாயிற்று.

அரண்மனையின் மேல் தளத்திலிருந்து பஞ்சவன் மாதேவி நின்று அந்தப் படையை உற்றுப் பார்த்தாள். அங்கிருந்து பார்க்கும் போது, படையினுடைய பின் பக்கப்பகுதி ஒடுங்கியதுமாகவும், வெறும் உல்லாசமாகவும், ஆட்டம் பாட்டம் மிகுந்ததாகவும் பொது மக்களை மிரட்டுவதாகவும் இருப்பதைப் பார்க்க முடிந்தது. படை நகர்ந்து போகும் இடமெல்லாம் தகராறுகள் இருக்கும் என்று அவர்களுக்குத் தெரிந்தது.

திருக்காட்டுப்பள்ளி வழியாக இராஜேந்திர சோழர் படைகள் வருவதை மருவூர் அந்தணர்கள் தெரிந்து கொண்டார்கள். அவசர மாக ஒன்று கூடினார்கள். அவர் படையோடு சேர்ந்து கொள்ளலாமா என்று வேகமாகப் பேசினார்கள்.

''இல்லை. இவர் படையோடு சேர்ந்து கொள்வதை விட, தற்கொலை செய்து கொள்வது உத்தமம்.'' என்று தீர்மானித்தார்கள்.

''இராஜராஜர் படையோடு சேர்ந்துகொள்வோம். இன்றைக்கு யோகம் சரியில்லை. செவ்வாயின் ஆதிக்கம் அதிகமிருக்கிறது. இந்த ஹோரையில், இந்த ஆதிக்கத்தில், இந்த திதியில் அசுரனைக் கொன்று சந்தோஷித்த துர்க்கை இருக்கிறாள். இப்போது இராஜேந் திரரிடம் பேசினால் எகத்தாளம்தான் வெளிப்படும்.''

அவர் வருகையை எதிர்கொள்ளாமல், அந்தணர்கள் என்று அடையாளம் கூட காட்டாமல், மக்கள் கூட்டத்திற்கு நடுவே யாதவர்களோடு நின்றுபார்த்து விட்டு வருவோம் என்று தீர்மானித்தார்கள். ஆனால், இந்தச் செய்தி பழமர்நேரி அந்தணர்களுக்கு எட்டவில்லை.''

''ஏனப்பா மருவூர் அந்தணர்கள் போர்க்களம் போவார்கள் என்றால், நாம் இராஜேந்திரர் படையோடு சேர்ந்து கொண்டால் என்ன? நம் வீதி வழியாகத்தான் போகிறது. எங்களையும் போருக்கு அழைத்துப் போங்கள் என்று இராஜேந்திரரிடம் கேட்டால் என்ன.''

''கேட்போம்... கேட்போம்...

பழமர்நேரி அந்தணர்கள் போருக்குப் போவதற்கு இராஜேந்திரரை உத்தரவு கேட்பது என்றும், அதற்கு முன்னால் அவரை மாலையிட்டும், பூரணகலசம் ஏந்தியும் வரவேற்பது என்றும், வெற்றி வாழ்த்து சொல்வது என்றும் தீர்மானமாகியது.

அந்தணர்கள் உடுத்திக்கொண்டு, நெற்றியில் நீறுபூசி, கையில் வெள்ளிக் குடத்தோடு காத்துக் கொண்டிருந்தார்கள். பின்னால் வந்த ஒற்றர்படை அவர்களைச் சூழ்ந்து கொண்டது.

''என்ன வைத்திருக்கிறாய் குடத்தில்.''

''நீர், தேங்காய்.''

''இல்லை கத்தியிருக்குமென்று நினைக்கிறேன். எடு. கவிழ்த்துக் காட்டு.

தேங்காயைப் பிடுங்கி தூக்கிப் போட்டு, குடத்தைக் கவிழ்த்து, நீர் தவிர, வேறு ஏதும் இருக்கிறதா என்று சோதித்தது. ஒன்றுமில்லை என்றதும் குடத்தைத் தூக்கி அவர்கள் கையில் போட்டு விலகி நில்லுங்கள் என்று விரட்டியது. வெறும் காலிக் குடத்தையும், தேங்காயையும் பிடித்தபடி அந்த அந்தணர்கள் நின்றிருக்க, இளவரசர் இராஜேந்திரர் வேகமாகத் தாண்டிப் போனார்.

''ஜெய விஜயீபவ.''

அந்தணர்கள் குரல் கொடுத்தார்கள்.

''இளவரசருக்கு விண்ணப்பம். என்று இரண்டு பேர் கத்தினார்கள்.

இளவரசர் சற்று தூரம் போய் நின்றார். அந்தணர்கள் திபுதிபு என்று ஓடி வந்தார்கள். மூச்சிரைக்க அவர் முன்பு நின்றார்கள்.

''என்ன...'' என்று இளவரசர் கேட்க, ''நாங்களும் உங்களோடு மேலைச்சாளுக்கியம் வருகிறோம்.''

''எதற்கு, நான் என்ன யாகம் செய்யவா போகிறேன்? மேலைச் சாளுக்கியத்தோடுப் போர் நடத்தப் போகிறேன்.''

''அதிலும் எங்களுக்கு ஏதேனும் பங்கு வேண்டுமல்லவா.''

''போரில் பங்கா. தேசத்திலுள்ள எல்லாக் காரியங்களிலும் பங்கு தந்துவிட்டீர்களா. போரில் பங்கு என்கிறீர்கள்.''

''இல்லை, எங்களுக்கும் ஏதேனும் ஒரு பணி கொடுத்தால் சிறப்பாக இருக்கும்.''

''பணிதானே தருகிறேன். உழுது பயிரிடுங்கள். சாலைகளைச் செப்பனிடுங்கள். குதிரைகளுக்கு புல் பிடுங்கிப் போடுங்கள்.''

''இராஜேந்திரர் உரக்கச் சொல்லிவிட்டு நகர முற்பட்ட போது. அருண்மொழி மெல்லக் குதிரையை மடக்கினான்.''

''வேண்டாம்... போருக்கு நீங்கள் தேவையில்லை என்பதை மட்டும் சொல்லிவிடுங்கள்.''

இளவரசர் சட்டென்று கோபம் குறைந்தார்.

''போருக்கு அந்தணர்களை அழைத்துப் போவது என்பது முறைமை அல்ல. இங்குள்ள நிர்வாகத்தைக் கவனியுங்கள் என்பதைத்தான், நான் அப்படி சொன்னேன். போர் என்பது பற்றி சிறிதளவும் தெரியாத உங்களால் போர் நடக்கும் இடத்திற்கு வரமுடியாது. வெட்டுப்பட்ட உடல்களை, கைகளை, கால்களை எடுத்து தகனம் செய்கின்ற காரியங்களைக் கூட, உங்களால் செய்ய முடியாது. சோழதேசத்தை உங்களைப் போன்றவர்களின் பொறுப்பில்தான் விட்டுவிட்டுப் போகிறோம். எனவே, வல்ல வரையர் வந்தியத்தேவருக்குத் துணையாக இருங்கள். பிரச்சினைகள் ஏதும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.''

அவர்கள் பதிலுக்குக் காத்திராமல் இராஜேந்திரர் குதிரையைத் திருப்பிப் பயணத்தைத் தொடர்ந்தார்.

''மதுரையிலிருந்து வடக்கே திரும்பி விடுவார்களோ.'' அந்தணர்கள் தங்களுக்குள் கேள்வி கேட்டுக் கொண்டார்கள்.

''வேண்டாம் என்று சொல்லிவிட்டாரே, நிம்மதி'' என்றும் பேசிக் கொண்டார்கள்.

மருவூர் அந்தணர்களுக்குச் செய்தி போயிற்று.

''ஆஹா... இப்படிப் பேசுகிறாரே... ஒன்று செய்வோம். இராஜராஜரையும் பார்க்க வேண்டாம். சோழ தேசத்து நிர்வாகம் நம் தலையில் வைக்கப்படும்.''

''இந்தப் பேச்சுக்கே இடமில்லை. நாம் எவரிடமும் உத்தரவு எதிர்பார்க்காது மேற்கே சாளுக்கியம் நோக்கிப் போவோம். எது நல்ல ஹோரை.''

''நாளை மறுநாள் புதனின் ஆதிக்கம் உச்சியில் இருக்கிறது. புதனுக்குப் பிறகு குரு சந்தி வரப் போகிறது. புதனும் குருவும் சந்திக்கின்ற வேளையில் ஹோரையும் நன்றாக இருக்கிறது. அப்பொழுது போனால் என்ன.''

''புதன் அலிக்கிரகமாயிற்றே. யுத்தத்திற்கு அவன் சரியானவன் இல்லையே.''

''நாமென்ன போர் புரியவா போகிறோம். இல்லையே. நமது கெட்டிக்காரத்தனத்தை வெளிப்படுத்தத்தானே போகிறோம். அப்படியானால் புதன்தானே அதற்கு சரியான கிரகம். குருதானே நல்ல வழி காட்டி. குருவின் அருள், புதனின் கெட்டிக்காரத்தனம் இருப்பின் போன காரியம் நிச்சயம் வெற்றியல்லவா, இந்த நேரத்தில் எது செய்தாலும் நல்லதாக முடியுமல்லவா.''

''ஆமாம். சரியாக இருக்கிறது. நம் பெரியவர்களிடம் கேட்போம்.

மருவூர்காரர்கள் மறுபடியும் ஒன்று கூடினார்கள். கலந்து ஆலோசித்தார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கிளம்புவதற்கு முன்பு கைகளில் கோல் ஏந்தி அதில் சிறிய தானிய மூட்டைகளோடு வீடுகளில் விடைபெற்று, க்ஷேத்ராடனம் போகிறோம் என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்கள்.

பலநூறு வேளாளர்கள், அந்தணர்கள் ஒட்டு மொத்தமாகப் போவதைப் பார்த்து திகைத்தார்கள். இவ்வளவு பேருமா க்ஷேத்ராடனம் போகிறார்கள் என்று வியந்தார்கள். விழுந்து வணங்கி விடை கொடுத்தார்கள். ஊர் தாண்டியதும் சில அந்தணர்கள் அழுதார்கள். மற்றவர்கள் அவர்களைத் தேற்றினார்கள்.

கால் வைத்தாகிவிட்டது; இனி மேல் நடந்து தான் தாண்ட வேண்டும். பின்வாங்கி புண்ணியமில்லை. இது மிகப்பெரிய

அனுபவத்தை நமக்குக் கொடுக்கும். இது மிக நல்ல நேரம். அந்தணருக்கான நேரம்.

ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம்
தும் உத்திஷ்ட புருஷி கிம் ஸ்வபீஷி...
பயம்மே சமு பஸ்திதம் யதி சக்யம் அசக்யம் வா
தன்மே பகவதீ சமய சமய ஸ்வாஹா

என்று வனதுர்கா மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

குடந்தையில் குதிரைகள் வாங்கிக் கொண்டார்கள்.

மருவூர் அந்தணர்கள் குதிரைகள் வாங்கிய மூன்றாம் நாளில் அவற்றோடு நெருங்கிய சம்பந்தம் ஏற்படுத்திக் கொண்டார்கள். இரவு நேரமெல்லாம் குதிரையில் பயணம் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். தரையில் உட்காருவதையே சம்மணம் கட்டி உட்காராமல் குத்திட்டு உட்கார விரும்பினார்கள்.

மிருகத்தோடு பழகுகிறோமல்லவா, அதனால் கொஞ்சம் உடம்பு சூடு அதிகமாகிறது. புத்தியிலும் சூடு ஏறுகிறது. அடிக்க வேண்டும், இடிக்க வேண்டும், தாக்க வேண்டும் என்று இந்த வேகத்தால் ஒரு பரபரப்பு ஏற்படுகிறது. தன்னுடைய இயல்பான குணத்தை விட்டு விடாமல், குதிரை ஓட்டுதலையும் நகர்த்தி விடாமல், எல்லோரையும் சரி சமமாக நடத்தக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று ஒரு அந்தணர் கூற, மற்றவர்கள் ஆமோதித் தார்கள்.

''மேலைச்சாளுக்கியத்திற்கு யுத்தம் செய்வதற்காகப் போகவேயில்லை. அரசனை ஆசீர்வதிப்பதற்காகப் போகிறோம். அட.... நம்மூர் அந்தணர்களா. இவ்வளவு தொலைவா என்று ஸ்ரீ இராஜராஜர் ஆச்சரியப்பட வேண்டும்.''

வேறு ஒருவர் உரத்துக்கூற, அதையும் ஆமோதித்தார்கள். அங்கு போய் சக்ரவர்த்தியிடம் தவறுதலாக ஏதும் பேசி, அவர் கோபத்தைக் கிளறாது இருக்க வேண்டும்.

''ஆமாம். ஆனால் பேச்சைக் குறைத்துக்கொள்ள வேண்டும். அடுத்த ஐந்து நாட்களுக்கு ஒருவரொடு ஒருவர் பேசாது மௌனமாய்ப் பயணம் செய்வோம்.''

''ஐந்து நாள் அதிகம். குடந்தையிலிருந்து மேல்பாடிக்குப் போக வேண்டும். மேல்பாடியிலிருந்து பெண்ணையாற்றங்கரை வழியாகப் போனால் துவார சமுத்திரம் என்ற இடம் வந்து விடும்.

அங்கிருந்து துங்கபத்ரா அருகிலிருக்றது. துங்கபத்ரை ஓரமாகப் பயணம் செய்வது நன்றாக இருக்குமல்லவா.''

''சக்ரவர்த்தி அப்படியா பயணம் செய்வார்.''

''தெரியவில்லை. ஆனால் அப்படிப் பயணம் செய்வது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. பெரும்படையொன்று வேறு திசை வழியாகப் போகாமல், ஆறு இருக்கும் வழியாகப் போனால் படைக்கும் நல்லது, படையிலிருக்கும் குதிரைகளுக்கும் யானை களுக்கும் நல்லது.''

''ஆறு இப்போது வறண்டல்லவா இருக்கும்.''

''இல்லை. இப்போது மேற்கே மழைபொழியும் காலம். இரவு நேரம் வெகு தொலைவில் இடி இடிப்பதை நீங்கள் காணலாம். சிலீரென்று இரவு நேரக்காற்று நீர் சுமந்து வருவதை அறியலாம். ஆற்றில் கனமழை பொழிந்தால், வெகு நிச்சயம் பெண்ணை யாற்றில் வேகமாக நீர் ஓடும். ஆற்றங்கரை வழியே பாதைகள் அமைத்துக் கொண்டு யானைகளையும், குதிரைகளையும் சிரம மின்றி ஓட்டிப் போய் விடலாம், சில நேரங்களில் ஆறு வளைந்து போகும்.''

''நாம் அப்படிப் போக வேண்டுமா.''

''எல்லா இடங்களிலும் ஆற்றோடு போக வேண்டிய அவசியம் இல்லை.

''ஆறு வளைந்து வருகிறபோது அதற்குக் குறுக்காகவோ அல்லது அதைவிட்டு சற்றுத் தள்ளியோ, கிராமங்களூடோ புகுந்தும் போக லாம். ஆனால், பெண்ணையாற்று வழியாகவே துங்கபத்ராவை அடைவதுதான் சிறந்தவழி என்று தோன்றுகிறது.''

''அப்படியானால் ஒன்று செய்வோம். மேல்பாடி வரை பேசாதிருப்போம்.

''உணவு எப்படி.

''அரிசி உணவே வேண்டாம். சமைக்கவே வேண்டாம். வெறுமே அங்கங்கே காய்களைப் பொறுக்கிக் கொண்டு, பழங்களைப் பறித்துக் கொண்டு போவோம். வயிறு சுத்தமாகும். வெறும் காய்கறியாகத் தின்றால் இன்னும் குடல் லேசாகும்.''

''கிளம்பும்போது சகுனங்கள் நன்றாக இருந்தது பார்த்தீரா.''

''ஆமாம் நரிவலம் போயிற்று. அதுதான் ஆச்சரியம். அதுவும் நம்மைப் பார்த்துக்கொண்டே போயிற்று. இதுவரை நான் வெளியே கிளம்பி ஒரு நரியைச் சந்தித்ததேயில்லை.''

''ஆமாம். மருவூருக்கு ஏதோ அதிர்ஷ்டம் வரப் போகிறது என்றுதான் நானும் நினைக்கிறேன். என் கனவுகளும் நன்றாக இருக்கின்றன.''

''கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே என்று பெரியவர்கள் சொன்னது அற்புதம்தான். என்ன வேண்டுமானாலும் விளையட்டும். இப்படி விடுதலையாய் ஒவ்வொரு தேசமாய்ப் பார்த்துக் கொண்டு போகப் போகிறோம். எப்படி எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது. இம்மாதிரி மேலைச் சாளுக்கியம் வரை போய்விட்டுத் திரும்பினால், அடுத்த வருடமே நான் மறுபடியும் பயணப்படுவேன்.''

''எதற்கு மேலைச்சாளுக்கியத்திற்கா.''

''இல்லை. இமயமலை வரை போவேன். காசி, கயா, திரிவேணி, சங்கமம், ரிஷிகேசம், ஹரித்வாரம் வருவேன். இன்னும் கயிலாயம், மானசரோவரும்கூட பார்க்க வேண்டுமென்று ஆசை. இந்தப் பயணம் அதற்கு உதவும்.

''அடடா... அடடா...'' எல்லோரும் எழுந்து நின்று ஆரவாரித் தார்கள். ஒருவரையொருவர் தழுவிக் கொண்டார்கள்.

''இப்பொழுதே நேராக நாம் காசிவரை போய் வந்தால் என்ன.''

மத்திம வயது அந்தணர் கேட்க, எல்லோரும் திகைத்து அவரையே பார்த்தார்கள்.

''ஆமாம், போனால் என்ன...

''காசி போவதென்றால் முறைப்படி வீட்டில் சொல்ல வேண்டு மல்லவா, வாய்க்கரிசி வாங்கித்தானே காசிக்குப் போக வேண்டும் என்பார்கள்.''

''இதோ பாருங்கள். மரணம் ஏற்படும் என்ற நிலை வந்தால் தான் வாய்க்கரிசி. நமக்கு நல்ல கனவுகள் வந்திருக்கின்றன. நல்ல சகுனங்கள் ஆகியிருக்கின்றன. மான்யகேடத்திலிருந்து இன்னும் வடக்கே நகர்ந்தால் காசிக்குப் போய்விட முடியாதா. இப்போதே உறுதி செய்துகொள்ளக் கூடாதா.''

காசிக்கு மட்டுமா. திரிவேணி சங்கமம், மதுரா, அயோத்யா என்று வடக்கே எவ்வளவு அற்புதமான நகரங்கள் இருக்கின்றன. விசாரித்துக் கொண்டே போய்விடலாமே.''

''அதுதான் சரி. இப்போது நம்முடைய பேச்சில் இறைவன் அமர்ந்திருக்கிறார். நாம் வெறுமே ஒரு தந்திரமாக அவரை நம் பக்கம் இழுக்கும் வண்ணமாக நடந்து கொள்கிறோமே, எதற்கு இந்த தந்திரம் என்று என் அடிமனதில் வேதனை இருந்தது. இப்பொழுது மாறிவிட்டது. நம்முடைய பயணம் வடக்கே வெகுதொலைவில், இமயத்தின் சரிவில் கைலாஸ பர்வதத்தின் காலடியைத் தொடுவதற்கு நாம் போகிறோம். அவசியமெனில் கயிலாயமும் போவோம்.

இதை ஊரில் சொல்லியிருந்தால் என் மனைவி விட்டிருக்க மாட்டாள். என் தம்பியின் மனைவியும் விட்டிருக்க மாட்டாள். என் தகப்பனாரும், தாயும் அழுது புலம்பியிருப்பார்கள். இப்போது தோன்றியதே இது கடவுள் அருள். அந்த மேலைச்சாளுக்கியத்தில் நாம் அரசரைக் கவர்வதற்காக போகவேயில்லை. நாம் வடக்கே வெகு தொலைவே பயணம் செய்கிறோம். போகும் வழியில் அரசரோடு மேலைச்சாளுக்கியம் வரை போய் அந்தப் போருக்கு முன்போ, அந்தப் போருக்குப் பிறகோ அந்தணர்களாக நாம் வடக்கே பயணிப்போம். வடக்கே பயணித்து மீண்டும் மருவூர் வந்து, மருவூரிலிருந்து தஞ்சைக்கு வந்து, அரசரிடம் ஒரு குடம் கங்கை ஜலம் கொடுத்து இதைக் கோயில் கும்பாபிஷேகத்திற்கு வைத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னால், அரசர் மகிழ்ந்துவிட மாட்டாரா.''

'சிவாய நமஹ... சிவாய நமஹ...' என்று தங்களை மீறி மருவூர் அந்தணர்கள் உரக்கக் கத்தினார்கள் பரவசமானார்கள்...

''நாம் எதுவுமே இல்லை. மனிதர்களின் மனதுக்குள் இறைவன் புகுந்து ஆட்டுகிறான். பணிவாக இருந்தால் போதும், இறைவன் வந்து அமர்ந்து கொள்கிறான். வழி நடத்துகிறான். இந்த மணலைக் குவி'' என்று ஒருவர் சொல்ல, ஒருவர் வேகமாக மணலைக் குவித்தார். ஒரு குச்சியை எடுத்து மணலில் நட்டார்.

''நாம் ருத்ரம் சொல்வோம். ருத்ரம் சொல்லி முடிப்பதற்குள் இந்த குச்சி எந்தப் பக்கம் தலை தாழ்கிறது என்று பார்த்து கொள்வோம். இந்தக் குச்சி வடக்கே நகர்ந்தால் நம்முடைய பயணம் வெற்றி... தெற்கே நகர்ந்தால் எமன் கையில், கிழக்கே நகர்ந்தால் ஓரளவு

வெற்றி. மேற்கே நகர்ந்தால் நாம் பாதியில் திருப்பி அனுப்பப் படுவோம்.''

எல்லோரும் சுற்றி அமர்ந்து ருத்ரம் சொன்னார்கள்.

குச்சி வடக்கே சரிந்து விழுந்தது. அந்தத் திசை போ என்பது போல் காட்டிற்று. அந்தணர்கள் பரவசமானார்கள். கண்ணீர் விட்டு அழுதார்கள். அவர்கள் தந்திரம் மொத்தமும் அழிந்து இனிமை யானவர்களாக, உண்மையானவர்களாக மாறினார்கள். வல்லவர்கள் நல்லவர்களாவது தான் உலகத்தினுடைய பெருமைக்கு வழி வகுக்கும். தந்திரம் தான் வாழ்க்கை என்று நினைத்துக் கொண் டிருந்த அந்த இனத்திலிருந்து இந்தச் சிறுகுழு பிரிந்து வேறுவிதமாய் பயணத்தைத் தொடர்ந்தது.

குறைவாகப் பேசுகிறவர்களாகவும், குறைவாக உண்பவர் களாகவும், குறைவாகத் தூங்குபவர்களாகவும், கடும் பிரம்மச்சரிய விரதம் கடைபிடித்தும் அந்தக்குழு வடக்கே நகர்ந்து போயிற்று.

## 155

'பதினெட்டு எக்காளங்கள் ஒரு சேர, முழங்க, போர் முரசு முழங்க, தஞ்சை மக்கள் அரண்மனை நோக்கி ஓடினார்கள். போர் பற்றிய பரபரப்பு ஆரம்பித்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன. சக்ரவர்த்தி வணிகர்களைப் பார்க்கிறார். சிற்பிகளோடு பேசுகிறார். அதிகாரிகளோடு விவாதிக்கிறார். குதிரைச் சேவகர்களோடும், யானைப் பாகர்களோடும் ஆலோசனை நடந்தது. கருமார்களுடைய தலைவர்கள் நான்கு பேர் ஒன்று சேர்ந்து பல்வேறு கணக்குகளை அரசரிடம் சமர்ப்பித்தார்கள். வெற்றி அல்லது வீரமரணம் என்று முழக்கமிட்டார்கள்.

பொற்கொல்லர்களும், மரத்தச்சர்களும், கட்டடம் கட்டும் கன்னார்களும் தனித்தனியே பேசினார்கள். காலையிலிருந்து மதியம் வரை உட்கார்ந்து உணவு உண்டார்கள். நாற்பத்தியோரு பேருக்கு அரசர் முன்னிலையில் வெஞ்சினமும், குழம்பும், அரிசியும் சோறும், கடைந்த தயிரும் தரப்பட்டன. நாற்பத்தோரு பேருக்கும் அரசர் கையாலேயே வெற்றிலை பாக்கு தரப்பட்டது. அவர்கள் எல்லோரும் போன பிறகு கோட்டைக்காவலர்களையும், பாண்டிய தேசத்து மறவர்களையும் நடுநாடு, தொண்டை நாட்டுப் போர்

வீரர்களையும் அரசர் அரண்மனை வளாகத்தில் சந்தித்து உரை யாற்றினார்.

சக்ரவர்த்தி, எந்த வழியில் போனால் சரி என்று பல்வேறு முதிய வீரர்களிடம் கேட்டு நினைவுப்படுத்திக் கொண்டார் என்றும், கடைசியாக அந்தணர்களை அழைத்துப் பேசியதாகவும், அந்தணர்கள் எங்கள் மீது ஏன் கோபம் என்று கேட்டதாகவும், ஒரு கோபமும் இல்லை. சோழ தேசத்துக் கோயில்களை நன்கு பராமரிக்க வேண்டும், எல்லா மக்களோடும் கலந்து பழக வேண்டும் என்று அரசர் வேண்டுகோள் விடுத்ததாகவும், நிச்சயம் செய்கிறோம் என்று அந்தணர்கள் சொன்னதாகவும் ஒரு செய்தி வந்தது.

அந்த அந்தணர்கள் போன பிறகு தஞ்சையிலிருந்தும், நடுநாட்டிலிருந்தும் அரசாங்கத்தில் அதிகாரிகளாக உள்ள அந்தணர்களை அரசர் சந்தித்தார்.

இடுப்பு வேட்டியும், மேல் துண்டும் காசும் தானமாகக் கொடுத்தார். எல்லோருக்கும் வாழைப் பழங்கள் தரப்பட்டன. நூற்றுக்கணக்கான அந்தண அதிகாரிகள் அவரின் முன்பு கைகட்டி உட்கார்ந்திருந்தனர். அத்தனை பேருக்கும் பானகம் தரப்பட்டது.

அவர்களுடைய க்ஷேமலாபங்களை அரசர் விசாரித்தார். அவர்கள் மிக மழ்ச்சியாக தாங்கள் சௌக்கியமாக இருப்பதாகச் சொன்னார்கள் ஆரம்பத்தில் ஏற்பட்ட சிரமங்களுக்கு அரசர் வருத்தம் தெரிவிக்க, அவர்கள் வேகமாக மறுத்து, அரசரை நோக்கி வாழ்த்துச் சொன்னார்கள். சற்று நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்த பிறகு, அரசர் அவர்களை நோக்கி ஒரு நேரத்தில் அரசர் படையெடுத்து வெளிதேசம் போயிருக்கும் போது, உள்நாட்டில் என்னவிதமான பிரச்சினை வரும். யாராவது ஒருவர் பதில் சொல்லுங்கள் என்று கேட்க, பதிமூன்று வயது சிறுவன் எழுந்து நின்றான். இன்னும் சிலர் எழுந்தார்கள். வயதில் இளையவனான அந்தச் சிறுவனை முதலில் அரசர் பேசச் சொன்னாராம்.

எந்த விதச் சிரமும் வராது. உயிரைத் துச்சமாக மதித்து அரசர் நாட்டின் நலனிற்காக வெகுதூரம் படையெடுத்து பல்வேறு சிரமங்களை மேற்கொண்டு போயிருக்கிறார் என்பதை ஒவ்வொரு குடிமகனும் உணர்ந்திருப்பதால், அவன் அரசுக்கோ அல்லது மற்றவருக்கோ எந்தத் தீங்கும் செய்யாமல் அமைதியாக இருப்பான். ஒரு சுய கட்டுப்பாடு வெகுநிச்சயம் உருவாகும் என்று சொல்ல, அரசர் மழ்ந்து அவனுக்கு மேலும் ஒரு காசு கொடுத்தாராம்.

அரசர் யாரை நியமித்துப் போனாரோ அவர் மிகக் கவனமாக இருந்தால், பிரச்சினை எதுவும் வராது. அவர் கவனக்குறைவாக இருந்தால் பிரச்சினைகள் ஏற்படும் என்று வேறொரு இளைஞன் சொன்னாராம். அருகே இருந்த குஞ்சரமல்லர் அதிர்ந்து போனாராம்.

என்ன விதமான கவனக்குறைவு என்று அரசர் கேட்டாராம். தான் தற்காலிகம் என்பதை சிலசமயம் அப்படி நியமிக்கப்பட்டவர் மறந்து போகலாம். சற்று வேகமாகச் செயல்படலாம். புதிய பதவி கிடைத்த குதியலில் கடுமையாகப் பேசியோ, சட்ட திட்டங்கள் இயற்றியோ, தண்டனை கொடுத்தோ அரசர் பாராட்டைச் சம்பாதிக்கலாம். ஆனால், என்ன ஆகும். அதிருப்தி நிலவும். செயலில் வேகம் குறையும்.

எதற்கு உழுவது. எதற்கு சம்மட்டி தூக்குவது. எதற்கு வீடு கட்டுவது. எதற்கு வாணிபம் செய்வது. என்று எல்லோரும் பின்தங் விடக்கூடும். சோம்பல் தனம் மூன்று மாதம் இருந்தால் போதும். கடும் பொருளாதார பாதிப்பு ஏற்படும். அரசர் வந்ததும் புகார்கள் பொங்கி எழும். இது பிரிவினையை உண்டாக்கும்.

இதைப்போக்க என்ன செய்ய வேண்டும் என்று அரசர் கேட்டாராம். அரசருடைய ரத்த சம்பந்தமுடைய ஒருவரை இங்கு நியமித்துவிட்டு இருக்க வேண்டும். அவரே அரசருக்கு பதில் ஆட்சி செய்ய வேண்டும். அல்லது அரசர் வரும்வரை எந்தத் தீர்ப்பும் வழங்காமல் நிறுத்தி வைக்க வேண்டும். சிறிய குற்றங்கள் தீர்க்கப்படலாம். கொலை போன்ற பெரிய குற்றங்கள் தீர்ப்பு சொல்லாமல் தள்ளி வைக்கப்பட வேண்டும். அரசர் வந்தவுடன் வழக்கு விசாரித்து அரசரோ, இளவரசரோ, சேனாதிபதியோ, இவர்களுடைய அதிகாரத்தில் இருக்கின்ற குறுநில மன்னர்களோ தீர்ப்பு வழங்கலாம்.

''வல்லவரையர் வந்தியத்தேவர்தான் தஞ்சையை ஆளப் போகிறார்'' என்று சக்ரவர்த்தி சொன்னாராம்.

''இல்லை, அவர் அரசரோடு ரத்த சம்பந்தமுள்ளவரல்ல. நீங்கள் வல்லவரையருக்குப் பதில் குந்தவைப் பிராட்டியை, உங்கள் தமக்கையை இங்கே தன அதிகாரியாக நியமித்துவிட்டுப் போங்கள். அவருக்கு உதவியாக வந்தியத்தேவர் இருக்கட்டும்.'' என்று அந்த அந்தண இளைஞன் சொன்னாராம்.

குஞ்சரமல்லர் அரசர் காதோரம், ''இதையும்விட வல்ல வரையர் வந்தியத்தேவரை இழிவுபடுத்துகின்ற விஷயம் எதுவுமில்லை.

எவ்வளவு வேண்டுமானாலும் பொறுத்துக் கொள்வார் என்பதால் அவரைத் தொடர்ந்து அசிங்கப்படுத்திக் கொண்டிருக்கக் கூடாது. அந்த அந்தணர்களைச் சும்மாயிருக்கச் சொல்லுங்கள்.'' என்று சொன்னாராம்.

''பெருந்தச்சர் குஞ்சரமல்லரை நான் நியமித்தால் என்ன ஆகும் என்றாராம் சக்ரவர்த்தி.

அவருக்கு வேலையில் ஊக்கம் கெடும். அவர் செயல்திறன் நிர்வாகத்திற்குப் போகும். கோயில் கட்டுவதிலுள்ள பிரச்சினையை யார் கவனிப்பது? குஞ்சரமல்லரை தன அதிகாரியாக நியமிக்கக் கூடாது. கோயிலுக்கு மட்டுமே அவர் பொறுப்பு. வேறு எந்த சமயத்திலுமில்லை. அவருக்குத் தேவையானதைக் கொடுக்க வேண்டியது இந்த தன அதிகாரியின் செயல். அதற்கு குந்தவைப் பிராட்டியார்தான் ஏற்றவர் என்றாராம் அந்தண இளைஞர்.

மற்ற அந்தணர்கள் எழுந்து ஆமோதித்தனராம். அரசர் எழுந்து நின்று நன்றி சொல்லி, உங்கள் ஆலோசனையை ஏற்கிறேன் என்று வணங்கினாராம். அந்தணர்கள் பீடு நடையோடு திரும்பியிருக்கிறார் கள். மருவூர் அந்தணர்களைவிட மூன்று நான்குபடி உயரமாகி விட்டதாகப் பேசிக்கொள்கிறார்கள். அவர்களுக்குள் கூட்டம் கூடி இன்னும், அமைதியாகவும், உறுதியாகவும், திறமையாகவும் செயல்பட வேண்டுமென்று சங்கல்பம் செய்து கொண்டார்களாம்.

குஞ்சரமல்லர். இது நல்லது. அந்த அந்தணன் சொல்வதை நான் வரவேற்கிறேன். கோயில் மட்டுமே என்னுடைய வேலையாக இருக்கட்டும். என்னை நகரத்தில் தலைவனாக்காதீர்கள் என்று அரசரிடம் சொல்ல, அரசர் சரியென்று சொல்லி விட்டாராம். ஆனாலும், குஞ்சரமல்லருக்கு அந்த நடுநாட்டு அந்தணர்களோடு கொஞ்சம் மனத்தாங்கல் இருக்கத்தான் செய்கிறது.

''எப்படித் தெரிந்தது.''

''விலகு விலகு என்று அவர்கள் ஆட்கள் அந்தணர்களை விலக்கி குஞ்சரமல்லரை அழைத்துப் போனார்களாம். அதுமரியாதைக் குறைவாக இருந்தது என்று சொல்கிறார்கள்.''

''அடேய்... பிரச்சினை வந்துவிட்டதே.''

''வரத்தான் செய்யும். போர் என்று அரசர் நகரும் பொழுது விதம்விதமாகக் கிளம்பத்தான் செய்யும். குஞ்சரமல்லருக்கு எந்த வருத்தமுமில்லையெனினும், நம்முடைய பெருந்தச்சர் தலைவ

ராவார் என்று எதிர்பார்த்தோம். ஆகவில்லை என்பது சிற்பிகளுக்கு சிறிது வருத்தம் என்பதாய் ஊரில் ஒரு பேச்சு நிலவுகிறது.''

''எக்காளம் ஊதினார்கள். போர் முரசு கேட்டது. ஆனால் அரண்மனைக் கதவு சார்த்தியிருக்கிறதே.''

''ஆமாம். இனி அரசரையோ, அரசருடைய உறவினர் களையோ, அதிகம் நெருங்க முடியாது ஏற்கெனவே மெய்க்காவல் கெடுபிடி உண்டு. இப்பொழுது சுத்தமாய் விலகி நிற்கச் சொல்வார்கள். தொலைதூரம் நின்று உரத்த குரலில் பேசச் சொல்வார்கள்.சில சமயம் பேசினாலும் அதட்டி அடக்குவார்கள்.'' அரண்மனை வாசலில் நின்ற தஞ்சை மக்கள் பலவிதமாகப் பேசிக் கொண் டார்கள்.

தஞ்சை மக்கள் கெட்டிக்காரர்கள். கோட்டையில் நடக்கின்ற எந்த அசைவையும் அவர்களால் யூகிக்க முடிந்தது. உள்ளிருந்து நெய் வாசனையும், புளி வாசனையும் அடிக்கிறது. எனவே பெரும் விருந்து தயாரித்திருக்க வேண்டும். இறைச்சியின் வாடை வரவில்லை. எனவே புடையலாக இருக்க வேண்டும். உள்ளிருந்து யானையின் பிளிறல்கள் கேட்கிறதய்யா. அரண்மனைக்குள் பலநூறு யானைகள் இருக்க வேண்டும் ''விலகு... விலகு... விலகு'' வலப் பக்கம் பெரிய குரல் கேட்டது.

''கூட்டம் மொத்தமும் அரண்மனைக்கு எதிரேயுள்ள பழுவேட்ட ரையரின் மாளிகையைச் சுற்றியுள்ள பெரும் சுவரோடு நிறுத்தி வைக்கப்பட்டார்கள். பழுவேட்டரையரின் மாளிகையின் மேல் தளத்திலிருந்து வில்லேந்திய வீரர்கள் ஜனங்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சங்கு ஊதுபவர்கள் அசைந்ததுமே கீழிருக்கிற ஜனங்கள் பரபரப் படைந்தார்கள். கொம்பு ஊதுபவர்கள் கொம்புகளை உயரத் தூக்கி விட்டு மறுபடியும் தாழ்த்தினார்கள். உள்பக்கம் பார்த்துக் கொண் டிருந்தார்கள்.

''அடேய்... துங்களப்பா. வேலை இருக்கு.

கீழிருந்து ஒருவன் உரத்த குரலில் கூவினான்.

''வேலையிருப்பின் போ, இங்கு எதற்கு உரத்துக் கத்துகிறாய்.''

''இன்னொருவன் அவனை அதட்டி அடக்கினான்.

மெல்ல, மெல்ல கூச்சல்கள் அதிகமாயின.

சட்டென்று. கொம்புகள் உயர்த்தப்பட்டன. கொம்புகள் ஊதப் பட்டன. அரண்மனைக் கதவு பெரிதாக திறந்து கொண்டது. அரசருக் குண்டான எருதும், அதன்மீது சிறு முரசுகளும் வெளிவந்தன.

எருதுகள் கட்டப்பட்ட வண்டியில் பெரிய போர் முரசு வந்தது.

அரண்மனை வாசலில் முதல் எருது நிறுத்தி வைக்கப்பட்டது. அதைப் பார்ப்பதற்கு ஜனங்கள் முண்டியடித்துக் கொண்டு நெருங்கினார்கள்.

மஞ்சள் கொடியில் நீல நிறத்தில் எழுதப்பட்டிருந்த புலிச்சின்னம் வெகுதூரம் வரை தெரிந்தது. அரண்மனை வாசலை மறைத்தது. மறுபடியும் எக்காளங்கள் முழங்க, முதல் எருது நகர்ந்தது. அடுத்தபடி உள்ள எருதுகள் நகர்ந்து வந்தன. வண்டியின் மீது வந்த பெருமுரசை வேகமாக ஒருவன் அடிக்க 'தம் தம் தம்' என்று அதனுடைய ஒலி எல்லோர் நெஞ்சிலும் அடித்தது. சுவரில் மோதி பலமாய் திரும்பியது.

எக்காளம் ஊதுபவர்கள் கோட்டை உச்சியிலிருந்து கீழே இறங்கினார்கள். கோட்டைச் சுவரின் உட்புறத்தில் அமர்ந்திருந்த பறை அடிப்பவர்கள் எழுந்தார்கள். எழுபத்தியிரண்டு பறை அடிக்கும் கலைஞர்கள் எழுந்து மிக உக்கிரமாகவும், ஆடிக் கொண்டும், எகிறிக் கொண்டும் பறை அடித்தார்கள். பறைசத்தம் எல்லோரையும் துள்ள வைத்தது. பறை அடிப்பவர்கள் வெளியேற, கொடியேந்திய குதிரை வீரர்கள் நான்கு பேராக அணிவகுத்து வந்தார்கள். அவர்களும் எழுபதுக்குக் குறையாமல் இருந்தார்கள். அதற்குப் பிறகு குதிரையில் வில்லும், வாளும், ஈட்டியும் தரித்து, முதுல் கேடயம் மாட்டி, தலைப்பாகை இறுக்கக்கட்டி, காலில் தோல் செருப்பு அணிந்து, நெஞ்சில் ருத்ராட்ச மாலை கிடக்க நெற்றியில் நீறு பூசி சோழதேசத்துப்படை கம்பீரமாய் வந்தது.

சோழதேசத்துப்படையின் முதலாக வந்த உபசேனாதிபதி கழுத்தில் ஆத்தி மாலை அணிந்திருந்தார். கூட்டம் பரவசமாகி உரக்கக் கத்தியது. ''சோழம். சோழம்...'' என்று அலறியது. அந்த வீரர்கள் முறைப்பான பார்வையுடன் ஒரே சீராகக் குதிரையைச் செலுத்திக் கொடியசைய குதிரைகளுக்குப் பின்னே போனார்கள். பிறகு, யானைகள் எழுபது வந்தன. எல்லா யானைகளுக்கும் மேலே துணி போர்த்தி, அதன்மீது மேலும் கம்பி வலைகள் பொருத்தி, அதன் மீது மேலும் ஒரு துணி போர்த்தி, யானைமீது அம்பாரி இறுக்கக்கட்டி, அம்பாரியின் மீது மூன்று வீரர்களும் யானையின்

முதுகுக்குப்பின்னே இரண்டு இளைஞர்களும் மத்தகச் சரிவில் ஒரு பாகனுமாய் வெளியே வந்தார்கள்.

யானையில் மட்டும் நிறைய ஆயுதங்கள் அடுக்கப் பட்டிருந்தன.

ஊர் எல்லையில் யானைகளுக்கு மது கொடுக்கப்படும். அம்பாரி முழுவதும் ஆயுதங்கள் அடுக்கப்படும். மிருதுவான நடையில் எந்த யானையும் போகாது. முழு வேகத்தில் ஆறு குறுக்கிட்டாலும் வேகமாக இறங்கி கரையேறி நகரத்துத் தெருக்களில் பூதம்போல ஓடும்.

முதல் யானை பெண் யானையாக, ஆனால் நன்கு முதிர்ந்த யானையாக இருந்தது. அதன் தந்தங்களில் தங்கங்கள், மணிகள், மாட்டப்பட்டிருந்தன. யானை கழுத்தில் ஒரு வெங்கலமணி மாட்டப்பட்டிருந்தது. தந்தத்திற்குக் கவசம் போடப்பட்டிருந்தது. யானையின் பின்புறமுள்ள வீரர்கள் கூட்டம் பார்த்துக் கையசைத்தார்கள். மக்கள் அதற்கு ஆரவாரமாக எதிரொலித்தார்கள்.

யானைக்குப் பிறகு சிறுதேர்ப்படை வந்தது. எல்லா குதிரை களிலும் நீண்ட மூங்கிலில் புலிக்கொடி பறந்தது. வில்லும், அம்பும் வைத்துக் கொண்டிருந்த வீரர்கள் அந்தக் குதிரைகளை மிக லாவக மாய்ச் செலுத்தி வந்தார்கள். அதையும் நான்கு நான்காகப் பிரித்து செலுத்தி வந்தார்கள்.

வினோதமான சத்தத்துடன் உருளுகின்ற தேர்ச் சக்கரங்களையும், சட்டையும், வேட்டியும் அணிந்து, இடுப்பில் கயிறு போட்டு இறுக்கி, தலையில் பச்சை நிறத் தலைப்பாகையோடு அந்த வீரர்கள் கனைக்கின்ற குதிரைகள் மீது வெளிவந்தபோது ஜனங்கள் மகிழ்ச்சி யில் குதித்தார்கள். இரண்டு நாட்களில் இவர்கள் மேலைச்சாளுக் கியம் போய் விடுவார்கள் என்று ஒருவர் பரவசமாகச் சொன்னார். அப்படியா... அப்படியா... என்று மற்றவர் கேட்க, தானே ஒருமுறை ஓட்டிப்போனதாகக் கூற, விவரம் தெரிந்தவர் யாரோ, அவர் தலையில் பட்டென்று அடித்து பேசாதே என்று சொன்னார். அவர் அடக்கிக் கொண்டார்.

''ஏனய்யா உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்களேன். மேலைச் சாளுக்கியத்திற்கு இந்த குதிரைப்படை எப்போது போய்ச் சேரும்.'' என்று கேட்க, ''பத்து நாட்கள் ஆகும்'' என்று விவரமானவர் அமைதியாகப் பதில் சொன்னார்.

ஜனங்கள் அவருக்கு எல்லாம் தெரியும் என்று ஏற்றுக் கொண்டார்கள். பிறகு அழுத்தமான கறுப்பில் சட்டையும், தலைப் பாகையும், கையுறைகளும், காலில் வளைந்த கறுப்புச் செருப்பும், கறுப்புக் குதிரைகளும் கொண்ட அரசின் மெய்க்காவல் படை வந்தது. எல்லோர் சட்டையிலும், முதுகிலும் புலி வரையப் பட்டிருந்தது.

இந்த வீரர்கள் இதுவரை போன வீரர்களையெல்லாம்விட கடுமையாக இருந்தார்கள்.

''ப்பா... ராட்சசர்கள் போல இருக்கிறார்கள்'' என்று ஒரு பெண்மணி பயத்தோடும் கூச்சலோடும் சொன்னாள்.

''வீரர்கள் பூங்கொடி போலவா இருக்க முடியும்'' என்று வேறொருவர் கேட்க, அவள் வாயைப் பொத்திக் கொண்டாள். மெய்க்காவல் வீரர்கள் நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் ஐந்தைந்து பேராகக் கடந்தார்கள். பிறகு தனி யானையில் பெரிய புலிக்கொடி வந்தது. அதன் பிறகு இடைவெளிவிட்டு உயரமான பட்டத்து யானை முகபடாமோடு வருவது தெரிந்தது.

அது அரசருடைய யானை. ஜனங்கள் பெரிதாய் ஆரவாரித் தார்கள். துணிகள் வீசப்பட்டன. எல்லோரும் ''சோழம்... சோழம்...'' என்று கத்தினார்கள்.

சிம்மாசனம் போன்ற அமைப்பில் நடுநாயகமாக சக்ரவர்த்தி மேல்துண்டும் வெள்ளை வேட்டியும், மார்பில் முத்து மாலை களும், நவரத்ன மாலைகளும், தங்க மாலையும் அசைந்தாட கம்பீரமாக உட்கார்ந்து வந்தார். அவர் தலையில் சிகப்புத் தலைப் பாகை இருந்தது. அந்தத் தலைப்பாகையில் ரத்தினங்கள் ஜொலித்தன. கால்களில் வீரக்கழல்கள் இருந்தன. கோட்டையைத் தாண்டி வெளியே வந்த ஜனங்களைப் பார்த்ததும் அவர் காலூன்றி எழுந்து நின்றார்.

யானையை அசையாமல் நிற்க வைத்தார்கள்.

அவர் ஜனங்களைப் பிரியத்தோடு பார்த்தார். கை உயர்த்தினார். மறுபடியும் ஜனங்கள் ஆரவாரம் செய்தார்கள்.

''பிரியமுள்ள ஜனங்களே. என் சோழதேசத்துக் கண்மணிகளே. நம்முடைய சகோதர நாடான கங்கதேசத்தை உள்ளே நுழைந்து பாழ்படுத்தியும், நம்முடைய சம்மந்தி நாடான கீழைச்சாளுக்கியத் திற்கு விதம்விதமான தொந்தரவுகள் கொடுத்தும், குடமலை

நாட்டுக் காடுகளை எரித்தும், நுளம்பபாடி, தடிகைபாடி கிராமங் களில் ஜனங்களைத் துன்புறுத்தியும், சோழதேசத்தை இழித்தும், பழித்தும் பேசி, சோழ தேசத்து சக்ரவர்த்தியாகிய என்னை பரதேசி என்றும் உடம்பில் சாம்பல் பூசித் திரின்ற பைத்தியக்காரன் என்றும், உலகத்திலேயே மிக உயரமான அந்தப்புரம் கட்டுகிறேன் என்றும் கேலி செய்து கொண்டிருக்கின்ற சத்யாசிரியனுடைய மமதையை அடக்கி, மேலைச்சாளுக்கியத்தினுடைய பொக்கிஷங்களைக் கைப்பற்றி, இனிமேல் தலையெடுக்க வொட்டாது இங்கு மீண்டும் வருவேன். அதுவரை என் சோழ தேசத்துக் கண்மணிகளே... அமைதியாகவும், உறுதியாகவும் கவனமாகவும் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

எனக்கு விடைகொடுங்கள். சோழ தேசத்தின் வெற்றிக்காக பிரார்த்தனை செய்யுங்கள். வெற்றியோடு திரும்பி வந்து உங்களைச் சந்திக்கிறேன் என்று உரத்த குரலில் சொல்ல, அதுவரை சிறு அசைவுகூட இல்லாத கூட்டம் மறுபடியும் பெரிதாய் ஓ..ஹாரம் செய்தது. பெண்கள் குலவையிட்டார்கள். கோட்டை மீது இருந்த சிறு முரசுகள் முழங்கின. அரசருடைய தனித்த எக்காளம் உரத்து ஒலித்தது.

அரசர் அமர்ந்துகொள்ள அரசருக்குப் பின்னால் நின்றபடி இரண்டு மெய்க்காவல் வீரர்கள் சாமரம் வீசிப் போனார்கள். மக்கள் அதற்குப் பின்னே போக முயற்சி செய்ய, மெய்க்காவல் வீரர்கள் சட்டென்று அரசரைச் சுற்றிக் கொண்டார்கள். ஜனங்களை விலக்கினார்கள். ஊர்வலம் வடக்கு நோக்கி நிதானமாக நகர்ந்தது. அரசரும் நகர்ந்தார்.

திருமகள் போலப் பெருநிலப் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்
முரட்டொழில் சிங்களர் ஈழ மண்டலமும்
இரட்டப்பாடி ஏழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்
திண்திறன் வென்றித் தண்டாற்கொண்டதன்
எழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்

தொழுதக விளங்கும் யாண்டே
செழியரைத் தேசுகொள் ஸ்ரீகோ இராசகேசரி
வர்மரான இராசராச தேவர் வாழ்க வாழ்க.''

என்று மெய்க்கீர்த்தியை உரத்துச் சொல்லிக்கொண்டு, ஒரு மெய்க்காவல் வீரன் கொடியை உயர்த்திப் பிடித்தவாறு போனான்.

கூட்டத்தினரும் அந்த மெய்க்கீர்த்தியை உரக்கச் சொன்னார்கள். அரசர் கையசைத்துக்கொண்டே ஜனங்களை உற்றுப் பார்த்துக் கொண்டே போனார்.

அவர் முகம் தெளிவாக இருந்தது. களையாக இருந்தது. வீரலட்சுமியின் இன்னொரு உருவம் சோழமன்னர் என்று ஒரு முதியவர் அரற்றினார். சிவச் சின்னங்கள் தரித்த திருமால் போல என் கண்ணுக்குப் படுகிறார் என்று இன்னொருவர் சொன்னார்.

இவர் பைரவர். சிவனின் அம்சம். விரிந்த நெஞ்சுப் படம். குறுகிய இடுப்பு. விரல்களைப் பார்த்தாயா எவ்வளவு நீளம். ராஜலட்சணம் அத்தனையும் இருக்கிறது.

அந்தக் கண்களில்தான் எத்தனை கவர்ச்சி. உற்றுப் பார்த்தால் வாயடைத்துப் போய் விடுகிறதே. சோழ மன்னர் வெற்றி பெறட்டும். தேவி... நிசும்பசூதனி எங்கள் மன்னருக்குத் துணையாக் நீயும் சென்று வா என்று ஒருவர் உரத்து வேண்டினார்.

யானைகளின் அசைவைப் பார்த்துவிட்டு நகரத்து நாய்கள் உரத்துக் கத்தின. இளைஞர்கள் பலர் அந்த நாய்களைக் கல்லெறிந்து அப்புறப்படுத்தினார்கள். கூட்டத்தின் ஆரவாரத்தையும், சில வண்டிகளின் சத்தத்தையும் கேட்டுவிட்டு குழந்தைகள் அழுதன. அது அபசகுனம் என்று தாய்மார்கள் குழந்தைகளின் வாயைப் பொத்தினார்கள். அரசர் கடந்ததும் சில பெண்கள் விசும்பத் துவங்க, பெரியவர்கள் உம். இதென்ன அழுகை நிறுத்து என்று அதட்டினார்கள். குலவை போடு என்று கட்டளையிட்டார்கள். இன்னும் யார் வருகிறார்கள் பார் என்று ஒரு பெண்மணி அழும் பெண்மணியைத் திசை திருப்பினாள்.

கட்டியக்காரர்கள் வந்து நின்று கொண்டார்கள். அடுத்த படியாக யானை வந்தது. அரசரின் அன்பு மனைவி, அவரை விட்டு எந்நேரமும் பிரியாத வாழ்க்கைத் துணைவி சோழர் குலத்துப் பொற்கொடி, பழுவூர் நங்கை, பழுவேட்டரையரின் மகளான பஞ்சவன்மாதேவி, ஜெய்விஜயீபவ... என்று கட்டியக்காரர்கள் உரக்கக் கத்தினார்கள்.

ஜனங்களும் எதிரொலித்தார்கள். சிவந்த உடைகளோடும், உச்சியில் முடிந்த கொண்டையோடும். கழுத்தில் ஒட்டிய ஒரு தங்க நகை, ஒரு ஹாரம், ஒரு முத்துமாலை, கைகளில் வளையல்கள், தோளில் ஒரு பக்கமாகப் போர்த்தப்பட்ட சால்வை, இடுப்பில் பட்டையான தோல் வாரில் கட்டப்பட்ட குறுங்கத்தி இவையோடும் சிம்மாசனத்தில் அமர்ந்தபடி பஞ்சவன் மாதேவி வர, சிம்மாசனத் தின் பின்னே இரண்டு அதிகாரிகள் வேல் பிடித்துக் கொண்டு நின்றார்கள்.

பஞ்சவன் மாதேவி ஜனங்களைப் பார்த்து கையசைக்க, மறுபடியும் குலவை ஒலி உக்ரமாய் எழுந்தது. பெண்கள் பஞ்சவன் மாதேவிக்காகக் கூடுதலாய் குலவை ஒலி எழுப்பினார்கள்.

சோழதேசத்து சேனாதிபதி கிருஷ்ணன்ராமனான மும்முடிச் சோழர் பிரம்மராயர் ஜெய் விஜயீபவ என்று மெய்க்கீர்த்தியார்கள் உரக்கக் கத்த, முதுகுக்குப் பின்னே நீண்ட கத்தியைத் தரித்து, வெறும் மார்போடும், இடப்பக்கம் சால்வையோடும், வெள்ளை வேட்டி யோடும், கழுத்து நிறைய துளசி மாலைகளோடும், ஸ்படிக மாலை களோடும், நெற்றியில் சந்தனக் கீற்றோடும். கிருஷ்ணன்ராமன் ஜனங்களைப் பார்த்து ஒரு முறை கையசைத்தார். அவர் முகத்தில் கவலையிருந்தது.

பஞ்சவன்மாதேவியைத் தாண்டி அரசருக்கருகே போக வேண்டு மென்று வேகப்பட்டார். அவர் பார்வை முன்னே போகின்ற சக்ரவர்த்தி இராஜராஜத்தேவர் மீதே இருந்தது. அடுத்தது ஒரு ஆண்யானை வந்தது. அதில் வருபவரைப் பார்த்துவிட்டு ஜனங்கள் இன்னும் உற்சாகமானார்கள். துணிகளை மேலே விசிறினார்கள்.

பெரும் மீசையோடு பழுவேட்டரையர் அதில் நின்றிருந்தார். ஜனங்களைப் பார்த்து முஷ்டியை உயர்த்தினார்.

கொஞ்சம் சப்பை மூக்கும், விசித்திர உதடுமாக ஒரு சேனாதிபதி குதிரையில் வர அவரைத் தெரிந்து கொண்டு மக்கள் கூச்சலிட் டார்கள்.

குடமலை நாட்டு சிற்றரசர், குடகு தேசத்து வீரர் க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்று இராஜராஜரால் பட்டம் சூட்டப் பட்ட மனிஜா என்கிற இராஜேந்திர சோழருக்கு அடங்கிய குறுநில மன்னர், படையின் மூன்றாம் சேனாதிபதி வாழ்க... வாழ்க... என்று சொல்ல, அவன் ஜனங்களை நோக்கி கொடியை அசைத்தான்.

ஜனங்கள் ஆரவாரம் செய்தார்கள். மலைப்பகுதியில் போரிட இவரைப்போல் யாரும் இல்லை என்கிறார்கள். இவருடைய படை எண்பதாயிரம் வீரர்கள் குடமலை நாட்டிலிருந்து இந்நேரம் கங்கதேசத்தின் நடுமையத்திற்குப் போயிருப்பார்கள்.

அவரின் மெய்க்காவல் வீரர்கள் தோலால் செய்யப்பட்ட தலைக்கவசமும், பழுப்பு நிற மேல் அங்கியும் அணிந்திருந்தார்கள். இடுப்பு வேட்டி பச்சை நிறத்தில் இருந்தது. தோல் பின்னலால் செருப்பு கட்டியிருந்தார்கள். எல்லோர் கையிலும் ஏதோ கொம்பு களிலிருந்து சீவப்பட்ட வளையம் இருந்தது. கேயூரங்கள் வெயிலில் மின்னின. மெய்க்காவல் வீரர்கள் சிறுவிழிகளோடும், மெல்லிய உடம்போடும் சற்று உயரமாகவும், விசித்திரமான உதட்டோடும் இருந்தார்கள்.

அடுத்தது புலிக்கொடியோடு ஒரு சிறு குதிரைப்படை வந்தது.

தஞ்சாவூர்க்கூற்றத்து காருகுடி தலைவர் சீட்புலி நாட்டையும், பாகி நாட்டையும் ஒரு தனி ஒருவராய் கைப்பற்றியவர். பரமன் மழபாடியான மும்முடிச்சோழர் சக்ரவர்த்தி இராஜராஜரின் படைத் தலைவரில் நான்காமவர் வாழ்க... வாழ்க... என்று கத்த, ஜனங் களும் எதிரொலித்தார்கள். பரமன் மழபாடியை எல்லோருக்கும் தெரியும். குடந்தையைத் தலைமையிடமாகக் கொண்டு தஞ்சைக் கும், குடந்தைக்கும் இடையிலுள்ள பகுதியை மிகச்சீராக நிர்வகித்து வந்தவர். மறவர்களின் நண்பர். வீரர்களுக்குப் பயிற்சி அளிப்பதில் வல்லவர். ஐம்பது வயது ஆனாலும் இளைஞர் போல் கட்டுடல் மிக்கவர்.

சோழமண்டலத்து இராஜேந்திர சிங்க வளநாட்டு பொய்கை நாட்டுத் தலைவர். கிழவர் ஆதித்தன் சூரியனாகிய தென்னவன் மூவேந்த வேளாளன் வாழ்க வாழ்க என்று சொல்ல, அறுபது வயது மதிக்கத்தக்க பெரிய மீசையும், மார்பின் குறுக்கே இரும்புச் சங்கிலியும், ஒரு சேனாதிபதி இடக்கையில் கேடயமும், வலக் கையில் உருவிய வாளுமாய் சிவந்த விழிகளோடும், நடுங்குகின்ற உடம்போடும், முகத்தில் கோபத்தோடும் நாலாபக்கமும் வேண்டு மென்றே குதிரையை அலையவிட்டுக் கொண்டும் வெளியே வந்தார்.

மக்கள் பின் வாங்கினார்கள். நெற்றியில் மிகப் பட்டையாகத் திருநீறு குழைத்து இடப்பட்டிருந்தது. மார்பு முழுவதும் விபூதி பூசப்பட்டிருந்தது. சந்தனம் மணந்தது.

ஜனங்கள் கைகூப்பி வணங்கினார்கள். அவர் ஆசீர்வாதம் போல் கை உயர்த்திச் சகலரையும் ஆசீர்வதித்து விட்டு குதிரையை வேகமாகச் செலுத்தினார்.

பாண்டிய நாட்டு திருக்காணப் போர்க் கூற்றத்துப் பாளூரின் தலைவன். அரவணையான் மாலரி கேசவர் வாழ்க... வாழ்க... என்று சொல்ல, நெற்றியில் நாமம் தரித்து, சற்று பருத்த உடம்போடு மிகப்பெரிய கேயூரங்களோடு, மார்பு முழுக்க தங்க அணி கலன்களோடு, ஒதுக்கப்பட்ட மீசையோடு, அடர்த்தியான புருவத் தோடு இடுப்பில் சிகப்புநிற வேட்டியும், தோளில் சிகப்பு நிற சால்வையும் போர்த்தி, கைகளிலும், கால்களிலும் கழல்களோடு அலங்கார பூஷிதராய் ஒரு சேனாதிபதி வர, ஜனங்கள் அவரைப் பார்த்து வாழ்க... வாழ்க என்று கோஷமிட்டார்கள். அவர் கைகூப்பி வணங்கினார். இரண்டு புறமும் பார்த்தார். குதிரையை வேகமாகச் செலுத்தினார்.

சேனாதிபதி குரவன் ''உலகளந்தானான இராஜராஜமாராயன் வாழ்க... வாழ்க'' என்று சொல்ல சிறு தேரில் கொடிகள் அசைய இராஜராஜ மாராயர் தன் சிறு வண்டியைத் தானே ஓட்டி வந்தார்.

அந்தக் குதிரை வண்டி வந்து நின்றது. வீரர்களைப் பார்த்து கையசைக்க, வீரர்கள் நகர்ந்துகொள்ள அவரை மக்கள் சூழ்ந்து கொண்டார்கள். ஏதோ செய்தி சொல்ல விரும்புகிறார் என்பதை மக்கள் புரிந்து கொண்டார்கள்.

''இந்த மேலைச்சாளுக்கியப் படையெடுப்பில் நான் போக வில்லை. நான் வல்லக்கோட்டையிலும், தஞ்சைக் கோயிலிலும், குடந்தையிலும், பழையாறையிலும் மாறி மாறி இருப்பேன். உங்களுக்கு என்ன குறை இருப்பினும் நான் போகின்ற வழியில் மறித்து உங்கள் குறைகளை எனக்குச் சொல்லலாம். அரசர் வரும் வரை இந்த சோழதேசத்துப் பொறுப்பை குந்தவை நாச்சியும், வல்லவரையர் வந்தியத்தேவரும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். குஞ்சரமல்லர் பணிக்கு இடையில் இடையூறு செய்யாமல் இருப் பதே நம்முடைய முக்கியமான கட்டளை என்று அரசர் கட்டளை யிட்டிருக்கிறார்.

எனவே, சிற்பிகளுக்கும், சிற்பிகளைச் சார்ந்த வீரர்களுக்கும் முதல் உரிமை கொடுத்து அவர்களை மரியாதையாக நடத்துங்கள். குறைகள் எதுவாயினும் எப்போது வேண்டுமானாலும் என்னை அணுகிச் சொல்லலாம். கிராமங்களில் தவறான மனிதர்கள்

நடமாட்டம் இருப்பின், உடனே அவர்களைப் பிடித்து வைத்து தஞ்சைக்கு அனுப்புங்கள். இது போர்க்காலம். எனவே விழிப்பாக இருங்கள். மனிதர்களுக்குள் பிரச்சினைகளை ஏற்படுத்திப் பெரிதாய் சண்டையை எவரேனும் ஆரம்பித்தால், நான் கடுமையாகத் தண்டிப்பேன். இந்த அணிவகுப்பு என்னோடு முடிந்தது.

பெரும் படைகள் காவிரிக்கரையில் அரசரோடு சேர்ந்து கொள்ளும்.

மேலைச்சாளுக்கியத்திற்குப் போகவேண்டிய படையை நீங்கள் கவனிக்க வேண்டுமெனில், கங்கதேசத்து சித்ர துர்காவிற்கு வந்தால் தான் முடியும். ஆனால், எவரும் இந்தப் படைகளைப் பின் தொடர வேண்டாம். இம்முறை காலாட்படைகள் இல்லை. எனவே, படைகள் மிக விரைவாக மேலைச்சாளுக்கியம் போய்விடும். ஏழு நாள் என்பது ஒரு கணக்கு. ஆனால், அதற்கு முன்னரே துங்கபத்ரை ஆற்றை நெருங்கி விடுவோம் என்பது எங்களுடைய எண்ணம். அரசர் வெற்றியோடு திரும்ப எல்லாவிதப் பிரார்த்தனையும் செய்யுங்கள். இது முக்கியம். நான் இப்போது பேசியதை எல்லா கிராமங்களுக்கும் எடுத்துச் சொல்லுங்கள். இந்த தேசத்தில் அமைதி முக்கியம். அது என் வேண்டுகோள். இது என் கட்டளை.''

உரத்த குரலில் சொல்லி குதிரையைச் சொடுக்க வண்டி கடகடத்துக் கிளம்பியது. ஜனங்கள் மெல்லக் கலைந்தார்கள்.

''அடேய்... இங்கு வா. நாம் வயல்வெளிகளூடே நடந்து அவரைப் பின் தொடர்ந்து, அரசரைத் தாண்டி காவிரிக் கரைக்குப் போய்விடுவோம். அங்கு பெரும் படை கிளம்புறதாமே, அதை வேடிக்கை பார்ப்போம்.''

தஞ்சை நகரத்து இளைஞர்களும், மத்திம வயதவர்களும் ஆர்வப்பட்டார்கள். பெண்களை விட்டுவிட்டு அவர்கள் மட்டும் ஓட்டமும், நடையுமாக வயல்வெளிகளூடே காவிரிக்கரை நோக்கி விரைந்தார்கள்.

கரந்தையிலும், பள்ளி அக்ரஹாரத்திலும், அதைத் தாண்டிய சிறுசிறு கிராமத்திலும் ஆற்றங்கரை ஓரமாகப் பெரும்படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

அந்தப் பகுதியிலிருந்த கருமார்கள் கடைசி நேரத்துக் கூர்மையை ஆயுதங்களுக்குச் செய்து கொண்டிருந்தார்கள். நன்கு கூர்மையாக்க, சொரசொரப்பான கல்லில் தேய்த்துக் கொண்டிருந்தார்கள்.

இட்டமாதிரிக் கல்லை சுழலும் ராட்டினத்தில் ஆயுதத்தைப் பொருத்தி இன்னும் அதிகக் கூர்மையாக்கிக் கொண்டிருந்தார்கள். வாழை மரங் களை நட்டு வைத்து, அதை வெட்டிக் கூர்மையைப் பரிசோதித்துக் கொண்டார்கள். ஆயுதங்களைப் பாறையில் வைக்கவேண்டாம் என்று சொல்லி, வீரர்களிடம் ஆயுதங்களைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு கொடுத்தார்கள். வீரர்களும் அதை கண்ணில் ஒற்றிக் கொண்டு வாங்கினார்கள்.

கருமார்களுக்குக் காசு கொடுக்க வீரர்கள் முன் வந்தபோது கருமார்கள் வாங்கிக்கொள்ளவில்லை.

''எங்களுக்கு அரசாங்கம் கொடுக்கிறதய்யா. சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் அள்ளி அள்ளிக் கொடுக்கிறார். இன்னும் அள்ளிக் கொடுப்பார்'' என்று மிகக் கம்பீரமாகவும், கொஞ்சம் அதிகமான அலட்டலுமாகவே கருமார்கள் பேசினார்கள்.

கருமார்களின் பெண்கள் தண்ணீர் குடம் ஏந்தி முன்னும், பின்னும் அலைந்து கொண்டிருந்தார்கள். பெரிய தொட்டிகளில் நீர் நிரப்பிக் கொண்டிருந்தார்கள். கிராமங்களிலும், நகரங்களிலும் சுட்ட எண் ணெய்களை மலிவான விலைக்கு வாங்கி, அவற்றை ஒரு தொட்டி யில் சேமித்து வைத்து, அடிவண்டல் எள் எண்ணெயை வாங்கிக் கொண்டு வந்து அதைத் தொட்டியில் கவிழ்த்தார்கள்.

இரும்பு ஜல்லடையில் போட்ட அம்பின் நுனிகள் பழுக்கக் காய்ச்சி ஆயிரம் ஆயிரமாய் அந்த எண்ணெயில் இறக்கப்பட்டன. இறக்கப்பட்ட போது பெருத்த வெடியோசையோடு புகை கக்கி எண்ணெய் நாலாபக்கமும் தெறித்தது. எனவே, எண்ணெய் மேலே படாமல் இருக்க ஏற்றத்தை உபயோகப்படுத்தினார்கள். ஏற்றத்தின் நுனி நெருப்புப் பக்கம் வந்து தலை சாய்த்தது. நீண்ட கம்பிகளில் தொங்கவிடப்பட்டிருந்த இரும்புப் பாத்திரங்களை அதில் வேகமாக மாட்டினார்கள். ஏற்றம் அப்படியே நிமிர்ந்து எதிர்ப்பக்கம் நகர்ந்து மறுபடியும் தாழ்ந்து எண்ணெய்க்குள் இறங்கியது. அதை வேடிக்கை பார்க்க கிராமங்களிலிருந்து பலபேர் வந்திருந்தார்கள்.

தஞ்சையிலிருந்து திபுதிபுவென்று ஜனங்கள் வருவதைப் பார்த்த தும் என்ன, எது என்று கேட்காமல், அவர்களும் அந்த ஜனங்களின் பின்னே ஓடினார்கள். போர் என்று வந்துவிட்டால் உட்கார்ந்து வேலை செய்வது கருமார்கள் மட்டுமே. மற்றவர்களெல்லாம் இங்கேயும், அங்கேயும் ஓடிக் கொண்டுதான் இருப்பார்கள்.

கருமார்கள் மட்டுமே ஓட முடியாது என்று பெருங்கிழவர் சொல்ல, மற்ற கருமார்கள் உரக்கச் சிரித்தார்கள். அது வீரர்களுக்கு வலித்தது.

எண்ணெயில் குளித்த அம்பின் நுனிகள் எடுத்து தரையில் கொட்டப்பட்டன. சூடு அடங்கும் வண்ணம் பெண்கள் அதில் நீரூற்றினார்கள். மறுபடியும் வெண்புகை எழுந்தது. பிரம்பு நுனியில் அம்பைச் சொருகினார்கள்.

அம்பின் அடிப்பகுதியில் வேகமாகக் கோழியின் சிறகுகளை ஒருவன் சொருகினான்.

கருமார் இருந்த இடத்திலிருந்து சற்றுத் தொலைவில் கூடைகூடையாகக் கோழிச் சிறகுகள், காக்கைச் சிறகுகள் இருந்தன. பத்து மூட்டைகளுக்கு ஒரு பொன் கிடைத்தது. எதிரும், புதிருமாய் சிறகுகள் சொருகியதும் அப்படிச் சொருகியவனே வில் வளைத்து ஒரு அம்பை மரம் நோக்கி அடித்தான். அம்பு சீறிக் கொண்டு போய் மரக்கிளையைத் தகர்த்தது. கீழே வந்து விழுந்தது. எல்லோரும் கை தட்டினார்கள். அவனுக்கு வேறொரு அம்பு தரப்பட்டது. அந்த அம்பின் நுனியில் பழைய துணிகள் சுற்றப் பட்டிருந்தன. தூய்மையான எஃகு அதில் இல்லாமல் இருந்தது. பிரம்பு நுனியில் கொண்டை போல இறுக்கமாகச் சுற்றப்பட்டிருந்த, அந்த அம்பின் நுனியை எண்ணெயில் தோய்த்துக்கொண்டான். வில்லில் தொடுத் தான். எண்ணெயில் தோய்க்கப்பட்ட அந்த அம்பை அவர்கள் பற்ற வைத்தார்கள். இப்பொழுது கொழுந்து விட்டு அந்த அம்பின் நுனி எரிந்தது. அவன் வளைத்து அம்பைவிட, நெருப்பு இருண்ட புகையைக் கக்கிக் கொண்டு உயரே போய் அருகிலுள்ள வைக்கோல் போரில் விழுந்தது. வைக்கோல் போரை ஆழத் தைக்க சற்றுநேரம் அமைதியாக இருக்க வைக்கோல் போர் புகைந்து திகுதிகுவென எரியத் துவங்கியது.

அவர்கள் எல்லோரும் ஆனந்தக் கூச்சலிட்டார்கள். அம்பு எய்தியவனைப் பாராட்டினார்கள். அவன் பல்வேறு அம்புகள் எடுத்து பல்வேறு இலக்குகளைச் சொல்லி அடித்தான். இளைஞர் களும், சிறுவர்களும் எகிறிக் குதித்தார்கள். அந்த இளைஞர்களில் பலபேர் உடைவாள் வைத்திருந்தார்கள். எல்லோரும் போருக்குப் போகவேண்டுமென்ற ஆசையில் இருந்தார்கள்.

''ஆனால், அவர்கள் சிறியவர்களாக இருந்தபடியால், அவர்களைப் போருக்கு அழைத்துப் போகவில்லை. நாமாகப் போனால் என்ன என்று பலபேர் பேசிக் கொண்டார்கள். ஆனால்,

ஒருவேளை மாட்டிக் கொண்டால் நிச்சயமாகப் பிரம்படி விழும். உணவு ஒரு பிரச்சினை. போர் நோக்கிப் போகும்போது குறிப்பிட்ட அளவுதான் உணவு எடுத்துக்கொண்டு போக வேண்டியிருக்கும். வீரர்களுக்கே அது சரியாக இருக்கும். நமக்குச் சோறு போட வேண்டுமென்றால், அது அதிகாரிகளுக்குச் சிரமம்தானே. நம்மைக் கோபமாகத் துரத்துவார்கள். அதுவும் தவிர இந்த கிராமங்களை, சோழதேசத்தை, நம்மைத்தவிர வேறு யார் காப்பாற்றுவார்கள் என்றெல்லாம் அவர்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

வில்லோடும் எஃகும், இறகும் பொதிந்த அம்போடும் அந்த வில்லாளி நகர, அவர் பின்னே நகர்ந்தார்கள்.

''என்ன செய்யப் போகிறீர்கள்.'' என்று கேட்டார்கள்.

அவன் காவிரியாற்றின் கரையில் வேகமாக ஓடி நீரில் மிதந்து போகின்ற பானையை அடித்து உடைத்தான். எதிர்ப்பக்கமாக ஓடி மிதந்து வரும் இன்னொரு பானையைத் தூளாக்கினான்.

''இவ்வளவு திறமையாக அம்பு எய்கிறீர்கள். நீங்கள் ஏன் போருக்குப் போகவில்லை.''

''எங்கள் ஊரிலுள்ளவர்கள் யாரையாவது கரித்துக் கொட்ட வேண்டும் என்ற ஆவலுள்ளவர்கள், என்னைக் கரித்துக் கொட்டு கிறார்கள். அதனால் நான் போருக்குப் போகவில்லை.''

''என்னாயிற்று...'' என்று அந்த இளைஞன் கேள்வி கேட்க, அவன் பதில் சொல்லவில்லை. ஆனால் அந்த இளைஞர்கள் விசாரித்து விவரம் தெரிந்து கொண்டார்கள்.

அந்த வீரர் பெயர் காரிப்பெருங்கணை, திருக்கோவிலூருக்கு அருகேயுள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்தவன், மறவர் குலத்தைச் சேர்ந்த அவன், அவன் இனப் பெண்ணை மணமுடித்து குழந்தைகள் பெற்ற பிறகு, ஒரு பஞ்சமப் பெண்ணோடு சேர்ந்து வாழ்ந்ததால், அவனை அவன் குடும்பத்தினரும், அவன் குடும்பத்தினரை ஊரும் தள்ளி வைத்து விட்டது. அவன் கோபமடைந்து தன் சொத்துக்களை விற்று, பெருந்தொகையை அந்தப் பஞ்சமப் பெண் குடும்பத்திற்குக் கொடுத்துவிட்டு வெளியேறி விட்டான். அதற்குப் பிறகு அவன் திருக்கோவிலூருக்குப் போகவில்லை. தஞ்சையின் எல்லையி லேயே சுற்றி வந்தான்.

தனிப்பட்ட முறையில் குதிரை வீரர்களுக்குக் குதிரையில் நின்ற வாறு அம்பு எய்துவதற்குப் பயிற்சி கொடுத்து வந்தான். அதற்குக்

காசு வசூலித்து, அந்தக் காசில் நல்லபடியாகவே வாழ்ந்து வந்தான். பரத்தையர் வீட்டு வாசலில் குடித்து விட்டு பாடிக் கொண்டிருப்பான் எனவும், அப்பொழுது போய் எது கேட்டாலும் கொடுத்து விடுவான் என்றும் சொன்னார்கள்.

குதிரைகளை மாற்றிக்கொண்டே இருப்பான் என்றும், குதிரை களை நன்கு பழக்கி, பிறகு விற்று விடுவான் என்றும் சொன்னார்கள். இதற்காகவே முரட்டுக் குதிரைகளை அவனிடம் விட்டுவிட்டு வந்தார்கள். அதற்கு அவன் நன்கு காசு வசூலித்தான்.

திருக்கோவிலூரிலிருந்து சிலர் அவனை வரச்சொல்லி அழைத்த தற்கு மிகக் கடுமையான வார்த்தைகளைச் சொன்னதாகவும், திருக்கோவிலூருக்கு அருகேயுள்ள அந்த ஊர் மயானமாகும் என்று சபித்ததாகவும் இளைஞர்கள் தெரிந்து கொண்டார்கள். ஊரைப்பற்றி மட்டுமே பேசாமல் மற்ற விஷயங்கள் பற்றி மட்டும் பேச குதூகல மாக இளைஞர்களுக்குப் பல்வேறு விஷயங்களை விளக்கினான். அதற்கு முன் அவன் மேலைச்சாளுக்கியம் போயிருப்பதாகவும் தெரிந்தது. பாலாறு வழியாகவும் பிறகு காவிரியைக் கடந்து, அதற்குப் பிறகு துங்கபத்ரையை நோக்கி நடந்து விடுவதுதான் மிகச் சுருக்கமான வழி என்றும், அரசர் குடமலை நாட்டு வழியாகப் போகக்கூடும் என்றும் சொன்னான். பரதகண்டம் எப்படி இருக்கும் என்பதையும் இளைஞர்களுக்கு விளக்கினான்.

''நான் நூறுமா நிலத்தோடு வாழ்ந்தவனடா. நான்கு வீடுகளுடை யவன். எனக்குத் தலைவனாக இருக்க வெகு சிலருக்கே தகுதியுண்டு. ஒரு உபசேனாதிபதியிடம் கட்டுப்பட்டு என்னால் இருக்க முடியாது.'' என்று அவன் மறுத்து விடுவானாம்.

''ஒழுக்கமாக இருக்கலாமே. ஏன் குடித்துவிட்டுப் பாடு கிறீர்கள்.'' என்று ஊர் மக்கள் கேட்டபோது,'' மிக உயர்ந்த மானமே போய்விட்ட பிறகு, ஒழுக்கம் போனால் என்ன? இருந்தால் என்ன? மனைவியே என்னை வேண்டாம் என்று சொன்ன பிறகு, என் குழந்தைகளே என்னைப் புறக்கணித்த பிறகு, நான் எப்படி வாழவேண்டும் என்பதை யார் சொல்வது. நான் சேர்ந்த பஞ்சமப் பெண் மிக புத்திசாலி. உயர்ந்த லட்சியங்கள் கொண்டவள். நானும், அவளும் ஊர் விட்டு மேற்கே வெகுதூரம் ஓடிப்போய், அங்குள்ள கடலில் மரக்கலம் ஏறி, யவனர்கள் நாட்டுக்குப் போய், யவனரு டைய மதத்தைத் தழுவிடலாம் என்று நினைத்துக் கொண்டிருந் தோம்.

ஏனெனில் யவனர்களிடம் ஜாதி வெறி இல்லை. கண்டபடி கடவுள் வழிபாடு இல்லை. ஆனால் என் ஊர் மக்கள், என் உற வினர்கள் பஞ்சமப் பெண்ணைச் சூழ்ந்து கொண்டு, அவள் கையில் விஷப் பாத்திரம் கொடுத்து குடித்துத் தற்கொலை செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். அடித்துத் துன்புறுத்தினார்கள். அவள் யவனருடைய கடவுள் பெயரைச் சொல்லி குடித்து இறந்து விட்டாள். அவள் இறந்த பிறகு ஒருநாள் கனவு வந்தது.

தற்கொலை செய்து கொண்டவர்கள் சிறிது காலம் பூமியில் பேயாய் அலைவார்களாம். பேயாய் அலையும் காலம் சில வரு டங்கள் என்று அவள் எனக்குச் சொன்னாள். அவள் நல்ல நிலைக்குப் போகும் வரை நான் உயிரோடு இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அதனாலேயே நான் உயிரோடு இருக்கிறேன். இல்லை யெனில் நானும் இறந்து போயிருப்பேன்'' என்று சொன்னான். வருத்தப்பட்டு பல இளைஞர்கள் அவனை அதிகம் ஆதரித்தார்கள்.

பல குடும்பங்களிலிருந்து அவனுக்கு உணவு கொண்டு போய் கொடுப்பார்கள். வீட்டில் ஏவல், பில்லி, சூனியம், பேய், பிசாசு இருந்தால், அவன் குணப்படுத்துவானாம். வீட்டிற்கெதிரே குதிரை யில் ஏறி நின்று கூரையில் பளிச்சென்று அம்பு செலுத்துவானாம். அம்பு செலுத்திய பிறகு அந்த வீட்டில் ஒரு கெடுதலும் நடக்காதாம். இதற்கு அந்தப் பஞ்சமப் பெண் காரணம் என்பானாம். அவன் யோகியா, மறவனா, குடிகாரனா, ஆச்சார்யனா என்று புரியாமல் ஒரு கலவையாக இருந்தான்.

பெரிய சிகையைக் குடுமி மாதிரி முடிந்து தலைப்பாகை ஏதுமில்லாமல் ஒரு சிகப்பு நிற மலர்செருகி கழுத்தில் பவழ மாலை அணிந்து, வெறும் மார்பும், இடுப்பில் சிறு வேட்டியும், அதன் மீது இறுக்கிய துண்டும், வெறும் காலும், மார்பில் குறுக்கே ஓடும் தோற்பட்டையும் அதில் தொங்கும் அம்புறா தூணியும், இரும்புப் பூண் போட்ட மூங்கில் வில்லும், வலக்காலில் வெள்ளியிலான வீரக்கழலும் தோளில் கட்டுவாசிகளால் குத்தப்பட்ட கேயூரம் போன்ற வடிவமைப்பும், நெஞ்சில் கிளிப் பச்சையும் குத்தி கம்பீரமாக நடந்து போனான். பின்னால் இளை ஞர்கள் ஓடினார்கள். கூட்டம் அவர்களைத் தாண்டி காவிரிக் கரைக்கு ஓடியது.

இவ்வளவு வேகமாகப் போய் என்ன செய்யப் போகிறார்கள். அங்கு அமர்ந்துதான் இருக்கப் போகிறார்கள்.

அரசர் உச்சிவெயில் தாழும்போதுதான் மறுபடியும் கிளம்புகிறார் என்று எல்லாம் தெரிந்தது போல் காரிப்பெருங் கணை சொன்னான்.

இளைஞர்கள் தொடர்ந்து அவனைக் கேள்வி கேட்டுக் கொண்டு வந்தார்கள்.

காரிப்பெருங்கணை சொன்னது போல அரசர் மக்களிடம் விடைபெற்றுக் கொண்டு நிதானமாக வந்தார். உச்சிப்பொழுதில் காவிரி ஆற்றங்கரையில் திருவையாறு தென்கரையிலுள்ள அரண் மனையில் யானையிலிருந்து இறங்கினார். கடைசி நேரத்து உத்தரவு களை சேனாபதி உலகளந்த இராசராசமாராயனிடம் தெரிவித்தார். ஒரு ஓலையில் குறித்துக் கொண்டார்.

திருமந்திர ஓலை எழுதும் காராயில் எடுத்த பாதம் என்ற அதிகாரியை அழைத்து கோலரம்மா (கோலார்) என்ற பகுதியில் அதிகாரியாக இருக்கும் ஈராயிரம் பல்லவரையருக்கும், விமலாதித் தனுக்கும் மேல்பாடி, நுளம்ப பாடி, கங்கபாடி, பெரும்பானப்படி அதிகாரிகளுக்கும் ஓலை எழுதினார். எந்தத் தேதியில் எங்கு சந்திக்க வேண்டும், தாமதமானால் எவ்வளவு நாள் காத்திருக்க வேண்டும் என்பதெல்லாம் விவரித்தார். அந்த ஓலையை யார் எடுத்துக் கொண்டு போவது என்பதை விசாரித்து மனதில் இருத்திக் கொண் டார். ஓலை எடுத்துப் போகின்றவரை உற்றுப் பார்த்து, தடவிக் கொடுத்து, வாழ்த்துச்சொல்லி அனுப்பினார். உணவு உட்கொண் டார். கண்கள் மூடி பஞ்சணையில் சாய்ந்தவாறு படுத்திருந்தார்.

பஞ்சவன்மாதேவி அருகே வந்து கால் பிடித்துவிடத் துவங்கினாள். எதுவும் பேசக்கூடாத நேரம் இது என்பது பஞ்சவன் மாதேவிக்குப் புரிந்தது.

காரிப்பெருங்கணை காவிரியின் தென்கரையில் நின்றபடி வடகரையிலுள்ள இடங்களை அம்பால் அடித்து தகர்த்துக் கொண்டிருந்தான். தென்கரையில் ஓடும் குதிரைகளைப் பார்த்து மிரண்டு கத்துகின்ற நாய்களை அவன் அம்பு அடித்து விரட்டியது.

தென்கரையிலுள்ள இளைஞர்கள் பனை ஓலையில் வராகப்படம் எழுதி உயரத் தூக்கிப் பிடிக்க, மேலைச்சாளுக்கியச் சின்னமான அதைத் தென் கரையிலிருந்தபடியே நான்கு அம்புகளால் காரிப் பெருங் கணக்காரி சிதறடித்தான். கூட்டம் ஆரவாரித்தது.

கோமாளியைச் சுற்றி மக்கள் இருப்பது போல, அவனைச் சுற்றி எப்பொழுதும் ஆட்கள் இருந்தனர்.

ஓய்விலிருந்த அரசர் எழுந்தார். நீராடினார். தலை துவட்டினார். அகிற்புகை போடப்பட்டது.

திருநீறு தரித்து, சந்தனம் தடவி, உணவு உண்ண உட்கார்ந்தார். எப்பொழுதும் ஆழ்ந்த யோசனையிலேயே இருந்தார். அவரைச் சுற்றியுள்ளவர்கள் அமைதியாக இருந்தார்கள். அதிகம் ஓசை எழுப்பாமல் மிருதுவாக வேலை செய்தார்கள்.

திருவையாறு அதிகாரிகள் காத்திருப்பதாகச் சொன்னதும், அரசர் கூடத்திற்கு வந்து அமர்ந்தார். திருவையாறு அதிகாரிகள் வந்து நின்று வெற்றிக்கு வாழ்த்துத் தெரிவித்தார்கள். அரசர் மெல்லிய புன்சிரிப்போடு அதை ஏற்றுக் கொண்டார்.

கீழே பொற்காசுகள் வைத்து நீட்டினார்கள். அதைத் தொட்டு விட்டு திருப்பிக் கொடுத்தார்.

''நாட்டின் நலப்பணிகளுக்காக இதை வைத்துக் கொள்ளுங்கள். காவிரிக்கரையில் கல்லாலான பாலம் கட்ட முடியுமா என்று யோசித்து வையுங்கள். உயரமான பாலம் கூட வேண்டாம். ஆற்று மணலிலிருந்து ஒரு கோல் உயரமுள்ள பாலம்போல் கயிறு கட்டி தாண்டும் வண்ணமாகச் செய்துவிடலாம். தேர்கள் போக நலமாக இருக்கும். தேர்கள் மணலில் போகாது. எனவே, எல்லாப் பாலங் களும் தரைப் பாலங்களாகக் கட்டப்பட வேண்டியது முக்கியம்'' என்று சொன்னார்.

நீங்கள் திரும்பி வருவதற்குள் காவிரியில் நிச்சயமாக ஒரு தரைப்பாலம் இருக்குமென்று அதிகாரிகள் வாக்குறுதி கொடுத் தார்கள். அரசர் சந்தோஷமானார். விடைபெற்றார். வாசலுக்கு வந்தார்.

ஜனங்கள் பெருங்கூச்சல் போட்டார்கள். ஆரவாரித்தார்கள்.

அரசருடைய யானை வந்து நின்றது. அரசர் யானையைப் பின்னே போகச் சொல்லிவிட்டு குதிரையைக் கொண்டு வரச் சொன்னார். யானை நகர்ந்து, குதிரை வர சற்று தாமதமாகியது. மக்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அரசர் பஞ்சவன்மாதேவியை அருகே வரச் சொன்னார்.

நான் இவளையும் மேலைச்சாளுக்கியம் அழைத்துப் போகிறேன் என்று சைகையால் மக்களிடம் சொல்ல பஞ்சவன் மாதேவி மெல்லியதாய் வெட்கப்பட்டாள். கூட்டம் மறுபடியும் ஆரவா ரித்தது.

அரசருக்கருகே பஞ்சவன்மாதேவியின் குதிரையும் வந்து நின்றது.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் ஜனங்களை நோக்கி கையசைத்துவிட்டுப் படிகளில் இறங்கி, படிகளுக்கு அருகே நிற்க வைக்கப்பட்டிருந்த குதிரையில் தாவி ஏறினார்.

பஞ்சவன் மாதேவிக்கு முக்காலி போடப்பட்டது. முக்காலி யில் கால்வைத்து பஞ்சவன்மாதேவியும் சட்டென்று குதிரையில் ஏறினாள். குதிரைகள் இரண்டும் துள்ளின. காவிரிக்கரை நோக்கி நடந்தன.

காவிரியில் இடுப்பளவு ஆழம் நீர் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. ஓரத்தில் தண்ணீர் சற்றுத் தேங்கி மிருதுவாகப் போயிற்று.

ஜனங்கள் வழிவிட அரசர் கரையிறங்கினார். கரை ஈரமாக இருந்தது. குதிரையின் குளம்படிகள் மணலில் அழுத்தமாகப் பதிந் தன. மெய்க்காவல் வீரர்கள் ஜனங்களை இன்னும் விலக்கினார்கள்.

காரிப்பெருங்கணை சட்டென்று கூட்டத்தைச்சுற்றி ஆற்றில் இறங்கி நீரின் வழியே அரசரை நோக்கி நடந்தான்.

அவன் குடுமி இப்போது விரித்து வைக்கப்பட்டு அந்த நீண்ட முடியின் நுனி ஒரு மெல்லிய மூங்கிலில் பிணைக்கப்பட்டிருந்தது. மூங்கில் பிரம்பை அவன் இடக்கையில் பிடித்திருந்தான். அவன் வல்க்கையில் கூர்மை தீட்டப்பட்ட பெரிய வாள் பளபளத்திருந்தது. அரசரை நோக்கி நகர்ந்த போது மெய்க்காவல் வீரர்கள் அவனைத் தடுத்தார்கள்.

அவன் 'நவகண்டம்' என்று உரக்கச் சொன்னான்.

அவர்கள் அவனை உற்றுப் பார்த்தார்கள். மெல்லப் பின்வாங் கினார்கள். அவன் கணுக்கால் அளவுக்கு மெல்லியதாய் நீர் தேங்கிச் சுழன்று, நடு ஆற்றுக்கு நகருன்ற இடத்தில் நின்று கொண்டான். வாளை உயர்த்திப் பிடித்து, ''சோழம். சோழம்... சோழம்...'' என்று கத்தினான். அவனுக்கும், சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவருக்கும் இடையே நான்கு குதிரை இடைவெளி இருந்தது. வலக்கையில் இருந்த மூங்கிலை நீரில் அழுத்திக் குத்தினான். அது முழங்கை ஆழத்திற்குப் போய் செருகிக் கொண்டது.

அவன் மண்டியிட்டான். அவன் குடுமி இப்பொழுது உயர்த்தப் பட்டு அந்த மூங்கிலோடு நின்றது. அவன் குனிந்தான். மூங்கில்

வளைந்தது. இன்னும் குனிந்தான். மூங்கில் வளைந்தது. இன்னும் குனிய, அவன் மூக்கு நீரைத் தொட்டுக்கொண்டு நின்றது. மூங்கில் நன்றாக வளைந்து அவன் முடியை இறுக்கப் பிடித்துக் கொண்டிருந்தது. அவன் அந்த வளைவைப் பார்த்துவிட்டு நிமிர்ந்தான். அரசரைப் பார்த்தான். சிரித்தான். அரசர் ''வேண்டாம்... வேண்டாம்...'' என்று உரக்கக் கை நீட்டி தடுத்தார்.

பஞ்சவன்மாதேவி திகிலோடு அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் வாளை உயரப் பிடித்தான். ''சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் மேலைச் சாளுக்கியத்திலிருந்து மறுபடியும் தஞ்சைக்கு வந்து பெருங்கோயில் கட்டி, பெரும் புகழோடு வாழ்வதற்காகவும், சோழ தேசத்தின் கீர்த்திக்காகவும் இந்த காரிப்பெருங்கணை நவகண்டம் கொடுக் கிறான்... நவகண்டம் கொடுக்கிறான்... நவகண்டம் கொடுக் கிறான்.'' என்று உரக்கச் சொல்லி குனிந்த முகம் நீரில் பட இருக்க, அவன் வலக்கை சரக்கென்று வாளை எடுத்து வேகமாகச் சுழற்றி கழுத்தில் அடித்துக் கொண்டது.

அந்த வெட்டு மிகச்சரியாக, மிகப்பலமாக அவன் பின்னங் கழுத்தில் விழுந்தது. கழுத்து துண்டாயிற்று. மூங்கில் பளிச்சென்று குடுமியோடு அவன் தலையைப் பற்றி இழுத்து நிமிர்ந்து நாலாபுறமும் ஆடியது. எல்லாப் பக்கங்களும் ரத்தம் தெறித்தது. மக்கள் மீதும் தெறித்தது. ஒரேயொரு பொட்டு ரத்தம் அரசரின் முகவாயில் விழுந்தது. சதையோடு கூடிய ஒரு சிறிய ரத்தப் பகுதி பஞ்சவன்மாதேவியின் வலத்தோளில் விழுந்தது. பஞ்சவன் மாதேவி அலறினாள்.

மண்டியிட்டிருந்த அவன் உடல் அப்படியே நிற்க, அவன் வலக் கையிலிருந்த வாள் கீழே விழுந்தது. தலையில்லாத அவன் முண்டம் கைகூப்பி அரசரைப் பார்த்து நின்றது. தலை மூங்கிலில் ஆடிக் கொண்டிருந்தது முண்டம் அப்படியே அரசரைப் பார்த்திருக்க, சிறிதுநேரம் பொறுத்து மெல்ல கிழக்குப் பக்கமாக இடப்புறம் சரிந்து விழுந்தது. காரிப் பெருங்கணைக்கு வீரர்களுக்கே உண்டான சொர்க்கவாசல் திறந்தது.

கூட்டம் அலறிற்று. மெய்க்காவல் படைவீரர்கள் வேல் ஊன்றி மண்டியிட்டார்கள். நிலம் தொட்டு நெற்றியில் வைத்துக் கொண் டார்கள். பல பெண்கள் மார்பில் அடித்துக்கொண்டு அழுதார்கள். பல ஆண்கள் வாயைப் பொத்திக் கொண்டார்கள். இளைஞர்கள்

திடுக்கிட்டுப் போய் பார்த்தார்கள். அவன் தலை, அவன் உடம்பு நீரில் மெல்ல புரண்டு காவிரிக்கு உள்பக்கம் இழுத்துப் போகப்பட, ஓடிப்போய் சில இளைஞர்கள் அதைத் தடுத்தார்கள். குருதி ஆற்றோடு கலந்து வெகு வேகமாக நடுமையத்திற்குப் போய் மெல்லிய செந்நிறமாக மாறியது.

அரசர் வலக்கையை நெஞ்சில் வைத்துக்கொண்டு தலைகுனிந்து இருந்தார்.

இப்படி நவகண்டம் கொடுப்பது அவருக்குப் பிடிப்பதில்லை. ஆனால், இப்படிக் கொடுப்பது சோழ தேசத்தில் வழக்கம்தான். இது ஒரு நல்ல சகுனம்தான். ஆனால் இதற்காக ஒரு வீரன் பலியாக வேண்டுமா?

அவர் வேதனைப்பட்டார். நிமிர்ந்து ''யாரது?'' என்று கேட்டார்.

காரிப்பெருங்கணை பற்றி வேகமாகப் பலதும் சொன்னார்கள்.

''இக்கரையில் பெருந்தூண் எழுப்பி அவனுடைய உருவம் பொறித்து அவன் நமக்காக நவகண்டம் கொடுத்ததைக் கல்லில் அடித்துவையுங்கள். நான் திரும்பி வரும் போது அதற்குத் துங்கபத்ரா நதியால் அபிஷேகம் செய்கிறேன்'' என்றுசொன்னார். மெல்ல நகர்ந்து குதிரையோடு அவன் அருகே போனார்.

மூங்கில் கொம்பில் தொங்கிக் கொண்டிருந்த அவன் தலையைப் பற்றி எடுத்துப் பார்த்தார். முகத்தோடு முகம் வைத்துக் கொண்டார். அதை விட்டுவிட்டு ஆற்றில் இறங்கி மெல்ல வடக்கு நோக்கி நகர்ந்தார். அவருடைய பெரும்படை ஆரவாரத்தோடு ஆற்றில் இறங்கியது.

## 156

அவளுக்குப் பெயர் புகழி. அவள் குடும்பமும், சோழ தேசமும் புகழின் உச்சியிலிருந்த போது அவள் பிறந்ததால், அவளுக்குப் புகழி என்று பெயரிட்டிருந்தார்கள்.

அவள் ஆடி மாதம் சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தாள். அவளு டைய களத்திராதிபதி செவ்வாய் தோஷம்டைந்து இருப்பதால், அவளுக்கு விதவைத் தோஷம் உண்டு என்று ஜோசியர்கள் சொல்லி யிருந்தார்கள். அவள் வீடு இதனால் கலக்கமுற்று இருந்தது. இவளைத் திருமணம் செய்வதால் யாரோ ஒருவன் இறப்பா

னெனில், இவளுக்குத் திருமணம் செய்ய வேண்டிய அவசிய மென்ன என்றும்கூட யோசித்தது.

புகழிக்கும் அந்த எண்ணம் வந்து போகும். எதற்குத் திருமணம் என்ற வேதனை உள்ளே புரளும். அதே நேரம் அவள் வயது ஒத்த இளம் பெண்கள். அவளை விட இளவயது சிறுமிகள் திருமணமாகி இவர்தான் புருஷன்.. இவர்தான் புருஷன் என்று அலையும்போதும் உள்ளுக்குள் ஏக்கம் பிடுங்கித் தின்னும்.

''இதெல்லாம் வெளியே சொல்லிக் கொண்டிருப்பார்களா? மறைத்துத் திருமணம் செய்தால் என்ன'' என்று உறவினர்கள் சொல்ல, சற்றுத் தொலைவில் தொண்டை நாட்டிலுள்ள ஒரு இளைஞனுக்கு அவளைப் பெண் பார்க்க ஏற்பாடு செய்து, பெண் பார்க்க வந்து போனார்கள். பெண் பார்த்துவிட்டுத் திரும்பிப் போய் செய்தி சொல்கிறோம் என்று சொன்னவர்கள் எதுவும் சொல்லவே யில்லை.

என்ன என்று விசாரிக்கப் போகும்போது, பெண்பார்க்க வந்த பையன் சறுக்கி விழுந்து தலையில் அடிபட்டு சுயநினைவு இல்லாமல் இருக்கிறான் என்ற செய்தி வந்தது.

அவள் வீடு ஆடிப்போயிற்று. அவள் திருமணம் பற்றி மேற் கொண்டு எதுவும் சொல்லாமல் தலைவிதியே என்று அமர்ந் திருந்தது. அந்த நேரம்தான் புகழியின் தாய்மாமன் அவளைவிட பதினைந்து வயது அதிகமுள்ளவன் அவளுக்கு மணமகன் தேடுகிறேன் என்று முன்வந்து நாலாபுறமும் அலைய, தலையில் அடிபட்டு நினைவின்றிக் கிடப்பவனைப்பற்றி, மற்ற உறவுகள் உரக்கச் சொல்லி அவன் முயற்சியைத் தடுக்க, அவன் அவர்களோடு கடும் சண்டைக்குப் போக, புகழியின் வீடு புகழியின் தாய்மாமனான குமரனைச் சமாதானப்படுத்தியது.

''அவள் பொருட்டு நீ துன்பப்படாதே. என்று அமைதிப் படுத்தியது.

புகழியின் தாய்மாமன் மருகினான். அவனும், அவள் மனைவியும் முயற்சி செய்ய, திருமணமான மத்திம வயதினர், கிழவயதினர் என்று பலபேர்கள் புகழியைத் திருமணம் செய்ய முன் வந்தனர். இளமையாக எவரும் இல்லையே என்று புகழியின் தாய்மாமனான குமரன் வருத்தப்பட்டான்.

அவளைச் சூல இலச்சினை இட்டு ஏதேனும் கோயிலுக்கு தேவரடியாராக அனுப்பிவிட்டு. அவள் வேறுவிதமான வாழ்க்கை

வாழட்டும் என்று ஒரு கிழ உறவினன் சொல்ல, மிகுந்த கோபத்தோடு அவனை நோக்கி கெட்ட வார்த்தையை குமரன் இரைத்தான். அவன் மனைவியும் வாய்கொள்ளாது திட்டித் தீர்த்தாள்.

அந்தக் கிழவன் சேனாபதி பதவியில் இருப்பவன். மிகுந்த கோபக்காரன். வாள் உருவி அவர்களைத் தாக்க வர, குமரனும் தன் வாள் உருவி அவனைத் தடுத்தான். ஆனால் அந்தக் கிழச் சேனாதிபதியின் படைவீரர்கள் சேனாபதியைத் தாக்க வந்ததாக குமரனைக் கைது செய்தார்கள்.

கிராமத்து சபையின் முன்பு நிறுத்தி குற்றம் சுமத்தினார்கள். கிராமத்து சபை அவனுடைய வழக்கை, ஊர் சபைக்கு மாற்றியது. ஊர் சபை கூடுவதற்கு பத்து நாளாயிற்று. அந்தப் பத்து நாளும் குமரன் சிறையில் இருந்தான். அவன் மனைவி துடித்தாள். என்னால் தானே இத்தனையும் என்று புகழி தலையிலடித்து அழுதாள். உணவு உட்கொள்ளாமல் துவண்டு கிடந்தாள். குமரன் ஒரு சிறிய கவிதை எழுதி, அமைதியாக இருக்கும்படியும், தன்னை ஊர் சபை புரிந்து கொண்டு விடுவிக்கும் என்றும் செய்தி சொன்னான்.

வீடு அமைதியாயிற்று.

இறைவனிடம் அவனுக்கு நல்லது ஏற்படுத்துமாறு வேண்டியது. குமரனின் மனைவி துவண்டிருக்க, புகழி அவளுக்குப் போய் உதவிகள் செய்தாள். உணவு தயாரித்தாள். உணவு பரிமாறினாள்.

இதைக் கேட்ட குமரன் நன்றியோடு அவளைப் பாராட்டினான்.

''எதற்காக சேனாபதியின் மீது கத்தி உருவினாய்.''

ஊர் சபை கேட்க, அவன் அழகாகவும் தெளிவாகவும் விவரித்தான்.

ஊர் சபை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டது.

குமரன் பேச்சில் வல்லவனாக இருந்தான். தெளிவாகவும், நிதானமாகவும் பேசினான். சேனாதிபதியின் ஆட்கள் கோபமாகவும், வீரமாகவும் பேச, சேனாதிபதி கொக்கரிக்க, ஊர்சபை சகலமும் குறித்துக் கொண்டது.

''உங்களுக்கு மகள் இருக்கிறாளா'' என்று சேனாதிபதியை நோக்கி சபையின் அங்கத்தினர் ஒருவர் கேட்டார்.

''இருக்கிறாள். நான்கு மகள்கள் இருக்கிறார்கள்.'' என்று நெஞ்சு நிமிர்த்தி அந்தச் சேனாதிபதி சொன்னான். ''அதில் இருவரை

கோயிலுக்கு நேர்ந்து விடுவீரா. தேவரடியாராக மாற்றுவீரா'' என்று கேட்க, அவன் தொடை தட்டிச் சீறியெழுந்தான்.

''அவ்வளவு கோபம் வருகிறதல்லவா. அந்தக் கோபம் குமரனுக்கு வரக்கூடாதா.'' என்று ஊர்சபை கேட்க, அந்தச் சேனாதிபதி தடுமாறினான். சற்று வேகமாகப் பேசினான்.

''சேனாதிபதியும், குதிரைப்படையில் சேர்ந்து வில்லேந்திவரும் வீரனும் ஒன்றா'' என்று விசாரித்தான்.

''படை வரிசையில் உனக்கு முன்னிலை இருக்கலாம். ஆனால், குடும்பம் என்றபோது எல்லோருடைய குடும்பமும் ஒன்றுதானே. உணர்வு என்றபோது எல்லோருடைய உணர்வும் ஒரேவிதம் தானே'' என்று சபை அவனுக்கு விளக்கிச்சொல்ல தலை குனிந்தான்.

''பதினாறு முறை கசையால் அடித்து பதிமூன்று நாட்கள் சிறையில் வைத்தது தவறு. இதற்காகப் பதினைந்து பொன் கழஞ்சுகள் அபராதம். ஒரு குலப்பெண்ணை தேவரடியாராக மாற்று என்று சொன்னது அயோக்கியத்தனம். இதற்காக இருபத்தைந்து கழஞ்சு அபராதம். அந்தக் குடும்பம்பட்ட கஷ்டத்திற்கு பத்துக் கழஞ்சு பொன் அபராதம் தரவேண்டும். எனவே, ஐம்பது கழஞ்சு பொன்னை உடனடியாக அபராதமாக சேனாதிபதி தரவேண்டும். இல்லையெனில் அவர் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு, ஏலத்தில் விடப்பட்டு அந்தக் காசு குமரனுக்குத் தரப்படும்.'' என்று தீர்ப்பளித்தது.

அரசரிடம் முறையீடு செய்வேன் என்று அவன் உரக்க எழுந்து கத்த, இப்போது வெகு நிச்சயமாய் அபராதம் இன்னும் அதிகமாகும். நீர் ஐநூறு பொன் கழஞ்சு அபராதம் கட்ட வேண்டியிருக்கும். அதற்காக நாங்கள் வாதாடுவோம் என்று சபை வேகமாக எழுந் திருக்க, அவன் அடங்கிப் போனான்.

அவன் படைவீரர்களோடுக் கூடிப் பேசினான். ஐம்பது கழஞ்சு அபராதத்தை அந்த இடத்திலேயே செலுத்தினான்.

அந்தப் பொன் கழஞ்சைக் குமரனிடம் சபை கொடுத்து.

சபை, குமரனுடைய வீட்டுப் பெண்களிடமும், புகழியிடமும், இனி ஏதேனும் குறையுண்டா'' என்று கேட்டது.

'சபை வாழ்க' என்று உரக்க புகழியின் குடும்பம் கூச்சலிட்டது. விழுந்து வணங்கியது. ஒருவேளை இந்தச் சேனாதிபதி வேறு ஏதேனும் தொந்தரவு செய்து விடக்கூடும் என்று தனக்குள்

பேசிக்கொண்டு, நடந்த விஷயத்தைச் சுருக்கமாய் ஓலையில் எழுதி பிரம்மராயருக்கு அனுப்பியது.

பிரம்மராயருக்கு ஓலை கிடைத்ததுமே சேனாதிபதியை மேல் பாடிக்கு குடிபெயரச் சொல்லி உத்தரவிட்டார். ஒருசிறுபடையுடன் அந்தச் சேனாபதி மேல்பாடிக்குத் தன் குடும்பத்தோடு குடிபெயர்ந் தான்.

அந்தக் காசில் புகழிக்கு நல்லவிதமாகத் திருமணம் செய்து வைப்பேன் என்று புகழியைவிட பதினைந்து வயது அதிகமான அவன் தாய் மாமன் சொல்ல, புகழி வேண்டாமென்று மறுத்தாள். நீங்களே என்னைத் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று அவன் காலைப் பிடித்துக் கொண்டாள்.

அவன் அவளை மெல்லத் தூக்கினான்.

இது முட்டாள்தனம். என் மனைவி அதற்குச் சம்மதிக்கமாட்டாள் என்று சொன்னான். அவன் மனைவி வெளியே வந்து, புகழி இது பற்றி என்னிடம் முன்பே கேட்க, நானும் யோசித்து சரியென்று சொல்லிவிட்டேன். நானும், புகழியும் கடந்த இரண்டு மாதங்களாக நெருங்கிப்பழகி வருகிறோம். புகழி நல்லவள். இனிமையானவள். என்னால் அவளோடு நன்கு பழக முடியும். நறுவிசாய் நாங்கள் குடித்தனம் செய்வோம் என்று சொல்ல, குமரன் முகமலர்ந்தான். நாணினான்.

குமரனின் மனைவி எதிரிலேயே புகழிக்கும், குமரனுக்கும் திருமணமாகியது. ஐம்பது பொன் கழஞ்சில் குடமுருட்டியின் அருகே நெல்வயலும், பெரிய வீடும் குமரன் வாங்கினான். குடிபெயர்ந்தான்.

புகழி தன் மூத்தாளோடும், கணவனோடும் குடித்தனம் செய்தாள். குழந்தை பெற்றாள்.

புகழி எப்போதும் புகழிதான். சிறப்பானவள்தான் என்று அவள் உறவுகள் கொண்டாடிற்று. அதற்குப் பிறகு ஆறு யுத்தங்கள் நடக்க, ஆறிலும் குமரன் கலந்துகொண்டு மிகுந்த வெற்றியோடு, நல்ல பொருள்களோடு திரும்பிவர, அவன் வயல்கள், மாடுகள் கன்றுகள் என்று பலதும் வாங்கினான்.

புகழியின் வருகையால் குமரனின் மூத்தார் குழந்தைகள் நல்லவிதமாய் வளர்க்கப்பட்டார்கள். படிக்க வைக்கப்பட்டார்கள்.

தஞ்சை என்கிற ஊர் வளர அவர்கள் வீடும் நன்கு வளர்ந்தது. படிப்பும், போர்ப் பயிற்சியுமாய் அந்த மறவர்குலத்து இளைஞர்கள் வளர்ந்தார்கள் சேரதேசத்து கடிகை போலவே சிதம்பரத்தின் கிழக்குப் பக்கம், பூம்புகார் கடற்கரையோரமாக இருந்த இன்னொரு சாலையில் மறக்குல இளைஞர்களுக்குப் போர்ப்பயிற்சி அளிக்கப் பட்டது. அதற்காகக் காசு செலவிடப்பட்டது.

பதினெட்டு வயதில் குமரனைத் திருமணம் செய்து கொண்ட புகழி, பதினைந்து வருடங்களுக்குப் பிறகும் செழுமையாக இருந்தாள். அவள் பதிமூன்று வயது மகனைப் போர்ப்பயிற்சிக்காகப் பூம்புகார் சாலைக்கு அனுப்பினாள். அந்தக் கிழக்குச் சாலையில் வர்மக்கலையும், மல்யுத்தமும் பழகினான். வில் பயிற்சி பெற ஆசைப்பட்டான். புகழி அவன் உயரம் கண்டும், அகலம் கண்டும், பணிவு கண்டும் பெருமைப்பட்டாள்.

கோடை நாட்களில் பயிற்சிகள் இருக்காது என்பதால், அவன் ஊருக்குத் திரும்பினான். தாய், தந்தையரோடு குதூகலமாய் இருந்தான். அவன் பெரிய தாயின் பிள்ளைகளோடு தன் அனுபவம் பற்றி பகிர்ந்து கொண்டான்.

வில்வித்தை சீராகக் கற்பதற்கு முன்பே சகோதரர்களிடமிருந்து வில்லை எடுக்கவும் வளைக்கவும், நாணேற்றவும், நாணை சுருதி பார்க்கவும், அம்பு தொடுக்கவும் கற்றுக் கொண்டான்.

அந்த இளைஞர்கள் எந்நேரமும் போர்ப்பயிற்சிகள் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த வீரர்களுக்கு விதம்விதமான மாமிச உணவும், கறந்த பாலும், ஆடைத்தயிரும் கொடுப்பதே அந்த வீட்டுப் பெண்களின் வேலையாக இருந்தது. இரவு நேரம் போர்க்கதைகள் பேசியும், வெளியூர் விஷயங்களை விவாதித்தும், அங்குள்ள ஜனங்களின் பழக்க வழக்கம் பற்றி விவாதித்தும் அவர்கள் பேசிக் கொண்டிருப்பார்கள்.

ஒருமுறை மேலைச்சாளுக்கியம் நோக்கி இராஜராஜர் போரிடப் போகிறார் என்று சொன்னபோது, வீட்டிலுள்ள அத்தனை இளைஞர்களுமே தொடை தட்டி எழுந்தார்கள்.

புகழியின் பையன் பதிமூன்று வயது சிறுவன். அவனும் யுத்தத்திற்கு வருகிறேன் என்று தந்தையிடம் பேசியபோது தந்தை மறுத்தார். தாய்க்குத் துணையாக இரு என்றார்.

அவன் அடம்பிடித்தான். அழுதான்.

''உங்களை விட்டு ஓடிப்போய் உங்களுக்கு முன்பு நான் மேலைச்சாளுக்கியத்தில் இருப்பேன்.'' என்று உரத்த குரலில் சபதமிட்டான்.

புகழி அவனை ஆசுவாசப்படுத்தினாள்.

''இனி, அம்மாதிரி பேசாதே. அடக்கமாக இரு. திரும்பத் திரும்ப கேள். அவ்வளவு பெரிய படை போகிறபோது உனக்கொரு இடம் கிடைக்காதா. தந்தை அனுமதிக்கவில்லையெனில், நேரே போய் யாரேனும் சேனாதிபதியைப் பார். இல்லையெனில் பிரம்மராயர் வீட்டில் அருண்மொழிப்பட்டனுக்காக தவமிரு. அவர் படையில் சேர்ந்து விடு. அருண்மொழிப்பட்டர் அழைக்கிறார் என்றால் உன் தந்தை மறுப்பு சொல்லமுடியுமா? அதைவிட்டு விட்டு இப்படியெல்லாம் பேசாதே.'' என்று அதட்டினாள். அவன் புரிந்து கொண்டான்.

நேரே அருண்மொழிப்பட்டனிடம் ஓடினான். கை ஊன்றாமல் கரணம் அடித்துக் காட்டினான். மூங்கில் கழியை வெறுமே தரையில் நட்டு மடமடவென்று மேலே ஏறினான். சற்று நின்று உயர உற்றுப் பார்த்துவிட்டு சர்ரென்று கீழே இறங்கினான்.

''என்ன இதெல்லாம்.''

அருண்மொழிப்பட்டன் கேட்டார்.

''இப்படி உயர மூங்கில் கழியில் ஏறி எதிரிப் படை எங்கே வருகிறது என்று என்னால் சொல்ல முடியும். என்னால் கோட்டை கொத்தளம் ஏற முடியும். கயிறு வீசி கோட்டை உச்சிக்குப் போக முடியும். பாலம் தாண்ட முடியும். வில்லில் இன்னும் முறையான பயிற்சி இல்லை. ஆனாலும் வில்வித்தை என் சகோதரர்களிட மிருந்து கற்றுக் கொண்டேன். குதிரை ஓட்டம் தெரியும். மல்யுத்தம் தெரியும்.'' என்று சொல்ல, ''என்ன வேண்டுமென்று கேட்கிறாய்.'' என்று கேட்டார்.

''இந்தப் போருக்கு வரவேண்டும்.'' என்று சொல்ல, ''உன் தாய் அனுமதி கொடுத்தால் போதும். நான் போருக்கு உன்னை அழைத்துப் போய்விடுவேன். இதுகூட நீ சிறுவனாக இருக்கிறாய் என்பதால் தான் சொல்கிறேன்'' என்று சொல்ல, அவன் ஓடி வந்து புகழியிடம் சொல்ல, புகழி தன் கணவனிடம் கேட்க, குமரன் யோசித்துவிட்டு சரியென்று தலையசைக்க, புகழி ஓடிப்போய் ''தந்தையும் சரியென்றார். நானும் சரியென்கிறேன். என் மகனை உங்கள் உடைமையாக்குகிறேன்.'' என்று சொன்னாள்.

அருண்மொழிப்பட்டன் சிரித்தார்.

''அம்மா யாரும் யாருக்கும் உடைமையல்ல. எல்லாம் சிவனின் அடிமைகள்தான். இந்தப் போரில் எது, எப்படி நடக்குமென்று தெரியாது. போருக்கு அனுப்புகிறேன் என்று சொன்னாலே, உன் மகன் உன்வசம் இல்லை என்றுதான் அர்த்தம். எனவே நீ மறத்தி. அதற்குத் தயாராக அவனை நினைத்து வெற்றித் திலகமிட்டு என்னிடம் அனுப்பு'' என்று சொன்னார்.

புகழி மகனை நினைத்தும், கணவனை நினைத்தும் குலதெய்வமான நிகம்பசூதனிக்குப் படையலிட்டாள். அவன் கையிலிருந்த வாளை நெஞ்சில் சார்த்தி கண்மூடி நிசும்பசூதனியை வேண்டி, கண்ணில் ஒற்றிக் கொண்டு அவனிடம் கொடுத்தாள். அவன் நெற்றியில் திலகமிட்டாள், முத்தமிட்டாள். இறுக்கத் தழுவிக் கொண்டு என் மகனே... என் மகனே என்று கொஞ்சினாள். புருஷனிடம் போய் உங்கள் மகனைப் பாருங்கள் என்று சொன்னாள். அவளுடைய புருஷன் குமரன், மகனுக்கு மாலை அணிவித்தான். தலைப்பாகை கட்டிவிட்டான். வெற்றியோடு திரும்பி வா என்று கையில் கங்கணம் கட்டினான்.

அவனுடைய உறவுகள். பழைய வெள்ளிக் கொலுசை மறுபடி உருக்கி எடுத்து வீரக்கழல் செய்து அவன் காலில் கட்டினார்கள். அரைஞாணில் மந்திரித்த தாயத்துகள் கட்டினார்கள். அவனை வீட்டிலிருந்து ஊர்வலமாக அழைத்துப் போனார்கள். அருண்மொழிப் பட்டன் வீட்டு வாசலில் நின்றார்கள். அவன் திரும்பி தாய், தந்தையரை வணங்கிவிட்டு, அவர்களைச் சுற்றி வலம் வந்து மறுபடியும் விழுந்து வணங்கி கைகூப்பி விடைபெறுகிறேன் என்று நின்றான்.

புகழிக்கு உடம்பு துடித்தது. உதடு துடித்தது. கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது. தன் நெஞ்சில் போட்டு வளர்ந்த பிள்ளை, தான் பாலூட்டி சீராட்டிய பிள்ளை, தான் தலை தடவி முத்தமிட்ட பிள்ளை, தான் சோறுபிசைந்து ஊட்டிவிட்ட பிள்ளை தன்னை விட்டு விலகி நகர்ந்து போருக்குப் போகிறான். யுத்தமென்று போனால் மீண்டு வருவானா என்பது பெரிய கேள்விக்குறி. இது பெண்களின் மிகப்பெரிய வேதனை. பெற்ற பிள்ளையை, புருஷனைப் பிரிந்து தனியே அமர்ந்திருப்பது மிகப் பெரிய கொடுமை. ஆனால் வேறு வழியில்லை. அனுபவித்துத்தான் தீர வேண்டும். வெற்றி பெற்றுத் திரும்பினால் அது மிகப்பெரிய

கொண்டாட்டம். இன்னொரு படபடப்பு. அதையும் அனுபவித்துதான் ஆகவேண்டும்.

புகழி அவன் தலையில் கை வைத்து ஆசீர்வதித்து அனுப்பினாள். புருஷன் அருகே போய் மெல்ல அவன் நெஞ்சில் முகம் பதித்துக் கொண்டாள்.

புருஷன் அவளை இறுக்கிக் கொண்டாள். நிமிர்த்தி கன்னத்தில் முத்தமிட்டான். பிள்ளை நகர்ந்து போவதை இரண்டு பேரும் பார்த்தார்கள். பிள்ளை துள்ளிக் குதித்து வாள் உருவி ஓடிப்போய் அருண் மொழிப்பட்டன் காலடியில் சரக்கென்று வாள் குத்தி தலை நிமிர்த்தியது.

அருண்மொழிப்பட்டன் அவன் தோளைத் தடவி தூக்கி எழுப்பினார்.

''நீ ஒற்றன். ஒற்றன் படையைச் சேர்ந்தவன். மற்ற வீரர்களுடைய தர்மம் வேறு. உன்னுடைய தர்மம் வேறு. யுத்தம் வரும் முன்பே மேலைச்சாளுக்கியத்தை அடைந்துவிட வேண்டும். நமது படைகள் தொடும் முன்பே நீ போய்விட வேண்டும். மேலைச் சாளுக்கியத்தி னுடைய ஆட்டு இடையனாய் நீ மாறுவாய். போர் முடிந்த பிறகும் நீ அங்கு இருப்பதற்குத் தயார் செய்து கொள். நீ ஊர் திரும்ப மூன்று வருடமாகலாம். போ, போய் உன் தாய், தந்தையரிடம் இதைத் தெரிவி.'' என்று சொன்னார்.

அவரை வணங்கி, அவன் பின்னடைந்து வாள் சுழற்றி வேகமாக வந்து தந்தையின் முன்பு வாள் சொருகி நின்றான்.

அவன் தந்தை வியப்போடு பார்க்க, புகழியும் வியப்போடு புருஷனைப் பார்க்க அவன் எழுந்து நின்றான்.

''நான் ஒற்றர் படையில் சேர்ந்து விட்டேன். நான் ஊர் திரும்ப மூன்று வருடங்களாகலாம். போர் முடிந்த பிறகும் நான் அங்கு வாழ நேரலாம். இது அவர்களின் உத்தரவு. எனவே என்னைப்பற்றி எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் இருங்கள்.''

அவன் மீண்டும் விழுந்து மண்டியிட்டு வணங்கினான். புகழியின் வயிறு அசைந்தது. பிரண்டது. வாய்விட்டுக் கதறக் குரலெடுத்து, அழுத்திக் கொண்டாள். கண் மூடினாள். மனதை அடக்கித் தேற்றினாள்.

''போய் வா... போய் வா... போய் வா...'' என்று அவன் உடம்பு முழுவதும் தடவி முத்தமிட்டு விலகினாள்.

அவளுடைய புருஷன் அவனை இறுக்க அணைத்துக் கொண்டு மெல்ல விசும்பினான். முகம் நிமிர்த்தி கன்னங்களில் முத்தமிட்டான். போய் வா என்று சொன்னான். திரும்பி அந்தப் பிள்ளை குதித்து ஓடி அருண்மொழி காலில் பணிந்து அங்கிருந்து அருண்மொழியின் தோட்டத்திற்குள் புகுந்து மறைந்தது.

புகழி தள்ளாடினாள். தடுமாறினாள். புகழியின் இடுப்பைச் சுற்றி கை போட்டு அவள் புருஷன் குமரன் இறுக்கிக் கொண்டான்..

இதுதான் மறவர் வாழ்க்கை. ஒரு மறத்தி இதற்குத்தான் தயாராக இருக்க வேண்டும். பெற்ற பிள்ளையை, புருஷனை, தகப்பனை, தமையனை எப்போது வேண்டுமானாலும் இழக்க, ஒரு மறத்தி நெஞ்சுரம் கொண்டவளாக இருத்தல் வேண்டும்.

உலகில் வேறு எந்த இனத்திற்கும் இந்த வேதனை இல்லை. மறவரிடம் மட்டுமே உறவுகளை முழுவதாகப் பிரிய நேரிடுகிறது. மரணத்தை மறக்குலம் வரவேற்க எப்பொழுதும் தயாராகவே இருக்கிறது. அப்படி இருந்தால்தான் அது மறக்குலம். அப்படி இருந்தால் தான் அதனால் ஆள முடியும். ஆயிரம் பேரை ஆள வேண்டுமென்றால் ஒரு ஆள் மரணமடையத் தயாராக இருக்க வேண்டும். போர் என்பது வலி, வேதனை, அவமானம் நிறைந்தது. கத்திக்குத்தும் சவுக்கடிகளும் நிறைந்தது. ஆசை மனைவியை, அன்புப் பிள்ளையை இழந்து ஏதோ தேசத்தில், ஏதோ ஒரு புல் பரப்பில் வானம் பார்த்து கத்திக் குத்துபட்டு மெல்ல, மெல்ல மரணமடைய அவன் தயாராக இருக்க வேண்டும்.

இந்த வேதனை, வேறு எந்த இனத்திற்கும் எப்பொழுதும் வந்ததேயில்லை.

கால், அரைக்கால் நாழிகையில் புகழி தன்னை முற்றிலும் சரிசெய்து கொண்டு முகமலர்ச்சியோடு கம்பீரமாக வீடு நோக்கி நடந்தாள். உறவுகள் நிரம்பிய தெருவில் அவள் நடந்தபோது, சகலமும் கேள்விப்பட்ட அந்த மறக்குலம் வெளியே வந்து குலவை போட்டது. ஆண்கள் கைகூப்பி புகழியைப் பணிந்தார்கள். பெற்ற பிள்ளையைத் தேசத்திற்கு அர்ப்பணித்த பெண்மணியல்லவா... அவளை வணங்காமல் வேறு எந்தத் தெய்வத்தை வணங்குவது என்று வணங்கினார்கள்.

சோழ தேசத்தின் காவல் தெய்வம் நிசும்பசூதனி. நிசும்பசூதனியின் இன்னொரு வடிவம் புகழி. புகழியைப் போன்ற போர்க்குணம் மிக்க மறக்குலப் பெண்கள் இருந்தாலும், தன் ஒரே மகனை ஒற்றர்

படையில் சேர்த்து வீடு திரும்பிய புகழியின் பெருமை தஞ்சை யெங்கும் பரவியது. அடுத்த ஆறாம் நாள் அவள் புருஷனையும் போருக்கு அனுப்பத் தயாரானாள். அவளின் மூத்தார் பிள்ளைகள் மூன்று பேரும் தன் தாயாரையும், அவளையும் வணங்கி அவர்களிட மிருந்து பிரிவதற்குத் தயாரானார்கள். அந்த வீட்டிலிருந்து புகழியின் தந்தை உட்பட, புகழியின் மகன் உட்பட, புகழியின் கணவன் உட்பட, ஆறுபேர் வாள் ஏந்தி மேலைச்சாளுக்கியம் நோக்கி போரிட நகர்ந்தார்கள். அந்த வீடு ஆண்கள் துணையின்றி, ஆண்களைப் போன்ற நெஞ்சுரம் மிக்க பெண்களின் நெருப்பால் பிரகாசித்தது.

ஆறு போர்கள் வெற்றிகரமாக முடித்ததால் இந்த போரில் குமரனுக்கு உபசேனாதிபதி பதவி கொடுத்திருந்தார்கள். வெள்ளிக் கேயூரம் மாட்டப்பட்டிருந்தது. பல லட்சம் படைகள் நகர்ந்து போன பிறகு, பழுவேட்டரையர் படையில் ஒரு இருநூறு பேருக்குத் தலைவனாக அந்த உபசேனாதிபதி குமரன் தலைமை யேற்று நடத்திப் போக தயாராக இருந்தான். அவன் படைகளை நடத்திப் போகும் நேரம்வர, இன்னும் இரண்டு நாட்கள் ஆகும் என்பதாய் அவனுக்குத் தெரிந்தது.

புகழி அவனுக்கு அருகேயே இருந்தாள். தஞ்சையின் எல்லைப் புறத்தில் அவளும், அவள் உறவினர்களும் கை சோறு சமைத்து எடுத்துப் போனார்கள். வேறொரு மறவர் வீட்டிலிருந்தும் இவ்வித மாக விதம்விதமான உணவுகள் வந்தன. அப்படி மறவர் வீடு அருகே இல்லாதவருக்கு அந்த ஊரைச் சார்ந்தவர்கள் சோறு சமைத்துக் கொடுத்தார்கள். பிரியமாகப் பேசினார்கள். நிச்சயம் வெற்றி பெறு வோம் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தினார்கள். அரசரைப்பற்றி புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். பரம்பரை பரம்பரையாக சோழ வீரர்கள், அரசர்கள் என்னென்ன தியாகங்களைச் செய்தார்கள் என்று பேசிக் கொண்டார்கள். மேலைச்சாளுக்கியயத்தை வென்ற பிறகு என்ன செய்ய வேண்டும் என்றும் விவாதித்தார்கள்.

புருஷனுக்குச் சற்று தொலைவே உட்கார்ந்து கொண்டு புருஷன் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய புருஷன் குமரன் விவாதிப்பதில் வல்லவனாக இருந்தான். எது குறித்தும் தெளிவாக யோசித்தான். மற்றவர்கள் அவனிடம் போய் நின்று இதுபற்றி உன் அபிப்ராயம் என்ன? நீ என்ன நினைக்கிறாய் என்று கேட்டார்கள்.

இந்தக் கோயில் கட்டும் பணி அவசியம்தானா, இல்லையா என்றும் பேச்சு வந்தது.

இராஜேந்திர சோழரின் படைவீரர்கள் சிலர் இந்தக் கோயில் கட்டுவதைப் பற்றி சற்று இளக்காரமாகப் பேச, புகழியின் கணவன் குமரன் மிகத்தெளிவாக அவர்களுக்குப் பதில் சொன்னான்.

''காலம் என்பதை நீங்கள் வாழ்கின்ற காலம் என்று மட்டுமே பார்க்கிறீர்கள். காலம் என்பது எல்லைகள் இல்லாதது. நமது எல்லைகளுக்கு வெகு அப்பாற்பட்டது. நம்மால் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு அது பிரமாண்டமானது. நம் சக்ரவர்த்தி இராஜராஜர் நம்மை நிலை நிறுத்திக்கொள்ள பாடுபடுகிறார். அந்தக் கோயிலில் ஒவ்வொரு கல்லிலும் நாம் இருக்க வேண்டும். நமது சந்ததியினருக்கு நம்முடைய இருப்பை அங்கே கல் வைப்பதன் மூலம் காட்ட வேண்டும். நமது நாகரிகம் நமது திறமை, நமது போர் முறை எல்லாமும் அந்தக் கோயில் மூலமாக வெளியுலகுக்குத் தெரியவரும் என்பதற்காக இந்த மகத்தான பணியில் ஈடுபட்டிருக் கிறார்.

உலகத்தின் பல பாகங்களுக்கு இந்தக் கோயிலின் மேன்மை எடுத்துச் சொல்லப்படும். உலகத்தின் பல பாகத்திலிருந்தும் கோயிலை நோக்கி வருவார்கள். ஈழமும், கடாரமும் மட்டுமல்ல. இன்னும் தாண்டி, வெகுதூரம், வெகுதூரம் பனி படர்ந்த தேசங்களி லிருந்தெல்லாம் வருவார்கள். மான் தோலையும், கரடித் தோலை யுமே ஆடையாக அணிந்திருந்தவர்கள் இங்கு வந்து இந்தக் கட்டடக் கலையை வியப்பார்கள். எப்படி... எப்படி செய்ய முடிந்தது என்று தவிப்பார்கள். இது சாதாரணமே அல்ல. மிகப் பெரிய விஷயம். இதற்காக எத்தனை பேர் வேண்டுமானாலும் செத்துப் போகலாம். எதை வேண்டுமானாலும் இழக்கலாம். ஆனால் இந்தக் கோயிலை இழக்கக்கூடாது. இது கோயிலல்ல. நமது முகம். நமது வாழ்க்கை. நமது தர்மம். நீங்களும், நானும் மனைவி மக்களோடு நன்கு வாழ்ந்த தற்குண்டான அடையாளம்.'' உணர்ச்சிவசப்பட்டுச் சொலல, அந்த முன்னிரவில் சகலரும் அவனைச் சுற்றி அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

ஒரு பெரியவர் எழுந்து, ''குமரா என்ன அற்புதமாகப் பேசுகிறாய். எனக்குள் இருந்த இந்தக் கோயில் பற்றிய தவறான நினைப்பைத் துடைத்து எறிந்து விட்டாய்.

இது ஒருவரின் செயலல்ல. நீ நினைப்பது போல ஒரு மன்னரின் முயற்சியல்ல. இது நாம் எல்லோரும் செய்ய வேண்டிய கூட்டு முயற்சி. இதற்காகத்தான் இந்தப் போரும் நடைபெறுகிறது என்பதையும் நான் புரிந்து கொண்டேன்.''

குமரன் உடனே கைகூப்பினான்.

''ஆமாம் ஐயா. மனிதன் மனிதனைப் பற்றி பெருமையாக நினைத்துக் கொள்ள, சில விஷயங்கள் உலகில் உண்டு. அதில் ஒன்று வேதம்; இன்னொன்று கடவுள் வழிபாடு; இன்னொன்று கவிதை; இன்னொன்று இசை; இன்னொன்று நாட்டியம். அதே போல மனிதன் மனிதனைப் பெருமையாக நினைத்துக் கொள்கின்ற விஷயம், இதோ இந்தச் சிற்பக்கலை. இந்தக் கட்டடக்கலை.

சட்டென்று அமைதியாகி எல்லோரும் உரத்த குரலில் ஆஹாகாரம் செய்தார்கள். எழுந்து நின்று கூவினார்கள். ஓடிப்போய் குமரனின் கையைப் பிடித்துக்கொண்டு கண்ணில் ஒற்றிக் கொண் டார்கள்.

''புரிகிறது, புரிகிறது'' என்று கூவினார்கள்.

தொலைவில் அமர்ந்திருந்த புகழி, எல்லோரும் தன் புருஷன் மீது பாய்ந்து பாராட்டுவது கண்டு வியந்தாள். நெகிழ்ந்தாள். அந்த வியப்பும், நெகிழ்ச்சியும் மெல்ல ஒரு கிளர்ச்சியை ஏற்படுத்தியது.

இன்று இரவு படை போகப்போவதில்லை. இவரோடு கூடினால் என்ன என்று உள்ளே சட்டென்று ஒரு எண்ணம் நெருப்பாக பற்றிக் கொண்டது. அமைதியான தழலாய் இருந்தது.

அவள் மெல்ல புருஷனைப் பார்த்துச் சிரித்தாள். புருஷன் அவளைப் பார்த்தான்.

போ.. என்னைப் பார்க்காதே என்பது போல தலையை உதறி அழகு காட்டினாள்.

குமரனுக்கு அவள் கூடலுக்கு அழைக்கிறாள் என்பது புரிந்து போயிற்று. ஆண், பெண் கூடல் என்பதில், கூடுவதைவிட, கூடலுக்கு அழைப்பதுதான் பரவசமான விஷயம். கூடலுக்குத் தயாராவதுதான் கிறுகிறுப்பான சமாச்சாரம். குமரன் சம்மதித்து விட்டான். போருக்குப் போவதற்கு முன்பு தன்னோடு நெருக்கமாக இருப்பதற்கு விரும்புகிறான் என்பதை அவன் பார்வையில், அசைவில் புகழி தெரிந்து கொண்டாள். மெல்ல எழுந்து சோம்பல்

முறித்து வேறெங்கோ ஒதுங்குவதற்குப் போவதுபோல மெல்ல நடக்கத் துவங்கினாள்.

தஞ்சைக்கு வெளியே புறம்படியில் பெரிய புல்வெளியில் குவிந்திருந்த படைவீரர்களைத் தாண்டி பழத்தோட்டத்திற்குள் நடந்தாள்.

அது அரசாங்கத்திற்குச் சொந்தமான பழத்தோட்டம். அரண் மனைக்கு அங்கிருந்து சீதாப்பழமும், மாம்பழமும், வாழைப் பழமும், இலந்தையும் போவதுண்டு. தோட்டத்திற்கு நடுவே நீர்க்குளம் வெட்டி நந்தவனமும் வைத்திருந்தார்கள். மருதோன்றி மரங்களும், குண்டு மல்லிச் செடிகளும், கனகாம்பரச் செடிகளும், நந்தியாவட்டையும் அங்கு நிறைந்திருந்தன. மருதோன்றி மரங்கள் வட்டமாக அமைக்கப்பட்டு நடுவே ஒரு மெழுகப்பட்ட தரை இருந்தது.

புகழி கிளம்பும்போதே தான் அமர்ந்திருந்த கம்பளத்தை எடுத்துக் கொண்டு வர, அந்தக் கம்பளம் அந்த மருதோன்றி மரங்களுக்கு நடுவே விரிக்கப்பட்டது. அவள் தலைகுனிந்து அமர்ந்திருந்தாள்.

ஒருவேளை இதுதான் கடைசிக் கூடலாக இருக்குமோ, புருஷன் வராமல் எங்கேனும் வெட்டுப்பட்டு இறந்து விடுவானோ, சட்டென்று ஒரு எண்ணம் ஓடி வயிறு கலக்கத்தை ஏற்படுத்தியது. இந்தக் கூடலும் பாழாய்ப் போகுமோ என்ற எண்ணத்தைக் கிளறிவிட்டது. தோன்றிய எண்ணத்தை மெல்ல கலைத்து புருஷன் நன்றாக இருப்பான். நலமாகத் திரும்புவான் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டாள்.

காலடி ஓசை கேட்டது. சற்று குறுகிக் கொண்டு அமர்ந்தாள். ஒருவேளை வந்தது புருஷனாக இல்லாமல் வேறு யாராக இருந்தால் என்ன செய்வது.

சேலைத் தலைப்பை உடம்பு சுற்றிப் போர்த்திக் கொண்டாள். ஆனால் குமரன்தான் வாளோடு தோற்கயிற்றால் சுற்றப்பட்ட பாதரட்சையோடு நெருங்கி வந்தான். இடுப்பிலிருந்த வாளைக் கழற்றி கம்பளத்தில் வைத்தான். மேல் சட்டையக் கழற்றி உதறி வாள்மீது மறைப்பாகப் போர்த்தினான். இடுப்பு வேட்டியை உதறி பஞ்சகச்சத்தை அவிழ்த்து சாதாரணமாய் கட்டிக் கொண்டு கீழே அமர்ந்தான். தோற்கயிற்றைப் பிரித்து பாதரட்சையை விடுவித்துக் கொண்டான்.

அப்பா... என்று உடம்பைத் தளர விட்டான். அவள் பக்கம் மெல்ல சாய்ந்தான். சிரித்தான்.

''என்ன திடீர் அழைப்பு. என்று மனைவியைப் பார்த்துக் கேட்டான்.

''நானா... உங்களையா... நீங்கள் அழைத்தீர்கள் என்றல்லவா வந்தேன்.''

அவள் ஏதுமறியாத பெண்போல மெல்ல நடித்தாள். கூடலில் இம்மாதிரியான நடிப்புகளும் சந்தோஷமானவையே.

அவள் பொய் சொல்கிறாள் என்று அவனுக்குத் தெரியும். தான் சொல்கின்ற பொய்யைப் புருஷன்கண்டு பிடித்து விட்டான் என்றும் அவளுக்குத் தெரியும். இருப்பினும், அவள் ஏதுமறியாத சாதாரண பெண்ணாகவே தன் முகத்தை வைத்துக் கொண்டாள்.

அவன் வாய்விட்டுச் சிரித்தான்.

''ஆசையிருந்தால் சொல்ல வேண்டியதுதானே. இதிலென்ன வெட்கம்.'' என்று அருகே போய் உரசினான்.

''எனக்கு என்ன ஆசை. நீங்கள் நன்றாக இருக்க வேண்டு மென்றுதான் ஆசை. நீங்கள் நல்லபடி திரும்ப வேண்டுமென்றுதான் ஆசை. வேறு எந்த ஆசையும் எனக்கு இல்லை. என்று அவள் சொல்ல, அவன் மெல்ல அவளை அணைத்துக் கொண்டான்.

அவள் அந்த அணைப்புக்குக் காத்திருந்தது போல சட்டென்று நகர்ந்து புருஷன் மடியில் சாய்ந்து கொண்டாள். அவளுடைய மாந்தளிர் முதுகும், இடுப்பும், தோளும், கன்னமும், பிடரியும் மங்கிய அரைநிலவு வெளிச்சத்தில் தெளிவாய்த் தெரிந்தன. இடதுபக்க மார்பகத்தின் சரிவும் அவனுக்குத் தெரிந்தது. அவன் பரவசமானான்.

புகழியின் அந்தச் சாய்மானம் புருஷனைத் தடவு என்று தூண்டியது. புருஷன் தடவ வேண்டும் என்று புகழியும் நினைத்தாள்.

குமரன் அவளை வியப்போடு பார்த்தான்.

மறுபடியும் இவளைச் சந்திப்போமா. இல்லை, வேறெங்கேனும் ஒரு மண் தரையில் மல்லாந்து, மெல்ல மெல்ல வானம் பார்த்து உயிர் விடுவோமா நெஞ்சுக்குழியில், ஈரக்குலையில் கத்தி தைக்க, வலி காது, முகம் முழுவதும் பரவி கதறடிக்க புகழி.. புகழி என்று கத்தும்போது உயிர் பிரியுமா? இப்போது இந்த முதுகு, இந்த முலை, இந்தக் கன்னம், இந்த இடுப்பு எல்லாமும் சொர்க்கமாக இருக்கிறது.

*இதுதான் கடைசியா? இந்தத் தொடல்தான் இறுதியா. இனி மறுபடியும் புகழியைத் தொடவே முடியாதா? எல்லாம் கண்ணுக்குள் கற்பனையாகப் பார்க்க வேண்டியதுதானா?*

*அவன் தவித்தான்.*

*மெல்ல அவள் முதுகைத் தடவினான். பலமுறை தடவிய முதுகு. பலமுறை தொட்ட உடம்பு. ஆனாலும் இது முதன்முறையாகவும், கடைசி முறையாகவும் தொடுவது போல அவன் தடவல் இருந்தது.*

*புகழியின் மனம் சிலிர்த்து எழுந்தது. அவள் புரண்டாள். கைகள் விரித்தாள். எம்பி புருஷனை ஆர இறுக்கத் தழுவிக் கொண்டாள். இதழ் தேடினாள். முத்தம் கொடுத்தாள். அவர்கள் ஒருவரையொருவர் கவ்விக் கிடந்தார்கள்.*

*பிரிவின் துயரமும், பிணைப்பின் ஆழமும் ஒரு சேர அவர்களை உருக வைத்தது. வாழ்க்கை முழுவதையும் ஒட்டுமொத்தமாய் நினைத்து, நினைத்து அவர்களை புரள வைத்தது. பின்னிக் கிடக்க வைத்தது.*

*மொழி என்பது அதிகப் பிரசங்கித்தனம் என்பது புரிந்து போக, அன்பை அவர்கள் தடவலில் வெளிப்படுத்திக் கொண்டார்கள். இறுக்கத்தில் பகிர்ந்து கொண்டார்கள்.*

*எதிரிகளைக் கண்டு பரவசமாகி வாள் உயர்த்தி இறுக்கப்பிடித்து, முழு வேகத்தில் மண் பரப்புத்தாண்டி எதிரியின் முகத்தில் வாள் வீசுதல் போன்ற வேகத்தில் அவன் மிகுந்த அன்போடு தன் மனைவியான மறத்தியைத் தாக்கினான். அவள் அந்தத் தாக்குதலைக் கடுமையாக எதிர்த்தாள். தாக்குப்பிடித்தாள். கைகளைச் சுற்றிப் போட்டு வளைத்து என்னிடமிருந்து நீ தப்ப முடியாது என்று அழுத்தமாக இறுக்கிக் கொண்டாள்.*

*அவன் பரவசமானான். அவள் எந்தவித இலக்குமின்றி வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். வானத்திலுள்ள நட்சத்திரம் ஒன்று பளீரென்று பெரிதாகி நழுவி வெளிச்சச் சிதறல்களோடு எங்கோ மறைந்தது. மல்லாந்து கிடந்த அவள் அந்த நட்சத்திரத்தையே பார்த்து திகைத்துப் போனாள். கொஞ்சம் நெகிழ்ந்து போனாள். சந்தோஷமாய் கண்கள் மூடிக்கொண்டாள்.*

*இனி யாருக்கு மரணம் வந்தாலும் கவலையில்லை என்று தோன்றிற்று. தொலைவே எக்காளம் முழங்கியது. அவர்கள் பிரிந்தார்கள். யாரோ தலைவர்கள் வருகிறார்கள் என்பதற்கான*

எக்காளம் அது. அவன் மெல்ல எழுந்து உட்கார்ந்தான். புரண்டு மறுபடியும் அவன் மடியில் படுத்துக் கொண்டாள். இப்போதும் முதுகும், கழுத்தும், பிடரியும் இடது பக்க முலைச்சரிவும் இடுப்பும் வெட்ட வெளிச்சமாய்த் தெரிந்தன. ஆனால், ஆள வேண்டும் என்ற எண்ணம் முற்றிலும் அழிந்து போய் இவள் என் மனைவி, என் அன்பு மனைவி, என் ஆருயிர் துணைவி என்கிற காதல் மட்டுமே எஞ்சி யிருந்தது. காமம் கழன்று போய், உபயோகப்படுத்துதல் விலகிப் போய், உரிமை கொண்டாடுதல் குறைந்து போய் இப்போது உண்மையான அன்பு மட்டுமே அங்கு நிலவியிருந்தது.

அவர்கள் மெல்ல அணைத்துக் கொண்டார்கள். முத்த மிட்டார்கள்.

''நல்லபடியாய் போய் வாருங்கள்.''

அவனை சற்று விலக்கி கண்ணாரப்பார்த்து புன்முறுவலோடு புகழி சொன்னாள்.

அவர்கள் எழுந்தார்கள். கை கோர்த்து சிறிது தூரம் நடந்தார்கள். பிறகு மெல்ல கைகளை விடுவித்துக் கொண்டார்கள். அருகருகே உரசியபடி தோப்புக்குள் நடந்து வெளியே வந்தார்கள். வெளியே வந்ததும் அவன் முன்னே நடக்க, பிறகு அவள் பின்னே நடந்தாள். அவன் சற்றுத் தொலைவே போகட்டும் என்று இடைவெளி கொடுத்தாள். நல்ல இடை வெளியாய் அவன் முன்னே போய் கூட்டத்தோடு அமர்ந்து கொள்ள, அவள் விலகி சற்றுத் தொலை வில் நின்று அவனையே பார்த்தபடி இருந்தாள்.

நிசும்பசூதனி என் தாயே. சோழர்குலக்காவல் தெய்வமே, என் புருஷனை நல்லபடியாய் எந்தவித வேதனையும் அடையாமல் இங்கு எனக்குக் கொண்டு வந்து கொடு. கை கூப்பி உள்ளுக்குள் வேண்டினாள்.

இப்போது போர் முரசு ஒலித்தது. அவன் துள்ளி எழுந்தான். தன் படைகளுக்கு உத்தரவிட்டான். தலைப்பாகையை இறுக்கக் கட்டிக் கொண்டான். வாளைத் தரித்துக் கொண்டான். வேலை எடுத்துக் கொண்டு சோழம்... சோழம் என்று கத்தினான். அவனுடைய படை வீரர்கள் அவனுக்குக் கட்டுப்பட்டு உடனடியாக ஒழுங்கானார்கள். வரிசையானார்கள். அவன் சொல்லும் உத்தரவுகளுக்கேற்ப அவர்கள் அசைந்தார்கள்.

அவள் தன் புருஷனின் கம்பீரத்தையே கண்கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை மேலைச்சாளுக்கியம் நோக்கி நகரச்சொல்லி உத்தரவு வந்தது. மிகுந்த வீரத்தோடும் வெறியோடும், கோபத்தோடும் அவர்கள் உரக்க போர்க்குரல்கள் எழுப்பினார்கள்.

சட்டென்று திரும்பி ஒருமுறை அவளைப் பார்த்தான். உரக்க சோழம்.. சோழம்.. என்று கத்தினான். அவளும் கை உயர்த்தினாள். திரும்பினாள். ஒரே ஓட்டமாய் வடக்கு நோக்கி அவன் முன்னே ஓட, அந்த இருநூறு ஆட்களும் அவன் பின்னே போனார்கள்.

அவள் ஒரு மரத்தின் கிளையைப் பற்றி எம்பி அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். தீப்பந்தம் நகர்ந்தது.

அவன் இருளில் மறைந்தான். அவனுக்குப் பின்னே பெரும் பாரவண்டிகள் நகர்ந்தன.

அவளைச் சட்டென்று ஒரு சோர்வு கவ்விக் கொண்டது. அவள் சுருண்டு புல்தரையில் விழுந்தாள். அழத்துவங்கினாள். பெண்கள் அவளை வாரியெடுத்தார்கள். அணைத்துக் கொண்டார்கள். எல்லாப் பெண்களும் புலம்பியபடியே அவரவர் வீடுகள் நோக்கி நகர்ந்தார்கள்.

இன்று நேற்று இல்லையடி. காலம்காலமாக ஜென்ம ஜென்மமாய், பரம்பரை பரம்பரையாய் எல்லா மறக்குல பெண்களும் இப்படித்தான் புருஷனை போருக்கு அனுப்பிவிட்டு வாடிய வயிறும், வதங்கிய முகமும், சோர்வுற்ற உடம்புமாய் நடைப் பிணமாகத் திரிந்து கொண்டிருக்கிறார்கள். அடியே.. உலகத்தில் மறக்குலப் பெண்களுடைய வாழ்க்கை இப்படித்தான். கழுத்து நீட்டியவுடனே என்றைக்கு விதவை என்று தெரியாத வாழ்க்கை தான். ஆனாலும் நம் புருஷர்கள் நலமே திரும்புவார்கள். நிசும்பசூதனி காப்பாள் என்கிற மாதிரி ஒரு பாட்டை அவர்கள் பாடினார்கள்.

அந்தணர் குலப்பெண்களுக்கும் அந்தப் பாடல்கள் கேட்டன. அவர்களுக்கும் கண்ணீர் வந்தது.

இந்த தேசத்தில் விதவையாவது என்பது மிகப்பெரிய வேதனை. லட்சோபலட்சம் வீரர்கள் போருக்குப் போயிருக்கிறார்கள். எத்தனை பேர் திரும்புவார்கள். திரும்பியவர்கள் என்னவெல்லாம் கொண்டு வருவார்கள். போரில் காயம்பட்டவர்கள் எத்தனை பேர். அவர்களின்

எதிர்காலம் என்ன? சோழதேசம் இந்தப் போரில் ஜெயிக்குமா? இல்லை தோற்குமா? தோற்றால் சோழதேசத்தின் நிலைமை என்ன? ஜெயித்தால் என்ன கொண்டாட்டம் என்று விதம்விதமாய் அவர் களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

பொழுது விடிந்தது. விடிந்த பிறகு ஊர் அதிகம் அலட்டாது அமைதியாய் இருந்தது. போருக்குப் புருஷர்களை அனுப்பி வைத்த தேசம் சிரித்துக் கொண்டா இருக்க முடியும். நிறைய சிந்தித்துக் கொண்டுதான் இருந்தது.

## 157

பெரும்படையில் கன்னி போர் வீரர்கள் இருந்தார்கள். பல போர்கள் பார்த்த மறவர்கள் இருந்தார்கள். ஓரிரண்டு கீறல்கள் மட்டும் பெற்ற வீரர்கள் இருந்தார்கள். உடம்பெல்லாம் வெட்டுப் பட்டு தழும்பு வடிவாய் இருந்த மறவர்கள் இருந்தார்கள்.

உடம்பெல்லாம் தழும்பேறிக்கிடந்த மறவர்கள் கன்னிப் போர் வீரர்களுக்கு விதம்விதமாய் கதைகள் சொன்னார்கள். போர் முறை களைக் கற்றுக் கொடுத்தார்கள். வெயில் அதிகமில்லை. சிலசமயம் லேசாய் மழைத்தூறலும் போட்டது. முன்னே ஒரு பெரிய படைப் பகுதி காடுகளை வெட்டிக்கொண்டு போனது. அப்படி காடுகளை வேகமாக வெட்டுபவர்களை காடுவெட்டியார் என்று படைவீரர்கள் அழைத்தார்கள்.

வழிநெடுக முளைத்திருக்கும் கருவேல மரங்களையும், காரைச் செடிகளையும் அவர்கள் வேரோடு களைந்தார்கள். குதிரைகள் நடக்க, தேர்கள் ஓட, இடைஞ்சலாக இருக்கும் பாறைகளைப் புரட்டிப் போட்டார்கள். பள்ளங்களில் மண்போட்டு மூடினார்கள். மிக எளிமையான அதேசமயம் உறுதியான ஒரு பாதையை அமைத்துக்கொண்டே போனார்கள். ஒருநாள் முன்கூட்டியே பயணமானார்கள்.

பாதையில்லாப் பாதை ஒன்று இருப்பது அந்த படைவீரர் களுக்குத் தெரிந்தது. நல்ல அடர்ந்த மரங்களுக்குக் கீழேயுள்ள இடத்தை சமன் செய்து படைவீரர்கள் தங்கும்படி செய்தார்கள். காடுவெட்டி யார் போன பிறகு உடன் பாரவண்டிகள் போயின.

இந்த நேரம் இந்தப்படை வந்திருக்கும் என்று கணக்கிட்டு அங்கங்கே கற்கள் வைத்து தீமூட்டி பெரிய பாத்திரங்கள் வைத்து அரிசி, காய்கறி, கோழி இறைச்சி, உப்பு, மிளகு என்றெல்லாம் போட்டு கதம்ப சாதம் தயாரித்தார்கள்.

காடுகளை வெட்டிச் சீர் செய்தவர், மந்தாரை இலைகளை ஏந்தியும், தாமரை இலைகள் வாங்கியும் அந்தச் சோறை பிசைந்து உண்டார்கள். பெரும் கறித்துண்டங்களை இலைகளில் சுற்றி எடுத்துக் கொண்டார்கள். அடுத்த இடம் நோக்கி நடந்தார்கள்.

மறுபடியும் நெருப்பு மூட்டப்பட்டது. மீண்டும் அரிசி கொட்டப் பட்டது. மேலும் படை வீரர்கள் வந்து உட்கார அவர்களுக்கும் சோறு பரிமாறப்பட்டது.

இரவுநேரம் எல்லோரும் அயர்ந்து தூங்கினார்கள். விடியலில் அரிசிக்கஞ்சியும், கத்திரிக்காய் பொரியலும் கொடுக்கப்பட்டன.

இவர்கள் பாரவண்டியில் பாத்திரத்தை ஏற்றிக்கொண்டு அடுத்த இடம் நோக்கி நடந்தார்கள். நன்கு இருட்டிய பிறகு ஆறு அல்லது ஏழு நாழிகை வரை அயர்ந்து தூங்கினார்கள். மற்ற நேரமெல்லாம் பயணப்பட்டுக் கொண்டோ, உழைத்துக் கொண்டோ தான் இருந்தார்கள்.

''இதுதான் பெண்ணையாறு. முழங்கால் அளவுக்கு சலச்சலத்துத் தெளிவாய் நீர் போகும். ஆற்றை அடையாளம் காட்டினார்கள். புதிதாய் வரும் வீரர்கள் இறங்கி குளித்து நீர் உறிஞ்சிக் குடித்து பெண்ணை ஆற்றை அனுபவித்தார்கள்.

முன்பகுதியில் திமுதிமுவென்று பறைமுழக்கம் கேட்டது.

என்ன.. என்ன.. என்று கேட்டார்கள்.

காட்டு யானைகள் குறுக்கிடுகின்றனவாம். வழி மறித்து நிற்கின்றனவாம். தீப்பந்தங்களை வீசி கலைக்கிறார்களாம். பெரிய புல்வெளியை நோக்கிக் கடக்கும்போது கவனமாக கடக்க வேண்டு மாம்.

பறை முழக்கம் இடைவிடாது செய்ய வேண்டும் என்று உத்தர விடப்பட்டது. ஆனால், காட்டு யானைகள் வெகுதூரம் போய் விட்டன. பின்னால் வந்த படை சாணத்தை மட்டும்தான் பார்த்தது. காலால் புரட்டிப் பார்த்து யானையை எடை போட்டது.

சோழநாட்டு எல்லை வழியாகப் போகும்போது புள்ளி மான்கள் அதிகம் தெரிந்தன. கிராமங்களுக்குள் நுழையாது விட்டு விலகிப்

போகவே படைவீரர்களுக்கு உத்தரவு இருந்தது. ஒரு சில வீரர்கள் மட்டும் சில தேவைகளுக்காக் கிராமங்களுக்கு உள்ளே போய் வேண்டியன பெற்று வெளியே வந்தார்கள். பெண்கள் அவர்களைப் பார்த்ததும் பதுங்கிக் கொண்டார்கள்.

அங்குள்ள கிராமங்களின், நகரங்களின் வாழ்க்கை பரபரப் பாகவும், படபடப்பாகவும் இருந்ததே தவிர, படை நகர்வால் பாதிக்கப்படவில்லை. பாதிக்கப்படக்கூடாது என்பது சக்ரவர்த்தி இராஜராஜத்தேவரின் கட்டளை.

படைவீரர்களின் ஒழுக்கத்தைக் கவனிக்க தனியாக ஒரு படை இருந்தது. அவர்களுக்குத் தனித்த அடையாளங்கள் இருந்தன. அவர்கள் வீரர்களை உரத்த குரலில் மிரட்டினார்கள். தளர்ந்து பின்னால் வருபவர்களை மடக்கி விசாரித்தார்கள். ஏன் என்று கேள்வி கேட்டார்கள். போருக்குத் தகுதியற்றவராக இருப்பின் அவரை சோழதேசம் நோக்கி அனுப்பினார்கள். அல்லது அங்கேயே ஓய்வெடுத்துக் கொண்டு வரச்சொன்னார்கள்.

ஒரு மிகப்பெரிய படை கங்க தேசத்திற்குள் நுழைந்தது. அது சோழதேசம்போல் அல்லாமல், தொண்டைநாடுபோல் அல்லாமல், நடுநாடு போல்கூட இல்லாமல், கங்கதேசம் சோழர்களின் வரவால் மிரண்டது. அங்குள்ள சோழதேசத்து அதிகாரிகளால் சோழ வீரர்கள் நன்கு வரவேற்கப்பட்டார்கள். சோழ அதிகாரிகளின் மேற்பார்வை யில் சுவையான உணவு பரிமாறப்பட்டது. உணவுக் கூடத்தைச் சுற்றி பலத்த காவல் இருந்தது.

இரவு நேரம் கங்க தேசத்தில் குடியமர்த்தப்பட்ட சோழவீரர்கள் மாலையணிந்து வர்ண உடைகளால் அலங்கரித்துக் கொண்டு போர் வெறி ஏற்றும் பாடல்களைப் பாடினார்கள். சீரான தமுக்கு ஓசையும், மத்தள ஓசையும், பறை ஓசையும் அவர்கள் பாடலுக்கும், ஆடலுக்கும் துணை புரிந்தன. இன்னும் ஆடு இன்னும் ஆடு என்று சோழ வீரர்கள் கூவ, சட்டென்று அந்த ஆடல்கள் நிறுத்தப்பட்டு வீரர்களை உறங்க கட்டாயப் படுத்தினார்கள். இன்னும் துரிதமாய் நீங்கள் பயணம் வேண்டும் என்பது சக்ரவர்த்தியாரின் கட்டளை என்று சொல்ல, வீரர்கள் அடங்கி உறங்கப் போனார்கள்.

விடியலில் எழுப்பப்பட்டார்கள். இப்பொழுது நடை என்பது ஓட்டமாக இருந்தது. ஹா... ஹ்ஹு... ஹா.. ஹ்ஹு. என்ற சப்தத்தோடு மேல் கம்பை வகையாகப் பிடித்து அந்தச் சத்தம் சீராக எழ, கங்க தேசத்தின் மேடான பகுதிக்குப் போனார்கள்.

சரளைக் கற்கள் சறுக்கின. வெயில் அதிகமாக இருந்தது. அனல் முகத்தில் அடித்தது. அடுத்த முப்பது கல் தொலைவுக்கு ஒரு குவளை தண்ணீர்கூட கிடைக்காத பாலை நிலம் என்று தெரிவிக்கப்பட்டது.

வீரர்கள் தண்ணீர் குடித்துக் கொண்டார்கள். கழுதைகளின் மீது தோல்பை கட்டப்பட்டு அதில் நீருற்றி முன்னால் அனுப்பப்பட்டது. அங்கே ஆளுக்கு இரண்டு உள்ளங்கை அளவு குடிக்கக் கிடைத்தது.

பாலை நிலத்தை வீரர்கள் பத்திரமாகத் தாண்டினார்கள். நன்கு இளைப்பாறி மீண்டும் நீர் குடித்தார்கள். குளங்களில் இறங்கி குளித்தார்கள்.

காடு வெட்டியும், காலாட்படையும், பார வண்டிகளும் முதன் முதலாகப் போய் வட பெண்ணையாற்றின் கரையோரமாக மேலைச் சாளுக்கியம் நோக்கி நகர்ந்து மேலைச்சாளுக்கியம் இன்னும் சிறிது கல் தொலைவுதான் இருக்கிறது என்று தெரிந்த பிறகு ஒதுங்கி ஓய்வெடுத்துக் கொண்டார்கள்.

அரைநாள் தெற்கேயிருந்து எந்தச் சப்தமும் இல்லாது இருந்தது. திடீரென்று புழுதி உயர எழும்பியது. ஆயிரக்கணக்கான தேர்கள் பெருத்த சத்தத்தோடு மிக வேகமாக வந்தன. அவர்களை தாண்டிப் போயின. வீரர்கள் வெறியோடு கூச்சலிட்டார்கள். தேரில் இருந்த வர்கள் உரக்கக் கத்தினார்கள். இரண்டு இரண்டாய் அணிவகுத்து மேடு பள்ளங்கள் பார்க்காமல் துள்ளி குதித்து தேர்கள் ஓடுவது பார்ப்பதற்கு ஆனந்தமாக இருந்தது. வீரர்கள் தேரை எண்ணத் துவங்கினார்கள். பிறகு எண்ண முடியாமல் துவண்டு போனார்கள்.

முகங்களைத் துணியால் மூடிக்கொண்டு கண்கள் மட்டும் தெரிய, தலையில் சிறகுகள் பறக்க, மேல்துணி அசைய, சோழ வீரர்கள் புலிக்கொடியோடு மேலைச்சாளுக்கியம் நோக்கி நகர்வது பார்க்க ஆனந்தமாகவும் வெறியாகவும் இருந்தது.

மேலைச்சாளுக்கியத்தின் எல்லையில் தேர்கள் நின்றன. மேலைச்சாளுக்கியத்தின் கிராமங்கள் காலி செய்யப்பட்டன. அங்குள்ள மக்கள் இன்னும் உள்ளே நகர்ந்து விட்டார்கள் என்று ஒற்றர்கள் மூலம் தேரோட்டிகளுக்குத் தெரிவிக்கப்பட்டது. இப்பொழுது காலாட்படை நகர்ந்தது. தேர்கள் இருக்கும் இடம் நோக்கி சிறு ஓட்டமாய் ஓடியது.

பிறகு தேர்கள் எங்கு இருக்கின்றனவோ அங்கு போய் இந்த காலாட்படை வீரர்கள், அவரவருக்கு ஒதுக்கப்பட்ட தேரில் ஏறிக்

கொண்டார்கள். தேர் ஓட்டுபவரும், ஒரு வில்லாளியும் என்று இருந்த கணக்கில் இப்பொழுது ஒரு ஈட்டி வீசுபவரும், கத்தியால் சண்டை போடுபவரும் கலந்.து கொண்டார்கள். ஆக ஒரு தேருக்கு நான்கு பேர் என்று கணக்காகியது.

தேர் பற்றிய அறிவை அந்த வீரர்கள் அந்த தேரோட்டி களிடமிருந்து தெரிந்து கொண்டார்கள். தேரின் வேகத்திற்கு எப்படி ஈடுகொடுக்க வேண்டும் மென்று விவரிக்கப்பட்டது. ஓட்டியும் காட்டப்பட்டது. அருகே இருப்பவரைக் காயப்படுத்தாமல் எதிரியை எப்படித்தாக்குவது என்று விளக்கப்பட்டது. இது புதிய போர்முறை என்று சொல்லப்பட்டது.

அடுத்து யானைகள் அணிவகுத்து வந்தன.

பிரம்மராயர் பெரிய யானை மீது கம்பீரமாக அமர்ந்து வர வீரர்கள் உரத்த குரலில் கோஷமிட்டார்கள்.

ஒரு வீரன் பிரம்மராயருக்கு அருகே போய் பேச வேண்டுமென்று சொல்ல, பிரம்மராயர் குனிந்து காதுகொடுத்துக் கேட்டார்.

''சக்ரவர்த்தியாரைப் பார்க்க வேண்டும். சக்ரவர்த்தி எங்கிருக் கிறார். யாரோடு வருகிறார்.'' என்று அந்த வீரன் கேட்க பிரம்மராயர் அந்த வீரனை உற்றுப் பார்த்தார்.

''நாளை காலை உங்களோடு சக்ரவர்த்தி இருக்கக்கூடும். அந்தத் தொலைவில்தான் சக்ரவர்த்தி இருக்கிறார்.'' என்று பதில் சொன்னார்.

அந்த வீரன் கேள்வி கேட்பதும், அதற்கு பிரம்மராயர் மரியாதை யாகப் பதில் சொல்வதும் போர்க்காலங்களில் தான் காணமுடியும்.

'உங்களுக்காக உயிரை இழக்கவே நான் தயாராக வந்துள்ளேன். ஒரு கேள்விக்குப் பதில் சொல்ல முடியாதா.' என்று அந்த வீரன் திருப்பிக் கேட்டால், பிரம்மராயர் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும். அப்படி பதில் சொல்லாதது குற்றமாகத்தான் கருதப் படும்.

வீரர்களின் அசைவும், விரைவும் மிகுந்த நம்பிக்கையை ஏற்படுத்தின. மேலைச்சாளுக்கியம் சிதறப்போகிறது என்கிற குதூ கலத்தை அந்த யானைப்படை ஏற்படுத்தியது. பரந்த புல்வெளியில் யானைகள் தனித்தனியே கட்டப்பட்டன. தீப்பந்தங்களுக்கு நடுவே யானைகள் நகர்வதும். பிளிறுவதும் பார்க்கப் பரமானந்தமாக இருந்தன. யானைகளுக்கு இருட்டு சற்று பயத்தைக் கொடுக்கும்.

இருட்டில் பேசப்படும் பேச்சுக்கள் கலவரத்தைக் கொடுக்கும் எனவே, ஒவ்வொரு யானைக்கருகேயும் ஒரு தீப்பந்தம் நடப்பட்டிருந்தது.

யானைகளுக்கு நெருப்பென்றால் பயம். அதனால் பெரிய தீயையும் மூட்டிவிடக்கூடாது காற்றடித்து தீ புரண்டு ஓடி வந்தால் யானைகள் மிரண்டு நாலாபக்கமும் அலையும். ஒரு யானை மிரண்டால் குறைந்த பட்சம் அறுபது, எழுபது யானைகள் மிரண்டு விடும். அது மிகுந்த சேதத்தை உண்டாக்கும். எனவே, தீப்பந்தத்தை அளவாக எரிய வைத்து, வீரர்கள் உடம்பு முழுவதும் துணி போர்த்தி யானைக்கருகே காவல் இருந்தார்கள்.

அந்த யானைப்பாகர்கள் யானையினுடைய பயம் நீக்குவதற்காக, யானை மீதே அமர்ந்தபடி உணவு உண்டார்கள். அந்த யானைப் பாகர்கள் யானையின் கால்களைக் கட்டிக்கொண்டு அதன்மீது சாய்ந்து நின்ற வண்ணம் தூங்கினார்கள். எல்லா பாதுகாப்பும் இருப்பினும் அங்கங்கே மிரண்டு போய் ஒன்றை யொன்று தாக்கிக் கொண்டன.

யானைகளை அதட்டுகின்ற சத்தம் கர்ணகொடூரமாய் அந்த இரவில் கேட்டது. குதிரைகளையும், மாடுகளையும் பார்த்துவிட்டு உள்ளூர் காடுகளிலிருந்து ஓநாய்களும், கழுதைப் புலிகளும் வெளியே வந்தன. சுட்ட மாமிசத்தை நுகர்ந்த வண்ணம் சுற்றிச் சுற்றி வந்தன. காடுவெட்டிகளிடம் வேட்டை நாய்கள் இருந்தன. அவற்றின் கயிற்றை அவிழ்த்துவிட, அந்த வேட்டை நாய்கள் கழுதைப் புலிகளை வெறியோடு துரத்தின.

குதிரை வீரர்கள் கவண்கல்லை எடுத்துக் கொண்டு போய், அந்த ஓநாய்களைக் குறி பார்த்து அடித்தார்கள். சில கிழ ஓநாய்களைக் கத்தியால் குத்தி உயரத்தூக்கி துண்டு துண்டாக வெட்டி வீசி எறிந்தார்கள். நாய்கள் அந்த ரத்தவாடையைப் பார்த்துவிட்டு முகர்ந்து விட்டு பயந்து ஓடின.

அந்த மாமிசத்தைத் தின்ன உடும்புகளும், எலிகளும் ஓடிவந்தன. சில இடங்களில் பாம்புகளை விரட்ட வேண்டியிருந்தது. மறுநாள் விடியற்காலை மிகப்பெரிய தனித்த குதிரைப்படையொன்று மேலைச்சாளுக்கியத்தின் எல்லைக்கு வந்து நின்றது. இராஜராஜர், அலங்கரித்த குதிரையில் நடுநாயகமாக வந்து நின்றார்.

பிரம்மராயர் அவரை வரவேற்றார்.

குடமலை நாட்டுக்கு அருகேயுள்ள கொல்லாபுரத்திலிருந்து ஈராயிரம் பல்லவரையர் வருவார் என்று அவருக்குத் தெரிவிக்கப் பட்டது. அவர் படைகள் வந்தபிறகு நகரலாம் என்று சக்ரவர்த்தியார் சொல்ல எல்லோரும் தளர்வானார்கள்.

பெரிய கூடாரங்கள் விரைவாக அமைக்கப்பட்டன.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கூடாரத்திற்குள் போகவில்லை. ஒரு நீண்ட நெடுந்தூர பயணத்திற்குப் பிறகும் சற்றும் களைப்படையாமல், குதிரையில் ஏறி படைவீரர்கள் தங்கியிருக்கின்ற இடங்களைச் சுற்றி வந்தார். பலரைப் பார்த்து புன்முறுவல் செய்தார். சிலரைப் பார்த்து நலம் விசாரித்தார்.

அவர் வருவது தெரியாமல் முள் வாங்கியால் காலுக்குள் தைத்து விட்ட கருவேலமுள்ளை பிய்த்தெறியப் போராடிக் கொண்டிருந்த வனின் அருகே போய் நின்றார். நிமிர்ந்து பார்த்துவிட்டு அலறி அடித்துக் கொண்டு எழுந்து நின்றான்.

ஓர் உபசேனாதிபதியை அந்த வீரன் கால் முள்ளை எடுக்கும்படி உத்தரவிட்டார்.

''இல்லை. முள் உள்ளே போய்விட்டது. குடைந்து தான் எடுக்க வேண்டியிருக்கும். குடைந்து எடுத்தால் கட்டுப் போடும்படியாக இருக்கும்.'' என்று பதில் சொன்னான்.

அதை இன்னும் அடித்து உள்ளேற்று என்று சக்ரவர்த்தி உத்தரவிட, ஒரு உபசேனாதிபதி வாளை உருவினான். அந்த வீரன் கால் தூக்கி உள்ளங்கால் பாதத்தைக் காட்ட, சக்ரவர்த்திக்கு எதிரில் அந்தக் கத்தியின் பட்டை பாகத்தால் அந்த வீரனின் காலில் தைத்த முள்ளில் ஓங்கி அடித்து முள்ளை இன்னும் நன்றாக உள்ளே செலுத்திவிட வேண்டும் என்ற எண்ணத்தைச் செயல்படுத்தத் துவங்க சற்றுத் தடுமாறினான்.

சக்ரவர்த்தி சட்டென்று குதிரையிலிருந்து இறங்கினார். அவரிட மிருந்து வாளை வாங்கினார். உபசேனாதிபதியை வீரனின் கால் தூக்கி பிடித்து கொள்ளச் சொன்னார்.

எங்கே முள் என்று பார்த்துக் கொண்டார். பட்டென்று மிகுந்த பலத்தோடு அவனுடைய உள்ளங்காலில் வாளில் பட்டைப் பகுதியால் அடித்தார். முள் சரக்கென்று உள்ளேறியது. இப்போது முள் குத்தல் வலிக்காது. உள்ளே ரத்தத்தில் கரைந்து மங்கிப் போய்விடும்.

இம்மாதிரி பலமுட்கள், பல வீரர்கள் காலில் வாழ்வு பரியந்தமும் இருக்கும். வீரர்கள் உற்சாகமாக இருப்பதைப் பார்த்து சக்ரவர்த்தி சந்தோஷமானார். கால் வீங்கி இருப்பவர்களைக் கனிவுடன் பார்த்து நின்று வரச்சொன்னார். அவர்களுக்கு மேலே ஊற்றிக் கொள்ள வெந்நீரும், உள்ளுக்குள் சாப்பிட மருந்தும் கொடுக்கச் சொன்னார்.

அருண்மொழிப்பட்டருக்கு உத்தரவிட அவன் சட்டென்று ஒரு புல்சரிவைத் தேர்ந்தெடுத்தான். சக்ரவர்த்தியைப் புல்மேட்டிற்கு அழைத்துப் போனான். அந்தச் சரிவில் தனித்த எக்காளம் ஊதி உபசேனாதிபதிகளையும், சேனாதிபதிகளையும் அழைத்தான்.

மேலைச்சாளுக்கியத்தில் உள்ளே போகும்போது என்ன செய்யலாம், என்ன செய்யக்கூடாது என்ற கட்டளைகள் அங்கு வெகு வேகமாக சொல்லப்பட்டன.

இனி ஒரு நாள் குதிரை ஓட்டத்தில் துங்கபத்ரை நதிக்கரையை அடைந்துவிட முடியும் என்றும், அதை அடைந்து பரவலாகி துங்கை நதியைக் கடந்து மேலைச்சாளுக்கியத்தின் எல்லாப் பகுதிகளையும் ஊடுருவ வேண்டும் என்றும், என்ன எதிர்ப்பு இருந்தாலும் கடுமையாக அடக்கி அந்த இடத்தை சர்வநாசம் செய்ய வேண்டும் என்றும், புறப்படுகிற பொது மக்களை ஒதுக்கி போர் வீரர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டுமென்றும், எவரும் இனிமேல் மேலைச்சாளுக்கியத்தில் வாள் தூக்காத வண்ணம் வைக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டது.

பொன்னும், பொருளும் அதிகம் தேவை. அதனால் எல்லா இடங்களிலிருந்தும், எல்லாவிதமாகவும் பொற்காசுகள் பொன் நகைகள் பறிக்கப்பட வேண்டும். மூலப்பண்டாரத்திற்கு அனுப்பப் பட வேண்டும் என்று சொல்லப்பட்டது.

ஆடு, மாடுகளை மடக்கி அதை ஓட்டிச் செல்பவர்களிடம் கொடுத்து விட்டால், அவர்கள் சோழதேசம் நோக்கி ஆடு, மாடு களை முதலில் அழைத்துப் போய்விடுவார்கள். எனவே, நகைகள் கொள்ளையடிப்பதோடு ஆடு, மாடுகளை மடக்குவதும் நடக்க வேண்டும்.

மேலைச்சாளுக்கியத்தில் அம்புகள் எய்வார்கள். அவைகள் கனத்த அம்புகள் வெகுதூரம் வராது. கேடயங்களை உறுதியாக வைத்துக்கொண்டால் அந்த அம்பு மழையிலிருந்து தப்பித்து விடலாம். சேரதேசத்து நம்பூதிரிகளும் இருப்பதால், விஷ அம்புகள் வரலாம். சேரதேசத்து நம்பூதிரிகளைக் கண்டால் மடக்கி சித்ரவதை

செய்து கொலை செய்யுங்கள். ஒருவனை சித்ரவதை செய்வதன் மூலம் எதிரியின் இருப்பிடத்தைத் தெரிந்து கொள்ளுங்கள்.

அங்கு சாலை என்று ஏதேனும் அமைத்திருப்பார்கள். அதை முற்றிலும் அழிக்க வேண்டியதும் நமது வேலை. மேலைச்சாளுக்கியத்தின் தலைநகரான மான்யகேடம் நோக்கி நகர்வோம். மான்யகேடத்தை முற்றிலும் அழித்து தீக்கிரையாக்குவோம். யார் இருந்தாலும் சரி, இறந்தாலும் சரி மான்யகேடம் தீக்கிரையாக்கப்பட வேண்டும் என்று உரத்த குரலில் கட்டளையிடப்பட்டது. வீரர்கள் ஆரவாரித்தார்கள். மிக வேகமான வெறியில் இருந்தார்கள்.

மேலைச்சாளுக்கியத்திலிருந்து திரும்பவும் கங்கதேசம் வரும் வரை உணவிலும், குடிநீரிலும் மிகக் கவனமாக இருக்க வேண்டும். நீர் சோதிக்கப்பட்ட பிறகே குடிக்கப்பட வேண்டும். விதம்விதமான உணவுகள் அளித்து உங்கள் தேவைகள் கவனிக்கப் படும். வீரர்கள் நன்றாக ஓய்வெடுக்கட்டும். இரண்டு நாட்கள் கழித்துக்கூட நாம் நகரலாம்.

சத்யாசிரியனுக்குச் செய்தி போய் அவனுடைய படைகள் தயார் நிலையில் இருப்பதையே சக்ரவர்த்தியார் விரும்புகிறார். பதுங்கிப் பின் வாங்கினால் அழிக்க முடியாமல் போய்விடும். அவனை எதிர்த்து சண்டை எழும்வரை நாம் காத்திருப்பது நல்லது. அரைநாள் தொலைவில்தான் இருக்கிறோம். என்று தெரிந்தால், ஒருவேளை அவன் பின்வாங்க முயற்சிக்கலாம். மெல்லத்தான் வருவோம்.

வீரர்கள் எல்லோரும் அயர்ந்து தூங்குகிறார்கள் என்று செய்தி போனால் தாக்குவதற்குத் தயாராவான். எனவே நன்றாக வீரர்களை உறங்கச் சொல்லுங்கள். நல்லவிதமான உணவு வகைகளைச் சமைத்துப் போடுங்கள். மேலைசாளுக்கியத்தினர் தாக்குகின்ற பக்க மறிந்து காவலைப் பலமாக வையுங்கள். சிறிய அசைவுகளையும் கவனிக்கும் வேட்டை நாய்களை உலவ விடுங்கள். குதிரைகளில் சுற்றிக் கொண்டேயிருங்கள் என்று கட்டளைகள் பிறப்பிக்கப் பட்டன.

சக்ரவர்த்தியார், மேலைச்சாளுக்கியத்திலிருந்து என்ன செய்தி வருகிறது. அங்குள்ள ஒற்றர் படை என்ன தகவலைக் கொடுக்கிறது என்கிற எண்ணத்திற்காகவும் இந்தத் தாமதம் செய்யலாம் என்று உபசேனாதிபதிகள் கிசுகிசுத்தார்கள். அவர்கள் எல்லோருக்குமே போரின் போக்கு புரிந்திருந்தது. சபை முடியும்போது, யாரோ ஒரு வீரன் பரபரப்பாக ஓடி வந்தான்.

முகாமில் ஒரு வீரன், வயசாளி. மேல் மூச்சு வாங்கக் கிடக்கிறான் என்றும், கடைசி நிமிஷம் சக்ரவர்த்தியைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார் என்றும் அங்கே சொல்லப்பட்டது. உபசேனாதி பதிகள் அவனை விரட்ட எத்தனித்தபோது, சக்ரவர்த்தி சட்டென்று எழுந்து கை உயர்த்தினார். எங்கே என்று கேட்டார். நான்கு உபசேனாதிபதிகள் பின்தொடர, அந்த வயசாளி வீரன் இருக்கும் இடம் நோக்கி விரைந்தார். ஒரு மரத்தின் கீழ் ஓலைப்பாய் விரித்து ஒரு வயசாளி வீரன் படுத்துக் கிடந்தார்.

அறுபது வயதிருக்கும் மெலிந்திருந்தார். எதற்காக இவர் போருக்கு வந்தார் என்ற சந்தேகம் எல்லோருக்கும் வந்தது. ஆனால் அவருடைய சகவீரர்கள் எங்களையெல்லாம்விட முன்னால் போருக்கு கிளம்பிவிட்டார். கங்க தேசத்தில் மூன்று நாட்களாகத் தங்கி எங்களை வரவேற்றார் என்று சொன்னார்கள்.

வைத்தியர் வரவழைக்கப்பட்டு நாடி பார்க்கப் பட்டது. வைத்தியர் எழுந்து நின்று சக்ரவர்த்தி நோக்கி கைகூப்பினார்.

என்ன என்று சக்ரவர்த்தி வினவ, ''அடங்கிக் கொண்டிருக்கிறது'' என்று ஒற்றை வார்த்தையில் பதில் சொன்னார்.

''எதனால்'' என்று சக்ரவர்த்தி அடுத்த கேள்வியைக் கேட்க, ''கபம்'' என்று மறுபடி ஒற்றை வார்த்தையில் பதில் சொல்லப் பட்டது.

''இந்த வீரருக்கு ஏற்கனவே கபம் நிறைந்திருக்கிறது. மழையில் நனைந்ததும், கண்ட நேரங்களில் குளித்ததும், சீதளம் நிரம்பிய பழங்களை அதிகம் சாப்பிட்டதும் காரணமாக இருக்கலாம்.

''கபத்தைக் குறைக்க முடியாதா.''

''இல்லை. கெட்டிப்பட்டு விட்டது. நுரையீரல் அசைவு மிக மிகக் குறைவாக இருக்கிறது. நாடிகள் பழுதடைந்துவிட்டன. எல்லா இடமும் குளிரத்துவங்கி விட்டது. மது கொடுத்தும் குறைய வில்லை. உடம்பு சூடு ஏறவில்லை.'' என்று கவலை தெரிவித்தார்.

சக்ரவர்த்தி உடையார் அந்த வீரருக்கு அருகே போனார். மண்டி யிட்டார். அவர் நெற்றியை ஆதுரத்துடன் தடவிக் கொடுத்தார்.

''ஐயா, உடம்பில் இவ்வளவு வருத்தம் இருக்க, ஏன் வந்தீர்கள்.'' என்று மெல்லிய குரலில் கேட்டார்.

அந்த வீரர் கைகூப்பி அழத் துவங்கினார்.

''பல போர் கண்டு ஜெயித்தவராயிற்றே நீங்கள்.''

சக்ரவர்த்தி அவரை நன்கு தெரிந்தவர் போல் பேசினார்.

''உங்கள் உடம்பு முழுவதும் தழும்புகள் இருக்கின்றனவே. மறக்குல வீரரே இந்தப் போரை நீங்கள் தவிர்த்திருக்கலாமே.

மீண்டும் நெற்றியைத் தடவிவிட்டார்.

இம்முறை அவர் தடவிய கையை வயசாளி இறுக்கப் பிடித்துக் கொண்டார். கண்களில் ஒற்றிக் கொண்டார். மெல்லிய குரலில் போய் வருகிறேன் என்றார்.

சக்ரவர்த்தி பதில் சொல்லாமல் அவரையே பார்த்துக் கொண் டிருந்தார். மீண்டும் சற்று குரலெடுத்து ''நான் போய் வருகிறேன். மறுபடியும் சோழதேசத்தில்தான் பிறப்பேன்.''

அந்த வீரர் அயர்ச்சியோடு கண்களை மூடிக் கொண்டார்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரைப் பார்க்கின்ற பொழுதே அந்த வீரருடைய முகம் மாறிற்று. லேசாய் உதடு கோணிற்று. வாய் பிளந்தது. கண்கள் விரியத் திறந்தன. மேல் மூச்சு அதிகமாக வாங்கத் துவங்கியது. சட்டென்று உடம்பு குலுக்கிப் போட்டது.

சக்ரவர்த்தியார் அவர் நெஞ்சில் கை வைத்து அழுத்திக் கொண்டார். வேறு சில வீரர்களும் உடம்பு குலுங்குவதைத் தவிர்க்க அழுத்தி வைத்துக்கொண்டார்கள். அந்த வீரர் கண்களை அசைத்து சக்ரவர்த்தியாரைப் பார்த்தார். பிறகு மூடிக் கொண்டார். அந்த இமைகள் மெல்ல பாதி திறந்தன. வாய் இன்னும் அதிகம் திறந்தது. கடக்டவென்று குரல் வளையிலிருந்து ஒரு சத்தம் கேட்டது. உடம்பு தூக்கிப் போட்டது.

அவர் உயிர் பிரிவதை அங்குள்ள அத்தனை பேரும் உணர்ந் தார்கள். யாரோ ஒருவர் நடுக்கூடத்திலிருந்து எழுந்து வெளியே போகிறார் என்பது போல ஒரு அசைவை அத்தனை பேரும் உணர்ந்தார்கள்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் தன்னுடைய வலப் பக்கம் திரும்பி யாரோ போவதை தெளிவாய் உணர்ந்தவர் போல உற்றுப் பார்த்தார். கண்கள் மூடிக்கொண்டார். அவர் நெஞ்சிலுள்ள கையை எடுத்துத் தன் நெஞ்சில் வைத்துக் கொண்டார். இரண்டு கரங்களையும் கூப்பினார். குனிந்து வணங்கினார். எழுந்து நின்றார்.

''இவர் உறவுகளுக்குச் சொல்லிவிடுங்கள். இவரது நண்பர்கள் யார் யார்? அவர்கள் அத்தனை பேரும் பார்த்த பிறகு நல்ல முறையில் இந்த வீரரை தகனம் செய்யுங்கள். தகனத்திற்கு வேண்

டிய காரியங்கள் வேகமாய் நடக்கட்டும்.'' என்று உத்தரவிட்டார். விலகிப் போய் நின்று கொண்டார். அடுத்த ஒரு நாழிகையில் தகனத்திற்கு ஏற்பாடாகி விட்டது.

சக்ரவர்த்தியார் உணவருந்தவில்லை என்பதால் எல்லோரும் எல்லோரையும் துரிதப்படுத்தினார்கள். பட்ட மரங்களாகப் பார்த்து தரித்து உலர்ந்த கட்டைகளைக்கொண்டு வந்து அடுக்கினார்கள். இடுப்பு உயரம் மரம் அடுக்கிய பிறகு, அந்த ஓலைப்பாயைத் தூக்கி அதில் பரப்பி அவரைக் கொண்டு போய் அதில் கிடத்தினார்கள். நெற்றிக்குத் தீருநீறும், திலகமும் இட்டார்கள். அவருடைய அடையாளமான மயிர் பீலியை அவருக்கு அணிவித்தார்கள். மயிர்பீலியை அணிந்த வீரர்கள் வரிசையாக நின்று சோழம்.. சோழம் என்று கேடயத்தில் கத்தியால் தட்டினார்கள்.

சக்ரவர்த்தி அந்தக் குரல் கேட்டு எழுந்து வந்தார். சற்று தளர்ந்திருந்தார். எப்போதும் இருக்கின்ற மிடுக்கோ, சபையில் பேசும்போது இருந்த வேகமோ இல்லை. நடைதளர்வாக இருந்தது.

அவர் போர் வீரனல்லவா என்று சடலத்தைப் பார்த்துக் கேட்டார். உபசேனாதிபதி ஆமாம் என்று தலையசைத்தார்.

''ஆனால், நோயுற்று இறந்திருக்கிறார்.'' என்று சக்ரவர்த்தி சொல்ல, ''ஆமாம் ஐயா, இவர் தஞ்சையிலேயே இருந்திருக்க லாம்.'' என்று பதில் சொன்னான்.

''இனி அது யோசித்துப் பயனில்லை. அவருக்கு ருத்ரபூமி இங்கே என்று முடிவாகிவிட்டது. எனவே, அவருடைய மரணத்தை வீரமரணமாக்குங்கள்.'' உபசேனாதிபதி வாளை உருவ, மற்ற இரண்டு பேரும்வாள் உருவினார்கள்.

சக்ரவர்த்தியையே கூர்மையாகப் பார்த்தார்கள்.

சக்ரவர்த்தி கையை உயர்த்தி ஒரு வாளைப் பற்றிக் கொண்டார். அவர் ஏறி நிற்க இரண்டு வித முக்காலிகள் போடப்பட்டன. அந்த முக்காலியின் மீது ஏறி நின்று இறந்தவரைப் பார்த்து வாளை உயர்த்தி ஒரு கேடயத்தை வாங்கி ''சோழம்... சோழம்...'' என்று நிதானமாக அவர் தட்ட, மொத்தப் படையும் அவர் கூச்சலை எதிரொலித்தது. ''சோழம்... சோழம்...'' என்ற குரல் வெகுதூரம் வரை கேட்டது. எல்லா படை வீரர்களும், கேடயத்திலும், வில் வண்டிகளிலும் வாளோடு வாள் வைத்தும், ஒலியெழுப்பியும் அந்த மந்திரச் சொல்லைச் சொன்னார்கள்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வாளைக் கீழே இறக்கி, இறந்தவர் நெஞ்சின் உச்சியிலிருந்து சரக்கென்று அடி வயிறு வரை ஆழமாய் ஒருகோடு போட்டார். இறந்தவர் உடம்பு சட்டென்று பிளந்தது. மெல்லியதாய் ரத்தம் கசிந்தது.

''அந்த வீரர் எதிரியால் தாக்கப்பட்டு இறந்திருக்கிறார். எனவே, அந்தக் கொலைக்குப் பழிவாங்குவோம்.'' என்று உரத்துக் கத்தினார். மறுபடியும் ''சோழம்... சோழம்...'' என்று கத்தியால் கேடயத்தை அடித்து ஒலியெழுப்பி படை வீரர்கள் கூவினார்கள்.

படையின் தலைவன் தீப்பந்தம் ஏந்தினான். மூன்று முறை வலம் வந்தான். எண்ணெய் ஊற்றப்பட்ட உலர்ந்த மரத்தில் நெருப்பு வைத்தான். நெருப்பு சட்டென்று பற்றிக்கொண்டது. காற்று சுழன்றடிக்க வெகு வேகமாய் நெருப்பு எரிந்தது. எரியும் நெருப்பில் மேலும் கட்டைகளைத் தூக்கிப் போட்டார்கள். புதிய மரங்களைக் கொண்டு வந்து சாய்த்தார்கள். புகை நாற்றம் மூக்கைத் துளைத்தது.

சக்ரவர்த்தியார் கூடாரத்திற்கு அருகே போக, அவருக்கு உட்கார ஆசனம் ஏற்பாடு செய்து அவர் தலையில் நீர் கொட்டினார்கள்.

சக்ரவர்த்தி உடம்பு துடைத்துக் கொண்டார். கூடாரத்திற்குள் போய் படுத்துக் கொண்டார். வெகுநேரம்... வெகுநேரம் அந்தப் போர் வீரனின் சிதை எரிந்து கொண்டிருந்தது.

அவன் முற்றிலும் சாம்பலாகி காற்றில் பறக்கும் வேளை சோழப்புலிக்கொடி அசைந்து மேலைச்சாளுக்கியம் நோக்கி நகரத் துவங்கியது.

## 158

இந்த விடியல் வேளையில் சுமார் நூறு தொண்டை நாட்டு அந்தணர்கள் பெருந்தச்சர் குஞ்சரமல்லர் வீட்டு வாசலில் நின்றிருந்தார்கள். விதம்விதமான விஷயங்களை மனதில் தேக்கி குஞ்சர மல்லரின் உத்தரவுக்காகக் காத்திருந்தார்கள். விடிந்து நல்ல வெளிச்சம் வந்துவிட்டது. ஆனால் இன்னும் குளுமையிருந்தது.

இப்பொழுதெல்லாம் தொண்டை நாட்டு அந்தணர்களிடம் கனத்த சால்வை இருக்கிறது. நல்ல பதவியும், நல்ல காசும், நல்ல அதிகாரமும் கிடைத்து விட்டதால் மலிவாக சால்வைகளும், மற்ற சௌகரியங்களும் கிடைக்க, தொண்டை நாட்டு அந்தணர்களுடைய

நடையே வேறுவிதமாக இருந்தது. ஆனால் அவர்கள் பணியில் சிறிதளவும் தொய்வு ஏற்படவேயில்லை.

போருக்காக அரசரும், படைகளும் போயிருக்கின்றன என்பதை முற்றிலும் உணர்ந்து, படைகள் அப்படி நகருவதைப் பார்த்து கண்கலங்கி திகைத்துப் போய் உட்கார்ந்து உங்கள் பொறுப்பில் இந்த தேசம் இருக்கிறது என்று சக்ரவர்த்தி சொன்ன ஒரு வார்த்தையை மனதில் நிறுத்தி, அந்த அந்தணர்கள் நிர்வாகத்தை மிகச் செம்மையாய் நடத்தினார்கள். ஜனங்களிடம் வலியப்போய் பேசினார்கள். ஏதேனும் குறைகள் உண்டா என்று கேட்டுக் குறித்துக் கொண்டார்கள்.

''ஊரில் கருமார்களே இல்லை, ஐயா'' என்று முதல் குரல் ஒலித்தது.

திகைத்தார்கள்.

எல்லா கருமார்களுமா யுத்தமுனைக்குப் போய்விட்டார்கள் என்று கூடிப் பேசினார்கள்.

இல்லையே... இல்லையே... என்னுடைய ஊரில் இரண்டு பேர் இருக்கிறார்களே... என்னுடைய ஊரில் ஒருவர் இருக்கிறாரே... என்று சொன்னார்கள்.

எல்லா ஊருக்கும் பயன்படும் வண்ணம் கருமார்களை ஒன்றுகூடி இருக்கச் செய்து குடும்பத்திற்கு ஒருவரைத் தலைவராக வைத்து, எல்லா கருமார்வேலையையும் தஞ்சையின் எல்லையிலுள்ள கருந்தட்டாங்குடிக்கு வந்து செய்து கொள்ளலாம் என்று பறையறிவித்தார்கள்.

ஏற்றச்சாலை சுற்றி இரும்படித்து மாட்டினால் தான் ஏற்றச்சாரல் விலகாமல் இருக்கும். ஏற்றச்சாலை தலையில் தூக்கிக்கொண்டு தஞ்சைக்கு வரமுடியுமா என்று கேட்க ஏற்றச்சாலின் அளவுகள் குறித்துக் கொள்ளப்பட்டன. அங்குள்ள கருமாரிடம் அந்த அளவுகள் கொடுக்கப்பட்டன.

வெள்ளைத் துணியில் ஒரு வரைபடமும் எழுதித்தரப்பட்டது. கருமார் புரிந்து கொண்டார்.

அவர் இருந்த இடத்திலிருந்து பதினாறு வளையங்கள் செய்து கொடுத்தார். எப்படிப் பூட்டவேண்டும் என்றும் காட்டினார். அந்த ஏற்றச்சால் ஓட்டுகின்ற விவசாயி ஏற்றத்தின் அடிப்பகுதியில் இரும்பை இணைத்து, இறுக்கி மறைபோட்டு முடுக்கி விட்டான்.

அவனுடைய சொந்த ஏற்றச்சால் உடையாமல் செய்ய வேண்டும் என்ற அக்கறை இருந்ததால் மிகுந்த திறமையாகவும், கூர்மையாகவும் அதைச் செய்து முடித்தான். ஏற்றச்சால் அற்புதமாக இயங்கியது.

அந்தக் கிராமத்தில் பொதுக்கிணறு சரிந்துவிட்டது. மண் விழுந்து சேறாகி உபயோகமில்லாமல் போய் விட்டது.

அந்தணர்கள் ஒன்றுக்குப் பத்துப்பேராக அந்தக் கிணற்றைச் சோதித்துப் பார்த்தார்கள். பெரியகட்டையைப் போட்டு கயிறு கட்டி கீழே இறங்கி பலபேர் பதற மண் சோதித்துப் பார்த்தார்கள். இந்தக் கிணறு வேண்டாம் என்று முடிவு செய்தார்கள். ஒரு ஆளுக்கு, ஒரு நாளைக்கு ஒரு மரக்கால் அரிசி, ஒரு செம்புக்காசு என்று கூலி நிர்ணயம் செய்தார்கள். மிக அகலமாக, சதுரமாக கிணறு வெட்டினார்கள். அங்கும் மண் சரியும் அபாயம் இருப்பதைத் தெரிந்து கொண்டார்கள். பெருந்தச்சரிடம் வந்து, கேட்டார்கள். பெருந்தச்சர் ஆள் அனுப்பினார். சதுரம் சதுரமான பட்டைக் கருங்கற்களை சுவர் முழுவதும் ஏற்றி சாந்து பூச, கிணறு வெள்ளை வெளேரென்று மாறியது. இன்னும் அதிகம் நீர் ஊறியது சுற்றுச்சுவர் கட்டி உயரத்தூண் எழுப்பி, குறுக்கே அழுத்தமான கருங்கல் தூண் சாய்த்து, ஒன்றுக்கு நான்கு சகடைகள் பொருத்தி கிராமத்தாரிடம் ஒப்படைக்க ஒருமாதமாகியது.

மக்கள் நெகிழ்ந்து போனார்கள். தொண்டை நாட்டு அந்தணர் களைக் கொண்டாடினார்கள். ஐயன், ஐயன் என்று சுற்றி வந்தார்கள். கணக்குப் போட்டு பார்த்தபோது பெரும் செலவாகியிருந்தது. மெல்ல பெருந்தச்சரிடம் சொன்னார்கள்.

இவ்வளவு செலவு செய்ய வேண்டியதுதான். கிணறு இல்லாமல் என்ன செய்ய. துரிதமாக வேலை செய்வதால் சற்றுக் கூடுதலாக ஆட்கள் சேர்த்திருக்கிறீர்கள். செலவு செய்திருக்கிறீர்கள். இதுபற்றிக் கவலைப்பட ஏதுமில்லை என்று சொல்ல, நிம்மதியானார்கள்.

எங்கள் ஊருக்கும் சதுரக்கிணறு என்று மற்ற கிராமங்கள் கேட்கும்போதுதான் மூவேந்த வேளாரும் குந்தவையும் இதுபற்றி விசாரித்து மூலப்பண்டாரத்திலிருந்து பொருளும், காசும் வரு வித்துக்கொண்டார்கள். ஒரு வருடத்திற்குப் பதினைந்து கிணறுகள் வெட்டப்பட வேண்டுமென்று தீர்மானமாகியது. மருத்துவ மனைகள் சரி செய்யப்பட்டன.

ஒரு தொண்டை நாட்டு அந்தணர் பூக்கள் மீது பிரியமுடையவர். தாவரங்கள் வளர்ப்பதில் விருப்பமுடையவர். அவர் தான் கிராம அதிகாரியாக வேலை பார்த்த கிராமத்தைப் புதியமுறையில் சீரமைக்கத் துவங்கினார். கிராமம் முழுவதும் மரங்கள் நட்டார். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் செடிகளும் கொடிகளும் பராமரித்து வளர்க்கச் சொன்னார்.

அந்த அந்தணர் வந்த ஆறு மாதத்தில் வடிவழகு மாறிப் போயிற்று. கிராமத்தைச் சார்ந்த புறம்படியில் இலுப்பை மரங்கள் நடப்பட்டன. அதுவும் ஆள் உயரச் செடியாக வளர மிகப்பெரிய இலுப்பைக்காடு இருப்பது கண்டு கொள்ள முடிந்தது. மற்ற கிராமங்களும், இதைப் பின்பற்ற முயற்சி செய்தன. அந்த மாதிரி நூற்றுக்கணக்கான விஷயங்களில் அந்த அந்தணர்கள் ஈடுபட்டு நேர் செய்தார்கள்.

ஆனால், வேதம் படித்தல் என்பது சற்று விலகிப் போயிற்று. தஞ்சையின் எல்லைப்புற கிராமங்களிலுள்ள வேதம் படித்த அந்தணர்கள், இவர்களின் வளர்ச்சி கண்டு பொருமினார்கள். வெளியில் போகிறவரைக் கைதட்டி அழைத்து ரிக் வேதத்தில் இந்த சாகை சொல்லு பார்க்கலாம் என்று உரக்கச்சொல்ல, அவர்கள் மௌனமாக நிற்க, இடி முழக்கமாய்ச் சிரித்து அவமானப் படுத்தினார்கள். வேறு எவரோடும் பிணக்கு இல்லையெனினும் தொண்டைநாட்டு அந்தணர்களுக்குத் தஞ்சை அந்தணர்களால் தொந்தரவு தொடர்ந்து இருக்கத்தான் செய்தது. ஆனால், அதை ஒரு குற்றச்சாட்டாகக் கொண்டு போய் எந்தச் சபையிலும் சொல்வதற்குத் தொண்டைநாட்டு அந்தணர்களுக்கு ஒரு தயக்கம் இருந்தது.

அந்தணர்களே, அந்தணர்கள் மீது வழக்கு தொடுப்பதால் இது அசிங்கமாகாதா என்று அமைதியாக இருந்தார்கள். அதைத் தவறாகப் புரிந்துகொண்டு தஞ்சை அந்தணர்கள் தொண்டைநாட்டு அந்தணர் களை அதிகம் தொந்தரவு செய்து வந்தார்கள்.

தஞ்சையிலிருந்து படை திரட்டிக்கொண்டு சக்ரவர்த்தி உடையார் வெகுதொலைவு மேலைச்சாளுக்கியம் நோக்கி போயிருக்கின்ற இந்த நேரத்தில் தொண்டை நாட்டு அந்தணர்களை இன்னும் அதிகமாய் கொடுமைப்படுத்தவும், நிலைகொள்ளச் செய்யவும் தஞ்சை அந்தணர்கள் திட்டமிட்டார்கள். இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருப்பது தெரியவர, இதை ஒரு முக்கியமான விஷயமாக எடுத்துக்கொண்டு, பெருந்தச்சரிடம் காதோடு காதாய் சொல்லலாம்

என்று அங்கு வந்திருந்த அந்தணர்கள் சிலர் திட்டம் வைத்திருந்தார்கள்.

பெருந்தச்சர் வெளியே வந்தார். திண்ணையில் அமர்ந்தார். அந்தணர்களுக்கு வணக்கம் சொன்னார். அமரச் சொன்னார். அங்கங்கே உள்ள இடங்களில் அந்தணர்கள் அமர்ந்தார்கள்.

எதிரே நூற்றுக்கும் மேற்பட்ட அந்தணர்கள் உட்கார்ந்து அவர் முகத்தையே ஆவலாகப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்ததும் குஞ்சரமல்லப் பெருந்தச்சருக்கு சந்தோஷம் ஏற்பட்டது. இங்கு நிற்காதே. அங்கு நிற்காதே, இப்படி நிற்காதே. அப்படி நிற்காதே என்று என்னவெல்லாம் ஆட்டம் காட்டினார்கள். இப்போது அந்த இனம் கைகட்டி அவர் கட்டளைக்குக்குக் காத்திருக்கிறது.

'என்ன சிலை செய்திருக்கிறாய். குஞ்சரமல்லா அம்பாள் சிலையா. அழகு... அழகு... உன் கைவண்ணமே வண்ணம் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டு கண்திறந்த அடுத்த கணம் நீ வெளியே போய்விட வேண்டும். பிறகு உனக்கும், சிலைக்கும் எந்தச் சம்மந்த மும் இல்லை. சிலையினுடைய பராமரிப்பை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். இப்போது அது சிலையல்ல. கடவுள், கடவுளைத் தொட எங்களுக்கு மட்டுமே உரிமை உண்டு. வேலை முடிந்ததா வெளியேறு.' என்று எவ்வளவு வேகமாகக் கட்டளையிட்டிருக் கிறார்கள்.

பஞ்சாமிர்த அபிஷேகம் என்று செய்து அதைச் சரியாக வழித் தெடுக்காமல், நன்கு நீர் ஊற்றி அலம்பால், பிறகு எண்ணெயும் சேர்ந்துவிட கண்களில் மூக்கு துவாரங்களில் உதடுகளில் காதோரங்களில் அழுக்கு திப்பி திப்பியாய் அடைந்துவிட முகமே மாறிப் போய்விடுகிறது. அம்பாளுக்குக் கோரைப்பற்கள் முளைத்தாற்போல இரண்டு பக்கம் அடைந்து போன எண்ணெய் திப்பி இருக்கிறது. இதைச் சரிசெய்ய வேண்டாமா என்றால், வேண்டாம். அம்பாள் அழகாகத்தான் இருக்கிறாள் என்று அலட்சிய மாக நகர்த்தி விடுவார்கள்.

பார்க்கப் பார்க்க மனம் பதறும். எவ்வளவு இனிமையாக சிரித்துக் கொண்டிருந்தவள் இப்படி உக்கிரமாக இருக்கிறாளே, இவள் உக்கிரத்திற்கு இந்த அந்தணர்களா காரணம் என்றுகூடத் தோன்றும் ஆனால், கடவுள் மிகக் கெட்டிக்காரர். எப்போது யாரை முன்னால் வைக்க வேண்டுமென்று விவரம் தெரிந்தவர். யாரை கீழிறக்க

வேண்டுமென்று கணக்கு அறிந்தவர். இது இவர்களுக்குப் போதாத காலம் என்று கருவூர்த்தேவரே சொல்லியிருக்கிறார்.

ஆனாலும் இவர்கள் மிகச் சூட்சுமமான இனம். இவர்களே இரண்டாகப் பிரிந்து எல்லாவற்றிற்கும் ஈடுகொடுக்கும்படியாக ஒரு குழுவும், எதற்கும் ஈடுகொடுக்காமல் விரைப்பாக இருக்கும் ஒரு குழுவுமாகி விட்டார்கள். பிரச்சினைகள் என்று வருகிறபோது அவர்களை அணைத்துக்கொண்டு இவர்கள் போவார்கள். இவர் களை அணைத்துக் கொண்டு அவர்கள் போவார்கள்.

என்ன சொன்னாலும் முன் இருந்த கம்பீரம் இப்போது இல்லை. குஞ்சரமல்லரின் உத்தரவுக்காகத் தான் இவர்கள் காத்திருக்கிறார்கள்.

குஞ்சரமல்லர் நிதானமாகக் களிப்பாக்கை உடைத்து தூளாக்கி வெற்றிலையோடு சுருட்டி சுருட்டி போடத் துவங்கினார். அவர் வெற்றிலை மெல்ல சிறிதுநேரம் ஆகுமென்று எல்லோருக்கும் தெரிந்தது. அந்தணர்களில் வலப்பக்கம் மத்தியில் அமர்ந்தவர்கள் மெல்லிய குரலில் பேசத் துவங்கினார்கள்.

''குஞ்சர மல்லரைப் பார்த்தாயா... அரசர் உட்காருவது போல இல்லை.'' என்று ஒருவர் ஆவலோடும், வியப்போடும் பேசினார்.

''ஆஹா.. அப்படித்தான் இருக்கிறது. ஆனால், அதிகாரம் கொடுத்து உன்னை அங்கே உட்கார வைத்தாலும், இப்படித்தான் நிதானமாக வெற்றிலை அசைபோட்டு அரசனாகக் காட்சி யளிப்பாய்.''

இன்னொருவர் பதில் சொல்ல, மற்றவர்கள் மெலிதாய் சிரித்தார்கள்.

''குஞ்சரமல்லர் நல்ல நிர்வாகியா.''

''இல்லையென்றால் அவருக்குக் கீழ் இத்தனை சிற்பிகள், இவ்வளவு பெரிய வேலையைச் செய்திருக்க முடியுமா.''

''அவர் நிர்வாகத் திறமை உள்ளவர்தான். அந்த நிர்வாகம் இந்த நிர்வாகத்திற்கு முன்னால் எடுபட முடியுமா. வேலை தெரிந்த நூறு பேர். செய்ய வேண்டியது ஒரேயொரு வேலை. நிர்வாகம் எளிது. பரந்துபட்ட ஒரு தேசத்தில் பல்வேறு பிரச்சினைகள் மோதும்போது நிர்வாகம் மிகக் கடினம்.''

''என்ன சொல்ல வருகிறீர்.''

''இவரிடம் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்களே அதிகாரத்தை என்ற கவலையோடு பேசுகிறேன்.''

''ஏன். உன்னிடம் கொடுக்க வேண்டுமென்று ஆசையா.''

''அவர் வெறும் அதிகாரி. ஆனால், அதிகாரம் யாரிடம் இருக்கிறது. நம்மிடம். அவன் ஒரு மரத்தை வெட்டுவென்று சொல்லலாம். நாம் போய் வெட்டுவதாக ஏற்பாடு செய்துவிட்டு, மரத்தை வெட்ட முடியவில்லை. கோடாரி உடைந்து விட்டது என்று பதில் சொல்லலாம். மரத்தை வெட்டுவதும், வெட்டாததும் நம்முடைய விருப்பமே தவிர. அவருடைய கட்டளை அல்ல. அதாவது சுருக்கமாக உண்மையைச் சொல்லப் போனால்..

இன்னொரு அந்தண இளைஞன் நீட்டி முழக்கிப் பேச, ''இப்போது சோழதேசத்தின் அதிகாரம் மொத்தமும் நம்முடைய கையிலே இருக்கிறது. அதாவது உண்மையைச் சுருக்கமாகச் சொல்லப் போனால்.. மறுபடியும் அந்த இளைஞன் சொல்ல ''ஆமாம். சோழதேசத்தின் மாமன்னர்கள் நாம்தான். இவர் ஒரு தனித்த மனிதர். மன்னரல்ல. திறமை வாய்ந்த ஒரு குழு சிம்மாசனத்திலே அமர்ந்திருக்கிறது. சோழதேசத்தை ஆட்சி செய்கிறது.''

இன்னொருவர் நடுவே புகுந்து பேசினார்.

''ஆமாம். இப்படி ஒரு குழுவாக ஆட்சி செய்வது தான், பிற்பாடு இந்தத் தேசத்தில் வரும் என்று தோன்றுகிறது. மன்னர் முறை ஒழிக்கப்படும். தனிப்பட்ட மனிதரின் விருப்பு, வெறுப்புகள் எடுத்துக் கொள்ளப்படமாட்டாது.''

''குழுவாக ஆட்சி செய்வதில் குழப்பம் வருமே.''

''வரும். நான் நல்லது செய்ததைத் தடுத்தாய் அல்லவா. நீ நல்லது செய்வதைத் தடுப்பேன் என்று போட்டி மனப்பான்மை ஏற்பட்டு விட்டால், எந்த நல்லதும் குழு ஆட்சியில் நடைபெற முடியாமல் போய்விடலாம். ஆனால், தனி மனித ஆட்சியில் அவன் நல்லவனாக இருந்தால் மிக உத்தமான பலன்களும் தீயவனாக இருந்தால் அதர்மமான பலன்களும் ஏற்படும். சக்ரவர்த்தி உடையார் மிக உத்தமர். எனவே சோழதேசம் செழிப்பாயிருக்கிறது.''

''எப்போது திரும்பி வருவார்கள்.''

''ஆறு மாதமாகும்.''

''அதுவரை முழு அதிகாரம் செய்யலாமல்லவா.''

''தாராளமாகச் செய்து கொள்ளலாம். அதுமட்டுமில்லாது நம்மை நன்றாக நிலைநிறுத்திக் கொள்ளலாம்.''

''நன்றாக நிலை நிறுத்திக் கொள்வதென்றால்...

''அதிகம் விளைநிலங்கள் வாங்காமல், சிறிதளவு விளை நிலங்கள் வாங்க வேண்டும்.''

''பிறகு.''

''சொந்த வீடு ஒன்று வைத்துக்கொள்ள வேண்டும்.''

''பிறகு.

''மாடு கன்றுகள் அவசியம்.''

''பிறகு.''

''தங்கக் காசுகளாக சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள். மறைத்து வைத்துக் கொள்ளுங்கள். வெளியே ஏழ்மையாக, எளிமையாக இருங்கள். வைரக்கடுக்கன், தங்கச் சங்கிலி, பெரிய கங்கணம், கால்தண்டை என்று இல்லாமல், நகைகளை மனைவிக்கும், மகளுக் கும் கொடுங்கள். உங்கள் செல்வச் செழிப்பு அங்கு தெரியட்டும்.''

''ஆஹா... ஆஹா.. இந்த இனத்தின் ஒவ்வொரு விதையும் அற்புத மானவை. ஒவ்வொரு வகையில் வீர்யம் கொண்டவை. உன்னு டைய இந்தப் பேச்சு மிகமிக அருமையானது. நாம் எளிமையாக இருந்துகொண்டு நம் வீட்டை வளமையாக வைத்துக் கொள்வது என்பது ஒருமிகப் பெரிய தந்திரம்.''

''நமக்கெதற்கு தங்கமும், வெள்ளியும். நல்ல சாப்பாடு, சுகமான போகங்கள் என்று இருந்து விடலாம். நல்ல போகம் எது தெரியுமா நண்பனே.''

சற்றுத் தொலைவில் உட்கார்ந்திருந்த அந்தணர் தொலைவி லிருந்து பேசினார்.

''அதிகாரம்தான் மிகச்சுவையான போகம். அதிகாரம்தான் எல்லா போகத்திலும் சுவை.'' கிட்டத்தட்ட அங்கிருந்த அத்தனை பேரும் பெரிதாய் ஆஹாகாரம் செய்தார்கள்.

''இன்னும் ஆயிரம் வருடங்களுக்கு இந்த இனம் வெற்றி நடைபோடும் என்பதில் எனக்கு நெல் முனையளவும் சந்தேக மில்லை.''

''எவ்வளவு தெளிவான யோசிப்பு.''

''மறுபடியும் சொல்லிப்பாருங்கள். அதிகாரம்தான் சுவையான போகம். அந்த போகம்தான் மிகப்பெரிய சுவை. அந்தப் பையன் முகத்தைப் பார். உடம்பிலும், தலையிலும் எண்ணெய் காணாது கண்ணிலே உயிரை வைத்துக்கொண்டு நடைபிணம் போல் சுற்றி

வந்தான். யார் சாப்பிட்டாலும் போய் நின்று ஆவலாகப் பார்ப்பான். இப்படிப் பார்க்காதே என்று சொல்லியும் அவனால் பார்க்காமல் இருக்க முடியவில்லை. தனக்குத்தானே உணவு வகைகளின் பெயரை உரக்கச் சொல்லிக் கொண்டிருப்பான். அவ்வளவு பசி. இன்று அவன் எவ்வளவு திடமாய் இருக்கிறான் பார். வெள்ளியில் கோர்த்த ருத்ராட்சம். வெள்ளி அரை ஞாண் கயிறு. காதுகளில் தங்க வளையம். நெற்றியில் சந்தனக்கீற்று. பிருஷ்டம் பருத்துவிட்டதைப் பார். எப்போது திருமணம் செய்து கொள்ளலாம் என்று காதோரம் ரகசியமாகக் கேட்கிறான். நிலைமை எப்படி ஆகிவிட்டது பார்த்தாயா.'' என்று அவர் சொல்ல, மற்றவர்கள் எல்லோரும் அந்தப் பையனைப் பார்த்து விட்டு வாய்விட்டுச் சிரித்தார்கள். அந்தச் சிரிப்பில் ஆனந்தம் பொங்கி வழிந்தது.

எல்லோருக்கும் திருமணம் செய்துகொள்ள வேண்டும். சுகமாக வாழவேண்டும். வீடு, மாடு, கழனி, காடு என்று வாங்க வேண்டும் என்ற ஆவல் அதிகரித்து, அது கண்களின் வழியே பிரகாசித்தது.

செல்வத்தோடு ஸ்நேகம் கொண்டவர்கள் தந்திரமாக இருப்பார்கள். அவர்களுக்கு எப்போது எவ்வளவு கோபித்துக் கொள்ள வேண்டும். எப்போது எவ்வளவு அன்பு செய்ய வேண்டும் என்ற கணக்கு வந்துவிடும்.

அந்த அந்தணர்கள் எல்லோரும் கணக்காளர்களாக மாறினார்கள்.

அடுத்த வேளை உணவு பற்றியோ, வசதி பற்றியோ எந்தக் கவலையும்படாமல் வேதம் சொல்லுவதையே வாழ்க்கையாக இருந்த அந்தணர்கள் குறைந்து போனார்கள்.

தாங்கள் வழிபாடு செய்தும், மக்களை வழிபாடு செய்யச் சொல்லியும், ஊரை வழிநடத்தியும் இருந்த அந்தணர்கள் அனுசரணையாக நடக்கவும், முன்பின்னாக வளைந்து கொள்ளவும், நல்லது கெட்டது என்பதை விட, தர்மம், அதர்மம் என்பதைவிட தன் இருப்பே முக்கியம் என்பதாய் மாறிப்போனார்கள் மேலோட்டமாக தர்மம் பேசுகின்ற பேச்சு இருந்தது. ஆனால், அடிமனதில் தங்களை உறுதிப்படுத்திக்கொள்ள அவர்கள் தீர்மானித்தார்கள். இனியும் நாடோடிகளாக வாழ முடியாது. யார் அடுத்த வேளைசோறு போடுவார்கள் என்ற தீர்மானத்திற்கு வந்தார்கள்.

அரசர்களாலும், செல்வந்தர்களாலும், வியாபாரிகளாலும் அழைத்து அழைத்து மரியாதை செய்யப்பட்ட அந்த இனம், இம்மாதிரியான அழைப்புகளும், மரியாதைகளும் குறைந்து

போனதால் தங்கள் மரியாதையை, தங்கள் செயல்மூலம் காப்பாற்றிக் கொள்ள முடிவு செய்தார்கள். அரசாங்க அதிகாரிகளாய் மாறினார்கள்.

ஆனால், பெருந்தச்சரான குஞ்சரமல்லருக்கு மனம் முழுவதும் கோயில் கணக்குகளிலேயே ஈடுபட்டிருந்தது. தஞ்சை மாநகரத்தின் நிர்வாகத்தை உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் கொடுத்துவிட்டுப் போனபோது பெருமிதமாக இருந்தாலும் என்ன பிரச்சினை வரும். எப்படி நாம் அதை எதிர்கொள்வோம் என்ற கேள்வி மிகப்பெரிதாக இருந்தது.

கோயிலின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள அளவுகள் ஓலை நறுக்குகளில் எழுதி வைக்கப்பட்டிருந்தாலும், சொடுக்கு நேரத்தில் அந்த ஓலையை எடுத்து வர முடியுமென்றாலும், அவை அனைத்தும் பெருந்தச்சர் குஞ்சரமல்லரின் மனதுக்குள் மனனம் செய்யப்பட்டிருந்தன. மனம் வேறு எதிலும் ஈடுபடாமல் கடவுள் விஷயத்திலேயே ஈடுபட, இந்த மனனம் கலையாமல் இன்னும் பலமாக அமர்ந்துவிடுகிறது. அதனால் கோயில் தவிர வேறு எதையும் மனதில் இருத்திக் கொள்ளமுடியவில்லை. கோயிலில் வேலை செய்பவர்களுடைய கூலி விவரங்கள்கூட அவருக்குப் பதியவில்லை.

இந்த நிலையில் கருந்தட்டாங்குடியிலிருந்து கம்மாளர்கள் குடிபெயர்ந்து வேறு இடத்திற்குப் போய்விட்டார்கள். அந்த நிலம் இப்போது யாருக்குச் சொந்தம். கம்மாளர்களுக்கா அல்லது வேறு யாரேனும் அந்த இடத்தை ஆக்ரமித்துக் கொள்ளலாமா என்ற கேள்வி வரின் வெறுமே திகைத்துதான் அவரால் உட்கார்ந்திருக்க முடிகிறது. பதில் சொல்ல முடியவில்லை.

ஆனால், நடுநாட்டைச் சேர்ந்த அந்தணர் ஒருவன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். என்ன என்று அவர் வினவியபோது எழுந்து அந்தப் பகுதிக்கு என்னை கிராம அதிகாரியாக போட்டிருக் கிறார்கள் என்று சொன்னான்.

''அப்படியா அதனால் என்ன.'' என்று அப்பாவியாய் அவர் கேட்டார்.

''இந்தப் பிரச்சினையை எப்படி எதிர்கொள்வது என்று உங்களுக்கு நான் ஆலோசனை சொல்லட்டுமா.'' கை கூப்பியபடி அவன் விண்ணப்பித்தது பிடித்திருந்தது.

''சொல்லேன்.'' என்று ஆவலாகக் கேட்டார்.

''கருமார்கள் போருக்குப் போயிருக்கிறார்கள். அரசருக்குத் துணையாகப் போயிருக்கிறார்கள். போர் முனையில் வில்லும், வாளும், அம்பும் செய்வதற்காகப் போயிருக்கிறார்கள். அவர்கள் திரும்பி வந்தால் எங்கு தங்குவார்கள். அந்த இடத்தைச் செப்ப னிட்டு, சீர்செய்து கருமார்களுக்காக வைத்திருப்பதுதான் சரி. வேறு எவரும் எந்தக் காரணம் கொண்டும் இந்த இடத்தை அபகரிக்கக் கூடாது. வேறு எவரும் அந்த இடத்தை உபயோகப்படுத்திக்கொள்ள முடியாது. உபயோகப்படுத்திக் கொள்ள முடியாத அளவுக்கு அந்த இடம் தொடர்ந்து எரிந்த தீயினால் கறுப்பாக மாறியிருக்கிறது. பூமி சூடாக இருக்கிறது.

வேளாளரோ, குயவரோ குடியேற முடியாது. அந்த மண், கருமார்கள் மட்டுமே உபயோகப்படுத்துகிற மண்ணாக இருக்கிறது. குறிப்பாக பொரிந்து போய் சூடாக இருக்கிறது. எனவே அதைச் செப்பனிட்டு இது கருமார் நிலம் என்று எழுதி வைத்துவிடலாம்.''

''ஒருவேளை கருமார் வந்து எங்களுக்கு இந்த நிலம் தேவையில்லை. வேறு நிலம் கொடுங்கள் என்று கேட்டால்.''

''கொடுத்துத்தான் ஆக வேண்டும். போர் வீரர்களுக்குண்டான சலுகை மொத்தமும் கருமார்களுக்கும் கிடைக்கும். கிடைக்கும் வண்ணம் பேசுவார்கள். கேட்பார்கள். நமது இளவரசர் இராஜேந்திரரும் அவ்விதம் செய்ய வேண்டுமென்று ஒப்புதல் கொடுப்பார். எனவே, அவர்களால் நிலம் புறக்கணிக்கப்பட்டால் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.''

''அந்த இடத்தைச் செப்பனிட்டு என்று சொன்னாயே. செப்பனிட்டு என்றால் என்ன.''

''அந்த உலையைச் சுற்றி குடியிருப்புகள் இருக்கின்றன. இதனால் குடியிருப்புகளுக்குள் புகை போகிறது. இப்போது அப்படிச் செய்யாது குடியிருப்பு ஒரு பகுதியாகவும், உலை இன்னொரு பகுதியாகவும் இருத்தல் நல்லது. தெற்கத்திக்காற்றும், வடக்கத்திக் காற்றும் இருக்கும் போக்கில் வீடுகள் கட்டிவிட்டால் நன்றாக இருக்கும்.''

''நன்றாக இருக்கிறதே உன் யோசனை.''

''நீங்கள் அனுமதியளித்தால் வீடுகள்கூட கட்டிக் கொடுத்து விடலாம்.''

''எதற்கு வீடுகள்.''

''கருமார்கள் திரும்பி வந்தால் அவர்கள் தங்க வீடுகள் வேண்டுமல்லவா.''

''ஆஹா.. இதுவும் நன்றாக இருக்கிறதே. அவர்கள் சந்தோஷப்படுவார்கள். மன்னரிடம் தெரிவிப்பார்கள். காலாகாலத்திற்கும் என்னை நினைத்துக் கொள்வார்கள்.''

''ஆமாம் ஐயா. அவர்கள் உங்கள் குலமல்லவா. உங்களில் ஒரு பிரிவினரல்லவா.''

''ஆமாம்.. ஆமாம்.. அவர்கள் எங்களில் ஒரு பிரிவினர்தான். நாங்கள் கல்தச்சர். அவர்கள் கருமார். அவ்வளவுதான் வித்தியாசம். எனவே, நீங்கள் இந்த உதவி செய்யலாம். தம்பி..

குஞ்சரமல்லர் யோசித்தார்.

ஒரே ஜாதிக்குள் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து கொண்டார் என்று வந்துவிடுமோ.

இங்கு ஜாதியென்ன, போருக்குப் போய் வந்தவருக்குப் பரிசுகள் வேண்டாமோ. மரியாதைகள் செய்ய வேண்டியது மரியாதையல்லவா. அப்படி இருந்துவிட்டுப் போகட்டுமே.

''அப்படியா, கருமார்கள் மட்டும் போகவில்லை. கருமார் பெண்டிரும் பாரவண்டிகளில் மேலைச்சாளுக்கியம் வரை போயிருக்கிறார்கள். கருமார் பெண்கள் இல்லாமல் கருமார்கள் தங்கள் வேலையைச் செய்வதில்லை. மண் குழைக்கவும், துருத்தியடிக்கவும் சட்டென்று நீர்பாய்ச்சவும் பெண்கள் தேவைப்படுகிறார்கள். அந்த வேலைகளில் தேர்ந்தவர்களாய் இருக்கிறார்கள். கருமார் வேலைகளில் ஆண்கள், பெண்கள் வேலை என்றிருக்கிறது. இவர்கள் இரண்டு பேரும் சேர்ந்தால்தான் நல்லபடியாக வேலை நடக்கிறது. எனவே, வீடு கட்டித்தருவது என்பது மிக உயர்வான விஷயமாகக் கருதி உங்களைப் பாராட்டுவார்கள்.''

''அங்கு எத்தனை வீடு கட்டலாம்.''

''தேவரடியார்களுக்கு வீடுகட்டித் தரவில்லையா... அதேபோல் கல்லும், களிமண்ணும் கலந்து சுவர் எழுப்பி ஓலைக்கூரைப் போட்டுவிட்டால் போயிற்று.''

''எத்தனை வீடுகள்.''

''முப்பது குடும்பங்கள். முப்பது வீடுகள்.''

''எவ்வளவு நாளில் முடியும்.

''ஒரு பெரிய குழு வேலை செய்தால் பத்து நாட்களில் முடித்து விடலாம். இப்போது இருப்பது போல் இருட்டான வீடுகளாக இல்லாமல் நல்ல காற்று வசதியோடு கூடிய உயரமான சுவருடைய வீடுகளாக அவை இருக்கலாமே.

''ஆமாம். வசதியாகவே செய்து விடலாம்.

''யார் செய்வது.

''உன்னால் செய்ய முடியுமா.''

அந்த நடுநாட்டு அந்தணன் மெல்ல தலையசைத்தான்.

''சரி செய்து விடு. இதற்கு எவ்வளவு காசு வேண்டுமென்று கணக்கு போட்டுச் சொல்லிவிடு.

சட்டென்று ஒரு ஓலையை உருவி எடுத்துக் கொடுத்தான்.

''இது அந்தக் கணக்கு.

''முன்னமே எழுதி வைத்தாயா.''

''ஆமாம்.''

''நான் அனுமதி கொடுப்பேன் என்று தெரியுமா.''

''உங்களுக்கு வேறு வழியில்லை என்பதை, நான் உணர்த்து வேன்.''

அவர் திகைத்தார்.

''ஒரு வேளை இப்படிக் கேட்டால், நான் உடனடியாகப் பதில் சொல்ல வேண்டுமென்று ஒரு கணக்கு போட்டு வைத்திருந்தேன்.''

பெருந்தச்சருக்கு ஆச்சரியம் அதிகரித்தது.

புரளும் கல்லைப் புறந்தள்ளு என்று சொல்வார்களே. இவன் தானாகப் புரளும் கல்லாக அல்லவா இருக்கிறான். இவனை வைத்திருப்பதா, புறந்தள்ளுவதா என்று யோசித்தார்.

அவன் முகத்தில் எந்த சலனமும் காட்டாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் முப்பது வீடுகள் கட்டி முடித்து கம்மாளர்களுக்குப் பரிசளித்தால் பெரும் புகழ்தானே. தனக்கு மரியாதை தானே.

சக்ரவர்த்தி உடையார்தான் இதைச் செய்யச்சொன்னார் என்று சொல்லிவிட்டாலும், உள்ளூர நம்முடைய ஜனங்கள் நம்மைக்

கொண்டாடுவார்கள் அல்லவா. அந்தக் கம்மாளர் குடியிருப்புகளைக் கட்டித்தரத்தான் வேண்டும்.

அவர் உள்ளே தீர்மானம் செய்தார். ஆலோசனை சொன்ன அந்தணரை அழைத்து உள்ளே கூட்டிக் கொண்டு போய், ஒரு பை நிறைய பொற்காசுகள் கொடுத்தார். நல்ல நாள் பார்த்து வேலையைத் துவங்கு என்று கட்டளையிட்டார்.

அந்த அந்தணன் போன பிறகு, இன்னொரு அந்தணனை அழைத்தார். அந்தக் கருமார்புரத்து கிராம அதிகாரியான அந்தணருக்கு நூறு கழஞ்சு கொடுத்திருக்கிறேன். நீ தஞ்சைப் புறம்படியைக் கவனித்துக் கொள்கிறாய் அல்லவா. அவ்வப்போது ஒரு நடை அந்த கருந்தட்டாங்குடியைப் பார்த்து என்ன பணிகள் நடந்து வருகின்றன என்று கவனித்து எனக்கு ரகசியமாகச் சொல் என்று கட்டளையிட்டார்.

அவன் பணிவாக சரியென்று தலையசைத்தான். விறுவிறுவென்று அவர்வீட்டு வாசலுக்குப் போனான். தஞ்சை புறம்படியை நோக்கி நடந்தான். அங்கு காத்திருந்த அந்த கருமார்புரத்து அந்தணனைப் பார்த்து சிரித்தான். இருவரும் கட்டித்தழுவிக் கொண்டார்கள்.

''உன்னை வேவுக்காரனாக நியமித்துவிட்டாரா.''

''ஆமாம்.''

''நல்லது. திறம்பட உன் வேவுப் பணியைச் செய். என்று சொல்லிச் சிரிக்க. இரண்டு அந்தணர்களும் கைகோர்த்துக் கொண்டு நடந்தார்கள்.

அரைத் தூக்கத்திலிருந்த பெருந்தச்சருக்குச் சட்டென்று தூக்கிவாரிப் போட்டது. கிருஷ்ணன் ராமனான பிரம்மராயரின் வேவுப்படைகள் யார் இருக்கிறார்கள் என்று தன்னுடைய ஆட்களை விட்டு பார்த்து வரச் சொன்னார்.

வயதான கிழவர் வந்து நிற்க, கருந்தட்டாங்குடி அந்தணர்களையும், அவரை வேவு பார்க்கும் அந்தணரையும் பெயர் சொல்லி இவர்களைப் பற்றிக் கவனித்து எனக்கு விஷயம் சொல் என்று உத்தரவிட்டார். காசு கொடுத்தார். அந்த ஒற்றன் சரியென்று தலையசைத்துவிட்டுப் போனான்.

இத்தனை அந்தணர்களுக்கு முன்னாலும், இது தேவைதானா என்ற மெல்லிய சோகம்தான் அவரை வாட்டி எடுத்தது.

''என்ன பிரச்சினைகள் இருக்கின்றன.'' என்று அவர் கேட்க சில அந்தணர்கள் எழுந்து நின்றார்கள்.

நெல் விலை, வெல்லத்தின் விலை, மாடுகளுக்கு நோய், கருமார் இல்லாத குறை, தச்சர்களின் தேவை. கல்லணைக்குப் போகும் வழியே காட்டு யானைகள் தொந்தரவு, தஞ்சையின் புறம்படியில் பாதைகள் செப்பனிடப்பட வேண்டும். சேறாக இருக்கிறது என்ற வேண்டுகோள் என்று பலதும் எழுந்தன. மடமட வென்று சகலத் திற்கும் பதில் சொன்னார். ஆட்களையும் நியமித்தார். அரை நாழிகையில் எழுந்து குளிக்கப் போனார்.

கடவுளே.. இதென்ன தண்டனை என்று தலை குனிந்து உட்கார்ந்து கொண்டிருந்தார். இரண்டு மனைவியரும் அவருக்கு நீர் வார்த்து முதுகு தேய்த்து குளிப்பாட்டினார்கள். ஆனால் அவருடைய மனம் எந்தவித சுகத்திலும் ஈடுபட மறுத்து கோயிலையே பற்றிக் கொண்டிருந்தது.

உன்னதமான கலைஞர்களுக்குப் பெரிய அதிகாரங்களோ, நிறைய செல்வங்களோ, அயனசயன சுகமோ தேவையில்லை. மாறாய் அவர்களை அவர்கள் பணியில் ஈடுபட விட்டால் போது மானது. அவர்கள் பணிக்கு எந்தவிதமான இடைஞ்சலும் செய்யா மல் ஆதரவாக இருந்தால், அதுவே அவர்களுக்கு மிகப்பெரிய சுகம். ஆனால், துரதிர்ஷ்டவசமாகப் பெருந்தச்சர் குஞ்சரமல்லருக்கு அப்படிப்பட்ட சுகம் அமையவில்லை. வேலையிலே ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போதே திரும்பத் திரும்ப அரசாங்க அழைப்புகள் அவரைத் தொந்தரவு செய்யத்தான் செய்தன.

## 159

நிசும்பசூதனி கோயிலில் கூட்டம் அதிகரித்தது. போருக்குப் போயிருக்கும் தன்னுடைய கணவன் மார்களும், தமையன் மார்களும், சிற்றப்பன்களும், பெரியப்பன்களும், தகப்பன்களும், மகன்களும் எந்தவித ஊறும் நேராமல் மீண்டு வர வேண்டுமென்று பிரார்த்தனை செய்தபடி, நோன்பு இருந்தபடி பல மறக்குல மங்கையர்கள் கோயிலில் சுற்றிச்சுற்றி வந்தார்கள். மண்டபத்தில் தவமிருந்தார்கள்.

அந்தக் கோயில் பகுதிக்கு அதிகாரியாக இருந்து அந்தணன் இந்தக் கூட்டம் பார்த்துவிட்டு வியந்தான். மனம் நெகிழ்ந்தான்.

நிசும்பசூதனி கோயில் சுற்றியுள்ள இடங்களைச் சமன்செய்து ஆற்றுமண் பரப்பி மேலே உயரமாகப் பந்தல் வேய்ந்தான். இரண்டு பானைகளில் குடிதண்ணீர் வைத்தான். இன்னும் தின்பண்டங்கள் விற்கச் சொல்லி அக்கம் பக்கம் உள்ளவர்களை ஊக்குவித்தான். வாழைத்தார் வாங்கி வந்து அவன் மனைவியை விற்கச் சொன்னான். காசுக்கு இரண்டு வாழைத்தார் வாங்கினான். கூட ஒரு காசு லாபம் கிடைத்தது.

அவன் மனைவி சந்தோஷமானாள்.

தன்னுடைய மகனை தன்கூட உதவிக்கு வைத்துக் கொண்டான். மகளை அவள் வியாபாரத்திற்குத் துணையாக வரச்சொன்னான்.

அந்தக் குடும்பமே கடுமையாக உழைத்தது. நல்ல வாழைப்பழம், குடிக்கத் தண்ணீர் என்று ஏற்பாடுகள் செய்ததும் அந்த அந்தணனை மறக்குலப் பெண்கள் பாராட்டினாரக்ள்.

''இவற்றுக்கெல்லாம் இங்கே அல்லாடிய காலங்கள் போய் விட்டன. எப்பொழுது அந்தணர்கள் நிர்வாகத்தை எடுத்துக் கொண்டார்களோ, அப்பொழுதே சகலமும் சரியாகவிட்டது. நீங்கள் அந்தணர். உங்களிடம் ஒரு கேள்வி கேட்கட்டுமா.''

ஒரு மறக்குலப் பெண்மணி கவலையோடு விசாரித்தார்.

''கேளுங்களம்மா.''

அவன் கைகட்டிக் கொண்டு பதில் சொன்னான்.

''அரசரும், மற்றவர்களும் ஊத்தை அடையாமல் திரும்பி வர ஏதேனும் பூஜாவிதிகள் இருக்கின்றனவா. ஹோம யாகங்கள் இருக்கின்றனவா. அப்படிச் செய்யலாமா'' என்று விசாரிக்க, அந்தணன் சட்டென்று விழித்துக் கொண்டான்.

''நிச்சயமாக இருக்கிறது. ஆயுஷ்ஹோமம், மிருத்யஞ்சஹோமம், ஆவஹந்தி ஹோமம் என்று பலதும் இருக்கின்றன.''

''ஐயா, அவற்றைச் செய்தால் என்ன.''

''பொருள் செலவாகுமே.

''நாங்கள் ஏற்பாடு செய்கிறோம்.''

மறக்குலப் பெண்களிடையே அந்தணர்கள் செய்கின்ற ஹோமங்கள் பற்றி பேச்சு எழுந்தது.

மறக்குலப் பெண்கள் கைவளையல்களைக் கழற்றிக் கொடுத்து, காசுமாலையைக் கழற்றிக் கொடுத்து குழுவாகச் சேர்ந்து கொண்டார்கள். நகைகளை அந்த அந்தணர்களிடம் கொடுத்தார்கள். அந்த அந்தணன் அதைக் கொண்டு போய் கடைத்தெருவில் விற்று பொற்கழஞ்சுகளாக மாற்றிக் கொண்டு வந்தான். மற்ற நடுநாட்டு, தொண்டைநாட்டு அந்தணர்களோடு என்ன செய்வது என்று கலந்தாலோசித்தான்.

''இதை நான் செய்வதைவிட வைதீகர்களான தஞ்சை அந்தணர்கள் செய்தால் நன்றாக இருக்கும். வேதமே வாழ்க்கை என்று இருக்கின்ற அந்தணர்கள் செய்தால் மிக நன்றாக இருக்கும்.

''ஆனால், அந்த அந்தணர்கள் நம்மீது கோபமாக இருக்கிறார்கள். அந்தக் கோபத்தைத் தணித்து, இதுவொரு பொதுகாரியம். சோழ தேசத்திற்கு நலம் விளைவிக்கும் செயல் என்று அவர்களை அழைத்து வந்து ஹோமங்கள் செய்ய வேண்டும்.

''அப்படிச் செய்ய மறுத்தால்..

இன்னொரு அந்தணர் கேட்டார்.

''அது அரச குற்றமாகும். அரசரும், மற்றவரும் ஊத்தையடையாமல் திரும்பி வரவேண்டுமென்ற விஷயத்திற்கு யாகம் செய்வதை யார் மறுக்க முடியும். அது தேசத்துரோகமல்லவா. ராஜத்துரோகமல்லவா.''

''சரி. இது ஒரு புறமிருக்கட்டும் நாம் தஞ்சை அந்தணர்களை நாடுவானேன். நம்மால் இதைச் செய்ய முடியாதா.''

''இல்லை. நாம் சற்று திசை திரும்பி விட்டோம். இதிலே தடுமாற்றங்கள் வரும். தடுமாற்றமாக இதைச் செய்யக்கூடாது. இதை இடையறாது செய்து கொண்டிருப்பவர்கள். அக்னியோடு இடையறாது சம்பந்தப்பட்டவர்கள். அவர்கள் செய்வது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. மருவூர் அந்தணர்கள் சாக்த உபாஸகர்கள். அவர்கள் இம்மாதிரி ஹோமங்கள் செய்வதில் வல்லவர்கள். அங்கே மாதம் இருமுறை எவர் உதவியையும் எதிர்பார்க்காது சண்டிஹோமம் நடைபெறுகிறது. அவரிடம் போய் ஹோமம் செய்யச் சொன்னால் என்ன.''

''மருவூர் அந்தணர்கள் பெரும்பான்மையினர் யுத்தகளம் நோக்கிப் போயிருக்கிறார்கள். அரசரைத் திருப்திப்படுத்த பயணப் பட்டிருக்கிறார்கள்.''

''இருக்கலாம். ஆனால், வயதானவர்கள் போய் விடுவார்களா? அங்கு வயதானவர்கள்தான் சண்டி ஹோமம் செய்கிறார்கள்.''

''மருவூர் அந்தணர்களின் தலைமையின் கீழ் வேறு அந்தணர் களையும் வரவழைத்துச் செய்தால் என்ன.''

''வேறு அந்தணர்கள் என்றால்.

''பழமர்நேரி அந்தணர்கள். அந்தப் பழமர்நேரி அந்தணர்கள் மந்திரஜபம் செய்வதில் வல்லவர்கள். அவர்கள் மந்திரஜபம் செய்தால் பலிக்கிறது என்று ஒரு வழக்கு உண்டு. இடது கை உயர்த்தி ஆசீர்வாதம் செய்பவர்கள். வலது கையில் இடையறாது அக்னி ஹோத்ரம் செய்வதால் அந்தக் கையால் ஆசீர்வாதம் செய்யக்கூடாது என்ற கொள்கையுடையவர்கள். வாக்குபலிதம் உள்ளவர்கள். செயல்திறன் மிக்கவர்கள். கூர்மையானவர்கள்.''

''இதுவொரு நல்ல அருமையான யோசனை. அடுத்தது இதை எங்கே செய்வது. பழமர்நேரியில் செய்யவேண்டுமென்று அவர்கள் சொல்வார்கள்.''

''இல்லை. கூடாது. நிசும்பசூதனி கோயில் வாசலில் இந்த ஹோமங்கள் செய்யப்படவேண்டும்.''

நடுநாட்டு அந்தணர்கள் யோசனை சொன்னார்கள்.

''நல்லது. நிசும்பசூதனி கோயில் வாசலில் செய்ய வேண்டு மென்று நீங்கள் வற்புறுத்தினால், பழமர்நேரி அந்தணர்கள் சண்டி ஹோமம் செய்கிறேன் என்று சொல்வார்கள். அது சரியா, தவறா.''

''ஆஹா.. சண்டிஹோமம் நல்லதாயிற்றே. போரில் வெற்றி பெற சண்டிஹோமம் செய்வது வழக்கம்தானே.''

''எவ்வளவு சண்டிஹோமம்.''

''என்ன கேள்வி. புரியவில்லையே.''

ஒருவர் கேட்பதற்கு மற்றவர் பதில் சொன்னார்.

''எவ்வளவு சண்டிஹோமம் என்றால் என்ன அர்த்தம்.

எல்லோரும் வியந்தார்கள்.

''சண்டிஹோமம் தொடர்ந்து செய்தால் என்ன.''

எவ்வளவு சண்டிஹோமம் என்று கேள்விகேட்டவர் உரத்த குரலில் முழக்கமாய்ப் பேசினார்.

தொண்டை நாட்டு, நடுநாட்டு அந்தணர் சபை திகைத்து நின்றது.

''ஆமாம். செய்தால் என்ன.''

முகம் மலர்ந்தது..

''செய்தால் என்ன..

எல்லோருமே உற்சாகமாக எழுந்தார்கள்.

'ஆனால், இந்தப் பொருள் போதாதே.

இதை ஆரம்பித்து வைத்த அந்தணர் பதட்டமாய்ச் சொன்னார்.

''பொருளுக்கென்ன போய் பெருந்தச்சரிடம் கேட்போம். நாம் எல்லோரும் யாசகம் கேட்போம். அரசரின் பொருட்டு தரச்சொல்லி வியாபாரிகளிடம் கேட்போம்.''

''நல்லது.: நல்லது..'' என்று எல்லோரும் ஆரவாரித்தார்கள்.

''ஆனால், சரியாகத் திட்டமிடப்பட வேண்டும். உடனடியாக எந்தவித யாசகத்திற்கும் இறங்கி விடாதீர்கள். அந்தணர்களிடம் பேசி, அவர்கள் முழு மனதோடு இதற்கு ஒத்துழைப்பார்களா என்பதை விசாரித்துக் கொள்ளுங்கள்.''

''முழு மனதோடு ஒத்துழைக்கும்படி பேசினால் போதும் ஒத்துழைப்பார்கள்.''

இன்னொரு அந்தணர் சொல்ல, எல்லோருக்கும் அந்த சூட்சுமம் புரிந்தது. மறுத்தால் அரசாங்கக் குற்றம். சரி என்று செய்தால் மரியாதை. எனவே, அந்தணர்கள் வெகுநிச்சயமாக சண்டிஹோமம் செய்ய ஒத்துக்கொள்வார்கள் என்று அவர்களுக்குத் தெரிந்தது.

''ஆனால், தாங்கள்தான் முன்னிலையில் இருக்க வேண்டும் என்று நினைப்பார்களோ.''

''இருக்கட்டுமே. ஆனால், அக்னிக்கு முன்னேதான் கம்பீரமாக அமர்ந்திருக்க வேண்டும். இதை யார் ஆரம்பித்தது என்று சக்ர வர்த்தியார் கேட்டால் நாமல்லவா முன்னால் நிற்போம். சக்ர வர்த்தியார் கேட்கும்படி நாம் செய்துவிட முடியாதா.''

அந்தண அதிகாரிகள் புன்முறுவல் பூத்தார்கள். வேகமாய் செயலில் இறங்கினார்கள். மறக்குலப்பெண்கள் நெகிழ்ந்து போனார்கள். அவர்கள் அந்தணர்களின் கால்களில் விழுந்து வணங்கினார்கள். நீங்கள் தெய்வம்போல் வந்திருக்கிறீர்களய்யா. இம்மாதிரியான அதிகாரிகள் கிடைக்க சோழதேசம் எவ்வளவு புண்ணியம் செய்திருக்கிறது என்று கைகூப்பி வணங்கினார்கள். பல்வேறு விதமான காணிக்கைகள் கொடுத்தார்கள்.

நவசண்டிஹோமம் ஒன்பது நாள் என்று ஆரம்பத்தில் தீர்மானமாகியது. ஒரு இடைவெளி கொடுத்து அவசியமெனில் மறுபடியும் செய்வோம் என்று எல்லா அந்தணர்களும் சொல்ல, பழமர்நேரி அந்தணர்களும், மற்ற அந்தணர்களும் வெகுவேகமாகப் பட்டியல் தயார் செய்தார்கள். பொருட்கள் வாங்கிவர நாலாபுறமும் மக்கள் அலைந்தார்கள்.

நல்ல நாள் பார்த்து வளர்பிறையில் சண்டிஹோமம் துவங்கியது. அதைத் துவக்கிய மறக்குலப் பெண்களுக்கே முக்கியமான இடம் என்று ஹோமத்தின் ஒரு பகுதி முழுவதும் சாரம் கட்டி, பலகைகள் கட்டி அதில் மறக்குலப் பெண்களை உட்கார வைத்தார்கள்.

அவர்கள் வீட்டு சூலங்களும், வீச்சரிவாள்களும், நீண்ட போர் வாட்களும் நிறுத்தி வைக்கப்பட்டன. அவற்றுக்கும் மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன. அதற்கு நேர்எதிர்ப்புறமும் நன் கொடை கொடுத்த பெருமான்களை அமர வைத்தார்கள். அதற்குப் பிறகு எல்லாவித பொதுஜனத்திற்கும் இடைவெளி விட்டார்கள். இன்னொரு புறம் அந்தணர்கள் அமர்ந்து வேதகோஷத்திற்குத் தயாரானார்கள்.

சண்டிஹோமம் அற்புதமாய்த் துவங்கியது. மிக அழகாய், தெளிவாய், கனமாய், முழு மூச்சுடன், முழு வேகத்துடன், முழு சிந்தனைத் திறனுடன் நடை பெறத் துவங்கியது. எல்லா மக்களும் தஞ்சையிலுள்ள நிசும்பசூதனியின் முன்பு கை கூப்பினார்கள்.

எங்களைச் சார்ந்தவர்கள் போருக்குப் போயிருக்கிறார்கள். அதில் எவரும் ஊத்தையடையாமல் மீண்டும் எங்களை நோக்கி பெருஞ் செல்வத்தோடு வரவேண்டும். வெற்றி வாகை சூடி வரவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள்.

'ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே' என்ற மந்திரம் பல ஆயிரம் முறை, பல அந்தணர்களால் சொல்லப்பட்டு நெய்யும், பல்வேறு விதமான பொருட்களும் ஹோமத்தில் போடப்பட்டன.

ஒன்பதாம் நாள் ஒரு செய்தி வந்தது.

வயதான ஒரேயொரு வீரர் மட்டும் மாரடைப்பால் மரண மடைந்தார். சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரே அவருக்கு ஈமக்கிரியைகள் செய்தார். மற்றபடிக்கு அத்தனை வீரர்களும் மிகப் பத்திரமாய் துங்கபத்ரா நதிக்கரை நோக்கி போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

எந்நேரமும் போர் துவங்கும் சூழல் வந்துவிட்டது. வீரர்கள் உற்சாகமாக இருக்கிறார்கள். வழி முழுவதும் நல்ல வரவேற்பும். உணவும், நிம்மதியான தூக்கமும் இருந்தன. எதிர்ப்பே இல்லாததால் வீரர்கள் உற்சாகமாக இருக்கிறார்கள். தேர்கள் மிக உதவியாக இருக்கின்றன. போர்வீரர்கள் எதற்கும் நடப்பதேயில்லை. தேரில் தான் முன்னும், பின்னும் அலைகிறார்கள்.

துங்கபத்ரையின் வடகரை ஒட்டிய பல நகரங்கள். சூனியமாகி விட்டன. ஜனங்கள் பயந்துபோய் பின்வாங்கிவிட்டார்கள் என்றெல்லாம் செய்தி வந்தது.

அரசர் மிக நன்றாக இருக்கிறார். பஞ்சவன்மாதேவி அரசரைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்கிறார். பிரம்மராயருக்குத் தண்ணீர் ஒத்துக் கொள்ளவில்லை.

அருண்மொழிப்பட்டன் மிக உற்சாகமாகப் படையின் எல்லாப் பிரிவுக்கும் போய் வருகிறார்.

வழியில் ஒரு மலைப்பகுதியைத் தாண்டும்போது மறைமுகமான எதிர்ப்புகள், விஷஅம்புகளின் தாக்குதல்கள் இருக்குமோ என்ற எண்ணம் வந்தது. இரவு நேரத்தில் படைவீரர்களை மலைக்கு முன்பாகவே ஓய்வெடுக்கச் சொல்லிவிட்டு, கூடாரம் அமைத்து தங்குவதுபோல் இளவரசர் இராஜேந்திரர் நடித்து, இரவோடு இரவாகத் தன்னந்தனியாய் காட்டு மனிதர்போல் வேடமணிந்து, மலைப்பகுதியெங்கும் சுற்றிப் பார்த்துவிட்டு, ஆபத்தில்லை.. வரலாம் என்று எரியம்பை மேலே செலுத்த படை எளிதாய் அந்த மலையைக் கடந்தது.

ஆனால், அரசர் இராஜேந்திரைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டார்.

''அரசர் இளவரசரைக் கோபித்து கொண்டார் என்றால் என்ன.''

ஊர் வியப்பாக கேள்வி கேட்டது.

தகவல் சொல்ல வந்திருந்தவர்களிடம் ஒரேயொரு வாக்கியம் தான் சொன்னார் அரசர். ஆனால், அது ஆணியடித்தாற்போல் இருந்தது.

''என்ன வார்த்தை. என்ன வார்த்தை எல்லோரும் வியப்பாக கேள்வி கேட்டார்கள். சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் இளவரசர் இராஜேந்திரரைப் பார்த்து அரசர் பல்லக்கு தூக்க வேண்டியதில்லை என்று சொன்னாராம்.''

ஆஹ்ஹா.. ஆஹா.. என்று ஊர்மக்கள் வியந்தார்கள்.

''ஆமாம். ஆயிரக்கணக்கான ஒற்றர்கள் இருக்கும்போது இளவரசர் எதற்காகப் போகவேண்டும். ஆனால், இளவரசர் இதைக் கேட்டுவிட்டு வீரர்களிடம் முணுமுணுத்தாராம்.''

''என்ன''

''சரியான பதிலாக இருந்ததாம்.

''சொல்லய்யா என்னவென்று.''

''அரசர் பல்லக்கு தூக்க வேண்டியதில்லை. ஆனால் யுத்த காலத்தில் அரசரென்ன பல்லக்கு தூக்கியென்ன. எல்லாம் ஒன்றுதான். யுத்த காலத்தில் எல்லோரும் எல்லாவேலையும் செய்ய வேண்டுமென்றாராம்.''

''அட.. இதுவும் உண்மைதானே.''

செய்தி கொண்டு வந்த ஆறு பேர் ஆறு லட்சம் படைவீரர் களையும் பார்த்துவிட்டு வந்திருந்தார்கள்.

அச்செய்தி சோழதேசத்தின் பல பகுதிகளுக்கு வேகமாகப் போயிற்று. சில உபசேனாதிபதிகளும், சேனாதிபதிகளும் தங்கள் மனைவியருக்குக் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். அப்படிப்பட்ட ஓலை நறுக்குகள் அங்கு விநியோகிக்கப்பட்டன.

என் படையில் ஆயிரத்துநூற்று முப்பது பேர். அத்தனை பேரும் நலம் என்று ஒரு சேனாபதி கடிதம் எழுதியிருந்தான். அந்த சேனாபதி பெயர் சொல்லி, அவன் படைப்பெயர் சொல்லி, அந்த ஆயிரத்து நூற்று முப்பது பேரும் நலம் என்று சொல்ல, பலபேர் எகிறிக் குதித்தார்கள். கைகூப்பினார்கள். வாய்விட்டு அழுதார்கள். அந்த ஓலையை வாங்கி கண்களில் ஒற்றிக்கொண்டு மற்றவருக்குக் கொடுத்தார்கள்.

போரும், போரால் ஏற்பட்ட பிரிவும் அந்தப் பிரிவினால் ஏற்பட்ட துயரும் அங்கே ததும்பித் ததும்பி வழிந்தன.

''வெற்றி பெற்றுவிடுவோம் என்று தோன்றுகிறதா.''

ஒரு வியாபாரி இன்னொரு வியாபாரியிடம் அடிக்குரலில் கேட்டார்.

''ஒட்டுமொத்தமாக இந்த விஷயத்தை யோசனை பண்ணிப்பார். ஏகப்பட்ட ஓலை நறுக்குகள் தஞ்சைக்கு வந்திருக்கின்றன. அதாவது

அமர்ந்து பதட்டமில்லாமல் ஓலை எழுதும்படியான ஒரு சூழ்நிலை இருக்கிறது. வழி எங்கும் எந்த எதிர்ப்பும் இல்லை.

சக்ரவர்த்தியார் பஞ்சவன்மாதேவியோடு சந்தோஷமாக இருக்கிறார். இளவரசர் இராஜேந்திரர் தன்னந்தனியாக முன்னேறி சாதனை செய்கிறார். அவர் போனதும், வந்ததும் யாருக்கும் தெரியவில்லை. ஒற்றர் படை, மெய்க்காவல் படை நன்கு தூங்குகிறது. வேறெந்த சிரமங்களும் ஏற்படவில்லை. இவை எல்லாம் வைத்துப் பார்த்தால் முழு பலத்தோடு, திமிரோடு, அகங்காரத்தோடு சோழர்படை துங்கபத்ரை நதியின் தென்கரையில் இருக்கிறது.

மிக நிச்சயமாய் சோழவீரர்கள் முழு பலத்தோடு மான்ய கேடத்தைத் தாக்குவார்கள். துங்கபத்ரையிலிருந்து மான்யகேடம் வரை பல நகரங்கள் இருக்கின்றன. செழிப்பான ஊர்கள் இருக்கின்றன.

இந்தமுறை போர் என்பதே பொருள் சம்பாதிக்கத்தான். எனவே, மான்யகேடம் விழுந்தால் யானை யானையாய் பொருட்கள் வரும். ஒரு யானைக்கு நான்கு பேராம். போரில் ஜெயித்தவுடன் பாதிப்படையைத் திரும்ப அனுப்பிவிடுவார்.

அவர்கள் கால்நடையாகவோ அல்லது தேரில் ஏறியோ திரும்பி வருவார்கள். ஆறு லட்சம் பேரில் ஒரு லட்சம் பேர் இறந்ததாகவே வைத்துக் கொள்வோம். ஐந்து லட்சம் பேரும் விதம்விதமான பொருட்களுடன் வீடு நோக்கி வரும் ஆவலில் வேகமாகத் திரும்பி விடுவார்கள். மற்றவர்கள் கொள்ளைக்குப் போவார்கள். ஏகப்பட்ட செல்வங்களோடு திரும்புவார்கள். இப்படித்தான் நடக்குமெனில் நமக்கு நல்ல லாபம் காத்திருக்கிறது.''

''எந்த விதத்தில்..

''சோழ தேசத்தில் நுழைந்த பொருட்களை மலிவாக வாங்கி மதுரைக்கோ, திரிசீரபுரத்திற்கோ கொண்டு போய் விற்கலாம். இன்னும் தென்கோடிக்கும் போகலாம். நமக்குப் பயணச் செலவு. ஆனால் ஒன்றுக்கு மூன்று மடங்காக நாம் விற்க முடியும்.

''என்ன கொண்டு வருவார்கள்.''

''பாத்திரங்களய்யா. விதம்விதமான வெங்கல, பித்தளைப் பாத்திரங்கள். வெள்ளி, தங்கப் பாத்திரங்களும் கொண்டு வருவார்கள். ஆனால், வெள்ளியும், தங்கமும், நம்மிடம் வராது. பித்தளையும், வெங்கலமும் வரும். ஒரு தூக்கு தூக்கலாம். வாழ்க

சோழதேசம். வாழ்க உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர்.'' என்று வியாபாரிகள் உரக்கச் சொன்னார்கள். கட்டித் தழுவிக் கொண் டார்கள். பிரிந்தார்கள்.

## 160

உலகம் இவ்வளவு பிரமாண்டமா என்கிற எண்ணம்தான் இடையறாது பஞ்சவன்மாதேவிக்குள் உழன்று கொண்டேயிருந்தது.

நீண்ட நெடிய வயல்கள். இதற்குப் பிறகு உலகம் என்னாகும் தடக்கென்று விழுந்துவிடுமா. பெரும் பாதாளம் விழுங்கி விடுமா என்ற எண்ணம் தோன்றியது. ஆனால் உலகம் உருண்டை என்பதும், உலகம் உருண்டு கொண்டிருக்கிறது என்பதும், உலகம் சூரியனைச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்பதும் அவளுக்கு முன்பே சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உலகம் உருண்டை என்றால் ஒரு மேடேறி இறங்குவது போல் தானே இருக்க வேண்டும். தட்டையாக ஒரு புள்ளியில் முடிவதாக அல்லவா இருக்கிறது என்றும் அவளுக்குள் கேள்வி வந்தது.

''நமக்குத் தோற்றமளிக்கும் இந்த மிக பிரமாண்டமான உலகத்தில் நீ ஒரு மிகச்சிறிய புள்ளி. பத்துப்பேர்கள் கைகோர்த்து அணைத்தாலும் அகப்படாத இந்தப் பெரும்பாறை உலகம் என்று வைத்துக்கொள். அந்தப் பாறையின் மீது ஒரு சிறிய எறும்பு பயணம் செய்கிறது. அந்த எறும்பிற்கு இந்தப் பாறை என்னவாகக் காட்சியளிக்கும். உருளையாகவா, இல்லை நெடுந்தூரம் போகின்ற இந்தப்பாதை தட்டையாக அல்லவா அதற்கு காட்சியளிக்கும். அப்படித்தான் நமக்கும். உலகத்தினுடைய பிரம்மாண்டத்திற்கு முன்பு நாம் தூசு. வெறும் தூசு. கட்டெறும்புகூட இல்லை. மிகச்சிறிய சிற்றெறும்பு.'' என்று இராஜராஜர் பதில் சொன்னார்.

அவள் வாயடைத்துப் போனாள்.

துங்கபத்ரை நதிக்கரை போவதற்கு இன்னும் ஐந்து நாட்கள் பயணம் மேற்கொள்ள வேண்டும். நாம் வெற்றி பெற்ற கங்கதேசம் முன்னிலும் அற்புதமாக மாறி விட்டது. மக்கள் அமைதியாக வரவேற்கிறார்கள். அவர்களிடம் எதிர்ப்பில்லை. அதுமட்டுமல்ல உதவியும் செய்கிறார்கள். கங்கதேசத்துப் பெண்கள் அழகானவர்கள் என்று சொல்லமுடியாது. ஆனால் மிக அமைதியானவர்கள்.

தெய்வபக்தி நிரம்பியவர்கள். சிவபூஜை செய்வதில் மிக விருப்பமுடையவர்கள். அவர்களுடைய தமிழ் சற்று வித்தியாசமானது. அவர்கள் பேசும் விதத்தை நான் கொஞ்சம் அறிந்திருக்கிறேன் வா. ஏதேனும் ஒரு வீட்டிற்குள் போவோம்.

சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் குதிரையைவிட்டு இறங்கினார். வியர்வை வழியும் அவர் உடம்பை ஒரு வீரன் ஒரு ஈரத்துணியால் ஒற்றியெடுக்க, மேலே ஒரு சால்வை போர்த்தி கைகளிலும், கழுத்திலும் வாசனைகள் தடவி, நிதானமாக நடந்து ஒரு வீட்டு வாசலுக்குப் படியேற அந்த வீட்டிலுள்ள பெண்கள் குலவை சத்தம் போட்டார்கள். வீட்டின் தலைவர் ஒருமுதியவர். கைகூப்பி வருக.. வருகவென்று வரவேற்றார் மகாபாக்கியம். மகாபாக்கியம் என்றார்.

திண்ணையில் அமரப்போன உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரை தடுத்து நிறுத்தி கைபிடித்து உள்ளே அழைத்துப் போனார். அவருடைய கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

உடையார் கம்பீரமாக உள்ளே போய் சுற்று முற்றும் பார்க்க, மெய்க்காவல் படை திபுதிபுவென்று உள்ளே நுழைந்தது. அறைகளைத் திறந்து பார்த்தது. கூடத்தில் நான்கு மூலையிலும் உருவிய வாளோடு மெய்க்காவல் படைவீரர்கள் நின்று கொண்டார்கள். பிறகு மெல்ல ஆண்கள் உள்ளே நுழைந்து உடையாரைச் சந்தித்து நலம் விசாரித்தார்கள். ஆண்கள் நகர்ந்ததும் பெண்கள் முன்னேறினார்கள். வயதானவர்கள் முகம் வழித்து சொடக்குப்போட மத்திம வயதுப் பெண்கள் அருகே நின்று பேசத்துவங்கினார்கள். இளம்பெண்கள் ஒரு கூட்டமாக நின்று கிளுகிளுத்துக் கொண்டிருந்தார்கள்.

''வா... பஞ்சவன்மாதேவி.''

சட்டென்று உடையார் விலகி நின்ற பஞ்சவன்மாதேவியை அருகே அழைத்தார்.

''இவள் என் மனைவி. பெயர் பஞ்சவன்மாதேவி போர்க்கலையில் வல்லவள். அதே நேரத்தில் பொறுப்பாகக் குடும்பம் நடத்தவும் நன்கு பயின்றவள். சுவையாகச் சமைப்பாள். நன்றாக ஓவியம் வரைவாள். கோலம் போடுவாள். தலைப்பின்னல் செய்வதில் வல்லவள். அது தவிர மிக நன்றாக நடனம் ஆடக் கூடியவள். இவள் நடனத்தில் மயங்கித்தான் நான் இவளைத் திருமணம் செய்து கொண்டேன். இன்னும் சரியாகச் சொல்வதென்றால் இவள்

இல்லையென்றால் என்னால் அமைதியாகத் தூங்க முடியாது. என்னை முழுவதும் கவனித்துக் கொள்கிறவள் இவளே.''

அந்த அறிமுகம் போதுமானதாக இருந்தது.

பெண்கள் சட்டென்று சூழ்ந்து கொண்டார்கள்.

''என் தலைப்பின்னல் பார்த்தீர்களா.''

ஒரு பெண் திரும்பி நின்று கொண்டாள்.

பஞ்சவன்மாதேவி தொட்டுப் பார்த்தாள்.

பஞ்சவன்மாதேவி அணிந்திருந்த நகைகளை அருகே வந்து பார்த்தார்கள்.

''இவ்வளவு ரசனையாக இருக்கிறீர்களே.'' என்று ஒரு பெண் வியந்தாள்.

அருகிலிருந்து பார்க்கும்போதே கையிலிருந்த வெட்டுத்தழும்பு களையும் கவனித்தார்கள்.

''போர் செய்யும்போது ஏற்பட்டதா.'' என்று கேட்டார்கள்.

''நடனம் ஆடுவீர்களாமே. எங்கு பயின்றீர்கள்.'' என்று விசாரித்தார்கள்.

இவள் நடனமாடக்கூடியவள் என்று யாரையோ கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

சட்டென்று அப்பெண் குனிந்து தரைதொட்டு நடனமுத்திரைகள் சிலவற்றைக் காட்டினாள். அவற்றில் ஒன்று மிகச் சுத்தமாக இருந்தது. மற்றவற்றில் அவசரம் தெரிந்தது.

''சூரியன் பார்த்து மலர்ந்த தாமரை...'' என்று மெல்லப்பாடி, ''இதற்கு எப்படி அபிநயம் பிடிப்பீர்கள்'' என்று கேட்டாள்.

''நீ யார்.'' என்று கேட்க, அவள் தன்னை தேவரடியார் என்று அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

''இது உன்னுடைய வீடா.''

''இல்லை. எங்களுடைய இடம் வேறிடத்திலே இருக்கிறது. மாமன்னர் இவ்வழியாகப் போகிறார் என்பதால் நாங்களெல்லாம் இந்தத் தெருவிற்கு வந்தோம். இந்த வீட்டில் பதுங்கிக் கொண்டோம். நான் இருக்கும் வீட்டில் நல்லவேளை மாமன்னர் படியேறினார். எவ்வளவு நாள் ஆசை தெரியுமா. அவரைப் பார்க்க வேண்டுமென்று.. சூரியனைப் பார்த்து மலர்ந்த தாமரை எப்படி அபிநயம் பிடிப்பீர்கள்.''

''எப்படியும் வேண்டாம். நீ வந்து நின்றால் போதும். உன் முகம் சூரியனைப் பார்த்த தாமரைபோல்தான் இருக்கிறது. என்று பஞ்சவன்மாதேவி சொல்ல பெண்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

ஆண்கள் மெல்ல வாசல்பக்கம் போனார்கள். வீட்டிற்குள் வேறு பெண்கள் நுழைந்தார்கள்.

ஹா... என் புருஷன் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் எவ்வளவு கெட்டிக்காரர். கடந்த சில தினங்களாக நான் ஆண்களோடேயே பழகிக் கொண்டு போர் பற்றிய சிந்தனையோடே வருகிறேன் என்பதால், சட்டென்று என் குணத்தை மாற்றி, என் அடிப்படையான குணத்தை நானே விசாரிக்கும்படி ஒரு சூழ்நிலையை ஏற்படுத்திவிட்டார். இதோ இந்தப் பெண் கேட்டதும் கைகால்கள் பரபரக்கின்றன. சட்டென்று வீசி நடந்து சூரியனைக் கண்டதும் மலர்ந்த தாமரை என்று ஒரு அபிநயம் சுற்றி வந்து பிடிக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

இந்த குணம்தான் அடிப்படையில் இருக்கிறது. இதுதான் எங்களுடைய உண்மையான குணம் என்பதைக் காட்ட சக்ரவர்த்திப் பெருமான் மிக அழகாக ஒரு கூட்டம் சேர்த்துவிட்டார். உன்னை நீ மறக்காதே என்று சொல்லிவிட்டார். எவ்வளவு கம்பீரமான புருஷன். எவ்வளவு தெளிவான புருஷன். எத்தனை உண்மையான புருஷன். நீ எனக்கு ஏற்றாற்போல் இரு. எனக்கு யுத்தம் முக்கியம். அதற்குத் துணையாக இரு என்று சொல்லாமல், என்னை எந்தக் காரணத்திற்காகக் காதலித்தாரோ, அதையே மறுபடியும் நினை வூட்டுகிறார்.

அப்போது அந்த யுத்தம் என்பது என்ன?

இது கடவுள் பணி. சிவபெருமானுக்காக நாம் செல்வம் சேர்க்க நகர்ந்து கொண்டிருக்கின்ற ஒரு விஷயம். மகாமேருவை அமைப்ப தற்காகத் துவக்கப்பட்ட போர் இது. நீ அவருக்குத் துணையாய் இருந்தாலும், அடிப்படையில் நீ யார் என்பதை உணர்ந்து கொள் என்பதற்காகத்தானே இப்படிச் செய்திருக்கிறார்.

உள்ளே இருக்கின்ற சக்ரவர்த்தி உடையாரை மறுபடியும் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவளுக்குள் ஏற்பட்டது.

இந்தப் பெண்களிடம் மனம் ஒட்டவில்லை. அவர்கள் கேள்விக்கு நிதானமாகப் பதில்கள் பல சொன்னாலும் மனம் உடை யாரின் காலைச் சுற்றியே இருந்தது.

இவர் எளிமையாக இருப்பதால், இவர் இனிமையாகப் பேசுவதால், இராஜேந்திரன் இவரைச் சாதாரணமானவர் என்று நினைக்கிறான். அருண்மொழிப்பட்டனுக்கும் அப்படி எண்ணம் இருக்கக்கூடும். இவரை ஏய்த்துவிடலாம் என்று கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் முயற்சி செய்கிறார். பழுவேட்டரையர் நானில்லாமல் இவர் எப்படி அரசராக இருக்க முடியும் என்ற அசட்டு எண்ணத்திலேயே இருக்கிறார். சேனாதிபதிகளும், மந்திரிகளும் தாம் உதவி செய்ததால்தான் இராஜராஜரின் ஆட்சி செவ்வனே நடக்கிறது என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

இவருக்கு எவர் உதவியும் எந்த நாளும் தேவையில்லை. எதன் பொருட்டும் தேவையில்லை. அவர் மனிதரின் மனங்களை அறியக் கூடியவர். மனங்களை மாற்றியமைக்கக் கூடியவர். தொலைவி லிருந்தே மனதை உற்றுப் படித்துவிட்டு தொலைவிலிருந்தே மனதை வேறு திசைக்குத் திருப்பக்கூடிய வல்லமையுடைவர். என் புருஷன் சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் ஒரு சித்தபுருஷர். நான்கூட இவரை என் வசத்திற்குக் கொண்டு வந்து விடலாம் என்று நினைத்திருக்கிறேன். நினைக்கும் பொழுதே சறுக்கியிருக்கிறேன். அவர் என் வசம் மட்டுமல்ல. எவர் வசமும் செல்லாதவர் என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறேன். இப்போது நடப்பதும் அவ்விதம்தான்.

இது படை நடத்திப் போவது போலவா இருக்கிறது. இல் லையே. அங்கங்கே உட்கார்ந்து பேச்சு, பாட்டு, ரகளை, குதூகலம் என்றல்லவா இருக்கிறது. படைகளுக்குள் சிறு சிறு கலவரம் ஏற்படுத்தி, அவரே அக்கலவரத்தையும் அடக்குகிறார். சகலமும் அவர் நுனியில் இருக்கிறது. இடையறாது சிந்தித்துக் கொண்டிருக் கிறார். ஆனால் முகம் சாந்தமாக இருக்கிறது. சக்கரவர்த்தி விடைபெற்றார், பயணம் தொடர்ந்தது. இரவு நேரம் கூடாரத்தில் சக்கரவர்த்தி சாய்ந்து அமர்ந்திருந்தார்.

வீரர்களுக்குப் போர் செய்யும் வெறியே வரவேயில்லையே. உல்லாசப் பயணத்திற்குப் போகிறது போலல்லவா இருக்கிறார்கள். எங்கேயோ நேர்த்திக் கடன் செலுத்த மலை ஏறுவது போலல்லவா இருக்கிறார்கள்.''

மெல்லிய குரலில் பஞ்சவன்மாதேவி சக்ரவர்த்தியைக் கேட்டாள்.

''அப்போதுதான் பயணம் பற்றிய களைப்பு இருக்காது.''

''மேலைச்சாளுக்கியம் போனவுடன் போர் துவங்கி விட முடியுமா? வழியிலே மடக்கி தாக்கி விடுவார்களா.''

''ஒருக்காலும் நடக்காது. அவர்கள் பின்னடைந்து கொண்டிருக் கிறார்கள்.''

''எப்படித் தெரியும்.

''ஒற்றர்களை அனுப்பியிருக்கிறேன். இடையறாது செய்தி வந்து கொண்டிருக்கிறது.''

''உங்களுக்கு அருகில் இருந்தேனே, செய்தி ஒன்றும் வர வில்லையே.

''செய்தி வாயால் சொல்லப்படவில்லை.

''பிறகு.

''ஓலையில் எழுதிக் கொடுத்தார்கள்.''

''எப்போது.''

''ஒரு தட்டில் வாழையிலை வைத்து, வாழையிலையில் குடிக்க கஞ்சி வைத்து கொடுத்தார்களல்லவா.''

''ஆமாம்.

''அதிலே இருந்தது.

''கஞ்சியிலா.''

''இல்லை. வாழையிலையில், மெல்லிய ஊசியில் குறிப்புகள் வரைந்திருந்தார்கள். துங்கபத்ரை நதிப்படம் போட்டு அங்குள்ள கிராமங்களை வட்டங்களில் சொல்லி, அந்த வட்டங்களிலிருந்து அம்புகள் போல பலது போட்டிருந்தார்கள். இப்போது அந்த துங்கபத்ரை நதிக்கரையிலே ஒரு லட்சம் படைவீரர்களே இருக் கிறார்கள். மேலும் படைகள் வருமாம்.''

''ஏன் அப்படிச் செய்ய வேண்டும். நேரடியாக வாய்மொழியாகப் பேசினால் என்ன.''

''போர்க்காலத்தில் இதுதான் முறை.

''எதனால் இந்த முறை.

''போர்க்காலத்தில் யாரையும் யாரும் நம்ப முடியாது.''

''என்ன சொல்கிறீர்கள். என்னை நீங்கள் நம்ப மாட்டீர்களா.''

''மாட்டேன். நீ கூட என்னை மேலைச்சாளுக்கியத்திற்கு வசப்பட்டு, முதுகில் குத்திக் கொன்றுவிடலாம்.''

''கடவுளே... என்ன கொடுமையான பேச்சு.''

''இது போர்க்காலம். யாரும் யாரையும் நம்ப முடியாது.''

''அதற்காக நான் உங்கள் முதுகில் குத்துவேன் என்று சொல்வீர்களா.''

''உனக்கு மதிமயக்கம் ஏற்படுத்தி உன்னோடு வருவது உன் புருஷனல்ல. உன் புருஷனைக் கொன்று விட்டோம். வேறு ஒரு ஆள் என்று சொல்லிவிடலாம்.''

''அதனால் நான் கொன்று விடுவேனா.''

''ஆமாம். கொல்லச் சொல்லி மனசின் மூலம் தூண்டலாம். எனவேதான்.''

''என்ன முட்டாள்தனம்.''

''பெண்களை அப்படிப் பயன்படுத்தி இருக்கிறார்கள். அம் மாதிரியான சம்பவங்கள் சரித்திரத்தில் நிறைய உண்டு.''

''அதனால்தான் விலகிப்படுத்தீர்களா. நீங்கள் பிரம்மசரியமாக இருப்பதாக நான் நினைத்தேனே.''

''அப்படி ஏதும் இல்லை. பிரம்மத்தைச் சார்ந்திருப்பதே பிரம்மச்சரியம். மற்றவை ஏதும் முக்கியமல்ல.''

''நீங்கள் தந்திரமாகவும் பேசுகிறீர்கள். அதேசமயம் உயர்வாகவும் பேசுகிறீர்கள். அதேநேரத்தில் தத்துவமாகவும் பேசுகிறீர்கள். வரவர உங்களை நினைத்தால் குழப்பமாக இருக்கிறது.''

''என்னை நினைத்தால் உனக்குக் குழப்பமல்ல. உன்னையே நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். அதுதான் குழப்பம். என்னை உன் கணவன் என்றும், உன் கைக்குள் சிறைப்படுத்த வேண்டுமென்றும், உன் சொல்படி நான் கேட்கவேண்டுமென்றும் நினைத்துப் பேசிக் கொண்டிருக்கிறாய். என்னை என்னிடத்தில் நின்று பார்த்தால் நான் யார் என்பது உனக்குப் புரியும்.''

''எனக்கு அப்படிப் பார்க்கத் தெரியாது.''

பஞ்சவன்மாதேவி அவருக்கு நெருக்கமாக அமர்ந்து பேசினாள். அந்தப் பேச்சில் சற்று கொஞ்சல் இருந்தது.

''அதனால் தான் நேரடியாகக் கேட்கிறேன். நீங்கள் யார்.''

சக்ரவர்த்தி உடையார் அமைதியாக தரை பார்த்து உட்கார்ந் திருந்தார்.

அது அடர்ந்த காட்டுப்பகுதி. தொலைவில் மிருகங்களின் உறுமல் கேட்டுக் கொண்டிருந்தன. குறுக்கே வந்த புலிகளை வீரர்கள் சூழ்ந்து அடித்துக் கொன்றுவிட்டார்கள் என்ற பேச்சும் வந்தது. மிருகங்களைத் தீப்பந்தம் வீசி எறிந்து தொலைதூரம் துரத்தி விட்டதாகவும், பிறகு செய்தி அறிவித்தார்கள். எறிந்த தீப்பந்தம் அணையாமல் செடிகளில் பற்றிக் கொண்டு மெல்லிய புகையும் வந்தது.

நெருக்கமாய் பின்னப்பட்ட மூங்கில் தடுப்புகளுக்கு அப்பால் வேயப்பட்ட பந்தலைத் தூக்கி நிறுத்தி ஒரு மேடான இடத்தில் தங்குமிடம் அமைத்திருந்தார்கள். கீழே கம்பளியும், கோரைப்பாயும், அதன்மீது மெத்தென்ற மெத்தையையும் விரித்திருந்தார்கள். சாய்ந்திருந்த சக்ரவர்த்தி சட்டென்று சம்மணமிட்டு உறுதியாக அமர்ந்தார்.

''பஞ்சவன்மாதேவி இதுவரை யாரிடமும் சொல்லாத ஒரு விஷயத்தை உன்னிடம் சொல்கிறேன்.''

''என்னுள் இறையின் தன்மை இறங்க ஆரம்பித்து விட்டது. என் உடம்புக்குள் சூட்சுமமாக சில மாறுதல்கள் தெரிகின்றன. உறங்க முடியவில்லை பஞ்சவன்மாதேவி. உறக்கத்தின்போதும் நான் விழித்துக் கொண்டிருக்கிறேன். அதேபோல் விழிப்பின் போதும் ஒரு உறக்கநிலைபோல மௌனமாக இருக்கிறேன்.''

''புரியவில்லையே.''

''இவ்வளவுதான் இப்போதைக்குச் சொல்லமுடியும். நான் போர் நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறேன். ஆனால், போரின் கொந்தளிப்பு உள்ளே இல்லை. அந்தக் கொந்தளிப்பை எப்பொழுது வேண்டுமானாலும் என்னால் வரவழைத்துக் கொள்ள முடியும். எப்போது வேண்டுமானாலும் அகற்ற முடியும். ஏனெனில் என் காரியங்கள் எல்லாம் எனக்காக நடைபெறுபவை அல்ல. நான், என்னைச் சுற்றியிருக்கிற, எனக்குள் இருக்கின்ற இறை என்கிற பேருண்மைக்கு, சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு, அதன் சொல்படி நடந்து கொண்டிருக்கிறேன். அதற்காகத்தான் உழைத்துக் கொண் டிருக்கிறேன்.''

''இந்த மாற்றம் எப்போது ஏற்பட்டது.''

''என் குருநாதர் கருவூர்த்தேவரால் ஏற்பட்டது. கிட்டத்தட்ட பத்து வருடங்கள் முன்பு எனக்குள் இறை விஷயத்தை விதைத்தவா.

அவர்தான். சிவன் என்பதும், சிவலிங்கம் என்பதும் எவ்வளவு அற்புதமான விஷயம் என்று எனக்குத் தெரிவித்தவர் அவர்தான்.

கடவுளுக்கு எப்படி உருவம் கொடுக்க முடியும். என்ன உருவம் கொடுக்க முடியும். கடவுளுக்கு உருவம் கொடுப்பது பேதமை. அதேசமயம் கடவுளுக்கு உருவமில்லை என்று சொல்லி, உருவ மில்லாததை எப்படி வணங்க முடியும். உருவமில்லாததை வணங்கலாம். அது எளிதுதான். ஆனால், தன்னை உருவம் என்று நினைத்துக் கொண்டிருப்பவனால் உருவமில்லாததை ஒருக்காலும் வணங்க முடியாது. தன் உருவம் தொலைத்தவனுக்கே உருவ மற்றதை வணங்கமுடியும்.

அப்படியானால் உருவமுள்ளவன் கடவுள் வணக்கத்தை எப்படிக் கொள்வது நல்லது.

அருவ உருவம் என்ற இடத்தை நம்முடைய சனாதனதர்மம் கண்டுபிடித்திருக்கிறது. கடவுள் என்பதை மனதில் நினைக்க ஒரு அடையாளத்தை மனதில் வைத்துக்கொள் என்று லிங்கத்தைப் படைத்திருக்கிறார்கள். லிங்கம் என்பது என்ன? லிங்கம் என்ற சொல்லுக்கு அடையாளம் என்று பொருள். அதுவொரு அடை யாளம். கடவுளின் அடையாளம்.

எல்லா இடத்திலும் கடவுள் இருக்கிறார் என்றால், இந்தக் கல்லிலும் கடவுள் இருக்கிறார் அல்லவா. அப்படிப்பட்ட ஒரு அடையாளம். இதற்கு வேறு எந்தக் குணமும் இல்லை. இந்த அடையாளத்தை செவ்வனே சைவ சமயம் செய்தது.

கூடல்தான் உலகம். இடையறாது கூடுதல்தான் இந்த உலகத்தினுடைய அடிப்படை விதி. இந்த உலகம் இயங்குவதே கூடலால்தான். எனவே, கூடலையே அடையாளமாக வைத்தது. நீயும் நானும் பேசுவதும் கூடல். இரண்டு அருவிகள் ஒன்றை யொன்று மோதி விழுவது கூடல்; போர் செய்வது கூடல்; சாப்பிடுவது கூடல்; கவிதை எழுதுவது கூடல்; மண்ணும் மழையும் செய்வது கூடல்; இலையும் வெயிலும் சேர்வது கூடல்.

கருமார்கள் இரும்பை உருக்கி ஆயுதமாக்குவது கூடல். ஒன்றோடு ஒன்று கலந்து வேறொன்று விளைவது கூடல். உலகம் இப்படித்தான் விளைந்து கொண்டிருக்கிறது. இந்த விளைவால் இயங்கிக் கொண்டிருக்கிறது.

இது அழகாக மனதில் பதிந்துவிட என் செய்கைகளெல்லாம் என் செயகைகள் அல்ல என்ற இடத்திற்கு நான் வந்துவிட்டேன். எப்போது அந்த இடம் எனக்குள் தோன்றியதோ, எப்போது அந்த நிலை எனக்குள் வந்ததோ, அப்போது உலகத்தின் எல்லாக் காரியங்களிலிருந்தும் நான் அன்னியமானேன்.

எப்பொழுது உலகத்தின் நடப்புகளிலிருந்து நேற்று, இன்று, நாளை என்கிற பிரிவிலிருந்து நல்லது, கெட்டது என்ற வித்தியாசத்தி லிருந்து விடுபட்டேனோ அப்போது, எப்போதும் ஒரே இடத்தில் ஒரே மனோநிலையில், அடி ஆழத்தில் வெறுமே கிடக்க என்னால் முடிந்தது. என்ன செய்து கொண்டிருந்தாலும் நான் உள்ளுக்குள் வெறுமனே இருக்கிறேன் என்பதை நன்கு தெரிந்து கொண்டபிறகு, என் உடம்பில் மாற்றங்கள் ஏற்பட்டன.

என் கண்ணில் சூட்சுமமான காட்சிகள் தென்பட்டன. என் காது களில் இடையறாது ரீங்காரம் ஓடிக்கொண்டிருக்கிறது. சிலசமயம் அந்த ரீங்காரம் பலமாக இருக்கிறது. அப்பொழுது என் மனம் அசையாது ஒரே இடத்திலேயே எந்தவிதச் செய்கையுமில்லாமல் இருக்கிறது. அந்த நிலையில் எனக்கு இறந்த காலமும், நிகழ்கால மும், வருங்காலமும் ஒன்றாகின்றன. உனக்கு இன்னும் தெளிவாகப் புரியும்படி சொல்கிறேன்.

இறந்த காலத்தில் சில ரகசியங்கள் இருக்கின்றன அல்லவா. அவை உடைந்து கண்முன்னே நிற்கின்றன. நிகழ்காலத்தில் நடப்பது என்னவென்று புரியாமல் போகுமல்லவா அது புரிந்து போகிறது. எதிர்காலம் எப்படி என்று அறியாமல் விழிக்கிறோம் அல்லவா? தெள்ளத்தெளிவாய் வருங்காலம் என்னவென்றும் புரிகிறது. இந்தப் படை வீரர்களை நான் பார்க்கும்போது யார் யாரெல்லாம் எப்படி இறப்பார்கள் என்று எனக்குத் தெரிகிறது. யார் சேதமடையாமல் ஊருக்குத் திரும்புவார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது.''

''கடவுளே என்ன சொல்கிறீர்கள்.''

''ஒரு மரணம் நாளை பிற்பகல் நடக்கும்.''

''என்ன. தாக்கப்படுவார்களா.''

''இல்லை. நோய்ப்படுவார்கள். ஒரு கிழவன் வந்திருக்கவே வேண்டாம். அவருக்கு யாருமில்லை. எனவே போருக்கு வந்துவிட்டார். அவர் உறவுகளோடு சுமுகமான உறவு இல்லை. அதனால் போருக்கு வந்துவிட்டார். பசியில் பலாப்பழம் தின்று

விட்டார். ருசித்து இரண்டு, மூன்று சுளைகள் தின்றுவிட்டார். அவை இப்போது வயிற்றில் அடைத்து அஜீரணம் ஏற்படுத்தி, தொடர்ந்து உண்பதால் வயிறு சற்று சங்கடப்படுத்தி, அந்தச் சங்கடத்தால் மூச்சு வாங்கத் துவங்கிவிட்டது. மூச்சு வாங்கத் துவங்கியிருப்பதால் ஹிருதயம் வேலை செய்யக் கஷ்டப்பட்டது. ஏற்கனவே பலவீனர் அல்லவா. இப்போது அவர் மேலும் தளர்ந்திருக்கிறார். ஒருமுறை சரளைக்கற்கள் சரிந்து விழுந்ததால் அதிர்ச்சியாகிவிட்டார்.''

''அவர் எங்கிருக்கிறார்.''

''ஒரு மரத்தடியில் குத்திட்டு உட்கார்ந்து, வேலின் நுனியில் நிலத்தைக் கீறிக் கொண்டிருக்கிறார். வெறும் கோவணமும், சட்டையும் தரித்திருக்கிறார். நகர்ந்து போகலாமா? அல்லது நின்றுவிடலாமா? என்று யோசித்துக் கொண்டிருக்கிறார். அவரை, அவரைச் சுற்றியுள்ள வீரர்கள் கண்டுகொள்ளவில்லை. அவர்கள் மதுவின் போதையில் தள்ளாடுகிறார்கள். இவருக்கும் மதுவாசனை இருக்கிறது. இவர் மது குடிக்காமல் இருந்தால் நிச்சயம் தப்பித்து விடுவார். ஆனால், மற்றவர்கள் குடிக்கிறார்களே, நம் பங்கை நாம் வாங்கிக்கொள்ளவேண்டும் என்ற ஆசை இருக்கிறது.

''இன்னும் ஒரு நாழிகையில் அவர் மதுவைக் குடிக்க ஆரம்பித்து விடுவார். பிறகு அவருக்கு மரணத்தின் வாசல் திறந்துவிடப்படும்.''

''யாரென்று பார்க்கட்டுமா.''

பஞ்சவன்மாதேவி எழ முயற்சித்தாள். அவர் தடுத்தார்.

''என்ன.. சாவைத் தடுக்க முயற்சிக்கிறாயா. அது உன் வேலையல்ல. சும்மாயிரு. இறைவன் மிகத் தெளிவாகக் காரியங்கள் செய்து கொண்டு போகின்றான். அதில் குறுக்கீடு செய்யாதே. உனக்குச் சொல்லப்பட்டது தடுப்பதற்காக அல்ல. கவனிப்ப தற்காக..

''யாரைக் கவனிப்பதற்காக.''

''உன்னைக் கவனிப்பதற்காக.. என்னை நான் உள்ளே கவனித்து இதைச் சொல்கிறேன். உன்னாலும் உன்னுள்ளே கவனிக்க முடியும். உள்ளே கவனி.''

சக்ரவர்த்தி திண்டில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டார். பஞ்சவன்மாதேவி அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஏனோ அவளுக்குத் தூக்கம் வந்தது. அவருக்கருகே படுத்துக் கொண்டாள். உறங்கிப் போனாள்.

சிறிது நேரத்தில் எழுந்து சக்ரவர்த்திக்கு வேண்டிய விஷயங்களை எடுத்துக் கொடுத்துவிட்டுப் பயணப்படத் தயாரானாள். குதிரையில் ஏறி அருண்மொழிப்பட்டனோடு பேசிக்கொண்டு பல ஊர்களைக் கடந்தாள்.

எதிரிகளின் நடமாட்டம் தெரிகிறது என்று செய்திவர படை அப்படியே நின்றது. அப்போதுதான் ஒரு வீரன் இறந்து கொண்டிருக்கிறார் என்று தகவலும் வந்தது.

பஞ்சவன்மாதேவி அதிர்ந்து போனாள். சக்ரவர்த்தியைத் தேடினாள். ஆனால், சக்ரவர்த்தி அந்த வீரனுக்கு அருகே போய்விட்டதாகத் தெரிந்தது. சுற்றியுள்ள வீரர்களைக் கலைத்துக் கொண்டு, சக்ரவர்த்தி அருகே பஞ்சவன்மாதேவியால் போக முடிய வில்லை. போக முடியாமல் உள்ளே ஏதோ தடுத்தது. அவள் விலகி நின்று, சக்ரவர்த்தியின் இருப்பிடத்திற்கு வந்து அமர்ந்து கொண்டாள்.

யார் இவர். இவருக்கு என்ன தெரியும். மிகப் பெரிய மனிதருக்கு அருகே சாதாரணமாக ஆடிக்கொண்டிருக்கிறேனோ.. எல்லாம் தெரிந்ததுபோல அலட்டிக் கொண்டிருக்கிறேனோ... எதிர்காலம் சொல்வது இவருக்கு இவ்வளவு எளிதாக இருக்கிறதே. இவரால் இன்னும் என்ன செய்ய முடியும். இவ்வளவு துல்லியமாக வருங்காலம் சொல்ல முடிபவரால் போர் பற்றிய முடிவும் சொல்ல முடியுமல்லவா?

என் முடிவு பற்றியும் சொல்ல முடியுமல்லவா? அவர் முடிவு பற்றியும் சொல்ல முடியுமல்லவா? இதைக் கேட்டால் என்ன முன்புபோல வேகமாகக் கூடுவதில்லை. கூடலில் ஒரு மிருதுத் தன்மை வந்துவிட்டது. பேச்சில் நிதானம் இருக்கிறது. சிரிப்பில் கம்பீரம் தெரிகிறது. முகத்தில் அமைதி இருக்கிறது. இத்தகைய உணர்வுகள் கொண்டு இப்போது இவர் போருக்குப் போக வேண்டிய அவசியமென்ன?

இராஜேந்திரன் போருக்குப் போகலாமே. இளவரசன் வேக மாகவும், திமிராகவும் இருக்கிறானே. அவன் செயல்படலாமே. நாம் தஞ்சை திரும்பி விடலாமே. இதைச் சொன்னால் சரியாக இருக்குமா அல்லது என்னை இவர் புறக்கணித்து விடுவாரா. நீ போ தஞ்சைக்கு என்று கோபமாய்த் திருப்பிவிடுவாரா. என்ன செய்வது சொல்.

உன்னைக் கவனி என்று சொன்னாரல்லவா. உன்னைக் கவனி அமைதியாயிரு.

அவள் தன்னைக் கவனிக்கத் துவங்கினாள். கவனித்தபடி வந்தாள்.

துங்கபத்ரை நதிக்கரையில் அவர்கள் குதிரையை நிறுத்திய போது, நீர் நிதானமாகப் போய்க் கொண்டிருந்தது. மிக அகலமான அந்த நதிக்கரையின் எதிர்பக்கம் வரிசையாய் குதிரை வீரர்கள் நின்றிருந்தார்கள். எதிரிகளை முதன்முதலாய் பார்த்த சந்தோஷத்தில் சோழப்படை வீரர்கள் ஆரவாரம் செய்தார்கள்.

''நதியின் ஆழம் என்ன.''

சக்ரவர்த்தி கேட்டார்.

கிருஷ்ணன்ராமன் ஒரு பெண் யானையை இறக்கினார். எதிர்ப்பக்கமிருந்து வீரர்களும் முன்னேறி படகில் நின்ற வண்ணம் அம்புகளைத் தொடுத்தார்கள். அந்தப் பெண் யானைக்கு மிக அருகே அம்புகள் வந்து விழுந்தன.

யானைப்பாகன் திரும்பிப் பார்த்தான். கரையிலிருந்து பிரம்மராயர் பின் வாங்கச் சொன்னார்.

யானை பின்வாங்கியது.

எதிர்ப்பக்கமிருந்தவர்கள் உரத்துக் கத்தினார்கள். இளவரசர் இராஜேந்திர கோபமானார். ''பேடிகளா.. என்று உரத்துக் கத்தினார்.

அது எதிரே இருக்கின்ற மேலைச்சாளுக்கியரைச் சொல்லியதா? பின்வாங்கிய யானைப்பாகனைச் சொல்லியதா? அல்லது பின் வாங்கும்படி உத்தரவு விட்ட கிருஷ்ணன்ராமனைச் சொல்லியதா? என்று குழப்பமாக இருந்தது.

எல்லோருக்கும் அங்கு கோபம் ஏற்பட்டது.

குதிரைகள் இறங்குவதற்குத் தயாராக கால்மாற்றித் தவித்தன.

வீரர்கள் உத்தரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், சக்ரவர்த்தி உடையார் மிக நிதானமாக அந்தக்கரை முழுவதையும் அலசி ஆராய்ந்து கொண்டிருந்தார். முன்பக்கம் ஏதோ தவறு இருப்பதாக அவர்மனம் உணர்ந்தது. அதை உறுதிப்படுத்திக்கொள்ள முன்னும் பின்னும் அலைந்தார்.

இவ்வளவு தாமதம் எதற்கு இறங்கி அடிக்க வேண்டியதுதானே என்று பல சேனாதிபதிகள் கடுகடுப்பாக இருந்தார்கள். ஆனால், சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் அருகே வரும்போது மிகப்பணிவாக முகத்தை மாற்றிக் கொண்டார்கள்.

ஆற்றில் ஜலம் சட்டென்று குறைந்தது. அதிகரித்தது. இதைக் கவனித்தபோது மிக அருகே அணைகட்டி ஆற்றின் வேகத்தை எளிதாக மாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்பது புரிந்தது. அப்படி மாற்றுவது தெரியவேண்டும் என்பதற்காகவே குறைத்தும், அதிகரித்தும் செய்கிறார்கள் என்பதும் புரிந்தது.

நீங்கள் ஆற்றில் இறங்கினால் அதிகம் தண்ணீர் விட்டு உங்கள் யானைகளும், குதிரைகளும் அடித்துப் போகும்படி செய்வோம் என்ற பயமுறுத்தல் அதில் இருந்தது. நடுவில் அப்படியொரு தடுப்பணை இருப்பின் இம்மாதிரியான மூடித்திறக்கும் வசதிகள் இருப்பின் அதை துவம்சம் செய்ய வேண்டும். கரை நெடுக போய் எங்கே எதிர்ப்புகள் இல்லையென்று பார்க்க வேண்டும். அந்தப் பக்கம் ஒற்றர்படையை இறங்கி போகச் செய்யவேண்டும். கரையேறி அந்தப் பக்கம் இருக்கின்ற படைபலத்தை அறிந்து கொண்டு வரவேண்டும். கைவசம் மேலைச்சாளுக்கிய வீரர்களின் போர் உடைகள் இருக்கின்றன.

கங்கதேசத்தில் கைப்பற்றிய உடைகளை ஒற்றர் படை காட்டியபோது சக்ரவர்த்தி வாய்விட்டுச் சிரித்தார். சம்மதம் என்றார்.

வடபெண்ணை ஆற்றில் ஒரு வண்ணானிடமிருந்து அந்தத் துணிகள் கைப்பற்றப்பட்டனவாம். எதற்கும் இருக்கட்டும் என்று குதிரையில் ஏற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

எதிரே நெடுநேரம் கவனித்தபோது எதிர்ப்பக்கம் ஒரு அரசன் இருப்பதற்குண்டான அறிகுறிகள் எதுவும் தெரியவில்லை. சத்யாசிரியன் அங்கு இருக்கிறானா, இல்லையா? என்பது சந்தேக மாகவே இருந்தது. ஏனென்றால் வீரர்கள் முன்னும் பின்னும் அலைந்தார்கள். வெறுமே எதிரே வந்து ஆடி கோஷமிட்டார்கள். பிறகு விலகிப் போனார்கள். சிலசமயம் பத்துப் பதினைந்து வீரர்களாக நகர்ந்தார்கள். அந்த நகர்வுதான் சந்தேகமாக இருந்தது. அந்த நகர்வில் எந்த நோக்கமும் இல்லாது இருந்தது. இவ்வளவு சீராக நகருவார்களா என்ற எண்ணமும் வந்தது. இப்படிச் சீராக மனிதர்கள் நகரமுடியுமெனில் மிக ஆயத்தமான படை, மிகக் கடினமான எதிர்ப்பு. நன்கு பயிற்சி பெற்ற கூட்டம். சக்ரவர்த்தி

உடையார் கவலைப்பட்டார். மேலும் படைகள் வந்து நதிக் கரையில் நின்றன. நதியை எட்டிப்பார்த்துவிட்டு தண்ணீர் எடுத்து வாய் கொப்பளித்துவிட்டு எதிர்க்கரை பார்த்து மறுபடியும் கரை யேறினார்.

அந்த மாலை நேரத்தில் எல்லோரிடமும் கோபம் கலைந்து சோர்வு அதிகமாக இருந்தது. மேலே பாதி நிலவு ஒளிவீசிக் கொண்டிருக்க, அங்கு தீப்பந்தங்கள் நட்டு அதனருகே சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரைப் போலவே உயரமும், அகலமும் கொண்ட ஒருவரைத் தலைப்பாகை கட்டி கழுத்தில் முத்துவடமிட்டு கம்பீரமாகச் சாய்ந்திருக்கப் பண்ணினார்கள்.

சக்ரவர்த்தி, அவரைப்போல வேடமிட்டு அமர்ந்தவனுக்கு நேர் எதிரே இருந்தார். போர்க் காலங்களில் இப்படிச் செய்வது வழக்கம். போர்க் காலங்களில் இரவுநேரத் தங்கலின்போது, யாரேனும் உள்ளே புகுந்து தலைவரை வெட்டிவிடலாம் என்பதால், வேறொரு நபரை அந்தப் படையின் தலைவர்போல் அலங்கரித்து வைத்து தலைவராக இருப்பவரைச் சற்றுத் தள்ளியிருக்க வைப்பார்கள்.

வெகு தூரத்திலிருந்து அம்பு எறிவதோ, கத்தி எறிவதோ கவண்கல் கொண்டு தாக்குவதோ பலிக்காது. ஒருவேளை அடிபட்டால் அது வேடமிட்டவனுக்குத் தான் இருக்கும். படையின் தலைவருக்கு எந்தவித ஆபத்தும் வராது.

''எதிர்க்கரைக்கு ஒற்றர்கள் போகமுடியுமா.''

''போயிருக்கிறார்கள். ஆனால், போனவர்களால் திரும்பிவர முடியவில்லை.''

''அது எப்படித் தெரிந்தது.

''சாளுக்கிய வீரர்கள் போல் வேடமணிந்து அவர்களோடு கலந்து விட்டார்கள். வெள்ளைச் சிறகு வைத்த அம்பு ஒன்று படகேறி வந்து நம் பக்கம் அடித்தார்கள். அது நீரில் விழுந்தது. அதை எடுத்து வரச் சொன்னேன். மீள முடியவில்லை என்று அதில் எழுதியிருந்தது.''

''போய் மீண்டுவர எவரால் ஆகும்.

சக்ரவர்த்தி உடையார் உடனே விரைவாகக் கேட்டார். அவர் குரலில் ஒரு தாபமும், கோபமும் இருந்தன.

''மிகவும் கடினம். சிக்கிக்கொண்டால் மரணம் நிச்சயம். மேலைச்சாளுக்கியத்தில் மரணம் என்பது எளிதில் வராது. ஒரு வீச்சிலே கொன்று விட மாட்டார்கள். அடித்து அடித்துத்

துன்புறுத்தி, துன்புறுத்தி கதறடித்துக் கொல்லுவார்கள். எனவே, ஒற்றர்களை அனுப்புவது அவ்வளவு உசிதமில்லை.''

''ஆனால், இந்தப் போர் ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டு மல்லவா. எதிர்ப்பக்கம் என்ன இருக்கிறது என்று நமக்குத் தெரிந்தாக வேண்டுமல்லவா.''

''இது அவர்களுடைய வீடு. அவர்கள் எத்தனை நேரம் வேண்டுமானாலும் இருந்து தாக்குப் பிடிப்பார்கள். இன்னும் இரண்டு நாட்களுக்குமேல் இந்த நதிக்கரையில் இருங்கள் என்று நம் படைகளைச் சொன்னால் படைகள் மிருதுவாகிவிடும். நம்முடைய யானைகளெல்லாம் பூனைகளாகி விடும். இப்படி எதிர்க்கரைபற்றி எதுவும் தெரியவில்லை என்றால் முழு வேகத்தில் இறங்கிவிடுவதே நல்லது.

''ஆழம் தெரியாமல் கால்விடலாமா.''

''என்று ஆழம் தெரிந்து, என்று கால்விடுவீர்கள். இத்தனை நாட்கள் நடந்து வந்து வெறுமே சோர்வுற்றுக் கிடந்ததால் அது சரியாக வராது. இப்போது என்ன செய்ய வேண்டும்.''

''ஒற்றர்படை போயே ஆகவேண்டும். மீண்டே ஆகவேண்டும்.''

''ஒரு நாழிகை நேரம் அவகாசம் கொடுங்கள். நான் யோசித்துக் சொல்கிறேன்.''

கிருஷ்ணன்ராமன் கையூன்றி எழுந்திருந்தார். அவர் எழுந் திருக்கப்படுகின்ற சிரமங்களைப் பார்த்து சபை மெல்ல சோர் வடைந்தது. நதிக்கரையிலிருந்து இரண்டு குடம் தண்ணீர் எடுத்து வரச்சொல்லி கிருஷ்ணன்ராமன் இடுப்பு வேட்டியோடு கிழக்கு பார்த்து அமர்ந்து கொண்டார். அவர் தலையில் நீர் ஊற்றப்பட்டது. எழுந்து துடைத்துக் கொண்டார். திருமண் இட்டுக் கொண்டார். புதியவேட்டி உடுத்திக் கொண்டார். மேலே துண்டு போர்த்தி இறுக்கிக் கொண்டார்.

ஒரு பலகை மேடையில் அமர்ந்து நாராயண மந்திரம் சொல்லத்துவங்கினார். தெள்ளத்தெளிவாகவும் தெரிந்தது. நரபலி. இந்த நரபலிக்கு யார் யாரையெல்லாம் அனுப்பலாம். இந்த வேலையைச் சரியாகச் செய்யக்கூடியவர் யார்.

வைணவதாசன்.

முதல் பெயர் வந்தது.

ஆமாம். அழகான மனைவி. அற்புதமான குடும்பம் அது களப்பலி ஆகப்போகிறது. வேறுவழியில்லை. சக்ரவர்த்தி உறுமுகிறார்.

வைணவதாசனையும் அவன் குழுவினரையும் இரவோடு இரவாக நீரில் இறங்கி நகர்ந்து எதிர்க்கரை ஏறி, அதற்குமேல் யோசிக்க பிரம்மராயரால் முடியவில்லை. ஏறியதுமே வெட்டிப்போட்டு விடுவார்கள். ஏறியது தெரிந்ததுமே அம்பால் துளைத்துவிடு வார்கள். அல்லது உயிரோடு பிடித்து நெருப்பால் சூடுபோடு வார்கள். கதறடிப்பார்கள். அந்த அலறல் இங்கு கேட்கும் வண்ணம் திருப்பி நிற்க வைப்பார்கள்.

சோழர்படை வேதனையுறும். இது சரியான முடிவல்ல. ஆனால், என்ன செய்வது இப்படித்தான் நகர்ந்தாக வேண்டும். யாரோ ஓடிவரும் சத்தம் கேட்டது.

அருண்மொழிப்பட்டன் வேகமாக ஓடிவந்தான்.

''நம்முடைய மருவூர் அந்தணர்கள் பதினான்கு பேர் இங்கே, இந்தத் துங்கபத்ரை நதிக்கரைக்கு வந்திருக்கிறார்கள். நமக்கு வாழ்த்துச்சொல்ல நமக்கு முன்பே குதிரைகளில் புறப்பட்டார் களாம். அதில் இருவர் தவிர, மற்ற எல்லோரும் நலமாக இருக் கிறார்கள். பதினைந்து நாள் பயணத்தில் அடையாளம் தெரியாமல் உருமாறியிருக்கிறார்கள்.''

''மருவூர் அந்தணர்களா ஏன், எதற்காக.. என்ற கேள்விகள் எழுந்தன.

''மருவூர் அந்தணர்கள்தானா. வேறு யாராவதா.''

யாரோ முணுமுணுத்தார்கள்.

சக்ரவர்த்தி சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தார். எங்கேயிருக் கிறார்கள் என்று ஆவலாகக் கேட்டார்.

''மெய்க்காவல் படையை வைத்து வளைத்து வைத்திருக்கிறேன். கைது செய்யப்பட்டுவிட்டோமோ என்று அவர்கள் பயப்படு கிறார்கள் இல்லை. உங்களுடைய வருகை அரசருக்குத் தெரிவிக்க வேண்டும். அரசருக்குத் தெரிவிக்காமல் நீங்கள் எல்லை தாண்டி யிருக்கிறீர்கள். போர் முனைக்கு வந்திருக்கிறீர்கள். இதுதவறு என்று கண்டித்துவிட்டு இங்கு வந்திருக்கிறேன்.''

''அருண்மொழி என்ன செய்வதாக உத்தேசம்.''

''இந்த நேரத்தில் அவர்களை வைத்துக்கொண்டு என்ன செய்ய முடியும்.

ஏதேனும் செய்ய முடியுமோ என்ற எண்ணத்தில் தான் இங்கு ஓடிவந்தேன். இந்தக் கரையைத் தாண்டி எதிர்க்கரைக்குப் போய் சத்யாசிரியனுடைய படைகள் என்னவிதமாக இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொண்டு இங்கு வரவேண்டும். இதற்கு எந்த விதத்தில் அவர்கள் பயன்படுவார்கள்.''

''அனுமதி பெறாது யுத்தகளத்திற்கு வந்தது பெரும் பிசகய்யா. அவர்களை எப்படி நம்புவது. மேலைச்சாளுக்கியத்தின் ஒற்றர்களாக அவர்கள் இருக்கலாமல்லவா.''

''அப்படி இருக்காது.''

கிருஷ்ணன்ராமன் மறுத்தார்.

''ஏன் இருக்காது. இந்த அந்தணர்களை, அதுவும் மருவூர் அந்தணர்களை நான் நம்பவே மாட்டேன்.

''கருமார், அந்தணர் விஷயத்தில் இவர்கள் நடுநிலை வகித்தவர்களல்லவா. எந்தப் பக்கம் வேண்டுமானாலும் சாய்ந்து கொள்ளலாம் அல்லவா. எந்தக் கட்சியும் இல்லாமல் நடுநிலை வகிப்பவர்கள் ஆபத்தானவர்கள்.''

''அதற்காக அவர்களை என்ன செய்வது. திருப்பி மருவூருக்கு அனுப்புவதா அல்லது அழைத்துப் பேசுவதா.''

பழுவேட்டரையர் உரத்த குரலில் கேள்வி கேட்டார்.

''அழைத்து என்ன பேசப்போகிறீர்கள்.''

''சக்ரவர்த்தியார்தான் முடிவு செய்ய வேண்டும்.''

பழுவேட்டரையர் சட்டென்று அவரைத் திரும்பிப் பார்த்தார்.

சக்ரவர்த்தி அமைதியாக இருந்தார். மெல்ல சிரித்தார்.

''மருவூர் அந்தணர்களை அழைத்து இரவோடு இரவாக ஆறுதாண்டி போக முடியுமா என்று விசாரித்து, கங்கதேசத்திலிருந்து வந்திருக்கிறோம் என்று சொல்லச் சொன்னால் என்ன.''

''சொல்கிறார்கள். எதிரே இருப்பவர்களும் நம்புகிறார்கள். பிறகென்ன..''

''யார் அங்கே.. என்ன நடக்கிறது என்று விசாரித்து..''

''விசாரித்து..

''மறுபடியும் இரவோடு இரவாக ஆற்றில் மூழ்கி இக்கரை வந்தால் என்ன.''

''துங்கபத்ரை காவிரி போல் அமைதியான ஆறு அல்ல. சுழிகளும், பாறைகளும் நிறைந்த ஆறு. மருவூர் அந்தணர்கள் அதில் இறங்கிப் போகவும் முடியாது. போனால் மீளவும் முடியாது. அதுவும் தவிர, இவர்கள் தஞ்சை அந்தணர்கள் என்று தெரிந்து விட்டால், சோழதேசத்து ஒற்றர்கள் என்று தெரிந்துவிட்டால் நரகவேதனைப் படுவார்கள். மூன்று பேர், நான்கு பேர் சேர்ந்து கொண்டு பிரம்பால் அடிப்பார்கள். சூடு போடுவார்கள். முகத்தில் குத்தி வீங்க வைப்பார்கள். எட்டி எட்டி உதைப்பார்கள். எவ்வளவு வலிமை உள்ளவனும் சகலமும் கக்கிவிட நேரும். சரணாகதி அடைய நேரும். மருவூர் அந்தணர்கள் ஒரு அடி தாங்குவார்களா? அவர்களை.ஆறு தாண்டி அனுப்பி என்ன சாதித்துவிடமுடியும்.''

கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் அடிக்குரலில் வேதனையோடு பேசினார்.

சக்ரவர்த்தி உடையார் செருமியவுடன், எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

''அந்தணர்களை மேலைச்சாளுக்கியத்தினர் அவமானப் படுத்துவ தில்லை. அடிப்பதும் இல்லை. அவர்கள் ஒற்றர்களாக இருந்தாலும் கூட, அவர்களை இம்சிப்பது இல்லை. துரத்திவிடுவார்கள். ஆனால், நீங்கள் சொல்லுவதெல்லாம் மறவர்களுக்கு நடக்கும். பிராமண சாபம் பொல்லாதது என்று மிக உண்மையாய் நம்புகிற வர்கள்.''

''இந்த அந்தணர்களை விட்டால் வேறு ஆள் இல்லையென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா. வைணவதாசன் என்ன செய்து கொண்டிருக்கிறான்.''

பழுவேட்டரையர் சீறினார்.

''வைணவதாசன் வேலை செய்து கொண்டுதான் இருக்கிறான். வீணாக உரக்கப் பேச வேண்டாம்.

பிரம்மராயர் முறைத்துப் பேச, அங்கு சற்று உஷ்ணமான ஒரு சூழ்நிலை உண்டாகியது.

சக்ரவர்த்தி உடையார் கையமர்த்தினார்.

''உங்களுடைய ஆலோசனைகளுக்கு நன்றி.''

''மருவூர் அந்தணர்களை அருண்மொழிப்பட்டன் அழைத்து வரட்டும்.''

அரசனைச் சந்தோஷப்படுத்த இவ்வளவு தொலைவு வந்தவர்கள். அரசன் அழைத்ததும் வந்து காலில் விழுந்துவிடப் போகிறார்களே என்ற கவலை பிரம்மராயருக்கு இருந்தது.

ஒரு வேதனையோடு உடம்பை முறுக்கிக் கொண்டார். எழுந்து போய்விடலாமா என்று நினைத்தார்.

சக்ரவர்த்தி உடையார் அவரைப் பார்த்து மெல்லச் சிரித்தார்.

''கவலைப்பட வேண்டாம். அந்தணர்களோடு பேசித் தெளிவான பிறகே முடிவுகள் எடுப்பேன்.''

அந்த அந்தணர்கள் வந்தார்கள்.

வரிசை வரிசையாய் வந்து கைகூப்பினார்கள். சட்டென்று கையை உயரத் தூக்கினார்கள். அரசனை வாழ்த்தி ஸ்லோகம் சொல்ல ஆரம்பித்தார்கள். அரசனை 'விஷ்ணு ரூபனே..' என்று கொஞ்சத் துவங்கினார்கள். சபையிலுள்ள பலரும் மெல்லியதாய் நெளிய,. சக்ரவர்த்தி அசையாது கண்மூடி கேட்டுக் கொண்டிருந்தார். முடிந்தவுடன் கைகூப்பினார்கள். கை உயர்த்தி ஆசீர்வதித்தார்கள்.

''இங்கு ஆசனம் கிடைப்பதற்கு வழியில்லை. எனவே, அவரவர் சௌகரியப்பட்ட இடத்தில் உட்கார்ந்து கொள்ளுங்கள்.'' என்று சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வேண்டிக் கொண்டார்.

அவர்கள் நின்ற இடத்திலிருந்தே சட்டென்று அமர்ந்து கொண்டார்கள். என்ன விஷயம் என்று கேட்க, தாங்கள் வந்திருந்த விஷயத்தைச் சொன்னார்கள். வடக்கு நோக்கி காசிவரை போக விரும்பியதாகவும், அப்படி போவது என்பதை மேலைச்சாளுக்கியம் வழியாகப் போகலாமே என்று தேர்ந்தெடுத்ததாகவும், போருக்கு முன்னரே போய்விடலாம் என்று நினைத்ததாகவும், ஆனால் விரைவாகப் போக முடியவில்லையென்றும் பல இடங்களில், பல நாட்கள் தங்கிதான் பயணப்பட வேண்டியதாயிற்று என்றும் சொன்னார்கள்.

பயணத்தின் நோக்கம் காசி என்று தட்டுத்தடுமாறிச் சொன்னார்கள். சபை அதைக் கூர்மையாகக் கவனித்தது.

''காசிக்குப் போக எளிமையான பாதை கிழக்குக் கடற்கரைச் சாலை வழியாக கீழைச்சாளுக்கியம் போய், பிறகு ஒட்டர் தேசம் போய், அங்கிருந்து கங்கைக்கரை வழியாகக் காசியை அடைவது தான் காலாகாலத்திற்கும் நடைபெறும் வழக்கம். மேலைச்சாளுக்

கியத்தின் வழியாகக் காசிக்குப் போகிறவர்களை இப்பொழுதுதான் பார்க்கிறேன்.''

இளவரசர் இராஜேந்திரர் நகைப்போடு பேசினார்.

''உண்மைதான். இந்தமுறை நாங்கள் இந்தப் பாதையைத் தேர்ந்தெடுக்கக் காரணம் இருக்கிறது. கங்கதேசத்தையும், ரெட்டை பாடியையும் அதற்கு மேலுள்ள பகுதியையும் சோழதேசம் கைப்பற்றியிருக்கிறது. போருக்கான ஆயத்தங்கள் நடைபெறுவதால் இந்த இடத்தில் பாதை செம்மையாக இருக்குமென்றும், வழியிலே நடமாட்டம் இருக்குமென்றும், அதனால் காடு பகுதிகளைத் தாண்டுவது எளிது என்று நினைத்தும் இந்த இடத்தைத் தேர்ந் தெடுத்தோம்.

நாங்கள் நினைத்தது போலவே எங்களைத் தாண்டி பாரவண்டிகள் போயின. சோழதேசத்து ஒற்றர் படையும், கருமார் கூட்டமும் கடந்தன. சகலரும் எங்களை இனம் கண்டு கொண்டு அரிசியும், பருப்பும் கொடுத்துவிட்டுப் போனார்கள். வழியில் விலங்கு பயமோ, திருடர் பயமோ இல்லை. வழிநெடுக நாங்கள் தேசாந்திரம் போகிறோம் என்றுதான் சொல்லி வந்தோம். கங்கதேசத்தில் மிகப்பெரிய மரியாதை. ரெட்டைபாடி கிராமங்களில் எதிர்ப்பு இல்லை. கேட்டதைக் கொடுத்தார்கள்.

மேலைச்சாளுக்கியத்திலும் அந்தணர்களுக்கு மரியாதை இருந்தது. ஆயுதங்கள் வைத்திருக்கிறோமா என்று சோதித்தார்கள். இல்லை என்றதும் விட்டுவிட்டார்கள். கயா காசிக்குப் போக வழி சொன்னார்கள். வழியிலுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் குறித்துக் கொடுத்தார்கள். துங்கா, பத்ரா என்று இரண்டு நதிகளைப்பற்றிப் பேசினார்கள்.''

''உங்கள் மீது எவரேனும் வன்முறைக்கு முயற்சித்தார்களா?''

''இல்லை... இல்லை...

''என்ன காரணமாக இருக்கும்.''

''அந்தணர்கள் என்பதுதான் காரணம். அவர்கள் வன்முறையாகக் கொஞ்சம் பேச ஆரம்பித்தார்கள். நாங்கள் அடக்கினோம்.''

''எவ்விதமாக அடக்கினீர்கள்.''

''நாங்கள் அந்தணர்கள். சோழதேசத்தில் இருப்பினும், கங்க தேசத்தில் இருப்பினும், ரெட்டை பாடியில் இருப்பினும், மேலைச் சாளுக்கியத்தில் இருப்பினும் நாங்கள் அந்தணர்கள். மக்களுக்கு

நல்லது செய்வதுதான் எங்கள் வேலை. எங்களை அடித்தாலும் நாங்கள் பதிலுக்கு அடிக்கமாட்டோம். நீ ஏசினாலும் நான் பதிலுக்கு ஏசமாட்டேன். என்ன கொடுமை செய்தாலும் நான் பொறுமையாக ஏற்றுக்கொள்வேன் என்று அவர்களிடம் சொல்ல, அவர்கள் மனம் நெகிழ்ந்து போனார்கள். உங்களை ஏன் நாங்கள் கொடுமை செய்கிறோம் என்று சொன்னார்கள்.''

''நல்லது. சோழதேசத்திற்காக நீங்கள் ஒரு உதவி செய்ய வேண்டும்.''

''சொல்லுங்கள்.''

''சோழதேசத்திற்கு நீங்கள் நன்றிக்கடன் பட்டிருக்கிறீர் களல்லவா.''

''வெகுநிச்சயமாய் பட்டிருக்கிறோம்.

''என்னவிதமாக நன்றிக்கடன் பட்டிருக்கிறீர்கள்.''

சக்ரவர்த்தி அவர்களைப் பார்த்துக்கொண்டே கேட்டார்.

''எங்களுடைய குலமும், குலத்தொழிலும் இன்றுவரை நல்ல முறையில் இயங்கக் காரணம் சோழதேசத்து மாமன்னர்கள். அவர்கள் கொடை சோழதேசத்து மக்கள். அவர்கள் அன்பு. சோழதேசத்து மறவர் குலம். அவர்களின் செயல்திறன். சோழதேசத்து பூமி. அந்த வண்டல் பூமியில் கிடைத்த நெல்லைத் தின்றுதான் நாங்கள் வேதம் பயின்றோம். அந்த பூமிக்கும், அந்த பூமியைச் சார்ந்த மக்களுக்கும் நாங்கள் நல்லது செய்துதான் ஆகவேண்டும். எவரையும் துன்புறுத்த முடியாது. எந்த விதமான வன்முறையிலும் ஈடுபடமுடியாது. மற்ற எதுவும் செய்ய நாங்கள் தயாராக இருக்கிறோம்.''

''உங்களை வன்முறையில் ஈடுபடச் சொல்லவில்லை. இரவோடு இரவாக நீந்தி எதிர்க்கரை போய் அங்குள்ள படைபலம் பற்றித் தெரிந்துகொண்டு மறுபடியும் அடுத்த நாள் நீந்தி இக்கரை வந்து அங்கு என்ன இருக்கிறது என்று சொல்லவேண்டும்.'' சக்ரவர்த்தி உடையார் அந்த அந்தணர்களை உற்றுப் பார்த்துச் சொன்னார்.

அவர்கள் கவனமாகக் கேட்டுக் கொண்டார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர். அந்தணர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே வெள்ளை விரிப்பில் கீழே கிடந்த கரிக் குச்சியினால் எதோ கை போன வண்ணம் கிறுக்கத் துவங்கினார். ஆனால், அதை எவரும் கவனிக்கவில்லை. சக்ரவர்த்தியின்

முகத்தை பிரம்மராயர் உற்றுப் பார்த்தார். சக்ரவர்த்தி பிரம்ம ராயரைப் பார்த்து மெல்லச் சிரித்தார்.

சபை சற்று விலகியிருக்க வேண்டும். நான் இந்த அந்தணர் களோடு அந்தரங்கமாகப் பேச விரும்புகிறேன்.

பழுவேட்டரையருக்கு சட்டென்று முகம் இருண்டது. அருண்மொழிப்பட்டன் திடுக்கிட்டான். இளவரசர் இராஜேந்திரர் சற்றுகோபமாகச் சக்ரவர்த்தியைப் பார்த்தார். ஆத்திரமாக அந்த அந்தணர்களைப் பார்த்தார்.

பிரம்மராயர் தலையை உலுக்கிக் கொண்டார்.

''என்ன சொல்கிறீர்கள். இது போர்முனை. இங்கு நீங்கள் ரகசியம் என்ன பேசுவீர்கள். எனக்கும் தெரியாத ரகசியம். அதுவும் இந்த அந்தணர்களோடு பேச வேண்டுமென்றால், நான் என்ன முக்கியம். நீங்கள் செய்வது அநீதமாக இல்லையா. நீங்கள்தான் தலைவர். நீங்கள்தான் சக்ரவர்த்தி. ஆனாலும், ஒரு போர் முனையில் உங்களுக்காக உயிர்விடத் துணிந்தவர்களை அப்புறப்படுத்து கிறீர்களே. இது நன்றாக இருக்கிறதா? சோர்வடையச் செய்யாதா?''

''உத்தரவுக்கு கட்டுப்பட்டு வெளியேறுவது நல்லது. காரணம் என்னவென்று ஒருவேளை பின்னால் சொல்லப்படலாம். சொல்லப் படாதும் போகலாம். ஒவ்வொன்றிற்கும் விளக்கம் சொன்னால்தான் நீங்கள் வேலை செய்வீர்கள் என்றால், உங்கள் வேலையும், உங்கள் பாதுகாப்பும் எனக்குத் தேவையில்லை. விலகுங்கள். உங்களை நம்பி நான் மேலைச் சாளுக்கியத்திற்கு வரவில்லை.''

''ஹா.. இந்த அந்தணர்களை நம்பி வந்தீர்களோ.''

''ஆமாம். இந்த அந்தணர்களைப்போல வேறு யாரேனும் எனக்கு உதவி செய்யக்கூடும் என்று நம்பித்தான் வந்திருக்கிறேன்.''

இளவரசர் இராஜேந்திரன் சரக்கென்று எழுந்திருக்க அருண் மொழிப்பட்டன் தயக்கத்தோடு பின்தொடர, மற்ற சேனாதிபதிகள் நகர, பழுவேட்டரையர் எழுந்து போய், அங்கு யாரோ உட்கார்ந்து உறங்கிக் கொண்டிருப்பவனை, ''என்னடா உறக்கம். உறங்கவா வந்திருக்கிறாய்.'' என்று அவர் அறைய, அவன் அலற, ஒரு பரபரப்பு அங்கே ஏற்பட்டது.

கடைசியாய் கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் எழுந்திருந்தார்.

''இது சரியே இல்லை.'' என்று சொல்லிவிட்டு விலகிப் போனார்.

அந்தணர்கள் உள்ளுக்குள் குதூகலித்தார்கள்.

அருகே வாருங்கள் என்று சக்ரவர்த்தி அழைத்ததும் அருகே போனார்கள்.

சக்ரவர்த்தி அருகே அரைவட்டமாக உட்கார்ந்து அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். கொஞ்சம் அதிகம் உணர்ச்சிவசப்பட்டவர்கள் அருகில் இருப்பவர்களின் கைகளைப் பிடித்துக் கொண்டார்கள். இது வாழ்க்கையின் மிக முக்கியமான கட்டம் என்று இரண்டு, மூன்று பேருக்குத் தோன்றியது.

எவ்வளவு பெரிய மதிப்பு. ஊருக்குப் போய் உடனே சொல்ல வேண்டும். நாங்களும், சக்ரவர்த்தியும் யுத்தம் பற்றி ரகசியமாய்ப் பேசினோம் என்று சொல்ல வேண்டும்.

''எதிர்க்கரையில் உள்ள எதிரி சைன்யத்தில் இருக்கிற நடமாட்டம் எனக்கு மிகப்பெரிய சந்தேகத்தைக் கொடுக்கிறது. திடீரென்று ஒரு நாற்பது, ஐம்பது பேர் மிகச்சீராக நடக்கிறார்கள். அந்த நடை எனக்கு பலத்த சந்தேகத்தை உண்டு பண்ணியது. இவ்வளவு சீராக எந்தப் படையும் நடக்காது. நடக்கவும் முடியாது. எதிர்க்கரை மிகுந்த தொலைவில் இருக்கிறது. உற்றுப் பார்த்தாலும் முகங்கள் தெரியவில்லை. பனிப்பொழிவும் அதிகாலையில்தான் அதிகமிருக் கிறது. ஆற்றில் நீர்வரத்தை அதிகரித்தும், குறைத்தும் காட்டு கிறார்கள். அதாவது படைகள் வரும் போது நீர்வரத்தை அதிகரித்து மொத்தப்படையையும் சிதிலமடையச் செய்வேன் என்கிறார்கள். எங்கிருந்து இந்த நீர்வரத்தைக் கட்டுப்படுத்துகிறார்கள் என்று தெரியவில்லை. அந்தப் பக்கம் போக முடியவில்லை.

எனக்கு நீங்கள் ஒரு உதவி செய்ய வேண்டும். எதிர்ப்பக்கம் போய் அந்தச் சீரான நடமாட்டம் என்னவென்று தெரிந்து கொண்டு வரவேண்டும். என் அனுமானத்தில் போர் வீரர்கள்போல வைக் கோல் பொம்மைகள் செய்து ஒரேயொரு நீள மூங்கிலில் அவர்களை வரிசையாக நிற்க வைத்து இடது பக்கமும், வலது பக்கமும் மூங்கில் கழியின் நுனிகளில் இரண்டு பேர் நிக்க வைத்து அவர்களை தூக்கிப் போகும்படி செய்துவிடுகிறார்கள். அப்படித் தூக்கிப் போகும்போது அந்த நடமாட்டம் ஒரு பதினைந்து வீரர்கள் நடப்பது போல இருக்கிறது. உண்மையில் இரண்டு வீரர்கள்தான் நடக்கிறார்கள்.

நம்முடைய சைன்யத்தின் பலம் ஒற்றர்கள் மூலம் அவர்களுக்கு முன்கூட்டி தெரிந்திருக்கும். அந்த சைன்யத்தை எதிர்க்க வேண்டு மானால், படைதிரட்ட அவகாசம் வேண்டுமென்றால், வேறு ஏதாவது செய்தாக வேண்டும் என்ற நினைப்பில், எதிரே ஒரு டைசம்

வீரர்களைப் பத்துலட்சம் வீரர்களாகக் காட்டுகிறார்கள். உண்மை யில் அங்கு அவ்வளவு வீரர்கள் இல்லை என்பது என் எண்ணம். ஆனால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஒருவேளை சீராக நடக்க அவர்கள் பழகியிருக்கலாம்.

ராமநாதபுரத்து மறவர்கள் இப்படி இடக்கால், வலக்கால் என்று சீராக நடப்பதை நான் கவனித்திருக்கிறேன். நன்றாகக் குனிந்து நிமிருவதை நான் பார்த்திருக்கிறேன். நூறு பேர் அப்படி இரண்டு கைகளிலும் துணி வைத்து நடனமாடுவது போல் குனிந்து நிமிரு வார்கள். பார்க்கப் பரவசமாக இருக்கும். ஒருவேளை இவர்கள் அப்படிச் சீராக நடக்கப் பயிற்சி பெற்றிருப்பார்களோ. நடனம் என்ற முறையில் அல்லாது, போர்முறையில் ஒரு சீராக நகர்வது என்று பயிற்சி பெற்றிருப்பார்களோ என்ற எண்ணமும் வருகிறது. அப்படியெனில் பத்து லட்சம் வீரர்கள் எதிர்க்கரையில் நிச்சயம் இருப்பார்கள். போர் மிகக் மிகக் கடுமையாக இருக்கும். இல்லை யெனில், அங்கு நகர்வது வைக்கோல் பொம்மைகள் எனில், துணிகள் எனில், மூங்கிற் கழியில் சொருகப்பட்ட வெறும் உரு வங்கள் எனில் நான் கீழிறங்கி மொத்த மேலைச்சாளுக்கியத்தையும் தகர்த்துவிடுவேன்.

என்னுடைய படையெடுப்பு இப்போது உங்கள் கையில் இருக்கிறது. சோழதேசத்தின் வெற்றி இப்போது உங்கள் கையில் இருக்கிறது. இரவோடு இரவாகத் துங்கபத்ரைக்குள் மூழ்கி இருட்டில் கரையேறி துணியை உலர்த்தி. பிறகு உடுத்திக் கொண்டு வடக்கேயிருந்து தெற்கு வருகிறதுபோல நீங்கள் நடக்க வேண்டும்.

கீழைச்சாளுக்கியத்திலிருந்து இந்தப் பக்கம் வடமேற்கே நகர்ந்து வந்து விட்டோம் என்று சொல்லவேண்டும். நாங்கள் அந்தணர்கள். போரில் சம்மந்தமில்லாதவர்கள் என்று சொல்லவேண்டும். அவர்கள் வெற்றிபெற ஆசீர்வதிக்க வேண்டும். பிறகு, அவர் களோடேயேயிருந்து உண்டு, பிறகு இரவோடு இரவாக ஆற்றில் இறங்கி என்னிடம் வந்து அந்தப்படை பற்றி தெரிவிக்க வேண்டும். எவ்வளவு கவனிக்க வேண்டுமோ.. அவ்வளவு கவனிக்க வேண்டும்.

அந்தணர்களே.. மருவூர் அந்தணர்களே.. உங்களை மிகப்பெரிய பணியில் நான் ஈடுபடுத்துகிறேன். என்னிடம் படைகள் இருக் கின்றன. ஒற்றர்கள் இருக்கிறார்கள். ஆனால், மிகக் காபந்தாக இருக்கின்ற நேரம் இது. எனவே, என்னுடைய ஒற்றர்படை

சரிப்படாது. நீங்கள் அந்தணர்கள்தானா என்றும் சோதிப்பார்கள். வழிப்போக்கர்கள்தானா என்றும் விசாரிப்பார்கள். மேலைச் சாளுக்கியம் பற்றித் தெரிந்தவர்கள் யார்.''

மூன்று, நான்கு பேர்கள் கை தூக்கினார்கள்.

''கீழைச்சாளுக்கியம் பற்றி விசாரித்தால் பதில் சொல்லுங்கள். அமாவாசையன்று கீழைச்சாளுக்கியத்திலிருந்து விமலாதித்தர் தலைமையில் ஒரு படை புறப்பட்டது என்று சொல்லுங்கள். படை எவ்வளவு பெரிதாக இருக்கிறது என்று கணக்கைச் சொல்லுங்கள். சோழதேசத்துப் படைகள் என்ன என்று தெரியவில்லை என்று சொல்லுங்கள். அதற்கு முன்பே கிளம்பி விட்டோம் என்று சொல்லுங்கள். விமலாதித்தருக்கு குந்தவையின் மீது அவ்வளவு விருப்பம் இல்லை என்று சொல்லுங்கள். வேறு ஒரு திருமணம் விமலாதித்தர் செய்யத் தீர்மானித்திருக்கிறார். நடனப்பெண்களோடு தான் இருக்கிறார். இராஜராஜர் மகளான குந்தவையோடு இல்லை என்று சொல்லுங்கள்.''

''அது உண்மையா சக்ரவர்த்தி.''

சட்டென்று ஒரு அந்தணர் கேட்டார். மெல்ல இராஜராஜர் அந்த அந்தணரைத் திரும்பிப் பார்த்தார்.

அவர் முகத்தில் சற்று இருள் படர்ந்து, மறுபடியும் ஒளி வீசியது.

''உண்மைதான் அந்தணரே... என் மகள் வாழ்க்கை திருப்தி கரமாக இல்லை. ஆனால் அது முக்கியமில்லை.

''தங்களைத் தவறாகக் கேட்கவில்லை சக்ரவர்த்தி. நீங்கள் சொன்ன விஷயத்திற்கு அப்பாலும் அவர்கள் கேள்வி கேட்பார்கள். அதற்காக நாங்கள் எங்களைத் தயார் செய்து கொள்ளும் பொருட்டு கேட்கிறோம். ஸ்ரீ இராஜராஜர் இந்த விஷயத்தில் மிகவும் மனம் கலங்கி இருக்கிறார் என்றும் நான் சொல்லலாம் அல்லவா.''

''என்ன வேண்டுமானாலும் சொல்லலாம். சமயோஜிதமாய் எப்படி வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாம். இராஜராஜர் மீது சோழதேசத்திலுள்ள மக்கள் சிலருக்குக் கசப்பு இருக்கிறது என்றும் சொல்லலாம்.''

''தந்தைக்கும், மகனுக்கும் சரியாக உறவு இல்லை என்றும்கூட சொல்லலாமா.''

''சகலமும் உங்களுடைய விருப்பம். நாங்கள் அடித்துக் கொண்டதாகக்கூட நீங்கள் சொல்லலாம்.''

''இம்மாதிரியான விஷயங்களுக்கு அவர்கள் சந்தோஷ மடைவார்கள். எங்களுக்கு இணக்கமாகப் பேசுவார்கள்.''

''எனக்கு நீங்கள் சொல்வது புரிகிறது.''

''அந்த அந்தணர் மிகக் கூர்மையானவர்.''

மகளைப்பற்றி விசாரித்த அந்தணரை கைநீட்டி சக்ரவர்த்தி சுட்டிக்காட்டினார்.

''ஆனாலும், எத்தனை சாமர்த்தியமாக நீங்கள் நடந்து கொண்டாலும் இந்த விஷயம் எளிதில் முடியாது. ஒருவேளை உங்களை ஒற்றறிந்து கண்டு கொண்டால், நான் அனுப்பிய ஆட்கள் என்று தெரிந்து கொண்டால், மிக மிகக் கடுமையாக உங்களை அவர்கள் தண்டிப்பார்கள்.''

''நாங்கள் அதற்கும் தயாராக இருக்கிறோம். ஆனால், பெரிதாகக் கூச்சல் போட்டு அழுது பயந்தது போல் நடித்து, அந்தணனை ஒன்றும் செய்யாதீர்கள் என்று காலைப்பிடித்துக் கொண்டு, அழுது சகலவிதமாகவும் நடிப்போம்.''

சக்ரவர்த்தி உடையார் கண்மூடிக் கொண்டார்.

''மருவூர் அந்தணர்களுடைய ஞானத்தை நான் அறிவேன். உங்களை இந்த இடத்திற்கு நான் தள்ளும்படியாக நேர்கிறது. எதிரியின் காலைப்பிடித்து அழுவேன் என்று ஒரு அந்தணர் சொல்லும்படியாக ஒரு அரசன் வைக்கிறான் என்றால், அவன் மோசமானவன்தான். ஆனால், வேறு வழியில்லை. இதை உடனடி யாகச் செயல்படுத்த வேண்டும்.

உங்களுடைய வருகை எனக்கு மிகப்பெரிய பலம். உங்களுடைய ஆதரவு எனக்கு மிக மிக முக்கியம். நான் எங்கேயிருக்கிறேன் என்பதைக் காட்ட, மிக நீண்ட மூங்கிலில் வெள்ளைக்கொடிகளாக ஒன்றின் கீழ் ஒன்றாகப் புலிக்கொடிகள் பறந்து கொண்டிருக்கும். அந்த இடத்தை நோக்கி நீங்கள் திரும்பிவிடலாம்.

அந்தணர்களே ஒருவேளை இந்த முயற்சியில் நீங்கள் ஊத்தை யடைய நேரிட்டதெனில் உங்கள் குடும்பத்தை இந்த இராஜராஜன் காப்பான். அவன் இளவலான மகன் இராஜேந்திரன் காப்பான். அவனுடைய சேனாபதி பிரம்மராயர் காப்பார். இது சத்தியம், சத்தியம்... சத்தியம்... எனவே குடும்பம் பற்றிய எந்தப் பயமும் இல்லாமல் எனக்காக இந்த விஷயத்தைச் செய்யுங்கள். ஒரு இரவு அங்கு தங்கி, மறு இரவு அங்கிருந்து மீண்டு விடுங்கள். நான்

உங்களை அடுத்த நாளின் விடியலில் எதிர்பார்க்கிறேன். நம்முடைய சபை கூடும் முன்பே நீங்கள் விலகிப் போய் நதியில் இறங்கலாம். பதினான்கு பேரும் போக வேண்டிய அவசியமில்லை. மூன்று பேரோ, நான்கு பேரோ, ஐந்து போரோ போகலாம். உங்களுக்காக நான் இங்கே நிசும்பசூதனியைப் பிரார்த்தனை செய்து கொண்டிருப் பேன்.''

தொலைவிலுள்ள ஒரு தீப்பந்தம் மேலும், கீழும் அசைந்தது. யாரோ அருகே வரவேண்டும் என்று கேட்கிறார்கள் என்பது புரிந்தது. கை தட்டினார். அருகே தீப்பந்தம் வந்தது.

தஞ்சையிலிருந்து தூதுவன் வந்திருக்கிறான் என்று சொல்ல, மூன்று தூதுவர்கள் வந்து மண்டியிட்டார்கள். விழுந்து நமஸ்கரித் தார்கள். அரசர் வெற்றி பெற வேண்டுமென்று உரக்கக் கூறினார்கள். சோழம்.. சோழம்... என்று பிளிறினார்கள்.

ஒரு பெட்டியை அரசரிடம் கொடுத்தார்கள்.

''என்ன இது.''

''நிசும்பசூதனி பிரசாதம். தொடர்ந்து சண்டி ஹோமம் நடக்கிறது. மறவர்களும், வணிகர்களும், பொதுமக்களும் சேர்ந்து கொண்டு நடுநாட்டு அந்தணர்களின் உதவியோடும், பழமார்நேரி அந்தணர்களின் உதவியோடும் தொடர்ந்து நீங்கள் வெற்றி பெற வேண்டுமென்று யாகம் செய்து கொண்டிருக்கிறார்கள். பதினாறு குண்டங்கள் அமைத்திருக்கிறார்கள். சகலதேவதா ப்ரீதி யாகம் என்கிறார்கள். நவசண்டியாகம் என்றும் சொல்கிறார்கள். அந்தப் பிரசாதங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.'' அரசர் மெல்ல அந்தப் புலிப் பெட்டியை கண்ணில் ஒற்றிக் கொண்டார்; திறந்தார். பெட்டி இரண்டாக வகுக்கப்பட்டு ஓரிடத்தில் விபூதியும், இன்னொரு இடத்தில் குங்குமமும் இருந்தன. விபூதியை நெற்றியில் தரித்துக் கொண்டார். குங்குமத்தை இட்டுக் கொண்டார். பெட்டியை அப்படியே அந்தணரிடம் நீட்டினார்.

''நீங்கள் அனைவரும் எடுத்துக் கொள்ளுங்கள் என்றார்.''

அவர்கள் ஆவலாக விபூதி தரித்துக் கொண்டார்கள். குங்குமம் இட்டுக் கொண்டார்கள். யாக பஸ்பமாக அந்த விபூதி இருந்தது. ஓர் அந்தணர் இடுப்பிலிருந்து வெள்ளிக் குங்குமச்சிமிழை எடுத்து அந்தச் சிமிழில் விபூதியைப் போட்டுக் கொண்டார். மூடினார். மறுபிடியும் வேட்டி நுனியில் முடிந்து இடுப்பில் சொருகிக் கொண்டார்.

பெட்டியைத் திருப்பிக் கொடுத்தார்கள். போய் வருகிறோம் என்று சொன்னார்கள். அரசர் எழுந்து நின்று தலைகுனிந்து வணங்கினார். கீழே நிலம் தொட்டார். அவர்களைப் பார்த்து மறுபடியும் கைகூப்பினார்.

வாழ்க சோழதேசம்... வாழ்க சோழதேசத்து மக்கள்... வாழ்க அந்தணர்கள்... வாழ்க ஆவினம்... என்று உரக்கச் கூறி வணங்கினார்கள்.

அவர்கள் அரசரைவிட்டு விலகி நடந்தார்கள். இருளில் நடந்தார்கள். அவர்கள் மறைய, சுற்றித் தொலைவிலிருந்த அத்தனை சேனாதிபதிகளும் வேகமாக வந்தார்கள்.

''நீங்கள் வெள்ளைத்துணியில் போட்ட கோடுகள் புரிந்து விட்டன.''

''தெரிந்தது. நீங்களும் நாடகமாகவே பேசினீர்கள் என்றும் தெரிந்தது.''

பிரம்மராயரை நோக்கி அரசர் குதூகலத்தோடு சொன்னார்.

''சட்டென்று புரிந்துகொண்டு, மிக வேகமாக நீங்கள் அலுப்பது போல் பேசினீர்கள். அது அந்தணர்களுக்கு சந்தோஷமாகிவிட்டது. அந்தணர்கள் எந்தத் தயக்கமும் இல்லாது இதில் ஈடுபட சம்மதம் தெரிவித்துப் போயிருக்கிறார்கள்.''

''அவர்களை மட்டும் அனுப்பினால் போதுமா? பின்னே பாதுகாப்பு ஏதேனும் அனுப்ப வேண்டுமா?''

''அதிகமான கூட்டம் சந்தேகத்தை விளைவிக்கும். நீர் பாதுகாப்பு என்று அனுப்புவது அந்தணர்களுக்கு இடைஞ்சலாக முடியும்.''

''அவர்கள் அடியும் சித்ரவதையும் தாங்க மாட்டார்கள். மூன்று பிரம்படியில் சகலமும் கக்கி விடுவார்கள். எனவே, பிரம்படி என்று வரும்போது, அப்படி மேலே படாமல் இருக்கவும், அங்கே பெருங் கலவரம் ஏற்படுத்தவும் கடைசி நேரத்தில் சரியாகத் தப்பித்துக் கொள்ளவும் ஒரு சிறுபடையை அனுப்பினால் நன்றாக இருக்கும்.''

இளவரசர் இராஜேந்திரர் சொன்னார்.

''இல்லை அது சரிவராது.''

கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் சொன்னார்.

''அனுப்புங்கள் தவறேதும் இருக்காது.''

அருண்மொழிப்பட்டன் சொன்னான்.

''அரசர் சொல்வதைக் கேளுங்களேன்.''

பழுவேட்டரையர் உரக்கச் சொல்ல, மறுபடியும் விவாதம் தொடர்ந்தது.

''ஐம்பது வீரர்கள் போதாதா.''

''ஏன் படை. ஒருவர் போதாதா?''

அருண்மொழிப்பட்டன் கேட்டான்.

எல்லோரும் அமைதியாக இருந்தார்கள்.

''யாரைச் சொல்கிறாய். யாரை அனுப்புவது.''

கிருஷ்ணன்ராமன் மகனைப் பார்த்து கேள்வி கேட்டார்.

அருண்மொழிப்பட்டன் அமைதியாக இருந்தான்.

''உங்கள் வைணவதாசனை அனுப்பலாமே.''

இளவரசர் சற்று உரத்த குரலில் சொல்ல, சகலர் முகமும் மலர்ந்தது. ஆனால் பிரம்மராயர் வேண்டாமென்று தலையசைத்தார்.

''ஏன்.''

''அவன் மிக நல்ல ஒற்றன்.''

''அதனாலென்ன..

''அவனை இந்த நேரத்தில் நான் இழக்க விரும்பவில்லை.

''அனுப்பினாலே இழப்பது என்ற முடிவுக்கு எப்படி வந்தீர்கள்.''

இளவரசர் வேகமாகக் கேட்க, ''இது சிங்கத்தின் வாயில் முயலை அனுப்புவதற்கு ஒப்பாகும்.

''அந்தணர்கள் சுண்டெலிகள். தப்பித்து விடுவார்கள்.

''முயல் ஒரே அடியில் சிதறிவிடும். வைணவதாசனைப் பார்த்தாலே, இவன் போர்வீரன் என்று தெரிந்துவிடும். இந்த அந்தணர்கள் தொந்தியும் தொப்பையும் இருக்கிறார்கள், போரினுடைய அடையாளங்கள் இல்லாமல் இருக்கிறார்கள். வடுக்கள் இல்லாமல் இருக்கிறார்கள். ஆனால் வைணவதாசன் கட்டுமஸ்தானவன். வடுக்கள் உடையவன். அவன் போர் வீரன் என்று தெரிந்துவிட்டால் மிகமோசமாக நடத்தப்படுவான்.''

''அப்படியானால் பாதுகாப்பு வேண்டாமா? குறைந்த பட்சம் இரண்டு பேரையாவது அனுப்பக்கூடாதா?''

அருண்மொழிப்பட்டன் கேட்டான்.

''அனுப்புங்கள். உங்களுடைய ஆள் என்றால், ஏன் அவனை பத்திரமாகப் பாதுகாக்கிறீர்கள்? போர் என்று வந்துவிட்டது. மரணத்திற்கு அஞ்சினால் முடியுமா? வைணவதாசனும், இன்னொரு போர் வீரனும் இந்த அந்தணர்களுக்குத் துணையாக ரகசியமாகப் போய் வரட்டும். அந்தணர்கள் ஆற்றில் இறங்கி, தாண்டிய கால் நாழிகை பொறுத்து இவர்கள் நகரட்டும் என்று கட்டளையிடுவது போல் இளவரசர் இராஜேந்திரர் சொன்னார்.

கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் சம்மதித்தார். சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவருக்கு எந்தப் பக்கம் பேசுவது. இது சரியா, தவறா என்று புரியவில்லை. உள்ளே ஒரு கலக்கம் ஏற்பட்டது. ஆனால், இது நடந்தே ஆகவேண்டும். ஏதேனும் இழப்புகள் ஏற்பட்டாலும் கூட இது நடந்தேயாக வேண்டும்.

ஒரு கிராமம் சுகமாக இருக்க ஒரு வீடு அழியலாம். நகரம் சுகமாக இருக்க ஒரு கிராமம் அழியலாம். ஒரு நாடு சுகமாக இருக்க ஒரு நகரம் அழியலாம். உலகம் சுகமாக இருக்க ஒரு தேசம் அழியலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிலர் அழிந்தாலும் இந்த வெற்றி கிடைத்தேயாக வேண்டும். மேலைச்சாளுக்கியத்தைக் கைப்பற்றி யாக வேண்டும்.

சிவனே... என் சிவனே என்னோடு இரும். உமக்காக செய்கின்ற இந்த வேள்வியில் எத்தனை பூக்களை நான் பொசுக்கப் போகிறேன். தெரியவில்லையே என்று உள்ளுக்குள்ளே அரற்றினார். வெளியே கல்லென இருந்தார்.

அங்குள்ள எல்லோருக்கும் ஒரு பதட்டம் இருந்தது. யுத்த பூமியில் அவ்வித பதட்டங்கள் இருக்கத்தான் செய்யும்.

உறங்கிக் கிடந்த வைணவதாசனை உலுக்கி எழுப்பினார்கள். அவன் திடுக்கிட்டு எழுந்தான். சக்ரவர்த்தி கூப்பிடுகிறார் என்றதும், தட்டுத்தடுமாறி நகர கால்வேட்டி தடுக்கி, கீழே சாய்ந்தவனைச் சட்டென்று பிடித்துக் கொண்டார்கள்.

''என்னாயிற்று... மது அருந்தியவர் போல் இருக்கிறீர்களே.'' என்று ஒரு வீரன் சொல்ல, மற்றவர்கள் இடிஇடியென்று சிரித்தார்கள்.

வேட்டியை அவிழ்த்து உதறி மறுபடியும் மிகச் சரியாகக் கட்டிக் கொண்டு மேல் துண்டை இறுக்கிக் கொண்டு உடைவாள் தரித்தபடி வேகமாக அரசர் இடம் நோக்கி வைணவதாசன் ஓடினான்.

தூக்கத்தில் யாரோ ஏதோ சொன்னதுபோல இருந்தது. என்ன என்று யோசிக்க முடியவில்லை. யோசிப்பு அரசர் மேலேயே இருந்தது.

என்ன கனவு அது என்று கனவை நினைவுபடுத்திக்கொள்ள, கனவு நினைவுக்கு வராமல், பின்னே நகர்ந்து போயிற்று.

சக்ரவர்த்தி சார்பாக கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் அவனை அந்தணர்களைப் பின்தொடர்ந்து போகும்படியும், அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கும் படியும் கட்டளையிட்டார். மெல்ல முன்னேறி வைணவதாசனை அணைத்துக் கொண்டார்.

''கடினமான வேலை. கவனமாகச் செய். நிசும்பசூதனி உனக்குத் துணையிருப்பாள்'' என்று சொன்னார்.

''நிசும்பசூதனி பிரசாதம் வந்ததே. வைணவதாசனுக்குக் கொடுங்கள்.''

பழுவேட்டரையர் சொல்ல, அந்தப் பெட்டியோடு பலபேர். அந்தப் பிரசாதத்தை எடுத்துக்கொண்டு நகர்ந்துவிட்டார்கள் என்றும் பெட்டி சுத்தமாக துடைக்கப்பட்டது என்றும் பிரசாதம் தீர்ந்து விட்டது என்றும் சொல்லப்பட்டது.

''நிசும்பசூதனி என் நெஞ்சில் இருக்கிறாள். கவலைப்பட வேண்டாம்'' என்று வைணவதாசன் சொல்லிவிட்டுத் திரும்ப முயற்சிக்கிறபோது, சக்ரவர்த்தி வேறு எங்கிருந்தோ வருவது தெரிந்தது. அவன் ஓடிப்போய் சக்ரவர்த்தியிடம் மண்டியிட்டான்.

''எதற்கு அந்தணரே ஏன் மண்டியிடுகிறீர். எழுந்திரும்.'' என்று சொல்லி அவனைத் தூக்கி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் நிறுத்தினார். மெல்ல அணைத்துக் கொண்டார்.

''கடினமான வேலை. மிகக் கவனமாகச் செய்ய வேண்டும். என்று அவன் தோளைத் தடவினார்.

சக்ரவர்த்திக்குப் பின்னால் இளவரசர் நின்றிருந்தார்.

வைணவதாசன் அவரைப் பார்த்து புன்னகை செய்தான். அருண் மொழிப்பட்டனை நோக்கி தலையசைத்தான். நான் விடை பெறுகிறேன் என்றான். திரும்பினான்.

துங்கபத்ரை நதிக்கரை நோக்கி சரிவில் இறங்கினான். உடை வாளைக் கழற்றி தன்னுடைய ஒற்றர் படைவீரனிடம் கொடுத்து விட்டு, இன்னொரு ஒற்றரைத் தன்னைக் கால்நாழிகை பொறுத்து

பின் தொடரச் சொல்லிக் குத்துவாள் மட்டும் தொடையில் கட்டிக் கொண்டு ஆற்றில் இறங்கினான்.

அந்த அந்தணர்கள் கரையேறி விட்டார்கள் என்று அவன் இறங்கும்போது தெரிவிக்கப்பட்டது.

நீரில் இழுப்பு அதிகமாக இருந்தது. கவனமாக நடக்கும்படி இருந்தது. வைணவதாசன் இருட்டில் கரையேறினான். பாறைக் கருகே உட்கார்ந்து கொண்டான். பாறையைத் தாண்டிப் போகும் போது சட்டென்று பலபேர் வரிசையாக நிற்பது தெரிந்தது. பயந்து பின்வாங்கினான். அடியில் மறைந்து கொண்டான். ஆனால், பேச்சுக்குரல் கேட்கவேயில்லை. யாரும் நகரவில்லை. மறுபடியும் எட்டிப் பார்த்தபோது ஒரு பத்துப்பேர் எதிர்க்கரையையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். துணிகள் அசைந்தன. அவர்கள் வேட்டிகள் படபடத்தன.

மறுபடியும் பின்னால் வந்து உட்கார்ந்து கொண்டான். சட்டென்று ஏதோ சந்தேகம் வர தவழ்ந்து பாம்புபோல் போய் அந்த உருவங்களை எட்டிப் பார்த்தான். அவை பொம்மைகள் என்று தெரிந்தன.

அடடா... இதைக் கண்டுபிடிக்கத்தான் சக்ரவர்த்தி இத்தனை முயற்சி செய்கிறாரா? நேராக நீரில் இறங்கி எதிர்க்கரை போய் விட்டால் என்ன? பொம்மைகள் வைத்திருக்கிறார்கள் என்று சொல்லிவிட்டால் என்ன?

வேகமாக வைணவதாசன் யோசித்தான்.

இல்லை. நமக்குக் கொடுக்கப்பட்ட வேலை அந்த அந்தணர் களைக் காப்பது. அவர்களுக்குத் துணையாக இருப்பது. எனவே, எதிர்க்கரை போக வேண்டாம்.

காலை வெய்யிலில் குத்திட்டு உட்கார்ந்திருந்த அந்தணர்கள் எழுந்தார்கள். அவர்கள் முகத்தில் கலவரம் இருந்தது. போர்வீரர் களைப் பரபரப்பாகப் பார்த்தார்கள். சில போர்வீரர்கள் அவர்களைப் பார்த்து விட்டு எதுவும் பேசாமல் அந்தணர்கள்தானே என்று நகர்ந்தார்கள்.

ஒரு படைத்தலைவன் சட்டென்று நின்றான்.

''யார் நீங்கள்.'' என்று கேட்டான்.

''எங்களுக்கு சோழதேசம்.'' என்று ஒரு அந்தணர் சொன்னவுடன், ஓ.. என்று கூச்சலிட்டான்.

அவர்களை நோக்கி பலவீரர்கள் வந்தார்கள்.

அந்த அந்தணர்கள் வாள் முனையில் கொண்டு போகப் பட்டார்கள். உள்ளடக்கி ஒரு கிராமத்தின் வாசலுக்கு அழைத்துப் போகப்பட்டார்கள். அங்கே மிகப்பெரிய தேக்கு மரக்கட்டிலின் மீது துணிகள் தொங்கவிடப்பட்டிருந்தன: உள்ளே ஒருவர் உறங்கிக் கொண்டிருந்தார். அவர் உறக்கம் கலைய காத்திருந்தார்கள். இவர்கள் வந்து சேர்ந்த வினாடிகளில் அந்த மனிதர் கண்விழித்தார். கட்டிலின் மீது உயர பந்தல் போல் கவிழ்க்கப்பட்டிருந்த துணியி லிருந்து விலகி வெளியே வந்து என்ன வேண்டும் என்று கேட்டார்.

இவர்கள் சோழதேசத்து அந்தணர்கள் என்று சுட்டிக்காட்டப் பட்டார்கள். அந்த மனிதர் அருகே வந்தார். உயரமாக இருந்தார். பின்பக்கம் நீண்ட முடி இருந்தது. பெரிய மீசை இருந்தது. மது வாசனை அடித்தது. கண்கள் சிவந்திருந்தன. நடந்து வரும்போது அபானவாயு வெளியேறிற்று. கையில் நகங்கள் இருந்தன. அந்தணருக்கருகே உற்றுப் பார்த்தபோது அந்தணர்கள் ''ஜெயவிஜயீபவ'' என்று அரசனுக்குச் சொல்லும் வாழ்த்து மந்திரத்தைச் சொன்னார்கள்.

அரசன் சத்யாசிரியன் தலையசைத்து ஏற்றுக் கொண்டான்.

''எதற்காக வந்திருக்கிறீர்கள். உளவறியவா'' என்று சமஸ் கிருதத்தில் கேட்டான்.

''இல்லை. நாங்கள் போரோடு சம்மந்தமில்லாதவர்கள்.'' அவர்கள் அதேவிதமாக சமஸ்கிருதத்தில் பதில் சொன்னார்கள்.

அரசன் பேசுகிற சமஸ்கிருதத்திற்கும் இவர்கள் பேசுகிற சமஸ்கிருதத்திற்கும் வித்தியாசம் இருந்தது.

அரசன் நீட்டிமுழக்கிப் பேசினான். இவர்கள் குறுக்கலாகப் பேசினார்கள். வேகமாகப் பேசினார்கள்.

''கீழைச்சாளுக்கியத்திலிருந்து வடக்கு நோக்கிப் போக வருகிறோம். காசிவரை தீர்த்த யாத்திரை செய்ய வேண்டும் என்பது எங்கள் எண்ணம். ஆதிசங்கரர் ஸ்தாபித்த கோயில்கள் பரதகண் டத்தின் மேற்குப் பகுதியில்தான் அதிகம் இருக்கின்றன என்று சொல்லப்பட்டது. எனவே, இந்தப் பக்கம் நகர்ந்து வந்தோம்.

''ஆயுதங்கள் வைத்திருக்கிறீர்களா.''

''ஒரு குச்சிகூட இல்லை.

அவர்கள் சோதனையிடப்பட்டார்கள்.

''உங்களை நம்ப மனம் மறுக்கிறது. வடக்கே போகவேண்டியவர்கள் இந்தப் பக்கம் வரவேண்டிய அவசியமில்லை. கீழைச் சாளுக்கியத்திலிருந்து வருகிறீர்கள் என்றால், கீழைச்சாளுக்கிய விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டுமே.''

''அதிகம் தெரியாது. நீங்கள் கேட்டால் தெரிந்ததற்குப் பதில் சொல்கிறோம்.''

அரசன் அவனை உற்றுப் பார்த்தான். விமலாதித்தனைப் பற்றியும், அவர் படைகள் பற்றியும் கேட்டான். சோழதேசத்தின் நிலைமையை விசாரிக்க. தந்தைக்கும் மகனுக்கும் சண்டை என்றதும் உற்சாகமானான். மேலும் கேள்விகள் கேட்டான். அவர்களுக்குக் குடிக்க நீர் கொடுத்தான்.

''அப்பனுக்கும், பிள்ளைக்கும் சண்டை என்றா சொல்கிறீர்கள்.'' என்று கேட்க, ''பெரும் சண்டை'' என்று சொன்னார்கள்.

என்ன காரணம் என்று மேலும் கேட்க, ''அந்தணர்களை இளவரசர் வெறுக்கிறார்.'' என்று சொன்னார்கள்.

ஏன் வெறுக்கிறார் என்பதற்கு கருமார்கள்தான் முக்கியமென்று கருதுவதாகவும், அதனால் அந்தணர்கள் கோபித்துக் கொண்டதாகவும், அந்தணர்களைக் கடுமையாக இளவரசர் தாக்கிப் பேசியதாகவும், அதைக் கண்டிக்க முயற்சித்தபோது தந்தைக்கும், மகனுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டதாகவும் மெல்லிய கைகலப்பு நடந்ததாகவும், வாள் உருவி மோதிக் கொண்டார்கள் என்றும் சொல்ல, அந்தச் சபை குதூகலித்தது.

அரசன் பெரிதாகச் சிரித்தான்.

''நல்ல அப்பா... நல்ல பிள்ளை என்ன வெட்கக்கேடு. அந்தணர்களை எதற்காக எதிர்க்க வேண்டும். வாயில்லாப் பூச்சிகளுக்காகவா சண்டை'' என்று உரக்கச் சொல்ல, சபையும் அதை ஆமோதித்துச் சிரித்தது.

அந்தணர்கள் மௌனமாக இருந்தார்கள்.

''அரிசியும், பருப்பும் கொடுத்தால் நாங்கள் உணவு எடுத்துக் கொள்ள வசதியாக இருக்கும்.'' என்று கை கூப்பி ஒரு அந்தணர் கேட்க, அவன் உத்தரவிட்டான்.

''ஆனால், என்னுடைய பார்வையில்தான் இருக்க வேண்டும். நான் சொல்லும்வரை இந்த இடம்விட்டு போகக்கூடாது. இது யுத்தகாலம்.'' என்று சொன்னான்.

அந்தணர்கள் சரியென்று சொன்னார்கள்.

சத்யாசிரியனிடமிருந்து தானியம் வாங்கி, அவர்கள் உணவை அங்கேயே தயார் செய்து கொண்டார்கள்.

இராஜராஜர் படைகளைப்பற்றி அவன் விசாரிக்க, எங்களுக்குத் தெரியாது. நாங்கள் யுத்தத்திற்கு முன்னே கிளம்பிவிட்டோம். யுத்தம் வரும் என்று தெரியும். ஆனால், அது எப்போது என்று அறிவிக்கப் படவில்லை.

''யுத்தம் வந்துவிட்டதா.'' என்று அந்தணர்கள் கேட்டார்கள்.

''துங்கபத்ரை நதிக்கரையில் போய்ப் பாருங்கள்.''

''ஆமாம். துங்க பத்ரையில் ஸ்நானம் செய்ய வேண்டும்.'' என்று அவர்கள் சொல்ல, அவர்கள் துங்க பத்ரை நதிக்கரைக்கு அழைத்துப் போகப்பட்டார்கள்.

''அதிகம் தூரம் உள்ளே போகாமல் ஸ்நானம் செய்யுங்கள். தொலைவே போனால் அம்பெடுத்துக் கொல்வோம். என்று எச்சரிக்கப்பட்டார்கள்.

கரையில் நின்று ஸ்நானம் செய்தார்கள்.

எதிர்க்கரையில் ஒரு புலிக்கொடி ஒன்றின் கீழ் ஒன்றாய் உயர்ந்த கம்பத்தில் நடப்பட்டிருந்தது.

சக்ரவர்த்தி உடையார் படைகளைச் சோதிக்க இடதும், வலதும், நகர்வது தெரிந்தது. அப்படியே ஆற்றில் மூழ்கி எதிர்க்கரைக்குப் போய்விடலாமா.

ஒரு அந்தணருக்கு ஆசை வந்தது. ஆனாலும், அடக்கிக் கொண்டார். கரையேறி சந்தியாவந்தனம் செய்தபோது படைவீர்கள். பாதுகாப்பை விலக்கிக் கொண்டு தள்ளிப்போய் இராஜராஜருக்கும், அவர் மகனுக்கும் நடந்த சண்டையை உரக்கச் சொல்லி சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தார்கள். காலைக் குண்டான ஜபம் செய்து கொண்டிருக்கும் போது அவனுக்கருகே இன்னொரு அந்தணரும் உட்கார்ந்து கொண்டார்.

''என்ன... என்ன சொல்கிறான் சத்யாசிரியன்.'' அது வைணவதாசன் என்பது புரிந்தது.

''அட... நீங்கள் எப்படி.

''உங்களுக்குப் பாதுகாப்பாக.''

''எப்போது திரும்ப முடியும்.''

''இன்று இரவு.

''ஹே ராமா.. எதற்காக வந்தீர்களய்யா. நாங்களே சமாளித்துக் கொண்டிருப்போமே.''

''சத்யாசிரியனைச் சந்தித்தோம். எந்தப் பிரச்சினையும் இல்லை. இன்னொன்று கவனித்தீர்களா.''

''என்ன.''

வைணவதாசன் கேட்டான்.

''பொம்மைகளய்யா.. பொம்மைகள். நிறைய பொம்மைகள். அடுக்கடுக்கா பொம்மைகள். நூற்றுக்கணக்கான மூங்கில்களில் நிறைய பொம்மைகள் தொங்கவிட்டு தோளில் எடுத்துக்கொண்டு இடதும், வலதுமாக கரையோரமாக நடக்கிறார்கள்.''

''ஆமாம். ஏமாற்றுகிறார்கள். அதிகம் போனால் தொண்ணூறா யிரம் படைவீரர்கள் கூட இருக்க மாட்டார்கள்.''

''இப்பொழுதே போய் இறங்கிச் சொன்னால் என்ன?'

''குதிரையில் இறங்கி உங்களை மடக்கி விடுவார்கள். ரத்த விளாறாக்குவார்கள். எனவே, ஜபம் செய்துவிட்டு அவர்களோடு கலந்து கொள்ளுங்கள். தனியே உட்கார்ந்து கொண்டிருங்கள். பிறகு, இரவானதும் மறுபடியும் ஜபம் செய்கிறேன் என்று சொல்லி கரைக்கு வாருங்கள். மெல்ல அருகிலேயே இருங்கள். பிறகு சட்டென்று நீரில் இறங்கி எதிர்க்கரைக்குப் போய்விடுங்கள்.''

''ஐயா, நீங்கள்.''

''நான் சற்று தங்கிவிட்டு வருகிறேன்.''

''மொத்தம் எத்தனை அந்தணர்கள் வந்தார்கள்.'' சாளுக்கிய வீரன் மற்றவனைக் கேட்டான்.

''ஐந்து பேர்.''

''ஆனால், ஆறு பேர் ஜபம் செய்து கொண்டிருக்கிறார்களே.''

ஒரு சேனாதிபதி இன்னொரு சேனாதிபதியைக் கேட்க, ''ஆமாம். அந்த ஐந்து பேர் முகமும் ஞாபகம் இருக்கிறது. அதோ ஒருவன் இருக்கிறானே.. ஆறாவதாக அவன் யார்.''

''அவன் அந்தணன் அல்ல. மறவன்.''

''இல்லை. அந்தணன்தான். பூணூல் தரித்திருக்கிறான்.''

''உடம்பைப் பார். பூணூல் போட்டுக் கொண்டு வேடமிட்டு வருகிறான்.''

''மடக்கு.''

சத்யாசிரியனுடைய ஆட்கள் பதறினார்கள். சுற்றி மறுபடியும் வளைத்துக் கொண்டார்கள்.

''நீங்கள் மொத்தம் எத்தனை பேர்.''

''ஆறு பேர்.''

அப்பாவியாய் ஒரு அந்தணர் சொன்னார்.

''இல்லை. ஐந்து பேர்தானே வந்தீர்கள்.''

''இல்லை. ஆறுபேர் வந்தோம். இவரும் எங்களைச் சேர்ந்தவர்தான்.''

''இவர் அந்தணரா.''

''நிச்சயம் அந்தணர்தான்.''

''பொய். இவரைப் பார்த்தால் மறவர்போல் இருக்கிறதே.

''இல்லை. அந்தணர்தான். நல்ல வைஷ்ணவர்.''

''நாங்கள் ஐவரும் சைவர்கள். அவர் வைஷ்ணவ சம்பிரதாயத்தில் இருப்பதால் அதிகம் நெருங்கி பழகமாட்டார். ஆனால், நாங்கள் அறுவராகத்தான் வந்தோம்.''

''ரிக்வேதம் சாகை சொல்.

அவன் எழுந்து நின்று கைகூப்பி ரிக்வேத சாகை சொன்னான்.

''வைஷ்ணவன் என்கிறாயே. யஜுர் வேதத்தில் விஷ்ணுவைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறது.''

மறுபடியும் அவன் கைகூப்பி யஜுர்வேதம் சொல்ல ஆரம்பித் தான். ஆனால் தடுமாறினான்.

அவர்கள் பலபேர் பாய்ந்து வைணவதாசனை மணிக்கயிறால் கட்டிப்போட்டார்கள். முகத்தில் குத்தினார்கள். முட்டியில் அடித்தார்கள். எட்டி உடைத்தார்கள். பிடித்துத் தள்ளினார்கள்.

அவன் சுருண்டு தரையில் விழுந்தான்.

அந்தணர்கள் பதறிப்போய் வேண்டாம். வேண்டாம் என்று தடுத்தார்கள்.

அந்த அந்தணர்கள் பிடித்துத் தள்ளப்பட்டார்கள். வைணவ தாசனைப் பிரம்பால் அடித்தார்கள்.

''அடிதாங்குகிறான் பார். அலறாமல் பல்கடித்து வலி தாங்குகிறான் பார்.''

மீண்டும் அடித்தார்கள்.

அந்த அந்தணர்களின் தலைமைப் பதவியில் இருந்தவர் சட்டென்று யோசித்தார்.

இப்பொழுது என்ன செய்வது. மாட்டிக்கொண்டு விட்டோம். இந்த இடத்திலிருந்து எப்படியாவது தப்பித்துக் கொண்டு சக்ரவர்த்தி உடையாருக்கு இந்த இடத்தைப்பற்றி தகவல் தெரிவித்து விடவேண்டும். மற்றவர்களைப்பற்றி எந்தக் கவலையும் இல்லை. நாமாவது தப்பிக்க வேண்டும்.

அவர் சட்டென்று கூடிய பெருங்கூட்டத்திலிருந்து வேகமாக விலகினார். எல்லோரும் வைணவதாசன் மீதே குறியாக இருந்த தால், அவன் அடிவாங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்ததால் இவரால் எளிதாக வரமுடிந்தது. கரையோரம் நிற்கும் குதிரை ஒன்றை சட்டென்று பற்றிக் கொண்டார். மண்ணில் இறங்கினார். பாறைகளைத் தாண்டினார். இடுப்பாழம் வரை போனார். நெஞ்சாழம் வந்தபோது குதிரையில் தாவி அமர்ந்து கொண்டார். குதிரையை எதிர்க்கரை நோக்கிச் செலுத்தினார்.

அந்தக் குதிரை மேலைச்சாளுக்கிய குதிரை எதிர்ப்பக்கம் போக பயந்தது. சுற்றி மறுபடியும் கரையேற முயற்சித்தது. குதிரையை மோசமாக கழுத்தில் தாக்கினார். பிடரியில் அடித்தார். போ... போ... என்று விரட்டினார். குதிரை நடு ஆழத்திற்குப் போயிற்று.

அவர் நகர்வதை பின்னால் வந்த வீரர்கள் திடீரென்று கண்டு கொண்டார்கள். படகு... படகு... என்று கத்தினார்கள். வில் வீரர்கள் வந்தார்கள். இழுத்து நாணேற்றி அம்பு தொடுத்து அடித்தார்கள். தொலைவு அதிகமென்பதால் கூர்மையாக குறிபார்த்து அடிக்க முடியவில்லை. ஆனால், அம்பு அவரைத் தாண்டியும் விழுந்தது.

இருபது வீரர்கள் வரிசையானார்கள். அவர் இருக்கும் இடம் நோக்கி வேகமாக அம்பு செலுத்தினார்கள். அம்புகள் பறந்து அவருக்கருகே விழுந்தன. ஒன்று குதிரையின் கழுத்திலே குத்தியது. இன்னொன்று தோளை உரசியது.

அவர் குதிரையைக் கட்டியணைத்தபடி கால்களால் குதிரையை அணைத்தபடி அடித்து விரட்டினார். குதிரை ஆற்றோடு நீந்திப் போயிற்று.

எதிர்க்கரை நோக்கியும் நகர்ந்தது, எதிர்க்கரையில் உள்ளவர்கள். அவர் வருகையைப் புரிந்து கொண்டார்கள். அங்கு ஏதோ குழப்பம் என்று தெரிந்து கொண்டார்கள். சட்டென்று பல வீரர்கள் கீழே வந்தார்கள். ரெட்டைக்கொடி ஒன்று கரையோரம் வந்து நின்றதை அவரால் கவனிக்க முடிந்தது. ஆனால், ஆட்களைப் பார்க்க முடியவில்லை. பலமான மூங்கிலில் கட்டப்பட்ட அந்தக் கொடி மட்டும் கரை நோக்கி வருவதை உணர முடிந்தது. அரசர் நம்மைப் பார்த்துவிட்டார் என்ற ஆனந்தத்தில் வேகமாக குதிரையைச் செலுத்தினார். குதிரை ஆற்றோடு, எதிர்க்கரையை நோக்கி நகர்ந்தது எதிரேயிருந்து இரண்டு படகுகள் வந்தன. அந்தப் படகில் உள்ளவர்கள் எதிர்க்கரை நோக்கி அம்படித்தார்கள். பெண் யானை இறங்குவதை அவர் கவனித்தார்.

எதற்காக யானை. யானையோடு நமக்குப் பழக்கமில்லையே என்று பயந்தார். ஆனால், பெண் யானை அவர் இருக்கும் திசை தாண்டி தள்ளிப் போயிற்று. ஆழத்திற்குப் போனதும் சட்டென்று திரும்பியது. அதிலுள்ள பாகன் அந்தப் பெண் யானையை மடக்கினான். யானையின் மேலுள்ளவர்கள் எழுந்து நின்றார்கள். பிரம்பாலான பெரிய கேடயங்களை உயரப்பிடித்தார்கள். குதிரைக் குப் பின்னே யானை வந்தது. துதிக்கையால் குதிரையை மெல்லத் தள்ளியது.

அவர்கள் இவர் மீது அம்புபடாமல் கேடயங்களை மறைத்துக் கொண்டு வந்தார்கள். அந்தக் கேடயங்களில் அம்புகள் வேகமாகத் தைத்தன. எதிர்க்கரையினருகில் வரும்போது அவருக்கு மயக்கம் வந்தது. குதிரையைச் செலுத்த முடியாமல் போனது. அவர் மயங்கிச் சரிவதைப் பார்த்துவிட்டு ஒருவன் நீரில் குதித்தான். வேகமாக குதிரையை நோக்கி நீந்தினான். குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து முன்னே நகர்ந்தான். பின்னே யானை தள்ள, முன்னே அவன் இழுக்க இன்னும் தரைக்குக் கால் போகாத குதிரை கரை நோக்கி நீந்தியது. அவர் மயக்கத்தில் இருந்தார். குதிரை நகர்ந்தது. பாறைகளில் கால் வைத்துத் தடுமாறியது. மெல்ல மெல்ல கரையேறியது. அவரைக் கரையேற்றினார்கள். தரை தொட்டதும் அவர் சுழன்று கீழே விழ ஓடிவந்து வீரர்கள் அவரைத் தாங்கிப் பிடித்தார்கள். சட்டென்று அக்குளில் மூங்கில் கொடுத்து தூக்கினார்கள். ஒரு பல்லக்கு மாதிரி அவரை தூக்கிக் கொண்டு சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரிடம் ஓடினார்கள்.

அவர் அரைக்கண் திறந்து வானம் பார்த்தார்.

நான் பிழைத்து விட்டேன்... நான் பிழைத்து விட்டேன் என்று உள்ளே கூவியது. மற்றவர்கள் என்ன ஆனார்கள் என்ற கேள்விக்குறி எழுந்தது.

அவர் அழத் துவங்கினார்.

அவரைச் சக்ரவர்த்தி முன்பு இறக்கினார்கள். தள்ளாடி நின்றார். அவரை ஒருவன் தோளில் சாய்த்துக் கொண்டான். அவன் தோளில் சாய்ந்தபடி, இன்னொரு தோளைப்பற்றியபடி அவர் வெறும் கோமணத்தோடும் கிழிந்த உடையோடும் இருந்தார். அவர்மீது சால்வை போர்த்தப்பட்டது. சக்ரவர்த்தி அவர் முகத்தை நிமிர்த்தினார்.

''என்ன'' என்று கேட்டார்.

''பொம்மைகள். நிறைய பொம்மைகள். வெறும் வைக்கோல் பொம்மைகள். அதன் மீது துணி சுற்றிவிட்டிருக்கிறார்கள். வைணவதாசன் கணக்குப்படி வெறும் தொண்ணூறாயிரம் வீரர்கள் தான் இருப்பார்கள். ஆனால், மிகப்பெரியதாகக் காட்டுகிறார்கள்.''

''வைணவதாசன் என்ன ஆனான்.''

அவர் தயங்கினார்.

''சொல். என்ன கூச்சல் அங்கே.

மறுபடியும் சற்று வேகமாகச் சக்ரவர்த்தி வினவினார்.

''வைணவதாசனைக் கண்டுபிடித்துவிட்டார்கள். அடித்து நொறுக்குகிறார்கள்.''

''மற்ற அந்தணர்களை.''

''மடக்கி வைத்திருக்கிறார்கள். நான் மட்டும் இதைச் சொல்லிவிட வேண்டுமே என்று வந்துவிட்டேன்.'' என்று அவர் சொல்லிவிட்டு தீனமாகச் சக்ரவர்த்தி உடையாரைப் பார்த்தார். அழத் துவங்கினார்.

உடையாருக்கு அவர் வேதனை புரிந்தது. வேகமாக முன்னேறி அந்த அந்தணரை இறுக்கத் தழுவிக் கொண்டு, முதுகு துடைத்து சமாதானம் செய்தார். அவர் தோளில் அம்பு கீறியதைப் பார்த்து விட்டு துணியைக் கிழித்து கட்டுபோட்டார்.

ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். பிறபாடு சந்திப்போம். உடனடியாக விலகினார். இளவரசர் இராஜேந்திரரும் மற்றவரும் அவரை

நோக்கி ஓடிவந்தார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு கூடாரத்திற்குப் போனார். கூடாரத்தின் வாசலில் உட்கார்ந்து கொண்டார்.

''வைணவதாசன் அடிபட்டுக் கொண்டிருக்கிறான். மற்ற அந்தணர்களும் அடிபடுவார்கள். இவர் தப்பித்து வந்தது மிகப் பெரிய அற்புதமான விஷயம். இவர் பாராட்டப்படவேண்டும். மற்றவரைப் பற்றி கவலைப்படாமல் இந்தச் செய்தியை இங்கு தெரிவித்ததாக வேண்டுமென்ற வேகத்தோடு வந்திருக்கிறார். அவையெல்லாம் பொம்மைகளாம். வெறும் பொம்மைகளாம். பத்து பொம்மைகளை ஒரு மூங்கில்கழியில் தூக்கி வைத்துக் கொண்டு வருகிறார்களாம். முன்னும் பின்னும் இரண்டு பேர் தூக்கிக் கொண்டு அலைகிறார்கள்.

''இந்தச் சந்தேகம் எனக்கு இருந்தது. இறங்கி விடலாமா.''

''வைணவதாசன் சொன்னால் நன்றாக இருக்கும். பிய்த்து எடுத்துக் கொண்டிருக்கிறார்களாம்.''

ஹா. என்று பதறினார்கள். அருண்மொழிப்பட்டன் திகைத்தான். மற்றவர்கள் வருத்தப்பட்டார்கள்.

''இப்பொழுது வருந்துவதற்கு நேரமில்லை. இது நல்ல ஹோரைதானா.''

''அரை நாழிகைக்குப் பிறகு நல்ல ஹோரைதான்.''

சக்ரவர்த்தியின் கேள்விக்கு பிரம்மராயர் பதில் சொன்னார்.

''அப்படியானால் இறங்குவோம். இராஜேந்திரா வலப்பக்கம் போ. பிரம்மராயரே இடப்பக்கம் கடைக்கோடிக்குப் போங்கள். இதற்கு நடுவே மற்றவர்கள் அணிவகுக்கலாம்.

எனக்கு வலப்பக்கம் பழுவேட்டரையர், இடப்பக்கம் விமலாதித்தர். சோழதேசத்தின் மகோன்னதமான வாழ்க்கைக்காகப் போராடப் போகிறோம். சிவனின் அற்புதமான கலைக்கோயிலுக்காகப் போராடப் போகிறோம். நம்மை இழிவுப்படுத்திக் கொண்டேயிருக்கின்ற மேலைச்சாளுக்கியத்தின் திமிரை அறுக்க போராடிக் கொண்டிருக்கிறோம். கங்க தேசத்தையும், ரெட்டை பாடியையும் தன் வசம் கொண்டுவர வேண்டுமென்று அற்பத்தனமும், அயோக்கியத்தனமும் செய்யும் மேலைச்சாளுக்கியத்திற்குப் பாடம் புகட்ட இந்தப் போர் செய்யப் போகிறோம்.

நமக்கு உறவினரான கீழைச்சாளுக்கியத்தைக் கலைக்க விதம் விதமாக முயற்சி செய்கிற இழிபிறப்புகளை அடித்து நொறுக்கு வதற்காகப் போர் செய்யப்போகிறோம்.

தந்திரமான சேரதேசத்து நம்பூதிரிகளோடு சேர்ந்து கொண்டு சூழ்ச்சியோடு, ஆண்மையற்றுப் போர் புரிந்து கொண்டிருக்கும் மேலைச்சாளுக்கியர்களை அடித்து நொறுக்கப் புறப்படப் போகின்றோம். ஆறு வருடங்களாக பொறுத்துப் பொறுத்துப் பார்த்து பார்த்து அடங்காதவனை அடக்குவதற்காக இந்தப் போர் செய்யப் போகிறோம். வேகத்தோடு தாக்குங்கள்.

சத்யாசிரியனைக் கண்டதுண்டமாக வெட்டுங்கள். மான்ய கேடத்தைத் தீக்கிரையாக்குங்கள். எழுந்து போங்கள். மேலைச் சாளுக்கியம் முழுவதுமே அடித்து நொறுக்கப்பட வேண்டும். பெண்களையும், குழந்தைகளையும், வயோதிகர்களையும் விட்டுவிடுங்கள். மற்ற வீரர்கள் எல்லோரையும் முடமாக்குங்கள். மேலைச்சாளுக்கியத்தில் ஒருவாள், ஒரு வேல் இருக்கக்கூடாது. ஒரு பசு, ஒரு குதிரை இருக்கக்கூடாது. அத்தனையும் தஞ்சைக்குத் திரும்பியாக வேண்டும். வெற்றி அல்லது வீரமரணம்.

எதிர்க் கரையிலிருந்து வரும் விஷ அம்புகளுக்கும் கேடயம் பாது காப்பாக இருக்கட்டும். அப்படி ஒளிந்திருந்து எந்த நம்பூதிரியாவது தாக்கினால் அவனைப் பிடித்து, தீ வளர்த்து அதில் தள்ளிவிடுங்கள் . அவனுக்குச் சிறிதும் இரக்கம் காட்ட வேண்டாம். போர்க்களம் என்பது ஆண்மை மிக்கது என்பதை அந்தச் சேரனுக்குக் காட்டுங்கள். நம்பூதிரி என்று தெரிந்தால் அடித்து நொறுக்குங்கள். அவனைக் கொலை செய்வது பற்றியும் அஞ்சாதீர்கள். எக்காளம் முழங் கட்டும்.'' என்று சொல்ல போருக்கான எக்காளம் முழங்கிற்று. போர்ப்பறை அதிர்ந்தது. வீரர்கள் வேகமானார்கள்.

போர் எக்காளச் சத்தமும் போர்ப்பறைச் சத்தமும் எதிர்ப்பக்கம் உள்ளவர்களை வேகமடையச் செய்தன. அவர்களும் வரிசை யானார்கள். வாள் உயர்த்தி வா போருக்கு என்று அழைத்தார்கள். எதிர்க்கரையிலிருந்து அம்புகள் பறந்து வந்து நீரில் விழுந்தன.

அந்த அடுத்த அரைநாழிகைக்காக பதட்டத்தோடு சக்ரவர்த்தி உடையார் காத்துக் கொண்டிருந்தார். அவருடைய கறுப்புக் குதிரை மற்ற எல்லாப் படைகளையும் விட முன்னால் இருந்தது. எதிர்க்கரையை உற்றுக் கவனித்தது.

அடி மனதில் நம்பி இறங்கலாமா. இந்த அந்தணன் பேச்சை நம்பி இறங்கலாமா என்ற கேள்வி எழுந்து கொண்டேயிருந்தது. திரும்ப அருகிலிருக்கும் விமலாதித்தனைப் பார்த்தார்.

''என்ன சொல்கிறாய்.'' என்று கேட்டார்.

''நம்பி இறங்கலாம். அவன் தெளிவாகச் சொல்கிறான். எனக்கும் நீங்கள் சொன்னபிறகு, அந்த நடவடிக்கை சரியாகத் தெரியவில்லை. பொம்மைகள் தான் என்று இப்பொழுது பார்க்கும்போது தோன்றுகிறது.'' என்று சொன்னான்.

ஆனால், இது எளிதான முடிவல்ல. இவ்வளவு சுலபமாக இதை முடிவு செய்ய முடியாது. ஒருவேளை எதிர்ப்பக்கம் ஏழு லட்சம் பேர் இருப்பின் சோழப் படைக்கு மிகப்பெரிய சேதம் உண்டாகும். சோழ தேசத்தின் பல பெண்மணிகள் தாலி இழப்பார்கள். பல தாய்மார்கள் பிள்ளைகளைப் பறிகொடுப்பார்கள்.

என்ன செய்வது.. இறங்கலாமா.. இறங்கலாமா..

உள்ளுக்குள்ளே சக்ரவர்த்தி உடையார் தவித்தார்.

எத்தனை பேர் உயிர் என் கையில் இருக்கிறது. இப்போது போர் வேண்டாம் என்று மறுத்துவிட்டால் பல பேர் உயிர் காப்பாற்றப் படும். போ... என்று கத்தியைக் காட்டினால் பல உயிர்கள் பறிக்கப் படும். ரத்தம் இங்கு சிந்தும். வைணவதாசன் அங்கே துடித்துக் கொண்டிருக்கிறான். அவன் மனைவியை ஒருமுறை பார்த்திருக் கிறேன். அவளுடைய வாழ்க்கை கதி என்ன ஆகப்போகிறதென்று தெரியவில்லை. என்ன செய்வது நம்பி இறங்கலாமா? எத்தனை போர் பார்த்து விட்டோம். எத்தனை வெட்டுக்காயங்கள். எத்தனை கொலைகள். எத்தனை உயிரிழப்புகள். இருப்பினும் இந்தப்போர் உள்ளுக்குள்ளே தவிக்க வைக்கிறது.

இது நானாக ஆரம்பித்த போர். மேலைச்சாளுக்கியத்தின் கொட்ட மடக்க வேண்டும் என்பது இப்போது அவசியமில்லை. ஆனால், கோயில் கட்ட வேண்டும் என்பது அவ்சியம். பிரமாண்டமான கோயில் மிகப்பெரிய கோயில், அன்னியர் உள்ளே வரப்போகிறார் களாம். மிலேச்சர்கள் வரப்போகிறார்களாம். யவனர்கள் வரப் போகிறார்களாம். இனி எத்தனை பேர் வந்தாலும் அழிக்க முடியாத கோயில்.

யவனர்கள் வடக்கே இருக்கின்ற கோயில்களை இடிக்கிறார் களாம். தடுத்தால், சிவன் என்று எவரும் இல்லையென்று

சொல்கிறார்களாம். எனவே, இடிக்க முடியாத கோயிலைக் கட்டியாக வேண்டும். அந்த யவனர்கள் சோழதேசம் வந்தாலும் நிமிர்ந்து திகைத்து நிற்கும்படியான கோயிலைக் கட்டியாக வேண்டும். ஏழு பனை உயரம். மிகப்பிரமாண்டம். இன்னும் அதற்கு மேல் உயரமாகவும் கோயில் எழுப்ப வேண்டும். அதற்குப் பொன் வேண்டும். பொருள் வேண்டும். ஆடுகளும், மாடுகளும் வேண்டும். யானைகளும், குதிரைகளும் வேண்டும். ஆட்கள் வேண்டும்.

சக்ரவர்த்தி உடையாரின் குதிரை தவித்தது. இடதும், வலதும் அலைந்தது. எப்போது.. எப்போது என்று முன்காலைச் சுரண்டிக் கொண்டிருந்தது. வெகுதூரத்தில் கிருஷ்ணன்ராமனான பிரம்மராயரின் கொடி இறங்கலாம் என்று சைகை செய்தது. சக்ரவர்த்தி உடையார் சரியென்று அந்தச் செய்தியை வாங்கிக் கொண்டதான கொடியை அசைக்கச் சொன்னார். பதிலுக்குக் கொடி அசைந்தது. ஆனால், உள்ளே ஏதோ ஒன்று கூடவில்லை. என்ன அது. என்ன அது.. என் சிவனே... என் சிவனே... இதெல்லாம் உன் செய்கை. இங்கு அனைவரும் உன்னுடைய குழந்தைகள். நாங்கள் அடித்துக் கொள்கிறோம். ரணப்படுத்துகிறோம். ஒருவரையொருவர் காயப்படுத்துகிறோம். என் சிவனே... இவையெல்லாம் இந்தச் செய்கையெல்லாம் உன்னைச் சேர்ந்ததே இங்கே வெட்டுபவனும். வெட்டுப்படுபவனும் நீயே. சிவனே... என் சிவனே, நீ ஒன்று தவிர, வேறு எல்லாமும் பொய். உன் ஒருவனைத் தவிர மற்றதெல்லாம் பொய். உன் இருப்பைத்தவிர மற்ற இருப்பெல்லாம் அபத்தம்.

எனக்குப் புரிகிறது. உன் இருப்பு, உனக்கான மனிதரின் காணிக்கை மிக முக்கியம். இந்த மனிதரின் காணிக்கை உனக்காக... இங்கே தொடங்குகிறது. உன்னை வணங்குவதற்காக, உன்னை வாழ்த்துவதற்காக இங்கே ஒரு செயல் ஆரம்பிக்கிறது. இந்தச் செயல் என்னவென்று உனக்குத் தெரியும்.

இந்தச் செயல் யாருடையதென்று உனக்குத் தெரியும். என் சிவனே... என் சிவனே... நான் இறங்குகின்றேன். நான் இறங்குகின்றேன். நான் போரில் இறங்குகின்றேன். என்னைத் தொடர்வாயாக.

ஓ... என்று கூச்சலிட்டார். சோழம்... சோழம்... என்று கத்தினார். வாள் உயர்த்தினார். மேலைச்சாளுக்கியம்.. என்று உரத்த குரலில் கத்தினார்.

கொல், தாக்கு, அடி என்ற வார்த்தைகள் மற்றவர்களிடமிருந்து வந்தன.

அவருடைய குதிரை விரைவாக இறங்கி தண்ணீரில் கால் வைத்து, பிறகு வேகமாக நீந்தத் துவங்கியது. எதிரிப் படைகளுக்கு முன்பாக, கிட்டத்தட்ட ஐம்பது குதிரைகள் தூரம் முன்பாக மிக வேகமாக அந்தக் குதிரை நீந்தி ஆற்றின் நடுமையத்திற்குப் போனது. அவருடைய மெய்க்காவல் வீரர்கள் இன்னும் துரிதமாகச் செயல்பட்டார்கள். நடு ஆற்றைத் தாண்டியதும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். மேலேயிருந்து வேகமாக அம்புகள் விழுந்தன. எல்லா அம்புகளும் இரும்புக் கவசத்தால் தடுக்கப்பட்டன. யானை மீது ஒரு விஷ அம்பு பட்டு யானை துடிப்பதைக் காண முடிந்தது.

சக்ரவர்த்தி உடையார் இன்னும் தன் குதிரையை வேகப்படுத்தினார். ஆனால், பிரம்மராயர் மிக வேகமாக முன்னேறி இடதுபக்கம் கரையைத் தொட்டார். அடுத்தது வலதுபக்கம் இராஜேந்திரர் தொட்டார். இப்பொழுது படை அர்த்த சந்திர வளைவாகியது. நடு மையத்தில் சக்ரவர்த்தி உடையார் இருந்தார்.

பிரம்மராயர் யானை மீதிருந்து வேகமாக கவண்கற்களை வீசினார். அந்த யானை படைகளைக் கிழித்துக்கொண்டு புகுந்தது. அவருக்குப் பின்னே மூன்று யானைகள் தொடர்ந்தன. விமலாதித்தன் சற்று தாமதமாக, ஆனால் கரையேறியதும் எதிரிப் படைகளைக் கிழித்துக் கொண்டு பறந்தான். போய் வட்டமிட்டான். திரும்பினான். வாளைச் சுழற்றிக் கொண்டு பலபேரை வெட்டிச் சாய்த்த வண்ணம் மறுபடியும் சோழப்படை நோக்கி வந்தான். அவனுடைய புரவிகள் அத்தனையும் உள்ளுக்குள்ளே ஊடுருவி பிறகு எதிர்ப்படைகளைக் கலகலக்கச் செய்தது.

சத்யாசிரியன் மரமேடையிலிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சோழப்படைகள் அலை அலையாய் ஏறிக் கொண்டேயிருந்தன. சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரின் இரட்டைப்புலிக் கொடியை அவன் கண்டான். அதை நோக்கி அம்புகள் செலுத்த உத்தரவிட்டான். பலநூறு அம்புகள் அவரை நோக்கி வந்தன. ஆனால், மிகப்பலமாக மெய்க்காவல் படைவீரர்கள் அவரைக் காத்தார்கள். எல்லா அம்புகளும் கேடயங்களை உடைத்தன. உடைந்த கேடயங்களுக்குப் பதிலாய் புதுக்கேடயங்கள் வழங்கப் பட்டன. பதிமூன்று வீரர்கள் அம்பு தாக்கி சரிந்தார்கள். சரிந்தவர்

களுக்குப் பதிலாக புதியவர்கள் போய் நின்று கொண்டார்கள். சரிந்தவர்களை வைத்தியர்கள் இழுத்துக் கொண்டு போனார்கள். சில வண்டிகள் கரையேறின. கோவேறு கழுதைகள் கரையேறின. வைத்தியர்களும், உதவியாளர்களும் கரையேறினார்கள்.

வலப்பக்கமிருந்த இராஜேந்திரர் முழு வேகத்தோடு அரசரை நோக்கிவர, அந்த அர்த்த சந்திர வடிவம் வட்டமாக ஆவதற்கு முயன்று கொண்டிருந்தது. சத்யாசிரியனை நோக்கி இடப்புறம் பிரம்மராயரும், வலப்புறம் இராஜேந்திரரும் நகர, சத்யாசிரியன் பின்வாங்குமாறு ஒரு எக்காளத்தை ஒலித்தான். மீண்டும் மீண்டும் ஒலித்தான். கீழே இறங்கினான். தன் வெள்ளைக்குதிரையில் ஏறினான். மிக வேகமாக வடக்கே ஓடினான். அவனைத் தொடர்ந்து அவன் படைகள் ஓடின. அடுத்த அரைநாழிகையில் அந்தப் போர்க்களம் வெறிச்சோடியிருந்தது.

சத்யாசிரியன் புழுதிபறக்க இன்னும் வடக்கே மான்யகேடம் நோக்கி ஓடினான். அவனை சோழப்படைகள் துரத்தின. விமலா தித்தன் புரவிகள் பூட்டிய தேரைச் செலுத்திக் கொண்டு சத்யா சிரியனைத் துரத்தினான். நடுவழியில் சேரதேசத்து நம்பூதிரிகளின் விஷ அம்புகள் அவன் வீரர்கள் பலர் உயிரை வாங்கின. எங்கிருந்து தாக்குகிறார்கள் என்று தெரிந்து மறுபடி விமலாதித்தன் திரும்பி மறைந்த இடத்தையெல்லாம் நோக்கி ஆட்களை ஏவினான். கவண்கற்களும், நெருப்புப் பந்தங்களும் மறைந்தன இடம் நோக்கி எறிந்தார்கள். வெளியே வந்த நம்பூதிரிகளை அடித்தார்கள். தரையில்போட்டு மிதித்தார்கள். யானையை விட்டுத் தேய்க்கச் சொன்னார்கள்.

ஒரு நம்பூதிரியை நிர்வாணமாக நிற்கவைத்து மூங்கில் பிரம்பால் சோழவீரர்கள் அடித்தே கொன்றார்கள். சுற்றி வளைக்கப்பட்ட ஒரு நம்பூதிரி கையில் பெரிய பாறாங்கல்லுடன் ஓடிவந்தான். மேலே வீசப்போகிறான் என்று சோழவீரர்கள் நகர்ந்தபோது பாறையை உயரத்தூக்கிப்போட்டுத் தன் தலையில் வாங்கிக் கொண்டான். தலை பிளந்து சுருண்டு விழுந்து உயிர்துறந்தான்.

கருத்த குடுமியும், வெள்ளை உடம்பும் சிதைந்த முகமுமாய் தரையில் கிடக்கின்ற அவனைப் பார்த்து 'தூ...' என்று சோழவீரர்கள் காறித்துப்பினார்கள். காலால் புரட்டிப்போட்டார்கள். கோழை நாயே, பிறகு எதற்கடா போருக்கு வருகிறாய். தற்கொலை செய்து கொள்ளவா என்று மிதித்தார்கள். இன்னொரு நம்பூதிரியை அடித்து

விசாரித்ததில் வழிநெடுக மறைவிடங்களில் சேரவீரர்கள் நிற்கிறார்கள் என்றும் அந்த சேர வீரன் இறக்கும் முன்பு பதினைந்து சோழவீரர்களைக் கொன்றுவிட்டுத்தான் சாவான் என்றும் தகவல் தெரிந்தது. விஷக்குப்பிகள் பறிமுதல் செய்யப்பட்டன:

விமலாதித்தன் தயங்கினான். படைகளை அங்கேயே நிற்கச் சொல்லிவிட்டு சக்ரவர்த்தி உடையாரை நோக்கி புரவியைச் செலுத்தினான். அவனுடைய சிறுதேர் மறுபடியும் திரும்பி வந்தது. மேலைச்சாளுக்கிய அரசன் சத்யாசிரியனைத் தொடர்வது தாமத மாகியது.

சோழதேசத்து ஒற்றர்களுக்கு, உபசேனாதிபதிகளும், மெய்க் காவல் படைவீரர்களும் அந்த இடத்தின் பல பகுதிகளை ஆராய்ந் தார்கள். முள்புதர் நடுவே கிடக்கின்ற நான்கு மருவூர் அந்தணர்களை மெல்ல விடுவித்து தூக்கி வந்தார்கள். அவர்கள் உடம்பெல்லாம் ரத்தகாயமாக இருந்தது. குண்டுக் கட்டாகக்கட்டி காய்ந்த முள் புதரில் தூக்கிப் போட்டுவிட்டதாக அவர்களில் ஒருவன் சொல்ல, உடனடியாக அவர்கள் ரத்தகாயத்திற்கு மருந்து போடப்பட்டது.

''வைணவதாசன் எங்கே.''

கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் யானையிலிருந்தபடி கேட்டார்.

அவர்கள் ஓரிடத்தைச் சுட்டிக்காட்டினார்கள்.

வைணவதாசன் உருண்டையான ஒரு பாறைக்கடியில் கிடத்தி வைக்கப்பட்டிருந்தான். உடனே போய் ஒரு மெய்க்காவல் வீரன் அவனைத் தூக்கி நிறுத்தினான். முகத்தில் கை வைத்தான். கழுத்தில் கை வைத்தான். நெஞ்சில் காது வைத்தான். நிமிர்ந்து எதிரேயிருந்த சக்ரவர்த்தி உடையாரைப் பார்த்தான்.

''இல்லை. போய்விட்டது. என்று இரண்டு வார்த்தை சொன்னான்.

சக்ரவர்த்தி உடையார் பல்கடித்தார். கால் உதைத்தார். ஹா.. என்று வெறிபிடித்தவர்போல் பிளிறினார். வாளை உருவி இரண்டு பக்கமும் வீசினார். குதிரையில் இளவரசர் இராஜேந்திரர் வந்து இறங்கினார்.

சட்டென்று குனிந்து வைணவதாசன் முகத்தைத் தொட்டார்.

தான் அனுப்பித்தானே இவன் இந்தக் கதிக்கு ஆளானான் என்ற துக்கம் அவரிடம் இருந்தது. பிழைத்துவிட முடியுமல்லவா என்று கேட்டார்.

''இல்லை முடிந்துவிட்டது.''

மறுபடியும் அந்த வீரன் சொன்னான்.

அவர் உற்று வைணவதாசன் முகத்தைப் பார்த்தார். உதடுகள் வீங்கியிருந்தன. மூக்கிலிருந்து ரத்தம் வழிந்திருந்தது. கண்களி லிருந்தும் ரத்தம் கசிந்திருந்தது. காதுகள் அறுபட்டிருந்தன. நெஞ்சில் பல இடங்களில் பிரம்புக் காயங்கள் இருந்தன. சூட்டுத் தழும்பு முதுகெல்லாம் நிறைந்து காணப்பட்டன. சித்ரவதை செய்திருக்கிறார்கள் என்று தெரிந்தது.

இராஜேந்திரர் எழுந்து நின்றார். வானம் பார்த்தார். கை பிசைந்தார். இடதும், வலதும் அலைந்தார். பாறையில் போய் நின்றுகொண்டார். திரும்ப வைணவதாசனைப் பார்த்தார்.

அவருக்கும் உள்ளுக்குள் கோபம் பொங்கியது.

''அந்தணனை... அந்தணனை அடித்திருக்கிறார்கள். அந்தணர் களைக் கட்டிப்போட்டு முட்புதரில் போட்டிருக்கிறார்கள். அந்தணர் களை மேலைச்சாளுக்கியம் சித்ரவதை செய்யுமென்றால் மேலைச் சாளுக்கியத்திலுள்ள அத்தனை பேரையும் சோழதேசம் சித்ரவதை செய்யும். ஒரு குழந்தையை, ஒரு பெண்ணை, ஒரு முதியவனை விடாதீர்கள். அடித்து நொறுக்குங்கள். மேலைச்சாளுக்கியம் அலற வேண்டும்'' என்று கட்டளையிட்டார்.

அவர் வீரர்கள் அதை எதிர் வாங்கி ஒலித்தார்கள்.

அருகேயுள்ள கிராமங்களுக்குப் பேயாய் பறந்தார்கள். கிராமங்களிலுள்ள பெண்களும், குழந்தைகளும், கிழவிகளும் இழுத்துவரப்பட்டனர். எதிர்த்த பெண்களை முகத்தில் அறைந் தார்கள். கிழவர்களை நெஞ்சில் குத்தினார்கள். வேண்டாம் என்று கை கூப்பிய கிழவிகளைத் தலையில் அடித்தார்கள். எல்லோரையும் தரதரவென்று இழுந்து வந்தார்கள். வர மறுத்தவர்களைப் பிசாசாய் அடித்தார்கள்.

ஒரு பத்து வயதுச் சிறுவன் மூங்கில் கோல் எடுத்துக் கொண்டு சோழவீரனைத் தாக்க வந்தான். அவன் கை சட்டென்று வெட்டப் பட்டது. வெட்டிய கை துண்டாகி கோலோடு விழுந்து துடித்தது. அவன் அலறினான். மேலைச்சாளுக்கியமும் அலறியது.

இளவரசர் இர்ராஜேந்திரர் வெறிபிடித்ததுபோல் ஒவ்வொரு கிராமமாக அழித்தார். எல்லாக் கிராமங்களும், நகரங்களும் தரை மட்டமாக்கப்பட்டன. பெண்களை அறைந்து ஆடச் சொன்னார்கள். ஆட மறுத்தவர்களை அடித்துக்கொடுமைப் படுத்தினார்கள். அன்று இரவு மேலைச்சாளுக்கிய மக்களுக்கு நரக இரவாக இருந்தது.

சக்ரவர்த்தி உடையார் வைணவதாசன் அருகிலேயே இருந்தார்.

# 161

"இது நான்காவது பூச்சா."

உமையாள் ஆவலோடு கேட்டாள்.

கருவறையைச் சுற்றியுள்ள தளம் முடிந்து அதற்கு மேலேயுள்ள தளம் கட்டப்பட்டு, அதற்கும் மேலேயுள்ள தளம் கட்டப்பட்டு, அதற்கும் மேலையுள்ள தளம் நிறுத்தப்பட்டுவிட்டது. கீழே நடனச் சிற்பங்கள் செதுக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு கரணத்தையும் ஒரு தலைக்கோலி விளக்க, சிற்பி அதைக் கேட்டுக் கொண்டு அந்தக் கரணத்தைச் சிற்பமாகச் செதுக்கிக் கொண்டிருக் கிறார்கள்; படம் வரைந்து கொண்டிருக்கிறார்கள்.

முக பாவங்களையும் அந்த சிறிய சிற்பத்தில் வெளிப்படுத்த வேண்டுமென்று முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு முழங்கை உயரச் சிற்பத்தில் மிக நுணுக்கமாக சகலமும் கொண்டு வந்து விடவேண்டுமென்று எண்ணுகிறார்கள். கருங்கல்லில் சிற்பம் செய்துவிட்டு காரையில் பூசலாமா என்று நினைத்துக் கொண்டிருக் கிறார்கள்.

ஒரு சாண் நீளம் புடைப்பு செய்யப்பட்டது. அந்தப் புடைப்பைச் சமன்செய்து பிறகு படம் வரைந்து அதற்குப்பிறகு சிற்பம் செய்வார்கள். இப்பொழுது மேலே அடுத்த நிலையில் ஓவியங்கள் வரைவதற்கான ஆயத்தங்கள் நடைபெறுகின்றன.

"இது எத்தனையாவது பூச்சு. நான்காவது பூச்சா."

உமையாள் சீராளனைக் கேட்டாள்.

"இல்லை. இது ஆறாவது பூச்சு. கிட்டத்தட்ட பத்து நாட்களாக அடிப்பகுதியைத்தான் பூசிக் கொண்டிருக்கிறார்கள்."

"எப்பொழுது ஓவியம் வரையத் துவங்குவீர்கள்."

''இதுதான் கடைசிப் பூச்சு. அடிப்பூச்சு பலமாக இருந்தால்தான் எந்த இடத்திலும் ஓவியம் கலையாது. பெயராது இருக்கும். அடிப்பூச்சு சரியில்லையெனில் ஓவியம் உதிர்ந்துவிடலாம்.''

''என்ன ஓவியம் வரையப் போகிறீர்கள்.''

உமையாள் ஆவலோடு கேட்டாள்.

சாரக்கம்புகள் பிடித்து படியேறி மேலேயிருந்து தஞ்சை பார்க்க தலைசுற்றியது. அடேயப்பா என்ன உயரம்... என்ன உயரம் என்று வியப்பு மண்டியது. இதைப் போல இன்னும் ஒரு மடங்கு உயரம் இருக்கிறது. என்று சீராளன் சொன்னதும் அதிர்ந்து போய் பார்த்தாள்.

''அப்போது நடுநாடு தெரியுமா.'' என்று வியப்போடு கேட்டாள்.

''இல்லை. பூமி வளைவானது. அதனால் அவ்வளவு தூரம் தெரியாது. அதையும் தவிர நமக்குக் கண்பார்வை ஓரளவிற்கே உண்டு. புகை மூட்டமாகத்தான் தொலைதூரம் தெரியும்.

''ஆமாம். நானும் மலைமீதிருந்து பார்த்திருக்கிறேன். ஒரு அளவிற்கு மேல் புகைமூட்டம்தான் தெரிகிறது.

''என்ன ஓவியம் வரையப் போகிறீர்கள்.''

மீண்டும் கேட்டாள்.

''திரிபுராந்தகருடைய யுத்தம்.

''யார் திரிபுராந்தகர்.''

''சிவன்.''

''ஆமாம். அன்று சொல்லிக் கொடுத்தீர்கள் அல்லவா. இதழ்களில் சிரிப்பும் கண்களில் கோபமும் அவர்தானே.''

''ஆமாம். அவர்தான்.

''யாரோடு சண்டை.

''அசுரர்கள்.''

''அசுரர்கள் என்பவர் யார்.''

''கெட்டவர்கள்.''

''அப்பொழுது சிவன்.''

''மிக மிக நல்லவர். உண்மையானவர். சத்தியமானவர். இந்த ஓவியம் உண்மைக்கும், பொய்க்கும் உண்டான சண்டை. தர்மத்திற்கும், அதர்மத்திற்கும் உண்டான சண்டை. நல்லதிற்கும்,

கெட்டதிற்கும் உண்டான சண்டை. திருடுதல், பொய் சொல்லுதல், ஆத்திரப்படுதல், ஆசூயைப்படுதல் என்று பல்வேறு அசுரர்கள் நம்மிடம் இருக்கிறார்கள். சத்தியம் அவைகளை ஒரு சிரிப்பில் பொசுக்கி விடுகிறது. அது வேல் எடுத்தோ, வாள் எடுத்தோ யுத்தம் செய்ய வேண்டாம். அசுரரை நோக்கி வரவேண்டாம். இருந்த இடத்தில் ஒரு சிரிப்பு. சகல கெடுதல்களும் பஸ்மமாகும்.

''இன்னும் விளக்கமாகச் சொல்லுங்களேன்.''

கொஞ்சலாக உமையாள் கேட்டாள்.

சீராளன் யோசித்தான். அவளைப் பார்த்தான்.

''இதெல்லாம் நமக்குள் நடைபெறுபவை. நமக்குள் தான் சத்தியம் இருக்கிறது. நாம்தான் கெடுதலுக்கு அதிகாரி. நம்முடைய எண்ணங்கள் அரக்கர்களாக உலாவர உள்ளுக்குள்ளே இருக்கின்ற சத்தியத்தை ஒருமுறை தரிசித்தால்போதும். அல்லது உள்ளுக்குள் இருக்கின்ற சத்தியம் ஒருமுறை விழித்துக்கொண்டால் போதும். நமக்குள் இருக்கின்ற அத்தனை கசடுகளும் அழுந்து ஒழிந்து விடும். இந்தச் சத்தியம் விழிப்பதுதான் ஞானம். சிவன் விழிப்பதுதான் ஞானம். சிவன் விழித்து விட்டால், சிரித்துவிட்டால் உள்ளுக்குள் இருக்கின்ற அத்தனை மாச்சரியங்களும் அழிந்து போகின்றன.

''சிவனைக் கோபம் கொண்டவராக அல்லவா சொல்கிறார்கள்.''

''ஆமாம். சத்தியம் கோபம் கொண்டது. சாந்தமானது.

''அமைதியானது. கோபமுடையது என்று சொல்கிறீர்களே எப்படி.''

''சத்தியம் வெறுமே இருக்கும்போது அமைதியானது. சத்தியத்தை நோக்கி கசடுகளும், மாச்சரியங்களும் வரும்போது சத்தியம் ஒருமுறை விழித்துப் பார்க்கிறது. எதிரே இருப்பவை அழிகின்றது. அந்த விழிப்பே கோபம்.

''இந்தப் போரில் சிவன் மட்டும் கெட்டவற்றை அழிக்கக் கிளம்புகிறாரா?''

''இல்லை. சிவனுக்குத் துணையாய் பார்வதி காளி ரூபமாய் கிளம்புகிறாள். மூஷிக வாகனத்தில் வினாயகர் கிளம்புகிறார். வேலோடு சுப்ரமணியர் கிளம்புகிறார். தேவர்கள் பங்கெடுத்துக் கொள்கிறார்கள்.''

''எனக்குப் புரியவில்லை. சிவம் என்பது உள்ளுக்குள் இருக்கும் சத்தியம் என்று சொல்லி விட்டீர்கள். இவர்களெல்லாம் யார்? காளி, வினாயகர், முருகருக்கு என்ன அர்த்தம்.

''உனக்குத் தெரியாதா.''

''இல்லை. தெரியாது.''

''சிறுவயதில் இவற்றை எதுவும் சொல்லித் தரவில்லையா.''

''நீங்கள் சொல்வதுபோல சொல்லித் தரவில்லை. பிள்ளையாரை வணங்கு. ஞானம் வரும். சுப்ரமணியரை வணங்கு. நல்ல கணவன் வாய்ப்பார். சிவனை வணங்கு இது கிடைக்கும். அம்பாளை வணங்கு அது கிடைக்கும் என்று ஏதாவது சொல்வார்கள். சிவனுடைய ரூபங்களை குணாதிசயங்களை நடனமாடுவதற்காக நான் சுற்றியிருக்கிறேன். ஊழிக்கூத்தைத் தனியாகப் பயின்றிருக்கிறேன். ஊழிக்கூத்து நடனத்தை சிவன் வேஷம் தரித்தும் ஆடலாம். சிவன் வேஷம் தரிக்காமலும் ஆடலாம். வேடம் முக்கியமல்ல. ஊழிக் கூத்துதான் முக்கியம். ஊழிக்கூத்தின் பாவம்தான் முக்கியம் என்று எனக்குப் பாடமாகியிருக்கிறது.''

''நல்ல பாடம்.''

''என் கேள்விக்குப் பதில் சொல்லவேயில்லையே. சிவன் சத்தியமென்றால், இவர்களெல்லாம் யார்.''

''அவசியம் தெரிந்துகொள்ள வேண்டுமா.''

''ஆமாம். நீங்கள் நன்றாகச் சொல்லித் தருகிறீர்கள். நீங்கள் பேசுவது புரிகிறது.''

''அப்படியா? எப்பொழுது ஒருவர் கேட்கிறார்ரோ அப்பொழுது சொல்லித்தரத்தான் வேண்டும். நான் சொல்கிறேன். நன்றாகப் புரிந்துகொள். நமது சனாதனதர்மம் எதையும் உவமானமாகவே சொல்லிப் புரிய வைத்திருக்கிறது. எதையும் உருவகப்படுத்தி தெளிய வைக்க முயற்சி செய்கிறது. அந்த உவமானங்களை உருவகங்களை, உனக்குச் சொல்லி ஒவ்வொன்றாகப் புரிய வைக்க முயற்சி செய்கிறேன். கற்றுக் கொள்வது உன் பலம். இறைவனின் கருணை. இது ஒருமுறைதான் கேட்கக் கிடைக்கும். மறுபடி மறுபடி இதைச் சொல்லமுடியாது. இப்போது புரிந்து கொண்டால் போயிற்று. இல்லையெனில் அடுத்த ஜென்மம்தான். உமையாள் நன்றாகக் கேள்.''

ஓவியன் சீராளன் ஒரு பிரசங்கியைப் போல் ஆரம்பித்தான்.

தெற்கத்திக்காற்று கூந்தலைக் கலைத்தது. மேலே மேகம் சூழ்ந்து கொண்டிருக்க. அந்தக் குளுமையை அனுபவித்த வண்ணம் இருவரும் எதிரும், புதிருமாய் அமர்ந்து கொண்டார்கள்.

''சிவன் என்பது ஆத்மா. ஆத்மாவை நீ உயிர் என்றும் கொள்ள லாம். நீ உடம்பல்ல உயிரும் கூட, உன் உயிர் எங்கே இருக்கிறது. இந்த உடலின் நடுமையத்தில் இருக்கிறது. உயிர் மட்டும் இருந்தால் போதுமா. உயிர் இருப்பது எப்படித் தெரியும். உடல் இருந்தால்தான் தெரியும். உயிர் ஆத்மா. சிவன் என்றால் உடம்பு சக்தி, சக்தி என்பது என்ன. செயல்பாடு. உயிர் எப்படிச் செயல்படும். உடம்பின் மூலம் செயல்படும். ஆக செயல்படும் கருவியின் பெயர் சக்தி. செயல்படு வதற்குப் பெயர் சக்தி. உயிர் இல்லாமல் உடம்பு செயல்படாது. உடம்பில்லாமல் உயிரும் செயல்பட முடியாது. சக்தியில்லையேல் சிவன் இல்லை.

''ஆமாம். கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், நீங்கள் சொல்லும் போது மிக அழகாக இருக்கிறது. அப்படியானால் முருகர் யார்? வினாயகர் யார்?''

''நல்ல கேள்வி. வினாயகர்தான் ஞானம். புத்தி, இந்த சிவனுக்கும், சக்திக்கும் பிறந்த முதல்மகன் வினாயகன். அதாவது ஆத்மாவுக்கும், உடம்பு என்கிற சக்திக்கும் பிறந்த முதல் மகன் நினைவாற்றல் என்கிற ஞானம் நினைவாற்றல். இல்லையெனில் உன் பெயர் மறந்துவிடும். படியேற மறந்துவிடும். உட்கார மறந்து விடும். நிற்க மறந்துவிடும். பேச மறந்து விடும். தொழில் செய்ய மறந்துவிடும். எனவே ஒரு மனிதனின் முதல் பலம் நினைவாற்றல். சக்தியும், சிவனும் சேர்ந்த பிறகு அங்கே அவர்களுக்குப் பிறக்கின்ற முதல் குழந்தை நினைவாற்றல் என்பதை குறியீடாகச் சொல்ல யானைத்தலையை வைத்தார்கள்.

யானை என்பதென்ன.. நினைவாற்றலில் மிகச் சிறந்த ஒரு மிருகம். எப்படிப்பட்ட நினைவாற்றல். முப்பது வருடங்களுக்கு முன்பு ஒரு கவளம் தயிர்சாதம் போட்டவனை யானை நினைவில் வைத்துக் கொள்ளும். யானையால் திசைகள் அறியமுடியும். பாதைகள் அறியமுடியும். எனவே, யானை நினைவாற்றலின் அம்சம், யானை என்பது நினைவாற்றலின் அம்சம் என்று தெரிந்த தால் அதனுடைய தலைக்கு யானையை வைத்தார்கள். உபமானமாக யானைத் தலையைக் கொண்ட முதல் மகனைச் சொன்னார்கள். அடுத்தது சக்தியும், சிவனும் கூடிப் பிறப்பதென்ன. நினைவாற்ற

லுக்குப் பிறகு என்ன வருகிறது. நினைவாற்றல் என்ன தருகிறது என்று யோசித்துப் பார்த்தால் உடம்பும், உயிரும் ஒன்றுகூடி நினைவாற்றலின் விளைவால் மனம் என்ற விஷயம் பிறக்கிறது.

மனம் என்பதுதான் முருகர், சுப்ரமணியர். சுப்ரமணியர் மனம். அது போகத்தைச் சார்ந்தது. வேகத்தைச் சார்ந்தது. போர் என்பது மனதின் குணம். போகம் என்பது மனதின் குணம். கர்வம் என்பது மனதின் குணம். அழகு என்பது மனதின் குணம். மனம்தான் அழகு என்பது பற்றி யோசிக்கிறது. அழகன் என்பவன் முருகன். முருகன் என்பவன் அழகன். முருகன் என்பவன் அதாவது முருகன் என்கிற மனம் தெய்வானை என்கிற தெய்வ விஷயங்களிலும் ஈடுபடுகிறது. வள்ளி என்கிற பூமி விஷயங்களிலும் ஈடுபடுகிறது. வள்ளி என்றால் கொடி என்று அர்த்தம். பூமியின் அமிர்தம், பூமியின் நல்ல விளைவு, கொடிகள். எனவே மனம் ஒரு சேர பூமியையும், இன்னொரு விதமாய் தெய்வத்தையும் நினைக்கிறது. தெய்வத்தை நினைக்கின்ற விஷயத்திற்கு தெய்வானை என்று பெயர். பூமியை நினைக்கின்ற விஷயத்திற்கு வள்ளி என்று ஒரு தாவரத்தின் பெயர்.

பூமியின் அம்சம் எது. தாவரம். எனவே, மனம் தெய்விகத்தையும், பூமியையும் ஒருசேர அனுபவிப்பது. மனதின் இன்னொரு குணம் என்ன? சேவல். சேவல் நடப்பதைப் பார்த்திருக்கிறாயா உமையாள். சேவல் தலை திருப்பி இந்த உலகமே என் காலடியில் என்று ஒவ்வொரு அடியையும் மிகத்திமிராக வைக்கும். சேவல்தான் கர்வத்தினுடையச் சின்னம். அந்தக் கர்வத்தின் சின்னத்தைத் தன் கொடியிலே வைத்திருக்கிறான் முருகன். அதாவது மனம் என்கிற விஷயம்.''

''மனம் கர்வமுடையதுதானா.''

''இல்லை. செய்தொழில் நிறைந்தது. மனதால்தான் செயல் நடைபெறுகிறது. செயல் என்பதைக் குறிக்க வேல் என்று வைத்தார்கள்.''

''அப்போது மயில் என்பது என்ன.''

''விரைவு. அழகுணர்ச்சி. சுகம் நாடுதல்.

''சுகம் என்பது என்ன.''

''எத்தனையோவித சுகங்கள். உண்பது, உறங்குவது, உடுத்துவது, தென்றலை அனுபவிப்பது, குளிரில் இருப்பது, வெயிலில் காய்வது என்று பல்வேறு சுகங்கள். அதில் மிக முக்கியமான சுகம், காமம். காமம் என்கிற நாகத்தை இந்தச் சுகமான மயில் கொத்திக்

கொண்டிருக்கிறது. உண்ணவும் உண்ணாமல் விடவும் விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது.''

''அடடா... அருமையாய் இருக்கிறது உவமை.''

''இப்பொழுது வினாயகருக்கு வருவோம். வினாயகரை பிரம்மச்சாரி என்கிறார்கள். வினாயகருக்கு சித்தி, புத்தி என்று இரண்டு மனைவிகள் என்றும் சொல்கிறார்கள்.''

''வினாயகர் பிரம்மச்சாரியா. மனைவி உடையவரா.''

''வினாயகர் மௌனமாக இருக்கிறபோது பிரம்மச்சாரி. அதாவது நினைவாற்றல் மௌனமாக இருக்கிறபொழுது பிரம்மத்தைச் சார்ந்திருக்கும். பிரம்மச்சாரி என்றால் பிரம்மத்தைச் சார்ந்திருப்பவர் என்றுதான் அர்த்தமே தவிர, வேறெதுவும் இல்லை.

''அப்பொழுது சித்தி, புத்தி என்ற மனைவியர் யார்.''

''நினைவாற்றலுக்குத் திட்டமிடல் என்பது வேண்டும். அந்தத் திட்டமிடலுக்கு புத்தி என்று பெயர். அந்தத் திட்டமிடலுக்குப் பிறகு செயல் நடத்த வேண்டும். அந்தத் திட்டமிடலைச் செயலாக்குவது சித்தி என்று பெயர். அதாவது இங்கிருந்து உன் வீட்டிற்குப் போக வேண்டுமென்றால், ஒரு பாதையை உன் மனம் திட்டமிடுகிற தல்லவா. இந்த வழியாகப் போய் இந்த வழியாகத் திரும்பு, என்று திட்டமிடுகிறதல்லவா. அது புத்தி. அதை மனம் செயல்படுத்து கிறதல்லவா அது சித்தி. நினைவாற்றலின் இரண்டு துணைகள் சித்தியும், புத்தியும். அதேசமயம் இந்த நினைவாற்றல் உள்ளுக்குள் அடங்கி கடவுளோடு கலந்திருப்பின் அது பிரம்மத்தைச் சார்ந்திருப்பது. பிரம்மத்தைச் சார்ந்திருப்பதால் அதற்கு பிரம்மச்சாரி என்று பெயர்.''

''கடவுளே.. அற்புதமாகச் சொல்கிறீர்கள். இம்மாதிரி ஒரு விளக்கத்தை நான் கேள்விப்பட்டதேயில்லை. தங்களுக்கு எப்படித் தெரிந்தது.''

''எனக்கு ஓவியம் வரையும்போது சில விஷயங்கள் தோன்று கின்றன உமையாள். அதை நான் வெளிப்படுத்துகிறேன். ஓவியம் வெறுமனே வரைய முடியாது உமையாள். என்ன சொல்கிறேன் என்று எனக்குள் நான் தீர்மானம் செய்தால்தான் என் கை சரியாக வரையும். நான் வெறும் பொம்மைகள் வரையவில்லை. ஒரு தத்துவத்தைச் சொல்லவே முயற்சிக்கிறேன். ஏன் திரிபுராந்தகர் எடுத்தேன். சத்தியம் விழித்துக்கொண்டு வருகிறது. சத்தியத்திற்குச்

துணையாய் நினைவாற்றல். நினைவாற்றலுக்குத் துணையாய் மனம். மனதிற்குத் துணையாய் சக்தி என்கிற உடம்பு. ஆத்மாவும், உடம்பும், நினைவாற்றலும், மனமும் ஒரு சேரப் பாய்ந்து இந்த அசுரர்களை அழித்துவிட முயற்சிக்கிறபோது ஆத்மா, அதாவது உயிர் ஒரு சிரிப்பு சிரிக்க சகலமும் அழிந்து போகிறது. இதுதான் திரிபுராந்தகருடைய யுத்தம். இது நமக்குள் நடப்பது உமையாள்.

''கடவுளே... கடவுளே... என்ன அழகு இது. நீங்கள் வெறும் ஓவியரா... இல்லை. தத்துவ ஞானி. மகா பண்டிதர். எவ்வளவு அழகாக இந்த மரக்கட்டைக்கும் புரியும்படி சொல்கிறீர்கள்.

''உமையாள்... யாரும் மட்டமில்லை. எல்லோருக்கும் எல்லாமும் தெரியும். ஆனால் மனம் மறைக்கிறது. வேறு இடங்களில் நாடிச் செல்கிறது. மனம் தத்துவத்தை நாடினால் எல்லா விஷயங்களும் அற்புதமாகத்தான் வரும். எல்லாக் கலைகளும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டவை. தத்துவத்தைச் சொல்லாத எந்தக் கலையும் வியர்த்தமாகும். வீணாகப் போகும். இந்த திரிபுராந்தகர் விஷயம் என்ன என்பதை நான் உள்ளுக்குள் தெளிவாக்கிக்கொண்டு விட்டேன். இனி வரையத் துவங்கி விடுவேன். எல்லாம் வேகம். ஒன்று சேர்ந்த வேகம். அந்த வேகத்தை எங்கிருந்து எடுப்பது.

''தெரியவில்லையே.'' உமையாள் விழித்தாள்.

''செய்தி வந்திருக்கிறது உமையாள். ஒருசேர ஓட்டு மொத்தமாய் ஏழு லட்சம் வீரர்களும் துங்கபத்ரையில் இறங்கி எதிர்க்கரையைத் தாக்கி மேலைச் சாளுக்கியத்தில் புகுந்து புறப்பட்டுக் கொண்டிருக் கிறார்களாம். யுத்தம் முழு வீச்சில் நடக்கத் துவங்கிவிட்டதாம். அதேபோல, இதோ இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கம் நோக்கி அசுரர்களை எதிர்க்கும் வண்ணம் சகலரும் இறங்கப் போகிறார்கள்.

ஸ்ரீ இராஜராஜர் எதில் இருப்பார். புதிதாகக் கண்டுபிடித்த அந்த நான்கு சக்கரத் தேரில் இருப்பாரா. ஆறு குதிரைகள் பூட்டிய நான்கு சக்கரத் தேரில் கால் ஊன்றி கணைகள் தொடுப்பாரா. எப்படி யிருப்பார். நான் இராஜராஜரை யோசிக்கிறேன். நினைவாற்றலுக்கு உதாரணமாக கிருஷ்ணன்ராமனான பிரம்ம ராயரை யோசிக்கிறேன். அழகனும், வேகமுள்ளவனுமாக இராஜேந்திரரை முருகனாக யோசிக்கிறேன். பஞ்சவன்மாதேவி போயிருக்கிறார். அரசருக்கருகே துணையாக நிற்பார். வாள் ஏந்தி அடிப்பார். வேல்வீசி எறிவார். சோழதேசத்துப் பெண்மணி மேலைச்சாளுக்கியத்தில் எதிரிகளை



உள்ளே பிரகாரத்தில் இருக்கும் ஊழித் தாண்டவர்

வெட்டி வீழ்த்துவார். என்ன அற்புதம். பலரை வெட்டி வீழ்த்திய அந்த முகம் எப்படியிருக்கும். நான் யோசித்துப் பார்த்து வரைகிறேன்.''

''அசுரர்களையும் கற்பனை செய்வீர்களா.''

''அதற்கென்ன கேடு. ஏகப்பட்ட அசுரர்களைப் பார்த்திருக்கிறேன். நமக்குள்ளே இருக்கிறார்களே.''

''என்ன.''

'நான் உடனே உன்னைப் பெண்டாள வேண்டும் என்று நினைத்தேன் என்று வைத்துக்கொள். என் முகம் எப்படி மாறும். கண்ணாடியில் பார்த்துக் கொள்வேன். அப்பொழுது ஒரு கோரம் வரத்தான் செய்கிறது.''

''கடவுளே.. அப்படியேதும் செய்துவிடாதீர்கள்.''

அவள் நகர முயற்சித்தாள். அவன் சட்டென்று அவள் தோளைப் பற்றினான். இழுத்தான்.

''நான் ஓவியம் வரைய வேண்டுமெனில், நீ என் அருகே இருக்க வேண்டும். என்னோடு பேசிக் கொண்டிருக்க வேண்டும். நான் தனியாக இருந்தால் அவ்வளவு சரியாக இல்லை. நீ அருகே இருந்தால் நான் தெளிவாக இருக்கிறேன். உமையாள். இது விண்ணப்பம். வெறுமே அருகிலிருந்தால் மட்டும் முடியாது. அடிக்கடி உன்னைத் தொடவும், முத்தமிடவும் எனக்கு நீ இடம் கொடுக்க வேண்டும். சில சமயம் முத்தம் கொடுப்பதும் போதாது. இதோ இந்த இடத்தில் நாம் கூடலும் செய்ய வேண்டும்.''

''இது கோயிலல்லவா.''

''இன்னும் கோயிலாகவில்லை. வெறும் கலைக் கூடமாகத்தான் இருக்கிறது.''

''நான் மறுத்தால்..

''ஓவியம் சரியாக வராது உமையாள்.''

''கடவுளே இதென்ன கூத்து. ஓவியம் சரியாக வரவேண்டுமென்றால் உமையாள் வேண்டுமா.''

''ஆமாம்.''

உமையாள் யோசித்தாள்.

''இந்த ஓவியம் காலாகாலத்திற்கும் நிற்கப் போகிற ஓவியம். ஆயிரம் வருடங்கள் அழியாது இருக்கப் போகும் ஓவியம். அப்படிட்

பட்ட ஒரு அழகிய ஓவியம், உயர்வான ஓவியம் வரவேண்டு மென்றால், இந்த உடம்பை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். சொடுக்குங்கள். உங்கள் எதிரே நான் நிற்கிறேன். கட்டளையிடுங்கள். நான் கீழ்ப்படிகிறேன். நீங்கள் எது சொன்னா லும் கேட்கிறேன்.''

''வா..'' அவன் ஒரே வார்த்தையில் கட்டளையிட்டான். அவள் நாணினாள். நிமிர்ந்து பார்த்தாள்.

''உண்மையாகவா..'' என்றாள்.

''வா..'' இரண்டாம் முறையும் கட்டளையிட்டான்.

அவள் மெல்ல முன்னேறினாள். அவனை ஆரத்தழுவிக் கொண் டாள். முத்தமிட்டாள். அவளை இறுக்கி அணைத்து முத்தமிட்டு மனநிலையை ஒருமுகப்படுத்தினான். கூடலுக்கு முயற்சித்தவன் போல சில அசைவுகளைச் செய்தான். ஆனால் கூடவில்லை. அந்தக் கூடலுக்கு அவன் முயற்சித்ததே, அவன் மன ஒருமையை அதிகப் படுத்தியது. அந்த மன ஒருமையோடே அவன் கரித்துண்டை எடுத்தான். படம் வரைய ஆரம்பித்தான்.

உமையாள் திகைத்துப் போனாள். தான் ஒரு சாதாரண மனிதனோடு பழகவில்லை. மிகப்பெரிய வித்தைக்காரனிடம்தான் மண்டியிட்டிருக்கிறோம் என்று புரிந்துகொண்டாள். அவனை இன்னும் சந்தோஷப்படுத்த உள்ளுக்குள்ளே ஆயத்தமானாள்.

## 162

ஏதோ ஒரு அரண்மனையிலிருந்து சந்தன மரக்கதவு பிய்த்து எடுத்துவரப்பட்டது. அதில் வைணவதாசன் கிடத்தப்பட்டிருந்தான். அவன் காயங்களை மறைக்க அவன் மீது மஞ்சளும், சந்தனமும் கலந்து தடவியிருந்தார்கள். நெற்றிக்குத் திருமண் எழுதியிருந் தார்கள்.

பலநூறு கொலைகள் செய்திருந்தாலும், பல ஆயிரக்கணக்கான கொலைகளைப் பார்த்திருந்தாலும் இந்த வைணவதாசனின் மரணம் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரை உலுக்கியது. மிகப் பெரும் கோபக்காரர். திட்டமிடுதலில் வல்லவர். எதையும் ஏற்கின்ற மன உறுதி பெற்றவர் என்கிற கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் உடைந்து கதறியழுதது எல்லோரையும் வேதனைப்படுத்தியது.

இளவரசர் இராஜேந்திரரும், அருண்மொழியும் மேலைச்சாளுக்கியத்தின் நகரங்களைச் சூரையாடிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு அந்தணனை அடித்துக் கொன்றார்கள். ஒரு அந்தணனைச் சூடு போட்டுக் கொன்றார்கள். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்று பல்லைக் கடித்துக்கொண்டு இராஜேந்திரர் சோழவீரர்களை வினவ, அவர்கள் ஆத்திரமடைந்தார்கள்.

ஒரு சுவரும் நிற்கவொட்டாது தரை மட்டமாக்குங்கள் என்று கட்டளையிடப்பட்டது.

யானைகள் வைத்து சுவர்கள் இடிக்கப்பட்டன. கோட்டைக் கொத்தளங்கள் அழிக்கப்பட்டன. மிகப்பெரிய கொள்ளை, வாளின் முனையில் நடந்தது. பித்தளை, வெங்கலம் பொன், வெள்ளி சாமான்கள் அத்தனையும் பாரவண்டிகளில் ஏற்றப்பட்டன. தங்கக் காசுகளைத் துணியில் உருட்டி அரைஞாண் கயிறாய் கட்டிக் கொண்டார்கள்.

துங்கபத்ரையிலிருந்து பத்துகாதம் தூரம்போன சத்யாசிரியன் நின்றான்.

நகரங்கள் தாக்கப்படுகின்றன. பெண்கள் அடிக்கப் படுகிறார்கள். கிழவர்கள் கொல்லப்படுகிறார்கள் என்று கேட்டு மறுபடியும் போர் முனைக்கு வர முயற்சித்த போது, அவன் தளபதிகள் தடுத்தார்கள். மான்யகேடம் நோக்கிப் போகும்படி சொன்னார்கள். அவன் மான்ய கேடம் நோக்கிப் போய் கோட்டைக் கதவுகளை இறுக்க மூடிக் கொண்டான்.

வடக்கேயிருந்து வந்த தன்னுடைய எதிரிகளை சமரசம் பேசி, அவர்களை தன்னோடு போரிடும்படி வேண்டிக்கொண்டான். ஆனால், வடக்கேயிருந்து வந்த அவன் எதிரிகள் போர் வேண்டா மென மறுத்தார்கள். வடக்கிருந்தும் அவனுக்கு தாக்குதல் ஆரம் பித்தது. சத்யாசிரியன் திண்டாடினான்.

''இப்போது வடக்கே போக வேண்டாம். வடக்கேயிருந்து வந்த பராமரர்கள் சத்யாசிரியனைத் தாக்குவார்கள். சத்யாசிரியன் அழிந்து போகட்டும். கொள்ளையடித்தது போதும். இப்போது வடக்கு நோக்கிப் போனால், அந்தப் பராமரர்களை நாம் எதிர்கொள்ள நேரிடும். ஏற்கெனவே சற்று சேதம் இருக்கிறது. இன்னும் சேதம் வேண்டாம். கொள்ளைக்காகத்தானே வந்தோம். நல்ல பொருட் களைக் கொள்ளையடித்துவிட்டோம். வேண்டுமென்ற யானை

களும், குதிரைகளும், ஆடுகளும், மாடுகளும் மடக்கிவிட்டோம். சோழதேசம் நோக்கிப் போய் விடலாம்.

அருண்மொழிப்பட்டனும், பிரம்மராயனும் ஆலோசனை கூறினார்கள்.

சக்ரவர்த்தி யோசித்தார். சரி என்று தலையசைத்தார்.

அவர்கள் அங்கு தங்கிக் கொள்ளையடித்த பொருட்களோடு சோழ வீரர்கள் ஏழு லட்சம் பேர் இரட்டைப்பாடி, கங்கதேசம் வழியாக சோழதேசம் நோக்கி நடக்கத் துவங்கினார்கள். அப்படி புறப்பட்டு வரும்போது ஒரு பெரிய ஆளுயர கல்தூணை வைணவ தாசன் இறந்த இடத்திலே நட்டார்கள். வைணவதாசன் அஸ்தியை ஒரு தங்கக் குடத்தில் நிரப்பிக் கொண்டார்கள். ஒரு தனித்த யானை மீது புலிக்கொடி போர்த்தி அதை முன்னே அனுப்பினார்கள்.

படை இரவெல்லாம் குடித்துவிட்டு குதுகலம் செய்தது. பகலில் மெல்ல சோர்வோடு நடந்து வந்தது.

இருபது, இருபத்தைந்து நாட்கள் நடந்தால்தான் சோழதேசத்தின் எல்லைக்குப் போக முடியும். கங்கதேசத்திலும், இரட்டைபாடி யிலும் பொதுமகளிரிடம் போவதற்கு பெருத்த சண்டை இருந்தது. வீரர்கள் குடித்தார்கள். தாசிப் பெண்டுகளைச் சுற்றி கூத்தடித்தார்கள். அடித்துப் போட்டதுபோல தூங்கினார்கள்.

போர் கொடுத்த பயம் விலக குடியும், தூக்கமுமே முக்கியமாக இருந்தன.

''திரிபுராந்தகராக உன் முகம் இருக்கிறது. ஆனால் உடம்பு இல்லை. நல்ல உடம்புடையவள் வேண்டும். எச்சு மண்டை இருக்கிறாளல்லவா. அவளை அழைத்துவா. இடுப்பில் ஒரேயொரு துணி சுற்றி நிற்கட்டும். உமையாள், உடனே அவளை அழைத்து வா.''

சீராளன் கட்டளையிட்டான். எச்சுமண்டை திகைத்தாள்.

''இடுப்பில் ஒரேயொரு துணியுடனா. அப்போது மார்பில்..

''ஏதுமில்லை...'' என்று அவன் சொன்னான்.

அவள் தயங்க, மற்றவர்கள் வற்புறுத்தினார்கள்.

நல்ல உயரமும், ஆகிருதியும் உடைய எச்சுமண்டை என்கிற தேவரடியார் ஒரு கால் நீட்டி, ஒரு கால் மடக்கி அழகாக நின்றாள்.

அவள் உடம்புதான் திரிபுராந்தகரின் உடம்பாக அவன் கைவண்ணத் தில் மாறியது.

தேவரடியார்கள் திகைத்தார்கள். என்ன அழகு.. என்ன அழகு என்று வியந்தார்கள்.

காளியாக ஒருவரை, முருகனாக ஒருவரை என்று பலபேரை நிற்க வைத்தான். பளு தூக்கும் பாண்டிய தேசத்து மறவர்களை நிற்க வைத்து, திரும்ப வைத்து மனனம் செய்து கொண்டான். அசுரர்கள் வரைந்தான்.

''சீராளா.. அற்புதம் செய்கிறாயடா.

பெருந்தச்சர் குஞ்சரமல்லர் தழுவிக் கொண்டார்.

கற்கள் அவர் கணக்குப்படி செதுக்கப்பட்டுக் கொண்டிருந்தன. கீழே இடையறாத உளி சத்தம் கேட்டது. மேலே, மேலே போக இன்னும் இன்னும் மண் குவித்து நூற்றுக்கணக்கான மனிதர்கள் சுற்றுச்சுவர் அமைத்தார்கள். அதன்மீது யானை கருங்கல்லை இழுத்துக் கொண்டு ஏறியது. எந்தக் கற்களையும் ஆட்கள் இழுக்க வேண்டியதில்லை. யானைகளோ, குதிரைகளோ, எருதுகளோதான் இழுக்க வேண்டும். கற்களைப் புரட்டிப் போடவும் அடியில் கட்டை கொடுத்து நிமிர்த்தவும் ஆட்கள் உதவி செய்தால் போதும்.

பெருந்தச்சர் கடுமையாக உத்தரவிட்டிருந்தார். கற்களைத் தூக்கச் சொன்னால் கோபம் வரும் என்று எச்சரித்திருந்தார். ஆனாலும், சில இடங்களில், சில கஜதூரங்கள் கற்களை நகர்த்த ஆட்கள் தேவைப் பட்டார்கள். சிற்பிகள் விடியலிலிருந்து அந்தி சாயும் வரையில் வேலை செய்தார்கள். சில சமயம் நல்ல நிலவு இருக்கும்போது மேம்போக்காக செதுக்க வேண்டியவற்றைச் செய்தார்கள்.

சிற்பிகள் தூங்குவதற்காக நூற்றுக்கணக்காக கயிற்றுக்கட்டில்கள் போடப்பட்டன. பாண்டிய வீரன் ஒருவன் கல்தூக்கும் போது, அவனுக்கு இடது மூட்டு நழுவிப் போனது. அவன் வலியில் துடித்தான். அவனுக்கு மயக்க மருந்து தரப்பட்டது. வலி நீங்க ஒத்தடம் தரப் பட்டது. பச்சிலைப்பற்று போடப்பட்டது. அவன் மயக்கத்தோடு வேறு எங்கு படுப்பது என்று தெரியாமல் ஒரு கயிற்றுக்கட்டிலில் படுத்தான். கயிற்றுக் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தவனை, அந்த கட்டிலுக்குண்டான சிற்பி உலுக்கி எழுப்பினான். அந்தப் பாண்டிய வீரனால் எழுந்திருக்க முடியவில்லை. அப்பால் போடா என்று

சிற்பியை மெல்லப் புறந்தள்ளினான். தன்னுடைய தோழர்கள்தான் எழுப்புகிறார்கள் என்ற நினைப்பில் அப்படிச் செய்தான்.

தன்னை எழுப்பியது சிற்பி என்று தெரியவில்லை. சிற்பிக்கும் கோபம் வந்துவிட்டது. கட்டிலைத் தூக்கி உருட்ட மறுபடியும் அந்த பாண்டிய வீரனின் இடது கை சேதமடைந்தது. அவன் வலியில் அலறினான்.

சோழ வீரர்கள் அந்தப் பாண்டிய வீரனின் வலியைப் பார்த்துவிட்டு கோபமுற்றார்கள்.

ஏன், அவனைக் கட்டிலோடு தள்ளினாய் என்று சிற்பியைப் பார்த்துக் கத்தினார்கள்.

சிற்பி பதிலுக்கு முறைத்தான். கெட்ட வார்த்தை சொன்னான்.

சோழவீரர்கள் வேல் கம்பால் அவன் நெஞ்சில் வைத்து குறுக்காகத் தள்ளினார்கள். சிற்பி கல்தடுக்கி தடேரென்று கீழே விழுந்தான். அவன் இடுப்பில் பலத்த அடிபட்டது. அவனும் அலறினான். சிற்பிகள் ஓடி வந்தார்கள். அவனைத் தூக்கிப் பிடித்து நிற்க வைக்க முயற்சித்த போது, நிற்க முடியவில்லையென்று கத்தினான்.

தசை நார் கிழிந்திருக்கும் என்று வைத்தியர் அபிப்ராயப்பட்டார். சோழவீரர்களும், சிற்பிகளும் பளிச்சென்று முறைத்துக் கொண் டார்கள். அங்கே மெல்லிய கைகலப்பு ஏற்பட்டது. பெருந்தச்சர் குஞ்சரமல்லர் பருத்த உடம்போடு வந்தார். அமைதி.. அமைதி என்றார். தன்னுடைய ஆட்களை அதட்டி அனுப்பினார். சோழவீரர் களிடம் என்ன நடந்தது என்று கேட்டார். சோழவீரர்கள் பதில் சொன்னார்கள். சிற்பியைப் போய் விசாரித்தார்கள். சிற்பிகளும் பதில் சொன்னார்கள்.

நடுநாட்டு அந்தணர்கள் அவரிடம் ஏதோ சொல்ல வரும்போது, அவர் கோபமாய் அவர்களை விரட்டினார்.

''அப்பாலே போங்கள். என்னுடைய சிற்பிகளை இழிவுபடுத்தி விட்டு, இவர்கள் மாரை நிமிர்த்துகிறார்களே என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். சிற்பியின் கட்டிலில் படுத்தது தவறு. அவன் எழுப்பிய பிறகு அவனை உதைத்து விலக்கியது இன்னும் பிசகு. குடி மயக்கத்தில் என்று சொன்னாலும் அவன் குடித்தால், இந்த இடத்தில் இருந்திருக்கக்கூடாது. வெளியே நிற்க வேண்டும். கட்டிலை உருட்டினால் என்ன? அவனை அடிக்க இத்தனை பேர்

வருவீர்களா? சிற்பியை அடித்துவிட முடியுமா? அடியுங்கள் பார்க்கலாம்.'' என்று உரக்கக் கத்தினார்.

சோழவீரர்கள் பொருமினார்கள்.

''என்னடா நாய்களே.. என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.''

மற்ற சிற்பிகள் உரத்த குரலில் பேச, அன்று இரவு சோழவீரர்கள் ஒன்று திரண்டார்கள்.

இவர்கள் யார் நம்மை நாய் என்று சொல்ல, அங்கு குத்துயிரும் கொலையிருமாய் ஆயிரக்கணக்கான வீரர்கள் செத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இங்கு உல்லாசமாகப் பெண்களோடு சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டு சிற்ப வேலை செய்கிறேன் என்று மணிக் கணக்கில் ஓலைக் குடிசைக்குள் அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். அதைக் கேட்பார் இல்லையா?

மூட்டு நழுவியதால்தானே கட்டிலில் படுத்தான். கட்டிலில் படுப்பது மகாபாபமா. அவன் ஒரு சேனாபதி. மதுரையின் முக்கிய மான படைத்தலைவன். பெரிய நிலப்பரப்புக்குச் சொந்தக்காரர். இந்தச் சிற்பியைப் போல அன்னக்காவடியா'' என்று உரக்கக் கத்தினார்கள். நடுநாட்டு அந்தணர்கள் சமாதானப்படுத்தியும் அவர்கள் சீறலாய் பேசினார்கள்.

ஆனால், ஒன்றும் ஆகாது ஐயனே. நீ சும்மாயிரு. நாங்கள் கவனித்துக் கொள்கிறோம் என்றார்கள்.

விஷயம் குந்தவைக்கும், வந்தியத்தேவருக்கும் போயிற்று. வல்லத்திலிருந்து அவர்கள் ஓடி வந்தார்கள்.

பெருந்தச்சரோடு பேசினார்கள்.

''இல்லை. இங்குள்ள சோழவீரர்கள் மரியாதையில்லாமல் நடக்கிறார்கள். இந்த இடத்தில் குடிப்பது என்பது தவறு.'' என்று பெருந்தச்சர் உரக்கக் கத்தினார்.

வந்தியத்தேவர் அவரைச் சமாதானப்படுத்தவில்லை. மாறாய் குதிரை ஏறி சோழ வீரர்கள் ஒன்று திரண்டிருக்கும் இடத்திற்குப் போனார்.

''நீங்கள் இப்படி ஒன்று திரள்வது தவறு. சிற்பிகளை எதிர்த்து ஒன்று திரண்டீர்கள் என்று இராஜராஜருக்குத் தெரிந்தால் உங்களுடைய நிலைமை மோசமாகும். இதைச் செய்யாதீர்கள்.''

''என்ன மோசமாகுமய்யா. எங்களது தலையை சக்ரவர்த்தி உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் சீவி விடுவார் என்று நினைக் கிறீர்களா?''

அந்த வீரன் ஆத்திரமாகக் கேட்டான்.

வந்தியத்தேவருக்குச் சட்டென்று கோபம் வந்தது. உறுத்து அவனைப் பார்த்தார்.

''அரசருக்கெதிராக எப்பொழுது எந்தவிதமாக ஈடுபட்டாலும், எவர் ஈடுபட்டாலும் அவருக்கு மரணதண்டனை நிச்சயம் உண்டு. கோயில் கட்டும் இந்தப் பணிக்கு நீ இடையூறு செய்கிறாய் என்பதைப் புரிந்து கொள்.''

சிற்பிகள் உதவுகிறார்கள் என்பதால் நாங்களெல்லாம் உதவாக் கரைகள் என்று எண்ணியிருக்கிறீர்களா?''

இன்னொரு வீரன் கேட்டான்.

''உங்களுக்கொன்று புரியவில்லை மறவரே. இந்தக் கோயில் கட்டி முடிக்கும் வரையில் தான் சிற்பிகளுக்கு மரியாதை உண்டு. மறவர்களுக்கு எப்போதும் ஒரு மரியாதை உண்டு. கோயில் கட்டும்போது சிற்பிகள் முக்கியம். தங்களது முக்கியத்துவத்தைக் காட்ட அவர்கள் சில அத்துமீறல்கள் செய்யலாம். விலகி நில். சிலருக்கு தன்னுடைய கட்டில், தலையணை, உடை போன்ற வற்றை மற்றவர்கள் உபயோகப்படுத்துவது பிடிக்காது. அந்த வீரனை எழுப்பி வேறு எங்கேயாவது படுக்க வைத்திருக்கலாம். சிறிய விஷயத்தைப் பெரியதாக மாற்றாதீர்கள். அவர் செய்த தவறு. நீங்கள் செய்த தவறு என்று எதுவும் யோசிக்கப்படமாட்டாது. கோயில் வேலைக்கு குந்தகமாக இருந்தது யார் என்றுதான் யோசிக்கப்படும். அது நல்லதல்ல. பதுங்கவும், பாயவும் வீரனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒன்று தெரியுமா?

அந்தணர்கள் கடந்த வருடங்களில் எவ்வளவு இழிவு படுத்தப் பட்டார்கள் தெரியுமா? அந்த அந்தணர்களை இப்போது இராஜேந் திரரே கொண்டாடி வருகிறார். போர் முனையில் மருவூர் அந்தணர்கள் பெரிய சாதனை செய்திருக்கிறார்களாம். என்ன சாதனை என்று தெரியவில்லை. மேலைச்சாளுக்கியம் துங்கபத்ரை நதிக்கரையில் பதினான்கு அந்தணர்கள் போயிருக்கிறார்கள். அந்த அந்தணருக்காக மொத்த அந்தணர்களையும் மரியாதையாக சோழ தேசம் நடத்தப் போகிறது.

அரசரை எதிர்க்கும் தைரியம் உள்ள அந்தணர்களே அடங்கிக் கிடக்கிறபோது, நீங்கள் எம்மாத்திரம். உணர்ச்சிவசப்படுவது முட்டாள்தனம். என்ன செய்தால் உருப்படலாம் என்று யோசி யுங்கள்.''

அங்கேயே சிறிதுநேரம் வெற்றிலைப்பாக்கு போட்டுக் கொண்டு வந்தியத்தேவர் அமர்ந்திருந்தார்.

அவர்கள் பதில்பேசாது இருந்தார்கள்.

''என்ன சொல்கிறீர்கள்.'' என்று கேட்டார்.

''நாங்கள் அடங்கியிருக்கிறோமய்யா.''

துக்கமான குரலில் ஒரு வீரன் பதில் சொன்னான்.

''மறவர்களைப்பற்றி நீ ஏதோ சொல்ல வந்தாயே. சொல்.''

வெற்றிலைப்பாக்கு போட்டபடி வெளித்திண்ணையில் அமர்ந்தபடி, பெருந்தச்சர் குஞ்சரமல்லர் நடுநாட்டு அந்தணரைக் கேட்டார்.

''அது ஒன்றுமில்லையே..

அந்த அந்தணர் வெட்கப்பட்டார்.

''எதற்கு வெட்கம். என்ன சொல்ல வந்தாய். சொல். அப்போது நான் வேறு ஒரு மனோநிலையில் இருந்தேன். உன்னைப் புறக்கணித்து விட்டேன். இப்போது சொல். எவ்வளவு ஞாபகம் வைத்துக் கேட்கிறேன் பார்த்தாயா.''

கண் சிமிட்டினார்.

அந்தணருக்கு அவர் கொடுத்த உற்சாகம் சந்தோஷமாக இருந்தது.

''மறவர்களை அதிகம் பகைத்துக் கொள்ளாதீர்கள்.''

சட்டென்று பெருந்தச்சருக்குக் கோபம் வந்தது. உறுத்து அந்த அந்தணரைப் பார்த்தார்.

''நான் சொல்வது கோபமாகத்தான் இருக்கும். மறவர்களை இப்போது பகைத்துக்கொள்ள வேண்டாம்.''

''ஏன்.''

''மேலைச்சாளுக்கியத்திற்குள் சோழப்படை நுழைந்துவிட்ட தென்றும், மான்யகேடம் நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறதென்றும் சொல்கிறார்கள். இதற்கு என்ன அர்த்தம் என்றால், சோழப்படைகள்

மேலைச்சாளுக்கியத்திற்குள் நுழைந்துவிட்டன. முதல் எதிர்ப்பை முறியடித்து விட்டன. அதாவது வெற்றித் திருமகள் சோழதேசம் பார்த்து திசை திரும்பி விட்டாள். அப்படியென்றால் சோழதேசத்து வீரர்கள் மதமதப்போடும். திமிரோடும் வருவார்கள். அப்படி அவர்கள் இங்கு வந்தால் அவர்களுக்கு எதிராக எந்தவிதக் குற்றச் சாட்டும் எடுபடாது. இங்குள்ள மறவர்களை நீங்கள் எதிர்ப்பது தெரிந்தால் அவர்கள் வேகமாக நடந்து கொள்வார்கள்.''

''வேகமாக என்றால் கையை வெட்டிவிடுவார்களா?''

''இல்லை ஐயா. இழிவாக நடத்துவார்கள். அவர்களை நீங்கள் எதிர்க்க முடியாது. ஏனெனில் அவர்கள் பெரும்பொருளோடும், ஆநிரைகளோடும், வெற்றியோடும் ஊருக்குத் திரும்புகிறார்கள். அது பாராட்டப்பட வேண்டும். எதிர்க்கப்பட்டால் இழிவு படுத்தப்படுவோம்.''

மெல்லுவதை நிறுத்திவிட்டு பெருந்தச்சர் குஞ்சரமல்லர் அமைதியாகப் பார்த்தார்.

''ஆமாம்.'' என்றார்.

''எனவே, மறவர்களிடம் அனுசரித்துப் போகும்படி உங்கள் சிற்பிகளிடம் சொல்லுங்கள். சிற்பிகள் சற்று மிதப்பாய்த்தான் இருக்கிறார்கள்.''

''அப்படியா சொல்கிறாய்.

''ஆமாம்.''

''எனக்கும் சண்டையிட விருப்பமில்லை.'' ஒரு தலைமைச்சிற்பி சீறினான்.

பெருந்தச்சர் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

''எனக்குள் ஆயிரம் கணக்குகள் இருக்கின்றன. சண்டை போடும் போது அந்தக் கணக்குகள் அழிந்து விடுகின்றன. இடையறாது வேலை செய்து கொண்டிருந்தால்தான் அந்தக் கணக்குகள் தெளிவாக இருக்கின்றன. புதிதாக கணக்குகள் பிறக்கின்றன. கிட்டத்தட்ட ஏழு நிலையிலும் கற்களின் எல்லா அளவுகளும் எனக்கு மனப்பாடம். எனக்கு சண்டை போட விருப்பமில்லை. ஆனால், மறவர்கள் கட்டிலில் படுப்பதோ, என் பெண்டுகளின் மீது கை வைப்பதோ நான் விடமாட்டேன். சோழதேசம் படையெடுத்து மான்யகேடத்தைக் கைப்பற்றி வந்தால் என்ன? நான் இங்கு அவிழ்த்துப் போட்டு நிற்க வேண்டுமா. மறவனின் காலில் விழுந்து

வணங்க வேண்டுமா? ஆம் என்று சொல்வீர்கள் என்றால் எனக்கு வேலை செய்வதில் விருப்பமில்லை. நான் வேலையை நிறுத்தி விட்டு வெளியே போய்விடுகிறேன்.''

கையிலுள்ள உளியையும், சுத்தியலையும் அவன் தெருவில் எறிந்தான்.

நடுநாட்டு அந்தணர்கள் நகம் கடித்தார்கள்.

இங்குள்ள வீரர்களையே இப்படி சிற்பிகள் எதிர்த்தால், ''வருகின்ற மறவர்களை என்ன செய்வார்கள். அந்த மறவர்கள் குடித்துவிட்டு ஆடுவார்கள். கும்மாளம் போடுவார்கள். வெற்றி பெற்றுவிட்டோம் என்ற மதமதப்பில் விதம்விதமாகப் பேசுவார்கள். உளியையும், சுத்தியலையும் வீசி எறிந்தால், பிறகு என்னதான் இங்கு நடக்கும். கோயில் பணி என்ன ஆகும்.

அவர்கள் பயந்தார்கள். அவர்கள் பயந்த வண்ணமே நடந்தது.

அலைஅலையாய் படைவீரர்கள் சோழதேசம் நோக்கித் திரும்பி வந்தார்கள். மிகப்பெரிய ஆரவாரத்தோடு தஞ்சை மாநகரம் அவர்களை வரவேற்றது.

வண்டிகளிலிருந்து சாமான்கள் இறக்கி மாளவில்லை. அரண்மனை முற்றத்தில் பாத்திரங்களைக் குவித்தார்கள். தங்கத்தைச் சுரங்க அறைக்கு எடுத்துப் போனார்கள்.

இன்னும் பத்துத் தலைமுறைக்கு சோழதேசத்தில் செல்வத்திற்கு குறைவில்லையடா என்று ஒரு சேனாபதி உரக்கச் சொல்ல, எல்லோரும் மறவர்களுக்கு வாழ்த்துச் சொன்னார்கள்.

சிற்பிகள் கைகட்டி எல்லாவிதமான ஆரவாரங்களையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''அடேய் பயல்களா. இந்த சிற்பிகளுக்கு நாம் யார் என்று காட்டித்தான் ஆகவேண்டும்.

உரத்த குரலில் பேசிக் கொண்டார்கள்.

மறவர்கள் கோயிலுக்கு அருகே வந்து அதன் உயரத்தைக் கண்டு வியந்தார்கள்.

''அடேயப்பா இத்தனை உயரமா? எப்படியடா கட்டினீர்கள்.'' என்று கேட்டார்கள்.

அந்தக் கேள்விக்குச் சிற்பிகள் பதில் சொல்லவில்லை.

தங்கள் கேள்விக்குப் பதில் சொல்லாத சிற்பிகளை, மறவர்கள் முறைப்போடு பார்த்தார்கள்.

''அவன் கிடக்கிறான் கழுதை. வா, நாம் கூத்து பார்க்கப் போகலாம்.

அன்று இரவு மிகப்பெரிய கூத்து நடந்தது.

பலநூறு பெண்கள் விதம்விதமாய் ஆடி மறவர்களை உற்சாகப் படுத்தினார்கள். இலவசமாய் மது வழங்கப்பட்டது.

குடிக்காத போதே மறவர்களுக்கு சிற்பிகள் மீது கோபம் எழுந்தது. நன்கு குடித்த பிறகு கோபம் தலைக்கேறியது.

குடித்த மறவர்களை சிற்பிகள் இழிவாகப் பார்த்தார்கள். வம்புக்கு இழுத்தார்கள்.

ஒரு தேசத்தில் இரண்டு இனங்கள் ஒன்றையொன்று இழிவுபடுத்தி சண்டையிட ஆரம்பித்தால், அது மிகப்பெரிய கெடுதல் தரும். வேகமாய் வளர்ந்து பிரச்சனைகள் பெருகும். இது மறைய பல வருடங்களாகும். மறையாது போனாலும் ஆச்சர்ய மில்லை.

வீரர்கள், கலைஞர்கள் என்று இரண்டு இனங்கள் முட்டிக் கொண்டன. இவர்கள் இருவருமே கர்வம் மிக்கவர்கள் என்பதால் பிரச்சனைகள் பூதாகரமாயின.

ஐந்தாம் பாகம் முற்றும்

